ஸ்ரீ:

# கம்ப ராமாயணம்.



## பாலகாண்டம்—முதற்புத்தகம்

ரம்பமிருந்து மிதிலைக்காட்சிப் படலத்துடன்

முடிவுபெற்றிருக்கின்றது.



மோகனூர்

வாத்ஸ்ய வேங்கடாசார்ய

கோவிந்தராஜ ஐயங்கார்

இயற்றிய

உரையுடன்

கூடியது.



கோயம்புத்தூர்

“கம்ப நாடர்” காரியாலயத்தின்

வெளியீடு.



தாது-வருஷம்
ஆனி-மீ

விலை ரூ. ௧-0-0

ஸ்ரீ:

# உள்ளுறை

I முன் அநுபந்தங்கள்



II படலக் குறிப்புகள் (விவரம் பின்பக்கம் பார்க்க)

III பின் அநுபந்தங்கள்

# படலக்குறிப்புகள்—அட்டவணை



ஆகப்படலங்கள் கரு; திரு விருத்தங்கள் எ௱க

# IX

# விண்ணப்பம்.

---

" இம்பர் நாட்டில் செல்வமெல்லாம் எய்தி அரசாண் டிருந்தாலும்
உம்பர் நாட்டில் கற்பகக்கா வோங்கு நீழல் இருந்தாலும்
செம்பொன் மேரு அனையபுயத் திறல்சேர் இராமன் திருக்கதையில்
கம்பநாடன் கவிதையிற்போல் கற்றோர்க் கிதயம் களியாதே ".

" விருத்தமென்னும் ஒண்பாவில் உயர் கம்பன் "

" கவிச்சக்கரவர்த்தியாங் கம்பர் "

" கல்வியிற் பெரியான் கம்பன் "

என்று இப்படியெலாம் போற்றும் கம்ப நாட்டாழ்வாரைப்—(அவர் கவியைப்) போற்றாத—வியந்து பேசாத தமிழர் இலர்.

இத்தகைய பெருமை வாய்ந்த கவிச்சக்கரவர்த்தியினுடைய நாவன்மையையும் பாவன்மையையும், சொல்நோக்குகளையும் பொருள் நோக்குகளையும், உண்மை நவிற்சிகளையும் உயர்வு நவிற்சிகளையும், உவமைவகைகளையும் உருவக அணிகளையும் இன்னோன்ன பிறவற்றையும் ஒருங்கே திரட்டி யமைக்கப் பெற்றதொரு அருந்தனிப் பெட்டகமாகிய இந்த இராமாவதாரப் பெருங்காப்பியத்தைத் திறந்து, இதி லொளிர்ந்துகொண் டிருக்கும் கவிமணிகளின் கலைதனை யெடுத்தோதும்பொழுது, தண்டமிழாகிய உயர்தனிச் செம்மொழிப் புலவரேயன்றி யெம்மொழிப் புலவரும் வியந்து போற்றுவரென்பது வியப்புரையாகமாட்டாது; இஃது அநுபவ உண்மையாம். செய்யுள் திறங்களைச் செப்பக்கேட்ட பண்டிதரேயன்றிப் பாமரரும், இதயம் விரியப்பெற்று இகபர பாக்கியங்களில் வரும் நெறியை அடைந்துய்வரென்பது பண்டிதர் கொள்கை.

உலகுய்ய உதித்ததொரு உண்மை நூலாகவும்—உறுதி பயக்கும் உயர் நூலாகவும் உற்ற இப் பெருங் காப்பியத்துக்குத் தக்கதோர் ஆராய்ச்சி நூலொன்று தந்து உலகில் நிலவுறச்செய்தல்

*

வேண்டுமென்னும் பேரவாவினை, எமது இயற்றமிழாசிரியர் ஸ்ரீ. உ. வே. கா. ஸ்ரீ. கோபாலாச்சாரிய ஸ்வாமிகளிடம் பல்கா ...ம் விண்ணப்பித்துக்கொண்டதுண்டு. அது நிறைவேறாமைக்கு ...கி வருந்துகின்றோம்; ஆயினும், அப்பெரியார், அது செய் ...ற் பொருட்டு எமக்கு அநுமதி யளித்ததைச் சிரஸிற் கொண்டுளே ...ம்.

இந்த அரிய சிந்தனை, சுமார் பன்னிரண்டு ஆண்டுகளாக எ ...து சித்தத்திற் குடிகொண்டு, அடிக்கடி தூண்டினதும் உண்மை. ...ப் பெரிய காரியத்துக்கும் எமது சிற்றறிவுடன் கூடிய சிறு முய ...சி கட்டும் ஏழ்மை நிலைக்கும் சிறிதும் பொருந்தாத காரணம் பற் ...றிப் பல்லாண்டுகள் துணியாமலு மிருந்தோம்.

எனினும், கம்ப ராமாயண உபந்யாஸார்த்தம் சென்ற ...ல விடங்களிலும், உபந்யாஸங் கேட்டறிந்த நண்பர் பலர், "...வ் வாராய்ச்சியை விரைவில் புத்தக உருவத்தில் வெளியேற் ...ல் வேண்டு" மென்று பல்காலும் வற்புறுத்தியபடியினாலும், இப்படி ...ய சிந்தித்துச் சிந்தித்துப் பலவாண்டுகள் வாளா ஒழிந்துபோயினமை ...ம யாலும், எமது சிறுமதி கொண்டே இப் பெருந்துறையுள் இறங் ...த் துணிந்தேம். எமது மதிக்கு இத்துறை மிக ஆழமுடையதா ...யி னும், "இறங்கிவிடின், பெரியார் பலரும் பெருமணி திர ...டி உலகினுக்கு உதவ முன்வருவர்" என்னும் ஒரு புடை யு ...தி கொண்டு, ஆழமுடைய—அகன்றதொரு—அமுதவாரியாகும் ...த் துறையில் எட்டினமட்டும் சிறு மணிகளையாவது திரட்டிவ ...த் துணிந்து இறங்கினோம்.

இதன் ஆரம்பத்தில், கம்பராமாயண ஆராய்ச்சியே எ ...து சிந்தனையாக இருந்திருப்பினும், உபந்யாஸ காலங்களில் அநுபவி ...து வரும்போது, "கம்பரும் வான்மீகரும்" என்னும் பகுதியை ...ம் சேர்த்து வெளியிடல் வேண்டுமென்னும் ஸங்கற்பமும் உதித்த ...து; அதனுடன் கம்பராமாயணக் கவியும் உரையும் சுத்த பாடத் ...ல் பதிப்பிக்கவேண்டுமென்றிருந்த உட்கிடக்கை யொன்றும் உட ...ன் கூடியது; இம்மூன்று பகுதிகளுடன் "வசனப் பகுதியும் வரட்டுமே;"

என்று நண்பர்கள் அனுமதியளித்தார்கள். ஆகவே, இந்நான்கு பகுதிகளையும் ஒருங்கே வெளிப்படுத்த—சிறந்த சிறிதாக வெளியேற்றும் முறையாகிய—பத்திரிகை (ஸஞ்சிகை) முறையே சாலச் சிறப்புடைத் தென்று தீர்மானித்துக் "கம்பநாடர்" என்னும் "செந்தமிழ்க் கம்பராமாயண ஆராய்ச்சிப்" பிரசுரத்தை நடத்திக் கொண்டிருக்கிறோம்.

இந்தப் பிரசுரம் ௧௦௮—மலர்களில்—அஷ்டோத்தரசதமாக நிறைவேற வேண்டுமென்பது துணிவு.

"கம்பநாடரில்" வெளியாகிக் கொண்டிருக்கும், நான்கு பகுதிகளில், "கவியும் உரையும்" பகுதியானது, பெரும் பகுதியாக இருப்பதால், (பாலகாண்டம் மூலமும் உரையும் என்பதை) இரண்டு புத்தகமாகக் கட்டிக் கொள்ளலாமென்னும் உறுதிகொண்டு, அதன் முதற்புத்தகமாகவே—சித்திரக்காட்சிப் படலத்துடன்—நிறைவேறியிருக்கும், இப்பகுதிக்கு வேண்டிய அநுபந்தங்களைத் தந்திருக்கின்றோம் அவற்றிற்கேற்ற முறையில்—இந்த முதற்புத்தகத்தின் முன்னும் பின்னும் கூட்டிக் கட்டி யமைத்துக்கொள்ள வேண்டுகின்றோம்.

முன் அநுபந்தங்கள் என்னும் வகுப்பில் "(1) டைடில் பேஜ் (2) முன்னுரை (3) உள்ளுறை (4) விண்ணப்பம் (5) The Ramayana (6) அவதாரிகை (7) கம்பர் சரித்திரம்" என்னும் வகைகள் பக்கக் குறிப்புடன் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இவற்றை முறையே—பக்கங்கள் காட்டியிருக்கும் முறைப்படியே, நூலுக்கு—(பால காண்டம் — முதற்புத்தகம் என்று குறிக்கப்பட்டிருக்கும் நூலுக்கு) முன்னர்க் கூட்டியும், பின் அநுபந்தங்கள் என்னும் பகுப்பில், "(1) செய்யுள்முதற்குறிப்புஅகராதி (2) அருஞ்சொல்—தொடர் அகராதி (3) கம்பராமாயணப்பயன் கவிகள்—உரையுடன் (4) பின்னுரை" என்னும் வகைகள் பக்கக் குறிப்புடன் கொடுக்கப்பட்டிருக்கின்றன; இவற்றையும், பக்கங்காட்டியிருக்கும் முறைப்படியே நூலுக்குப் பின்னர்க் கூட்டியும், இந்த "கம்ப ராமாயணம், பால

# அவதாரிகை.



## ஸ்ரீமத் ராமாயணம்.

இந்தப்பதத்திற்கு ஸ்ரீராமபிரானுடைய சரித்திரம் என்பது பொருளாகும். திரேதாயுகத்தின் முடிவில் பூமண்டல சக்கரவர்த்தியாயிருந்து விளங்கிய சூரியகுல மன்னனாகிய தசரத மகாராஜனுக்குப் புத்திரனாக அவதரித்துத் துஷ்ட நிக்ரஹ சிஷ்ட பரிபாலனம் செய்து தர்மத்தை நிலைநிறுத்திய ஸ்ரீராமபிரானுடைய சரித்திரத்தை விஸ்தாரமாகச் சொல்லுகின்றது இந்த நூல். உத்தம நாயகனாகிய ஸ்ரீராமபிரானுடைய சரித்திரத்தைச் சொல்லுமுகத்தால், அப்பெருமானது குணங் குறி செயல்களையன்றி, அவருக்கு மித்திரராக உள்ளார் சத்துருவாக உள்ளாரது குணங் குறி செயல்களையும் அவர்கட்குள் நேர்ந்த யுத்த நிகழ்ச்சிகளையும் அவற்றால் உலகோர்க் குண்டாம் சாதக பாதகங்களையும் மேலான வகைகளாலும் உதாரண வகைகளாலும் விரித்துக்காட்டி அக்காலத்துள்ளாரும் பிற்காலத்துள்ளாரும் தக்க சான்றிடமாகக் கொள்ளும்படி இயற்றப்பட்டிருக்கிறது. இது காவ்ய லக்ஷணம் முற்றும் பொருந்தி இதிஹாஸ ரத்நமாக விளங்கி வருவதால், இதில் வெளிப்படையாகத் தோன்றுஞ் சரித்திரப் பொருளேயன்றி, உள்ளுறையாகத் தோன்றும் உயிர்ப் பொருளாகிய நீதி தர்மம் வேதாந்தம் முதலிய ஸாரதமமான பொருள்களும் கிடைக்கின்றன. அன்றியும்,

ராம என்னும் பதம், தசரத புத்திரனுக்கேயன்றி, யோகிகளுடைய—வேதாந்திகளுடைய மற்றும் எல்லாருடைய இதயங்களிலேயும் நிலைத்திருந்து, எப்போதும் அவர்கட்கும் பக்குவ வகைகட்கேற்றபடி ஆனந்தத்தை அளித்துக் கொண்டிருக்கும்—பரப்பிரம்மத்துக்கும் உரியதொன்றாக இருத்தலால், அந்த மும்மூர்த்தி முதல்வனாகிய பரம்பொருளின் அவதார மூர்த்தியாகிய ஸ்ரீராமனது அவதார குண விசேஷங்களைச் சொல்லும் நூல் என்னும் பொருளுங் கிடைக்கின்றது. அன்றியும்,

# அவதாரிகை.



## ஸ்ரீமத் ராமாயணம்.

இந்தப்பதத்திற்கு ஸ்ரீராமபிரானுடைய சரித்திரம் என்பது பொருளாகும். திரேதாயுகத்தின் முடிவில் பூமண்டல சக்ரவர்த்தியாயிருந்து விளங்கிய சூரியகுல மன்னனாகிய தசரத மகாராஜனுக்குப் புத்திரனாக அவதரித்துத் துஷ்ட நிக்ரஹ சிஷ்ட பரிபாலனம் செய்து தர்மத்தை நிலைநிறுத்திய ஸ்ரீராமபிரானுடைய சரித்திரத்தை விஸ்தாரமாகச் சொல்லுகின்றது இந்த நூல். உத்தம நாயகனாகிய ஸ்ரீராமபிரானுடைய சரித்திரத்தைச் சொல்லுமுகத்தால், அப்பெருமானது குணங் குறி செயல்களேயன்றி, அவருக்கு மித்திரராக உள்ளார் சத்துருவாக வந்தாரது குணங் குறி செயல்களையும் அவர்கட்குள் நேர்ந்த யுத்த நிகழ்ச்சிகளையும் அவற்றால் உலகோர்க்குண்டாம் சாதக பாதகங்களையும் மேலான வகைகளாலும் உதாரண வகைகளாலும் எடுத்துக்காட்டி அக்காலத்துள்ளாரும் பிற்காலத்துள்ளாரும் தக்க சாஸ்திரமாகக் கொள்ளும்படி இயற்றப்பட்டிருக்கிறது. இது காவ்ய லக்ஷணம் முற்றும் பொருந்தி இதிஹாஸ ரத்னமாக விளங்கி வருவதால், இதில் வெளிப்படையாகத் தோன்றும் சரித்திரப் பொருளேயன்றி, உள்ளுறையாகத் தோன்றும் உயிர்ப் பொருளாகிய நீதி தர்மம் வேதாந்தம் முதலிய ஸாரதமமான பொருள்களும் கிடைக்கின்றன. அன்றியும்,

ராம என்னும் பதம், தசரத புத்திரனுக்கேயன்றி, யோகிகளுடைய—வேதாந்திகளுடைய மற்றும் எல்லாருடைய இதயங்களிலேயும் நிலைத்திருந்து, எப்போதும் அவர்கட்கும் பக்குவ வகைகட்கேற்றபடி ஆனந்தத்தை அளித்துக் கொண்டிருக்கும்—பரப்ரம்மத்துக்கும் உரியதொன்றாக இருத்தலால், அந்த மும்மூர்த்தி முதல்வனாகிய பரம்பொருளின் அவதார மூர்த்தியாகிய ஸ்ரீராமனது அவதார குண விசேஷங்களைச் சொல்லும் நூல் என்னும் பொருளும் கிடைக்கின்றது. அன்றியும்,

மும்மூர்த்தி முதல்வனுகிய பரம்பொருளின் அம்சமாகிய விஷ்ணு மூர்த்தியின் பெருமைகளைச் சொல்லும் அஷ்டாக்ஷரத்தின் ஜீவாக்ஷரமாகிய "ரா" என்னும் பதமும், அப்பரம்பொருளின் மற்றுமோர் அம்சமாகிய பரமசிவ மூர்த்தியின் பெருமைகளை யுணர்த்தும் பஞ்சாக்ஷரத்தின் ஜீவாக்ஷரமாகிய "ம" என்னும் பதமுஞ் சேர்ந்து 'ராம" என்னும் பதமாக ஸம்மேளனப்பட்டிருப்பதாலும் அவ்விரு மூர்த்திகளின் செயல்களே இப்பெரியாருடைய சரித்திரத்தில் கிடைப்பதாலும், இந்த ராமாயணம் அவ்விரு மூர்த்திகளின் குறிசெயல்களைச் சொல்லும் நூல் என்னும் பொருளையுந் தந்து நிற்கின்றது. இவ்விசேஷவுரைகளையெல்லாம் **கம்ப ராமாயண ஆராய்ச்சி** என்னும் பகுதியில் பரக்கக் காணலாம். இலக்குவற்குச் சிவபிரானது அம்சமுண்டென்பதைக் கம்பர் நூலினுட் பலவிடங்களிற் குறித்திருக்கிறார்; ஆஞ்சநேயற்குச் சிவபிரானது கூறு உண்டென்றது வெளிப்படை. அன்றியும்,

ராம என்னும் பதம் (ரமா-ராமா) லக்ஷ்மீ தேவியினுடைய வாசகமாக இருப்பதால், அந்த லக்ஷ்மீதேவியின் அவதாரமாய் விளங்கியிருந்த—இக்காவிய நாயகியாகிய ஸ்ரீ சீதாதேவியினது சரித்திரத்தைச் சொல்லுகிற நூல் என்றும் பொருளாகிறது. ஸ்ரீ வான்மீகரும் இதன் பெருமையைச் சொல்லிவரும்போது இதனை **ஸீதாயா: சரிதம் மஹத்** என்று சொல்லுகிறார்; ஆசாரியர்களும், **"சிறையிருந்தவள் ஏற்றம் சொல்லுவது ராமாயணம்"** என்று உலகுயிர் உய்யத் தான்சிறைபுகுந்த சீதாபிராட்டியின் சரித்திரத்தைச் சொல்வதுதான் ராமாயணம் என்னும் பொருளையே அனுபவித்திருக்கிறார்கள். அன்றியும்,

இந்த ராம என்னும் பதத்தின் பெருமையைச் சொல்லும் போதெல்லாம், கம்ப நாட்டாழ்வார், "மும்மைசா லுலகுக்கெலாம் மூலமந்திரம்" மென்றும், "தங்காரப் பொருள் தேறுவோர்த முன்னை யுணர்வோர்" என்றும் தமதுட்கிடக்கைக் குறிப்புக்களை யமைத்திருப்பதை நினைத்துக் காவியப்பெருமைப்படி வியங்கிய

பொருளாகப் பார்க்கும்போது, ராம என்னும் பதம் ஓம் என்னும் பிரணவப் பொருள்தானென்றும், அப்பிரணவத்தின் அக்ஷரங்களான அகாரவாச்சியனாகிய பரம்பொருளை ஸ்ரீராமனாகவும் உகாரவாச்சியையாகிய ஜகத்சக்தியாம் பிராட்டியை சீதாதேவியாகவும் மகாரவாச்சியனாகிய ஜீவனை லக்ஷ்மணனாகவும்—அவதரித்துள்ளாரென்பதைக் காட்டி அவர்களது அவதார விசேஷ குணநிசயங்களைச் சொல்லுமுகத்தால் சித் அசித் ஈச்வரன் என்னும் தத்வத்திரயத்தின் ஸாரங்களையும் சொல்கிற நூலாகக் குறித்திருக்கிறார் என்பதும் வெளியாகும். “ஸ்ரீராமன் முன்னும் இடையில் சீதையும் லக்ஷ்மணன் பின்னுமாகக் காட்டிற் சென்றார்கள்” என்ற வால்மீகி சலோகத்திற்குப் பொருள் தரும்போது, வ்யாக்யாதாவாகிய மஹான் கோவிந்தராஜன் “இம்மூவரும் சென்றது பிரணவம் கால் கொண்டு நடந்தது போலிருக்கிறது” என்று சொல்லிக் குறித்திருக்கிறார்கள்.

இந்த இதிஹாஸத்தில் பாலகாண்டம் முதல் யுத்தகாண்டமிறுதியாகவுள்ள ஒவ்வொரு காண்டத்திலும் சரணாகதியென்கிற விபீஷணசரணாகதியென்னும் அபயப் பிரதானமே பிரதானமாக நின்று நிலவுவதால், இது சரணாகதிசாஸ்திரமென்றும் பெரியோர்களால் கொள்ளப்பட்டிருக்கின்றது. ஆகவே, இது சரணாகதியைச் சொல்லுமுகத்தால், அதனது அங்கமாகிய அர்த்தபஞ்சக ஞானத்தையும் எடுத்துச் சொல்லிப்போகின்றது என்றும் பெரியோர் கூறுவர். (அர்த்த பஞ்சக ஞானமாவது—ஐந்து பொருளை யறியும் அறிவு; அவையாவன:—தன்னையறிதல், தலைவனையறிதல், விரோதியை யறிதல், உபாயமறிதல், பயனறிதல்)

அன்றியும், சீதை மந்தோதரி கௌஸலை கைகேயி அகலிகை தாடகை சூர்ப்பணகை தாரை அநசூயை முதலிய ஸ்திரீகளின் உத்தம மத்திம அதம தர்மங்களையும் அவர்களது செயல்களையும் அவற்றால் உலகினர்க்கேற்படும் ஹிதாஹித பாதகங்களையும் விரிவாகவும் இவ்விதிஹாஸம் சொல்லிப்போவதால் இது ஸ்திரீ தர்ம சாஸ்திரம் என்றும் சொல்லப்படும்.

ஹநுமான் வஸிஷ்டர் விச்வாமித்திரர் அகஸ்தியர் முதலியோர்களைக்காட்டி யாசாரிய தர்மசாஸ்திரமாகவும் விளங்குகின்றது. அன்றி, ராஜ தர்ம சாஸ்திரமாகவும் விளங்குகின்றது.

இப்படிப் பல அரிய உரிய பொருள்களைத் தந்து நிற்கின்றது இந்த இராமாயணம் என்னும் இதிஹாஸம். இவ்விசேஷப் பொருள்களை யெல்லாம் முன் குறித்தபடி கம்ப ராமாயண ஆராய்ச்சியிற் காணலாம்.

## இதிஹாஸம்.

உலகத்தில் பகுத்தறிவுடைய மனித வகுப்பினருக்கு, "செய்யவேண்டியவை யிவை, விடவேண்டியவை யிவை" யென்று அறிவுறுத்தலே வேதம் முதல் காவியமீறாகவுள்ள நூல்களின் பிரயோஜனமாகும்; அவற்றால், அறிவு மிகுந்த மனிதன் இவற்றைச் செய்தால் இகத்திலும் பரத்திலும் சுகமடையலாம்; இவற்றைச் செய்தால் கஷ்டமடைய நேரிடும் என்று அறிந்து கொள்கிறான். இவ்வறிவை யறிந்து கொள்ளல் அதிகாரி பேதத்தால் மாறுபடுமாதலால், நூல்களும், வேதம் புராணம் காவ்யம் என்று பலதிறம்பட அமைக்கப் பட்டிருக்கின்றன. இவற்றின் ஆராய்ச்சிகளால் கிடைக்கும் அறிவு ஒரே வகையானதாயினும், அவ்வறிவு கிடைக்கும் வகைகள் வேறுபட்டுக் கிடக்கின்றன. எப்படியெனில், வேதவாக்யங்களிற் பெரும்பாலன, ராஜாக்ஞை போல "இதைச் செய்! இதைச் செய்யாதே" என்று வற்புறுத்திச் சொல்லக்கூடியன. இதிற் சொல்லப்படும் தர்மங்கள் விதி விலக்கு ரூபமாகவே அமைக்கப்பட்டுக் கிடக்கின்றன. புராணங்கள், மித்திரன் போல, நல்ல காரியஞ் செய்து சுகமடைந்தவர்களையும் கெட்ட காரியஞ் செய்து துக்கமடைந்தவர்களையும் கதா ரூபமாக வர்ணித்துக் காட்டி அறிவுண்டாகச் செய்கின்றன. காவ்யமானது, ஸ்திரீகளுக்குச் சமானமானது; உத்தம ஸ்திரீகள் தங்களிஷ்டங்களை வார்த்தையால் தெரிவியாமலே, வேறு த்வனி சேஷ்டை முதலியவைகளால் எப்படிக் கணவரை வசப் படுத்தித் தமது இஷ்டப்படித் திருப்புகின்றார்களோ, அப்படியே

காவ்யங்கள் சிங்காரம் முதலிய ரஸ பாகங்களால் படிக்குமவர்களைத் தம் வசப்படுத்தித் தாத்பர்யத்தில் வேதமும் புராணமும் தருவன வற்றையே பரம ப்ரயோஜனமாகத் தருகின்றன; இதனாலேயே காவ்யங்கட்கு வியங்கியப் பொருள் விசேஷமாக வேண்டப்படு கின்றன. (வியங்கியம் - என்பது உள்ளுறை பொருள்.)

இதிஹாஸமென்பது, புராணங்கள் போலவே வழிவழியாக வந்த பரம்பரைச் சரிதங்களைப் பல நீதி தர்மம் வேதாந்த பாகங்க ளோடு சேர்த்துச் சொல்வது மாத்திரமல்லாமல், காவ்யம்போல, நவரஸ பேதங்களையும் காட்டிப் படிப்பவரைத் தன் வசப்படுத் தித் தாத்பர்யார்த்தமான பரம ப்ரயோஜனத்தையும் தருகின்றது. இராமாயணம் இதிஹாஸமென்பது வெளிப்படை.

காவ்யமென்பது தோஷங்களின்றிக் குணங்கள் நிறைந்து அலங்காரங்கள் பூர்ணமாயுள்ள பொருள்களடங்கிய—சிங்காரம் முதலிய ரஸ பூர்ணங்களான சப்தச்சேர்க்கைகளுடன் கவிகளாற் செய்யப்படும் காரியமென்னும் பொருளைப் பெற்று நிற்கின்றது. காவ்யம் மூன்று வகைப்பட்டது. கத்ய காவ்யமென்பது வசன நூல்; பத்ய காவ்யமென்பது செய்யுள்நூல்; சம்பூ காவ்யமென் பது வசனங்களும் செய்யுள்களும் விரவியுள்ள நூல்.

சப்தங்கட்கு அர்த்தம் கிடைக்கும் முறை மூன்று வகைப் படும்: வாச்யார்த்தமென்பது பதங்கட்கு நிகண்டு ப்ரயோகம் முதலியவற்றாற் கிடைக்கும் பொருள்களாகும்; லக்ஷ்யார்த்த மென்பது வாச்யார்த்தமொத்தும் ஒவ்வாமலுமிருக்கும் போது கவியினுடைய இருதய லக்ஷ்யமின்னதென்று எடுத்துக் காட்டும் பொருள்களாகும்; வியங்கியார்த்தமென்பது பதங்கட்குத் தனித் தனியே வெவ்வேறு பொருள்கள் கிடைத்தபோதும், அவற்றின் பொருள்களை ஒன்றோடொன்று சேர்த்துப் பொருள் கொள்ளுங் கால் வேறாகத் தொனிக்கும் பொருள்களாகும். இவற்றையே த்வனி என்று சொல்வார்கள்.

காவ்யங்களின் ரஸ பாகங்களை யநுபவிக்கும் போது, படித்து வருங்காலையிலேயே அர்த்தங்களையும் ரஸங்களையும் தந்து நிற்பது

திராக்ஷாபாக மென்றும், படிக்கும்போது அர்த்தங்கள் நன்று வெளிப்படாமல் ஆலோசித்துச் சிரமப்பட்ட பிறகு ரஸார்த்தங்களை வெளிப்படுத்தி விளக்குவது நாளிகேர பாகம் (நாளிகேரமென்றுல் தேங்காய் என்பது பொருள்) என்றும், பதங்களின் சேர்க்கையில் ரஸார்த்தங்கள் தோன்றாமல் பதங்களைப் பிரித்தமாத்திரத்தில் அவற்றைத் தோற்றுவிப்பது கதளீபாக மென்றும் (கதளீயென்றுல் வாழைப்பழம் என்பது பொருள்) சொல்லப்படும். இன்னும் மதுபாகம் க்ஷீரபாகம் முதலிய பலவுமுண்டு. அவற்றைச் சமயம் நோக்கியறிந்து கொள்ளல் கூடும். (மது-தேன்; க்ஷீரம்-பால்.)

இக்காவியங்களுள், வாச்யார்த்தங்களை அலங்கரித்துக் கொண்டே வியங்கியப் பொருள்களை விசேஷமாகக் காட்டி, நகரம் கடல் மலை காலம் சூரியன் சந்திரன் நீர்விளையாட்டு மலர் கொய்தல் உண்டாட்டு கலவி புலவி விவாஹம் மக்கட்பேறு ஆலோசனைசபை பயணம் யுத்தம் க்ஷேமம் முதலிய உலக அநுபவங்களையும்—ரஸ பாகங்களுடன் காட்டி, நிற்பது உத்தம காவ்யமென்றும், வாச்யார்த்தம் பிரதானமாகவும் வியங்கியார்த்தம் அங்கமாகவும் கொண்டு ரஸபாகங்களுடனிருப்பது மத்திம காவ்யமென்றும், வியங்கியார்த்தமே பிரகாசியாமல் ரஸபாகங்களோடு வாச்யார்த்தமு முடையது அதமகாவ்யமென்றும் சொல்லப்படும்.

இதிஹாஸாத்மகமாகிய இராமாயணம் உத்தம காவ்ய லக்ஷணம் மிகப் பொருந்தியுள்ள தென்பது பிரஸித்தம். "எவனுடைய பெயரை உச்சரிப்பதனாலும் நினைப்பதனாலும் பாவங்கள் விலகி ஸகல க்ஷேமங்களும் கிடைக்குமோ அத்தகைய புண்ய ச்லோகனுடைய சரித்திரத்தைச் சொல்வதே மஹா காவ்ய மென்று பாமஹாசார்யர் சொல்கிறபடி இராமாயணம் மஹா காவ்யமேயாகும்.

## ராமாயணம் வேத மூல முடையது.

"இதிஹாஸ புராணங்களால் வேதாந்தார்த்தங்கள் வெளிப்படுகின்றன" என்பது பிரஸித்தம். வேதத்தில் சொல்லப்பெற்றிருக்கும் ஸாரதமமான விஷயங்களே ஸ்ரீராமாயணத்திற் சொல்லப் பெற்றிருக்கின்றன என்பது ஆச்சாரியார்கள் அபிப்பிராயம். "வேதத்தினால் அறியக் கூடிய பரம புருஷனே ஸ்ரீராமனென்னும்

திவ்ய நாமத்துடன் தசரத மகாராஜனுக்குப் புத்திரனாக அவதரித்த படியால், அந்தப் பரம்பொருளினுடைய ஸ்வரூபத்தைச் சொல்லும் வேதமானது, வான்மீகி மஹரிஷியின் வாக்கிலிருந்து ஸ்ரீராமாயண மென்னும் பெயருடன் அவதரித்திருக்கின்றது; ஆகையால் ராமாயணம் வேதமே யென்பதிற் சந்தேகமில்லை"—அகஸ்திய ஸம்ஹிதை. "ஸாதுக்களைக் காப்பாற்றித் துஷ்டர்களைச் சிக்ஷித்துத் தர்மத்தை நிலை நிறுத்துவதற்காக யுகந்தோறும் அவதாரம் செய்கிறேன்" என்று பகவத்கீதையில் பிரதிக்ஞை செய்திருக்கிறபடி திரேதையின் முடிவில் பிரமன் முதலிய தேவ கணங்கள் துஷ்ட ராக்ஷஸர்களால் தாங்கள் படும் அவஸ்தைகளைச் சொல்லி முறையிட்டபடியாலும், திரேதா யுகமும் துவாபர யுகமும் கூடுகிற ஸந்தியில் தசரத ராஜனுக்குப் புத்திரனாகப் பிறக்கிறேன் என்று பகவான் அருளியிருக்கிறபடியாலும், பூர்வ ஜந்மங்களில் தம்மைப் புத்ரனாக அடைய விரும்பித் தபசு செய்த தசரதனது மனோரதத்தைப் பூர்த்தி செய்யவேண்டிய படியாலும், வேதவேத்யனான பகவானே ஸ்ரீ ராமனாக அவதரித்தார்; அவரது திவ்ய சரித்திரத்தைச் சொல்லுகிற ராமாயணம் பகவத் குணங்களைச் சொல்லுகிற வேதமாக எண்ணப்படுகின்றது.

வேதமாதாவாகவும் எழு கோடி மஹாமந்த்ரங்களுக்குள் பிரதானமான மந்த்ர ரத்நமாகவும் விளங்குகிற காயத்ரீ மஹா மந்த்ரத்தின் 24-அக்ஷரங்களின் வரிசையான ஒவ்வொரு அக்ஷரத்தையும் முதலெழுத்தாகக் கொண்டு ஒவ்வோர் ஆயிரத்து சுலோகமும் ஆரம்பிக்கப் பெற்று 24,000 சுலோகங்களாக வான்மீகி மஹரிஷியாற் செய்யப்பட்டிருக்கின்றது. காயத்ரீ மந்த்ரம் சூரிய ஸ்தோத்ரமாயிருந்து கொண்டே சூரிய மண்டல மத்ய வர்த்தியான பரம்பொருளைக் குறிக்கிறது; ஸ்ரீராமாயணமும் சூரிய வம்ச சரித்ரத்தைச் சொல்லி அவ்வம்சத்திலுதித்த பரம்பொருளாகிய ஸ்ரீராம பிரானைச் சொல்கிறது. இதனாலும் இது வேதமெனப்படுகிறது. இதனைக் கம்ப நாட்டாழ்வாரும், "கலையாழிக் கதிர்த்திங்க ளுதயத்திற் கலித்தோங்கும் அலையாழி யெனவளர்ந்தார் மறை நான்கு மனையார்கள்" "ஆரணத் துறையுளாய்" "சுருதி நாயகன்" என்றத் தொடக்கத்த குறிப்புகளால் உணர்த்துகின்றார்.

## கதா நாயகன்.

"ஸ்ரீமத் ராமாயணம் எல்லோர்களாலும் ஆதரிக்கப்பெற் நீண்ட கால வழக்குடையதாக விருப்பதற்கும், அதைச்செய் வான்மீகி மஹரிஷிக்கு மேலான கீர்த்தி யேற்படுவதற்கும் காரண உத்தம நாயகனாகிய ஸ்ரீராமபிரானுடைய சரித்திரமாக வர்ணி திருப்பதுதான்; கதா நாயகனாகிய ராமன் தீரோதாத்தன்; புண் ச்லோகன்; ஸகல கல்யாண குண ஸம்பந்நன்." "எவன் ராமனை பார்க்கவில்லையோ எவனை ராமன் பார்க்கவில்லையோ அவன் உலக தாரால் நிந்திக்கப்படுவதுடன் அவனுடைய ஆன்மாவும் அவனை நிந்திக்கிறது"—

### வான்மீகி ராமாயணம்.

கீர்த்தி ப்ரதாபம் முதலிய உயர்ந்த குணங்கள் உள்ளவனும் மேலான குணமுடையவனும், ஆபரண வகைகளால் அலங்கரிக்க படாத போதும் அலங்காரமான சரீரமுள்ளவனும், மஹா பாக் வந்தனாகவும் ஸார்வபௌமனாகவும் உள்ளவனும், (ஸார்வ பௌமன் எல்லாப் பூமிகட்கும் அதிபதி) விசேஷக் கொடைக் குணமுடை யோனும், உலகத்தைப் பிரகாசிக்கச் செய்பவனும், காரியங்களை தேச காலங்கட்குத் தக்கபடி செய்து முடிக்கும் ஸாமர்த்தியமுடை வனும், தர்மத்தைக் காப்பாற்றுவதிலேயே நோக்கமுள்ளவனும் தெய்வப் பிறப்பாயிருப்பவனும், எல்லா வித்தைகளிலும் சிறந்தவனு இருப்பவனும், மிகவும் வணக்கமுள்ளவனாக இருப்பவனும், கோப முதலியவற்றால் மாற்றப்படாத அந்தக்கரணமுடையவனும், மனோ விகாரத்துக்குக் காரணமேற்பட்டாலும் அபிப்பிராயத்தை வெளி யிடாது ஸஹித்திருப்பவனும், பிறருடைய கஷ்டங்களை நிவர்த் திக்கும் ஸ்வபாவமுள்ளவனும், தற்புகழ்ச்சியில்லாதவனும், வீரப் தாபமுள்ளவனும், உத்தமனுமானவனே தீரோதாத்த நாயகனாவான் ஸ்ரீராமபிரானுக்கு இத்தகைய குணங்களெல்லாம் அமைந்திருப்பது பிரஸித்தம்.

பகவானே ராமரூபியாயவதரித்து பிதிரு வாக்ய மாதிரு வாக்ய பரிபாலனமும் துஷ்ட நிக்ரஹ சிஷ்ட பரிபாலனமுஞ் செய்து

ஸாமான்ய தர்மத்தையும், லக்ஷ்மண ரூபியாய் ஸ்ரீராமபிரானுக்கு அடிமையாயிருந்து பகவத் கைங்கர்ய ரூபமாகிய விசேஷ தர்மத்தையும், பரதரூபியாய்ப் பகவானைத் தவிர வேறு கதியில்லையென்னும் அதி தர்மத்தையும், சத்ருக்ன ரூபியாய்ப் பகவத் பக்தர்கட்குத் தொண்டு செய்தலே உயர்வென்னும் உத்தம தர்மத்தையும் நடத்திக் காட்டித் தமக்கென வாழாது பிறர்க்குறியாளராய் ஸகல கஷ்டங்களையும் அநுபவித்துத் தர்மத்தை ஸ்தாபனம் செய்தார். ஆகையால் இவரே உத்தம நாயகன்.

## நூற்பயன்.

## "அறம்பொருளின்பம்வீ டடைதனூற் பயனே"

பகுத்தறிவுள்ள மானிடப்பிறவி படைத்தோர் சுருதி யுக்தி யநுபவங்களால் அடையக்கூடிய பயன் நான்கு. அவை தர்ம அர்த்த காம மோக்ஷமென்று சொல்லப்பெறும் அறம் பொருள் இன்பம் வீடென்பனவாம். இவற்றுள் நான்காவதாகிய வீடு பேறுதை, "இம்மூன்றும் விட்டதே பேரின்ப வீடு" என்று பெரியார் பணித்தபடி, அறத்தாறீட்டிய பொருளால் இன்பம் நுகர்ந்து, பின்னர், உலகின் வருவதாய இன்பங்களில் வெறுப்புத்தோன்றி, அவற்றில் வருமின்பம் சிற்றின்ப மெனத்தள்ளித், தியாகபுத்தியினால்—பரோபகாரச் செயல்களால்—உயர்ந்து, பற்றற்று நிற்கும் நிலையே (மோக்ஷ) வீடெய்தும் பயனும். இவற்றையே பெருநூல்களெல்லாம் பல உதாரண முகங்களால் விஸ்தரித்துச் சொல்லிப் போகின்றன.

தர்மார்த்தகாம மோக்ஷ மார்க்கங்களை யுபதேசிக்கக் கூடியனவாயும் முந்தி நடந்த சரித்திரப் பகுதிகளோடு கூடினவையாயும் இருக்கின்றவைகளே இதிஹாஸங்களாக அழைக்கப்படுகின்றனவென்று சப்த ஸ்தோமத்தில் சொல்லியிருக்கின்றது. இதிஹாஸரத்நமாகிய இவ்விராமாயணத்தில் அந்தவைய விஷயங்களெல்லாம் நன்கு விளங்கக் காணலாம். இந்த நூலில், அந்த நான்கு பயன்களும் வாச்யார்த்தங்களாகிய வெளிப்பொருள்களாலும் விடங்கியார்த்தங்களாகிய உள்ளுறைகளாலும் வெளிப்படக் காணலாம்.

**தர்மாசரணை**:—பிதாவினுடைய கட்டளை நியாயமானாலும் அல்லதானாலும்—சுகம் வருவதாயினும் துக்கம் வருவதாயினும் அவற்றை யோசியாமல், அக்கட்டளைகளை நிறைவேற்றுவதே புத்ரனுடைய கடமையாகுமென்று ஸ்ரீராமபிரான் பிதரு வாக்ய பரிபாலனத்திற்காக வனத்திற்குச் சென்றது மேலான அறமாகும். இன்னும், உடன் பிறந்தோர்கள் பரஸ்பரம் இருக்கவேண்டிய ஸஹோதர பாவம் இத்தகையன வென்னும் **பிராதுர் தர்மமும்** மூத்த ஸஹோதரனிடத்தில் இளையோர்கள் எவ்விதம் நடந்து கொள்ளல் வேண்டு மென்னும் **கனிஷ்ட தர்மமும்**, கணவன் மனைவியர்க்கிருக்கவேண்டிய **அந்நியோந்ய தர்மமும்**, "பெண்கள் புருஷனைவிட்டுத் தனியே யிருத்தலாகாது; புருஷனுக்கு எத்தகைய துன்பம் வரினும் அதனை மனைவியுமுடனிருந்து அநுபவித்தல் வேண்டும்" என்னும் **ஸ்திரீ தர்மமும்**, பெரியோர்கட்குண்டாகும் துன்பங்களை யொழித்து அவர்களைக் காப்பாற்ற வேண்டும் என்னும் **க்ஷத்திரிய தர்மமும்**, சக்கரவர்த்தியாயினும் கற்றுணர்ந்தடங்கிய பெரியோர்களை வணங்கல் வேண்டு மென்னும் **உத்தம தர்மமும்**, பெரியோர்க்கும் பிரஜைகட்கும் தீங்கு செய்பவன் எக்குலத்தனாயினும் எந்நிலையனாயினும் எவ்வறிவினனாயினும் அவனை விசுஷித்தல் வேண்டுமென்னும் **ராஜ தர்மமும்**, இன்னு மிவைபோன்ற தர்மங்களும் இதனுள் சரித்திரமாத்திரையானே யன்றி விஸ்தாரமாகப் பல நியாய உதாரணங்களாலும் சொல்லப் பட்டிருக்கின்றன.

**அர்த்தாந்வேஷணம்**:—"பொருளிலார்க் கிவ் வுலக மில்லை" "நடுவண தெய்த விருதலையு மெய்தும்" என்று சிறப்பித்துச் சொன்னபடி, இவ்வுலகப் பயன்களைப் பெறுதற்குப் பொருளே முக்கிய காரணமாயிருத்தல்பற்றி அதனை ஸம்பாதித்தல் அவசிய மென்பதும், அது நல்வழியானல்லாமல் தீவழியானிட்டியவழி யதனாற் கிடைக்கக்கூடிய உலகவின்பமுந் துன்பமயமாக முடிதல்பற்றி அதனை யறவழியே ஈட்டல் வேண்டு மென்பதும், அப்படி ஸம்பாதிக்கப்பெற்ற பொருளையும் தர்ம வழியே செலவுசெய்ய வேண்டுமென்பதும் பிறவும் இந்நூலில் பரக்கக்காணலாகும். அன்றியும், தர்மத்தைவிடப் பொருளானது

எவ்வகையிலும் அற்பர்தாரெனப்படும், கோரிய தர்மம் நடைபெறுதற்கு அப்பொருள் தடையாக ஏற்படுமாயின்—அப் பொருளைத் துறந்தேனும் தர்மத்தைக் காப்பாற்றல் வேண்டு மென்பதும், தனக்கு யாரேனும் சமயங்கருதி யுதவி செய்திருப்பின் அதனைப் பெரும் பொருளாக வெண்ணிப் போற்றல் வேண்டு மென்பதும், சிறு நன்றி செய்தார்க்கும் அவர் வேண்டும்போது தம்மால் கூடுமாயின் பேருபகாரமுஞ் செய்யல்வேண்டுமென்பதும், தூய மனமுடையவர் பகைவர் குலத்தாராயினும் அவர்க்கு அவசியம் உதவி வேண்டியிருப்பின் உடல் உயிராய பொருள்கட்குத் தீங்கு நேருமாயினும் மறுக்காது அடைக்கலமாகிய பொருளைக் காத்தல் வேண்டுமென்பதும் பிறவும் வெளிப்படுகின்றன.

**காமஸேவை:**—காமமானது உலகின்பத்துக்குத் தற்கு உரிய தொன்றாயினும் நியாய விரோதமாகவும் தர்மம் தவறியதாகவும் இருப்பின் தனக்கும் தன் புகழ்க்கும் தன் குடும்பத்துக்குமே யன்றித் தன் நாட்டுக்கே நாசந்தருமென்பதும், காமத்தால் செய்யக் கூடாத காரியத்தைச் செய்யப்புகுந்தால் அது தர்மவழி நடந்தார்க்கும் பெருங்கேட்டை விளைவிக்குமென்பதும், உலகமெல்லாம் கண்டும் கேட்டும் நடுங்கத்தக்க ஆற்றல் படைத்தவனாயினும்—அவனும்—காம மயக்குற்றுச் செய்யத்தகாதவைச் செய்தால் அழிவது நிச்சயமென்பதும் பிறவும் சரித்திர நாயகர் உபநாயகர்களால் நன்கு விளக்கப்பட்டிருக்கின்றன.

இன்னும் இந்நூலில் உலகவின்பங்கட்கு முக்கிய ஸாதனங்களான பலவித வித்தைகளும் அவ்வித்தைகளான் வரும் விஞ்ஞானங்களும் மோக்ஷத்திற்கு ஸாதனங்களாகவுள்ள யோகம் ஞானம் பிரம்மஸ்வரூபலக்ஷணமாகிய பிரஞ்ஞானங்களும் இடை மறைகாய்கள் போல அங்காங்கு தோன்றுகின்றன.

## இராம சரித்திரம் இயற்றியவர்.

வான்மீகர்க்கு முன், இராம சரித்திரத்தை வசன ரூபமாகச் செய்தவர் ச்யவனர் என்னும் மஹரிஷி என்று வெளியாகிறது; எனினும், வான்மீகியே ச்லோக ரூபமாகச் செய்து பெரும்புகழ்

படைத்தார்; போதாயனரும் பரத்வாஜரும் செய்துள்ளாரென்பது கேட்கப்படுகின்றதாயினும், அவ்விராமாயணங்கள் பூர்ணமாகக் கிடைக்கப்பெற வில்லையாம். ஆனந்த ராமாயணம் அத்யாத்ம ராமாயணம் அத்புத ராமாயணம் சம்பூர்ண ராமாயணம் என்பவை பூர்ணமாகக் கிடைத்திருக்கின்றனவாம். அக்னிவேச்ய ராமாயணம் என்பது இராமாயணம் நடந்த காலங்களை நன்கு குறிப்பிடுவ தொன்றும்; ஆயினும், பூர்ணமாகக் கிடைக்கப்பெறவில்லை யென்று தெரிகின்றது. தத்வஸங்க்ரஹ ராமாயணம் யோகவாஸிஷ்ட ராமா யணம் என்னுமிவை முறையே தத்வம் யோகம் இவற்றை விளக்கிச் சொல்லுகின்றன. ரகுவம்சம் பட்டிகாவ்யம் இவையும் ராம சரித்திரத்தை யொருவாறு குறித்துச் செலகின்றன. இவை யெல்லாம் ஸம்ஸ்க்ருத பாஷையிலே செய்யப்பட்டவைகளேயாம். அன்றியும்; அப்பாஷையில் அனர்க்கராகவம் ப்ரஸன்னராகவம் மஹா நாடகம் முதலியவைகளுமிருக்கின்றன.

ஹிந்தி பாஷையில் பிரஸித்தமான ராம சரித்திர மானஸம் என்னும் பெயருடன் துளஸீதாஸரால் இயற்றப்பட்டுள்ள இராம சரித்திரமும் நிலவி நிற்கின்றது. வேறு பாஷைகளிலும் வெவ் வேறு ராம சரித்திரங்கள் அவ்வப் பண்டிதர்களால் செய்யப் பெற்றிருக்கின்றன. "ஆங்கில பாஷையிலும்" ஸ்ரீமான் கிரிபித் என்னும் ஆங்கிலராலும், ஸ்ரீமான் ஆர். ஸி. டட் என்னும் வட இந்தியராலும், ஸ்ரீமான் டி. ராமகிருஷ்ண பிள்ளை யென்னும் தென்னிந்தியராலும் காவியமாகவே செய்யப்பெற்றிருக்கின்றன.

அமிழ்தினுமினிய கந்தண்டமிழ் மொழியில் செய்யப்பெற்ற இராம சரித்திரங்கள் மூன்றெனத் தெரிகின்றது. இவற்றுள், தற்காலத்துப் பிரஸித்தமான கம்ப ராமாயணத்துக்கு முற்பட்ட தாக—ஸங்ககாலத்தில் ஒரு ராம சரித்திரம் அகவற்பாவில் அமைக்கப் பெற்றிருந்ததாகக் கேள்வி மாத்திரையில் புலவர்களால் ஓதப்படு கின்றது. சிலச்சில அடிகளும் பெருந்தொகை வெளியிட்டிற் காணக் கிடைக்கின்றன. கம்பருக்குப்பின் தஞ்சை சதாவதானம் ஸ்ரீமான் சுப்பிரமணிய ஐயர் அவர்களால் வெண்பாவி லமைக்கப் பெற்ற இராமாயணமுமுண்டு. அன்றியும்; வடமொழியிற் செய்யப்

பெற்ற பாகவதம் விஷ்ணு புராணம் முதலியவற்றிலும் தென்மொழியிலியற்றப்பெற்றுள்ள கூர்ம புராணம் முதலிய சிலவற்றிலும் இக்கதை உபாக்யானமாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. இவையெவற்றினும் வான்மீகி ராமாயணமும் கம்பராமாயணமுமே மிகப் பிரஸித்திபெற்றவைகளாக விளங்கியிருக்கின்றன வென்பது பிரமாணம். எனவே, அவ்விரண்டு ராமாயணங்களுமே இந்த "கம்பநாடர்" என்னும் ஸஞ்ஜிகையில் எடுத்து ஆதப்பெறுகின்றன; எனினும் வேறு சில ராமாயணங்களின் கருத்துக்களும் வேண்டும்போது ஆங்காங்கு தோன்றலாம்.

## வான்மீகர்.

இவரது பிறப்பு வளர்ப்புகளைபற்றிய நேரும்போது பல கதைகள் பலவிதமாகச் சொல்லுகின்றன: எனினும், பெரும்பாலனவற்றின் ஒப்புமை நோக்கி எமது கொள்கையை யிங்குக் குறிக்கின்றோம்.

"வான்மீகி என்னும் பதத்திற்குப் புற்றிலிருந்து உண்டானவர் என்று அர்த்தம்; வன்மீகத்திலிருந்து—புற்றிலிருந்து உண்டானபடியால் இவர் வான்மீகி யென்று சொல்லப்படுகிறார் என்று மிகவும் தேஜஸ்விடும் உலகத்துக்குப் பிதாமகருமாகிய பிரம்மதேவர் சொல்கிறார்"—ப்ரஹ்ம வைவர்த்த புராணம்.

"இவர் வெகு காலம் தபசு செய்துகொண்டிருக்கையில் நான்கு பக்கங்களிலும் புற்றுவளர்ந்து இவரை மறைத்துக் கொண்டது. பிறகு, வருணபகவான் கடுமையான மழை பெய்வித்தார். அதனால், அந்தப் புற்று கரைந்து இவர் வெளிப்பட்டதால், இவருக்குப் பிராசேதஸர் என்று பெயருண்டாயிற்று" (பிரசேதஸ்—வருணன்; அவரது புத்ரர் பிராசேதஸர்)—வான்மீக ராமாயணம்: கோவிந்தராஜீயம்.

பின் வருமாறு வான்மீகி மஹரிஷியே தம்வரலாற்றை ஸ்ரீ ராமபிரானுக்குச் சொன்னார் என்பது.

## ஆனந்த ராமாயணம்: ராஜ்ய காண்டம்.

"நான் முந்தி வேடர்களிருக்கு மிடத்தில் அவர்களுடன் வளர்ந்தேன். நான் பிராம்மணனானாலும் அவர்களுடைய ஆசாரத்தையே யெப்போதும் அநுஷ்டித்து வந்தேன். அவர்கள் வம்சத்து ஒரு பெண்ணினிடத்தில் எனக்கு அநேக புத்திரர்கள் உண்டானார்கள். அக்குடும்ப வளர்ப்பி னிமித்தம் திருட்டுத் தொழிலில் ஜீவனம் செய்து வந்தேன். வில்லையும் அம்பையுங்கொண்டு பல மிருகங்களைக் கொன்று பிழைத்தேன். ஒரு நாள் காட்டில் ஏழு ரிஷிகளைக் கண்டேன். அப்போது அவர்களிட மிருக்கும் எல்லாப் பொருள்களையும் அபஹரிக்க விரும்பி அவர்களை வற்புறுத்தினேன். அவர்கள் சிறிதும் பயப்படாமல், "நீ உன் குடும்பத்தவர்களிடம் சென்று, நீ செய்துவரும் இந்தப் பாவங்கட்கு அவர்களும் பொறுப்பாளிகளாவார்களா? கேட்டுவா; நீ வருகிற வரையில் நாங்கள் எங்கும் போகாமல் நிச்சயமாக இங்கேயே தங்கியிருக்கிறோம்" என்று சொன்னார்கள். அவர்கள் தரிசனத்தாலும் அவர்களது வாக்கினாலும் எனக்கு அப்போது ஸாத்விக குணம் தோன்றியது; உடனே அவர்கள் வார்த்தையில் எனக்கு நம்பிக்கையுண்டாகி, அவர்களையங்கேயே நிற்கும்படியாக உறுதிமொழி வாங்கிக் கொண்டு, என் குடும்பத்தவரிடம் சென்று கேட்டேன்; அவர்கள், "அவரவர் செய்யும் பாவம் அவரவரைச் சேர்ந்ததே; இச்செயல்களால் உண்டாகும் பாவங்களெல்லாம் உனக்குச் சேர்ந்தனவேயன்றி எங்கட்குச் சேரமாட்டா. குடும்பத்தை எத்தொழிலாலேனும் காப்பாற்ற வேண்டியது உனது கடமை; நீ கொண்டுவரும் வஸ்துக்களில் மாத்திரம் எங்கட்குப் பங்குண்டு" என்று சொன்னார்கள். இதனைக்கேட்டு ஆலோசித்து, ஸம்ஸார வாழ்க்கையில் வெறுப்புக் கொண்டே அம்மஹரிஷிகளிடம் சென்று வணங்கி, "மகாபாவியான என்னைக் காப்பாற்ற வேண்டும்; எனக்கு உய்யும் மார்க்கம் உபதேசியுங்கள்" என்று பிரார்த்தித்துக் கேட்டுக்கொண்டேன். அவர்கள் ஒருவருக்கொருவர் ஆலோசித்துப் பிறகு என்னைக் கருணையோடு பார்த்து, ராம என்னும் உமது திவ்ய நாமத்தை மாற்றி மரா என்று உபதேசித்து அம்மந்திரத்தை அவர்கள் திரும்பி வரும்வரை உச்சரித்துக் கொண்டே உட்கார

திருக்கர் சொன்னார்கள். நான் பூர்வபுண்ய பரிபாக காலத்திலும் இந்த ஜந்ம வாழ்க்கையின் வெறுப்பினாலும் உலக ஆசையை முற்று மொழித்து ஜபம் செய்து கொண்டேயிருந்து என்னை மறந்து போய் விட்டேன். என்மேல் புற்றுக்கள் உண்டாகி வளர்ந்து என்னை மறைத்துவிட்டன. பிறகு, வெகு காலங்கள் கழித்து அந்த மஹரிஷிகள் வந்து என்னைப் பார்த்தார்கள். அப்போது மழை பெய்து புற்றுக்கள் கரைந்து என் உருவம் சிறிது தோன்றவே என் நிஷ்டையைக் கலைத்து என்னையெழுந்து வரும்படி சொன்னார்கள். நான் எழுந்து அவர்களை நமஸ்கரித்தேன். அவர்கள், "உனக்கு இது இரண்டாவது பிறப்பு; நீ இப்போது புற்றிலிருந்து வெளிப் பட்ட படியால், உனக்கு வான்மீகி என்னும் பெயர் பிரஸித்த மாகட்டும் என்று அநுக்ரஹித்துப் போனார்கள்."

இச்செய்தியை அத்யாத்ம ராமாயணமும் பவிஷ்யத் புராண மும் ஆமோதித்துச் சொல்கின்றன.

"பிரம்ம தேவரால் விஸ்தாரமாகச் செய்யப்பட்ட ஸ்ரீராம சரித்திரத்தை அவருடைய உத்தரவின்படி நாரதர் வான்மீகி மஹரிஷிக்கு உபதேசித்தார்" —மத்ஸ்ய புராணம்.

"வான்மீகியும் ஸகல வேதாந்தங்களிலும் அறியக்கூடிய பரம புருஷனுடைய ஸ்வரூபத்தை நிச்சயிப்பதற்குத் தெய்வச் செயலாய் வந்து சேர்ந்த நாரத மஹா முனிவரால் உபதேசம் பெற்றுத் தம்மிடத்தில் மிகவும் சந்தோஷம் கொண்ட பிரம்ம தேவர் அருளிய ஞானதிருஷ்டியின் பலத்தினால், வேதங்களின் அர்த்தங்களை விவரித்துச் சொல்லும் ஸ்ரீராமாயணமென்னும் காவ்ய ரத்னத்தைச் செய்தார்." —வான்மீகி ராமாயணம் : கோவிந்த ராஜீயம்.

"வான்மீகி மஹரிஷியானவர், ஸ்ரீராம புத்திரர்களாகிய குசல வர்கள் மகாமேதாவிகளாய் வேதங்களை அத்யயனம் செய்து அவை களின் பொருள்களை விரைவில் அறிந்திருப்பதைப் பார்த்து, ஸீதை யின் சரித்திரமான ராமாயணமென்னும் மஹா காவ்யத்தை, வேதார்த்தங்களெல்லாம் இதிலிருக்கின்றனவென்று தெரியப்படுத்த அவ்விருவர்க்கும் உபதேசித்தார்." —வான்மீகி ராமாயணம்.

"*ஸ்ரீ ராமன், ராவணன் முதலிய அரக்கர்களைக் கொன்று அயோத்யா நகரம் சேர்ந்து அரசுரிமை பாராட்டி ராஜ்ய பரிபாலனம் செய்துக் கொண்டிருந்தபோது, அச்வமேத யாகஞ்செய்வதற்கு முந்தி வான்மீகி மஹரிஷி இந்தக் காவ்யத்தைச் செய்தார்.*"
வான்மீகம்,

"*நாரணன் விளையாட் டெல்லாம் நாரத முனிவன் கூற*
*ஆரணக் கவிதை செய்தான் அறிந்தவான் மீகி யென்பான்.*"

—கம்ப ராமாயணச் சிறப்புரை.

ஸ்ரீ:

# கம்பர் சரிதச் சுருக்கம்.



"பெற்றும் வளர்த்தும் வித்தைதனைப்
பேணிக் கொடுத்தும் பெயர்பொறித்தும்
பற்ற அரும்பால் அமுதளித்தும்
பகைத்த வறுமைப் பயந்தீர்த்தும்
கற்ற முதுநூல் திருவழுந்தூர்க்
கம்பன் தனையக் கருணைசெய்தோர்
மற்றும் புலவோ ரையும்வாழ
வைத்தார் சோழ மண்டலமே."

—சோழமண்டல சதகம்

எனும் இக் கவியினால், கம்பர், பிறந்து வளர்ந்து கல்வி கற்றுப் புகழ்பெற்றிருந்த தெல்லாம் சோழநாடே யென்பதனை யறிகிறோம்.

## பெயர்க் காரணம்

புராதன கவிகளுடைய பெயர்களெல்லாம் ஓட்டுப் பெயர்களாகவே இருந்திருக்கக் காண்கிறோம். அவரவர் பிறந்த நாட்டின் பெயராகவாவது குணங் குறி செயல்களின் குறிப்புப் பெயராகவாவது அவரவர் நடத்திய தொழிலின் பெயராகவாவது பிற குறிப்புப் பெயராகவாவது விளங்கியிருக்கக் காண்கிறோம். அப்படியே இவ்வாசிரியர் பெயரும் தோன்றுகிறது. இவரது பெயர் கம்பர் கம்பநாடர் கம்பநாட்டாழ்வார் கம்பநாடுடையவள்ளல் என்னுமித்தகையன்வாக வழங்கப் பெறுகின்றது.

கம்பர் என்னுஞ் சொல் கம்பைக் கையிற்கொண்டிருந்தமை காரணமாகப் பிறந்த பெயர். ஏகாம்பர முடையாரது பெயரின் மரூஉப் பெயரென்பர் சில்லோர்; கம்பங்கொல்லையைக் காத்திருந்த காரணமே இப்பெயரைத் தந்தது என்றும் சொல்லுகிறார்கள். இவரது முன்னோரது ஜந்மதேசம் கம்பநாடு என்னும் பெயருடையதாதலால், அதுபற்றி இவர்க்கு இப்பெயர் தோன்றியிருத்தல் வேண்டும்; அதனாற்றான் கம்பநாடர் என்றழைக்கப்படுகிறார் என்பர் ஒரு சாரார்.

இன்றைக்கும் தேரழுந்தூரில் கம்பர் மேடு என்று ஒரு மனையிருப்பதாக அறிகிறோம். பின்னர், இவரது ஆழ்ந்தபக்தியின் காரணமாக இவர்க்குக் கம்பநாட்டாழ்வார் என்னும் பெயர் பிரஸித்தமாயிற்று. தவங்கிடந்து புற்று வளர்ந்து பின் மழைபெய்து புற்றிலிருந்து வெளிவந்த காரணம்பற்றி அந்த ராமாயணப்புலவர் வான்மீகி என்றழைக்கப்பட்டது போல, இந்த ராமாயணப் புலவரும் காளி கோயில் கம்பத்தடியினின்று காளி வரம்பெற்றமை காரணமாகக் கம்பர் என்னும் பெயர் பெற்றிருக்கிறார் என்றும் சொல்கிறார்கள். கம்பம்போல் நிலைத்த சிந்தையுடையா ரென்றும், வீட்டைத் தாங்கும் கம்பம்போல் இராமாயணமாகிய கட்டுக் கோப்பைத்தாங்கி நிற்பவரென்றும் பொருள் செய்யலாம் போலும் இப்பெயர் அமைந்து கிடக்கின்றது; காணுங்கள். கம்பத்தில் தோன்றிய நரஸிங்கனையுபாஸனாமூர்த்தியாகக் கொண்டுள்ளார் கம்பர் என்ப.

## பிறப்பும் வளர்ப்பும்.

இவரது பிறப்பைப்பற்றி இது வரையில் நமக்குக் கிடைத்திருக்கிற பல கர்ணபரம்பரைக் கதைகள் ஒன்றுடனொன்று முரண்பட்டு நிற்கின்றனவாகலின், துணிந்து, இதைத்தான் கொள்ளலாம் என்று சந்தேகமற நிர்ணயித்துச் சொல்வது அசாத்யமாக இருக்கிறது. இவர் ஒரு அரசனுடைய புதல்வர்; ஓச்சன் வீட்டில் வளர்ந்தனரென்று சிலர் சொல்லுகிறார்கள். திருவழுந்தூர்ப் பிடாரிகோயிற் பூஜைசெய்துவந்த ஒரு ஓச்சனுடைய குமாரரென்றே சிலர் சொல்லுகிறார்கள். ஒரு பிராம்மணச்சிசு

வாகி ஓச்சனால் வளர்க்கப்பெற்றவர் இக் கம்பர் என்றும் சொல்லு கிறார்கள். இவற்றுக்கெல்லாம், கர்ண பரம்பரையான கதைகளைக் காரணமாகவும், இக் கம்பரால் அவ்வப்போது சொல்லப்பெற்ற தனிக் கவிகளைக் காரணமாகவும் காட்டுகின்றார்கள். அக்கவிகளின் உண்மைத் தன்மையைப்பற்றிப் பெரிதும் ஆராயவேண்டி யிருக் கிறது. இவர், "உழுங்குலத்திற் பிறந்தாரே யுலகுய்யப் பிறந் தாரே" என வேளாளரைப் புகழ்ந்து பாடியிருப்பதால், இவர் வேளாளர்தான் என்றும் சொல்லுகிறார்கள்.

ஆனால் எல்லாக் கதைகளும் ஆதாரங்களும் இவர் ஒரு ஓச்சன் வீட்டில் வளர்ந்ததையும் வேண்ணெயூர்ச் சடையப்பரால் காப்பாற்றப்பெற்றுக் கல்வியும் பெற்றுப் புகழோங்கி நின்றதையும் மறுக்காமல் ஒப்புக்கொள்ளுகின்றன.

அன்றியும், இவர் பிறந்த ஊராகிய திருவழுந்தூரிற் சென்று வயதின் மூத்தவர்களையும் பரம்பரைக் கதைகளை நினைவுடன் சொல் பவர்களையும் பண்டிதர்களையும் விசாரித்தபோது, "மூவலூரிலிருந் தோரு மறையவர் குலத்துக் கைம்பெண்ணொருத்தி நிறைந்த கருப் பத்துடன் திருவழுந்தூரில் வந்து, ஒரு ஓச்சன் வீட்டு மரத்தடியி லிருந்து பொறுக்கமாட்டாது அவஸ்தைப்படும்போது அக் கர்ப்பம் நழுவிக் குழந்தை பிறந்தவுடன் அவள் உயிர் துறந்தனள்" என்றும், "இதனை ஆதித்தன் மகன் என்று வளர்ப்பாயென்று அப்பெண் மணி சொல்லிப் போனா" ளென்றும், "அந்த ஆண் மகவை அந்த ஓச்சன் எடுத்து வளர்த்துவந்தனன்" என்றும் சொன்னார்கள். இதனைப்பற்றிக் கீழே காட்டும் ஆதாரத்துடன் இச் செய்தியை நிறுத்திச் செல்வோம்.

இவர் சரித்திரத்தைப்பற்றிக் காலஞ்சென்ற தமிழ்ப்பண்டிதர் (பின் னத்தூர்) ஸ்ரீமான் அ. நாராயணசாமி ஐயரவர்கள் பின் வருமாறு குறித் திருக்கிறார்கள்.

"மழை வளம் பெருகுங் குடகமலையிடத்திற் பிறந்து எக் காலத்து மாறாது தண்ணீர் பெருகி வருங் காவிரியாறு பாயப் பெற்று, 'நிலமகள் முகமோ திலகமோ கண்ணோ' என்று

விளங்குகிற சோழநாட்டில் இப்பொழுதிருக்கிற மாயூரம் ரயில் ஸ்டேஷனுக்கு மேல்பாலுள்ள மூவலூரில் அந்தணர் மரபில் ஆதித்தனென்னும் ஒரு பிராமண ரிருந்தனர்; அவர் அவ்வூரிலுள்ளார் பலரும் வெறுக்கும்படி பல தீங்குகளைப் புரிந்து வாழும் நாளில், அத்தெருவிலுள்ள மறையவர் யாவரும் ஒன்றுசேர்ந்து நெருப்பு முதலாயினவும் கொடாதிருக்கும்படி கட்டுப்பாடு செய்துவிட்டார்கள்; அப்படி யிருக்குங் காலத்தில் அவ்வாதித்தனென்னும் அந்தணர் மனைவியார் கருப்பமுற்றனர்; அப்பொழுது ஆதித்தனென்பவர் பரமபதம் பெற்றனர். (அவர் கொலையுண்டதாகச் சிலர் கூறுகிறார்கள்.) பிற்பாடு அம்மாதின் கருப்பம் முதிர்ச்சி யடையக்கண்ட அவ்வூ ரந்தணர் ஒன்றுசேர்ந்து, 'இவள் புருஷ னிறந்த பின் செய்கைத் தவறிழைத்துக் கருப்ப மடைந்தன' ளென்று, படாப்பழி சுமத்திச் சாதியில் விலக்கிவிட்ட தன்றி, அவ்வக்கிரகாரத்திலும் குடியிருப்பது தகுதியில்லை யென்று கடிந்து வெருட்ட, அந்தக் கொடிய வந்தணர் செய்கைக்குப் பயந்து அம்மாது பூரண கருப்பத்துடன் அவ்வூரைவிட்டுப் புறப்பட்டு மேற்கே நோக்கி மெல்ல மெல்லச் சென்று மிகுந்த வருத்தமும் துக்கமும் வளர்ந்து பெருகக் கருத்தழிந்து புலம்பிக்கொண்டு முற்கூறிய திருவழுந்தூருக்கு வந்து சேர்ந்தார். அப்படி வரும்பொழுதே பிரஸவ வேதனை யுண்டாகித் திருவழுந்தூரில் ஒரு மரத்தினடியில் ஈன்று அக் குழந்தையை நோக்கிப் பலவாறு வருந்தி 'நல்வினை செய்திலாதே னம்பிநீ தமியை யாகிக்' கிடக்கின்றனையோ வென்று புலம்பித் தம் புடவை முன்றானையைக் கிழித்துக் கீழே விரித்து அதில் அக்குழந்தையை வைத்து உயிர்நீங்கினார். (பத்திராட்ச மரத்தின் கீழ்ப் பிரசவித்ததாக அங்குச் சிலர் சொல்லுகிறார்கள்.) அப்போது அவ்வூரிலுள்ளவனும் சாதியில் உவச்சர் மரபினனும் காளிகோவில் பூசாரியுமான ஒருவன் அங்கு வந்து அக் குழந்தையைக் கண்டு மகிழ்ந்து எடுத்துத் தன் வீட்டுக்குக் கொண்டுபோய் வளர்க்க, வளர்ந்துவரும் நாளில், உரிய பிராயத்தில் கல்வி கற்பிக்க வெண்ணி, இப்பொழுது கதிராமங்கலமென்று பெயர் வழங்கி வருவதான வெண்ணெய்நல்லூரில் வேளாளரில் சிறந்த காணியாளர் மரபினரும் பெரிய பிரபுவுமாகிய சடையப்ப வள்ளல் என்பவரிடம் கொண்டுபோய்ச் சேர்ப்பித்தனன். அவரும் இச் சிறுவரிடம் அன்பு பாராட்டித் தம்

பிறந்தவூரைப்பற்றிய சில குறிப்புகளும் அவர்களே எழுதியிருக்கிறார்கள். அது பின்வரும்:—

**பிறந்த ஊர்:**—திருவழுந்தூர்; (தேரழுந்தூரென்பது மிதுவே) இதனைக் கம்பர் சிறப்புப்பாயிரத்தில் 'சீரணி சோழ நாட்டுத் திருவழுந்தூ ருவச்சன்' என்பதனுனும் (தமிழ் நாவலர் சரிதை) திருவழுந்தூர்த் தாதியைச் சோழன் எந்தவூரென்று கேட்டபோது அவள் பாடிய

**கம்பன் பிறந்தவூர்** காவேரி தங்குமூர்
கும்பமுனி சாபங் குலைந்தவூர்—செம்பதுமத்
தாதகத்து நான்முகனுந் தாதையுங்கா ணுமறையை
யோதுவித்து வாழுமழுந் தூர்

[சுவாமிபெயர்—வேதாத்தியாபகேச்சுவரர்] என்றபாடலாலுமறிக.

இவ்வூர் சோழநாட்டுக் குற்றாலம் ரயில்வே ஸ்டேஷனுக்குத் தென்கிழக்கில் இரண்டு மைலிலுள்ளது. அவ்வூரில் வைஷ்ணவ அக்கிரகாரத்துக்குத் தெற்கில் அரைமைலுக்கப்பால் இவர் வீடிருந்ததாகத் தெரிகிறது. அந்த இடம் இப்பொழுது கிராம சமுதாயமாயிருந்து பங்கு பிரிக்கப் பெற்றுளது; உத்தேசம் 50-ஸெண்டு. நூற்றைம்பது குழி நிலமிருக்கும். பூமியின் மட்டத்திற்கு மேல் ஒன்பதடி யுயரமுள்ள தொரு மேடாயிருக்கிறது; அதற்குக் **கம்பர்** மேடு என்று பெயர் கூறப்படுகிறது; அந்தமேடு, முன்பு வீடிருந்ததற்கு அடையாளமாகச் சல்லிகளும் ஓடுகளும் நிரம்பப் பெற்றுள்ளது; அதனைச்சுற்றி—முகம்மதியர்கள் கிரயத்துக்கு வாங்கி—வீடு கட்டியிருக்கிறார்கள். அம்மேட்டின் தென்பால் பூமியை வெட்டிப் பரிசோதிக்குமிடத்து ஒரு பெரிய கிணற்றுக் கட்டிடம் அகப்பட்டுளது; அதனையும் தூருவெடுத்திருக்கிறார்கள். (நச்சினார்க்கினியர் பொருளதிகாரவுரையிற் காட்டுகிற அழுந்தூர் இதுவே)

**இருந்தவூர்:**—கதிராமங்கலம்; இது முற்கூறிய குற்றாலம் ரயில்வே ஸ்டேஷனுக்கு வடமேற்கில் உ-மைலிலுள்ளது. இதுவே முதலில் வெண்ணெய் நல்லூரென்று வழங்கி வந்து, கம்பர் காலத்தில் கதிர் வேய்மங்கலமென்று மாற்றப்பட்டதாகவும், அது கதிராமங்கலம் என்று மருவியதாகவும் தெரிகிறது. அடையாளமாகச் சரித்திரத்துட் கூறுகிற குதிரை மேய்ந்த வயலைக் குதிரைமேஞ்சான் என்ற பெயரால் இப்பொழுதும் வழங்கி வருகிறார்கள். இவரை ஆதரித்த

பிரபுவாகிய சடையப்ப வள்ளல் இருந்த இடம் சடையன் திடல் என்ற பெயரால் வழங்கப்பட்டு வருகிறது; அத்திடலில் வீடுகளிருந்தன வென்பதற்கு அடையாளங்கள் பலவுள; நிருதித் திக்கில் பெருமாள் கோவிலும் ஈசானியத்தில் சிவன்கோவிலுமிருந்து பாழாயின. பீடங்கள் கிடக்கின்றன. வடபாலுள்ள வயல்களுக்கு அகத்தீசர் சாணையென்றும் தண்டைக்காலம்மை சரணையென்றும் இரண்டு பெயருளவாதலின் அவற்றைக்கொண்டு சிவன் கோயிற்பெயர் நிச்சயிக்கலாயிற்று. அத்திடலின் தென்புற வயலுக்குக் கழுநீர் பாய்ந்தான் என்று பெயர் கூறுகிறார்கள்; அதனைக் கம்பர், 'மூட்டி லட்டில் முழங்குற வாக்கிய, நெட்டு லைக்கழு நீர்நெடு நீத்தந்தான், பட்ட மென்கமு கோங்கு படப்பைபோய், நட்ட செங்நெலி னூறு விளையுமே' என்ற பாடலி லமைத்திருப்பதனையும் நோக்கியறிக. அன்றி, மேற்படி ஊர் வெள்ளைப் பிள்ளையார் கோயிலிலிருக்கிற செப்பு விக்கிரகத்தின் பீடத்தில் வெண்ணெய் நல்லூர்ப் பிள்ளையார் என்ற எழுத்துக்கள் வெட்டியிருப்பதனாலும் கதிராமங்கலமென்பதே வெண்ணெய் நல்லூரென வழங்கப்பட்டு வந்ததென்பது தெளிவாதலறிக."

"ஆன்பாலுந் தேனும் அரம்பைமுதன் முக்கனியும்
தேன்பாய உண்டு தெவிட்டு மனம்—தீப்பாய்
மறக்குமோ வெண்ணெய் வருசடையா கம்பன்
இறக்கும்போ தேனும் இனி."

—தமிழ் நாவலர் சரிதை

எனவே, கம்பநாட்டாழ்வார், பிறப்பின் வகுப்புத்தெரியாமலே குழந்தை முதற் சிறு பிராயம் வரை ஒரு ஓச்சன் வீட்டில் வளர்ந்து பின்னர்ச் சடையப்ப வள்ளலாருடைய ஆதரவில் இருந்து கல்வியும் கற்று மற்றை நடை உடை இல்லொழுக்கம் முதலியவற்றில் வேளாண் மரபினராகவே வாழ்ந்து வந்திருக்கின்றாரென்பது போதருகின்றது.

## கல்விப் பெருமை.

கம்பர் தம்மைச் சிறு பிராயத்தில் வளர்த்த ஓச்சரைப் பார்ப்பதற்காகச் சடையப்ப வள்ளலாரது அநுமதியின்மேற் புறப்பட்டுச் சென்று, இரவில் வழியில் ஒரு காளிகோயிலிற் றங்கும்படி

நேர்ந்தபோது, இரவைக்கழிப்பதற்கு அங்குள்ள மரத்தின் மேலேறித் தாம் கற்றுள்ள சில ஜீவகாருண்யச் செய்யுள்களைச் சொல்லிக் கொண்டிருந்தாரென்றும், விடியற்காலத்தில் நித்திரை மயக்கவே கீழிறங்கி மரத்தினடியில் நித்திரை போயினரென்றும், அந்தச் சமயம் அக் காளியுருவில் வந்ததொரு தெய்வ சக்தியின் அருளைப் பெற்று சிறு பிராயம் முதலே கவிபாடுந் திறமைவாய்க்கப் பெற்றிருந்தாரென்றும் சரித்திரம் காட்டுகின்றது. அதனால் இவரை வரகவி யென்று சொல்லுகிறார்கள். எனினும் இவரது காவியத்தில் உட்புகுந்து பார்க்கும்போது, தமக்கு முன்னிருந்த தென்மொழிப் புலவர்களது நூல்களை நன்கு ஆராய்ந்து அவற்றில் ஸாரமுள்ள பலவற்றைத் தமது அரிய நூலின்கண் சொல்லாலும் பொருளாலும் காட்டியிருக்கிறாரென்பது நன்கு விளங்குகின்றது. சங்க நூல்களிலிருந்தும் தேவார திருவாசகங்களிலிருந்தும் நாலாயிரப்பிரபந்தங்களிலிருந்தும் தொல்காப்பியம் இறையனார்அகப்பொருள் முதலிய இலக்கணங்களிலிருந்தும் அவற்றின் வியாக்யானங்களிலிருந்தும் பல அபிப்பிராயங்கள் இவரது ராமாவதாரத்தில் காணக்கிடைக்கின்றன. வடமொழி நூல்களில் வான்மீகமேயன்றி இதர ராமாயணங்களின் ஸாரதமமான விஷயங்களும் மற்றை ராமாயண நாடக கிரந்தங்களின் வியப்புப் பொருள்களும் மனுதர்மம் சுக்ரநீதி முதலிய நீதி நூல்களின் ஸாரங்களும் காளிதாஸீயம் அமருகம் முதலாம் சிங்காரக்கவிகளின் அநுபவவாக்கியங்களும் கம்பரது ராமாவதாரத்தில் எடுத்து உதஹரிக்கப்பட்டிருத்தல் நன்கு விளங்குகின்றது.

இவர், திருக்குறளைத் தமக்கு உயரிய மேற்கோளாகக்கொண்டு அதன் சொற்களையும் அடிகளையும் பொருள்களையும் அப்படி யப்படியே பொன்னே போற் போற்றி வைத்திருக்கிறார் என்பது வெளியாகின்றது. அநேகமாய் இவர் இவ்வுயரிய இராமாவதாரத்தை— வடமொழி வான்மீகத்துக்கும் தென்மொழி திருக்குறளுக்கும் ஒரு வியாக்கியான நூலாகவே இயற்றியுள்ளாரென்பதும் போதருகின்றது. இத்தகைய ஆராய்ச்சியுடன் போதும்போது இவர் தமிழ் இலக்கண இலக்கிய நூல்களை நன்கு பயின்றுளாரென்பதும் வடநூல்களிலும் பயிற்சி யுள்ளாரென்பதும் உறுதியாக்கப்படுகின்றன.

இவரது வாழ்க்கையையும் முடிவையும் பல கதைகள் ப
படியாகக் கூறுகின்றன. ஒரு உயர்ந்த அறிவாளிக்கும்—ஆழ்ந்
பக்தர்க்கும்—பிரகிருதிதத்வ ஆத்மதத்வ பரமாத்மதத்வ உணர்ச்
பெற்ற அநுபவிக்கும், பொருத்தமற்ற—ஒன்றுக்கொன்று முரண்
பாடுடைய, அவற்றை, யீங்கு விரித்துச் செல்லல் அவசியமாக யா
கருத்தில்லை யாகலின்—அவற்றை யீங்குக் குறியாது செல்கின்றோம்
அச்செயல்கள் ஒருவாறு உண்மையாக இருத்தல் கூடுமாயினும்
அவற்றைப் படிப்பதனால் உண்டாகும் நன்மையைக் காட்டினு
விஷயங்களை விரிப்பதே நேயர்கட்கு அதிகப் பயனுண்டாக்கல்
மென்பது கருதி விடுக்கின்றோம்.

இவரது கல்விப் பெருமையைக் கண்டும் கேட்டும் உவ
புற்ற சோழவரசன் இவரைத் தனது ஸமஸ்தான பண்டிதரா
ஏற்றுக்கொண்டான். தம்மை யாதரித்த சடையப்ப வள்ளல
ரது வேண்டுகோட் கிணங்கியே கம்பநாடர் இவ்விராமாயணம் பா
யரங்கேற்றினார் என்று எல்லாக் கர்ண பரம்பரைகளும் கூ
கின்றன. இவர் தமது ராமாவதாரத்துட் பலவிடங்களில் வள்
லாரைப் புகழ்ந்து பாடியிருப்பது அச்செய்தியை வற்புறுத்
நிற்கின்றது. சோழனைப்பற்றியும் இரண்டொரு இடங்களி
இராமாயணத்திற் புகழ்ந்து பாடியிருக்கிறார். அச் செய்யுள்
ளெல்லாம் அவ்வக்காண்ட ஆராய்ச்சிக் குறிப்பில் வரும். கம்பர்க்
இயற்கைத் தத்வ வுணர்ச்சி மிகுதியுள்ள தென்பதும் பாவன்மை
யும் நாவன்மையும் படிப்போரை வசப்படுத்துந் தன்மை யுடைய
வாக அமைந்துள்ளன வென்பதும் இவ்விராமாயண ஆராய்ச்சியா
வெளியாகும். அவற்றை வருமிடத்திற் காண்க.

"எண்ணத் தரும்பார் உள்ளளவும்
இரவி மதியம் எழுமளவும்
கண்ணற் கினிய சயராம
கதையின் ஒருபான் கவிமுழுதும்
வெண்ணெய்ச் சடையன் சடையனென
விறலார் கம்பன் விளங்கவைத்த
வண்ணத் துறைவேளாண் பெருமான்
வளஞ்சேர் சோழ மண்டலமே"

—சோழமண்டல சதகம்

## சடையப்ப வள்ளலார்.

தொடையிலெழு சிலந்தி தோற்றுவிக்கப் பட்டின்
புடைவை கிழித்த பெருங்கை—கடல் சூழ்ந்த
பார்பூட்டு மன்னர் பரிகரிபூட் டக்கதிரோன்
தேர்பூட்ட ஏர்பூட்டுஞ் செம்பொற்கை—வீரமதன்
ஐங்கோல் தொடுக்க அணைக்கோல் எடுக்கவுழும்
பைங்கோல் பிடிக்கும் பதுமக்கை—இங்கிதமாஞ்
சீர்படைத்த பூபாலர் செங்கோல் பிடிப்பதற்குப்
பேர்படைத்த மேழி பிடிக்குங்கை— ... ...
... ... ... ... நீளுலகில்
ஆதுலர்க்குச் செம்பொன் அளிக்குங்கை ஆகமங்கள்
வேதபு ராணங்கள் விரிக்குங்கை—நீதிநெறி
மானங் குலங்கல்வி வண்மை அறிவுடைமை
தானந் தருமந் தழைக்குங்கை—ஆனதமிழ்க்
கல்லார்கள் என்னுமற் கற்றோர்கள் என்னுமல்
எல்லோரையுங் காத்தீ டேற்றுங்கை— ... ...
... ... ... ... திட்டமுடன்
பொன்னு லுழுதும் பொரிக்கறியுந் தான்கோணர்ந்து
நன்னு வலர்க்களித்த நாணயக்கை ... ...
... ... ... ... வென்றிதரும்
ஓராணைநூ றுயிரக் கலநெல் லோர்கவிக்குச்
சீராக நல்குந் தியாகக்கை—

என்று திருக்கை வழக்கம் என்னும் நூலிலும்,

தேனேறு மின்சொலிரா மாயணத்துத் திருவ ழுந்தூர்
ஆனே றனையதமிழ்க் கம்பநாடன் அமைத்து வைத்த
தானேரில் கீர்த்திசெய் வெண்ணெய்நல் லூரிற் சடையனைப்போல்
வானேறு கீர்த்திகொள் வேளாளர் பாண்டியன் மண்டலமே

என்று பாண்டி மண்டல சதகத்திலும்,

தேனார் தொடையார் பராசசிங் கப்பெருமான் செழுந் தமிழ்க்குக்
கானார் நெல்லின் மலைகோடி கண்டிநாடு கரை சேரக்
கூனார் கப்பல் ஆயிரத்திற் கொடுபோயளித்த கொடைத் தடக்கை
மாணுகரன்சங் கரன் சடையன் வளஞ்சேர் சோழ மண்டலமே

என்று சோழ மண்டல சதகத்திலும், பிறண்டும், விதந்து ஓத பெறும் திருவெண்ணெய் நல்லூர்ச் சடையப்ப வள்ளலாரே, நமது கவிச்சக்கரவர்த்தி கம்ப நாட்டாழ்வாரைப் போற்றி வளர்த்து வித்தைகளைப் பேணிக் கொடுத்தும் பெயரளித்தும் ஆதரித்துதவி பெரியாராவர்.

இப் பெரியார், திருவெண்ணெய் நல்லூர்ச் சடையப வள்ளல் ரென்பதும், புதுவைச் சங்கர னென்பார்க்குப் புதல்வரென்பது வெண்ணெய் நல்லூர் வியலூர் புதுவை யென்னும் ஊர்களிற் பெரு காணிவள முடையாரென்பதும், புதுவையம் பதியைக் கப்ப வாணிபத்தின் பொருட்டுக் கடற்றுறைப் பட்டினமாகக் கொண் வதிந்திருந்தவரென்பதும், சோழவரசற்குப் பெருங்கடன் கொடு துதவிய பெருவள்ளலா ரென்பதும், ஈழநாட்டரசன் வேண்டுகோ இணங்கிப் பல் கப்பல்களில் தானியம் அளித்து அந்நாட்டுப் பஞ்சத்தை யோட்டி யகற்றினவரென்பதும், முத்தமிழ் நாட்டு மூவேந்தருக்கு பரிசனங்களுடன் கூட்டப் பெருவிருந்தளித்த காரணம் பற்றி, திரிகர்த்தராயன் என்னுட் பட்டப்பெயர் பெற்றவரென்பது இவர், குணங்கொள் சடையன் வெண்ணெய்ச் சடையன் புதுவை சடையன் சங்கரன் தரு சடையன் புதுவையர்கோன் வெண்ணெய், திரிகர்த்தன் புதுவைத் திரிகர்த்தன் கண்ணான் சராரமன் பிள்ளை பெருமாள் என்னும் இப்படிப் பல பெயர்களால் அழைக்கப் பெற் ளாரென்பதும், இவர் காலத்திற் சோழ மன்னர்கள் விசே ஆதிக்கம் பெற்றிருக்கவில்லை யென்பதும், இவர்காலத்தில் தான் கம்பநாட்டாழ்வாரால் ஏரெழுபது என்னும் நூல் இயற்றப் பெற் அரங்கேற்றப் பெற்றதென்பதும் பிறவும் ஆராய்ச்சியால் வெளிய கின்றன.

## வள்ளலாரிடம் வளர்தல்.

இங்ஙனம் பெருந் தகைமையும் பெருங் கருணையும் பெரு கொடையும் பெருங் காணி வளமும் பெரும் புகழும் படைத்திருந் திருவெண்ணெய்நல்லூர்ச் சடையப்பப் பெருவள்ளலாரிடம், ஒ நாள், திருவழுந்தூர்க் காளிகோயிற் பூஜாரியாகிய உவச்சர் வந் தாம் கண்டெடுத்து வளர்த்துவரும் அதியற்புதப் பிறவியையுடை

ஐந்து வயதுக் குழந்தையைக் காட்டி, அக் குழந்தையினுடைய அறிவின் றிறத்தைத் தாம் கண்டுணர்ந்தவளவில் எடுத்தோதி, "இக்குழந்தையைத் தாங்களே போற்றி வளர்த்துக் கல்வி கேள்விகளில் வல்லவனாகும்படியாக ஊக்கிவிடல் வேண்டுமென்று பிரார்த்தித்தார்.

"மோட்டெருமை வாவிபுக முட்டுவரால் கன்றென்று
வீட்டளவும் பால்சொரியும் வெண்ணெயே—நாட்டில்
அடையா நெடுங்கதவும் அஞ்சலென்ற சொல்லும்
உடையான் சரராமன் ஊர்".

என்னும் அருங்கவியைப் பாடித், தம்மிடம் ஒரு புலவரையாற்றுப் படுத்தியது இக் குழந்தைதான் என்பதை அப் புலவரால் உணர்த்தப்பெற்ற அச் சடையப்ப வள்ளலார், தமது சொற்படி வந்து, தம் எதிரே நிற்கும் திருவழுந்தூர் உவச்சரின் அருகே, கையிற் கம்போடும் விநயம் முதலிய நற்குணங்கள் தோன்ற நின்று கொண்டிருக்கும் அந்தக் குழந்தையின் முகப் பொலிவையும் வரலாற்றையுமுணர்ந்து, மனங்களித்து, "இக் கம்பனா அச் செய்யுளியற்றியது! இக் கம்பனையா அந்தப் புலவர் அங்ஙனம் புகழ்ந் தெடுத்தோதியது!!" என்று வியந்து பேசி, உவச்சருடைய வேண்டுகோட் படியே, அச் சிறுவரை யேற்றுக்கொண்டு, அவர்க்கு, உவச்சர் சொன்ன பெயருடன் தாமளித்த பெயரையுஞ் சேர்த்து, ஆதித்தன் கம்பன் என்னும் அரும்பெயரே என்றும் நின்று நிலவுறும்படியாகத் தமது அருமைத் திருவாக்கினா லளித்துத் தமது புத்திரராகவே மதித்துப் போற்றித், தக்க உண்டியும் உடையும் உவந்தளித்துதவினர்.

"ஆதித்தன் கம்பன்," என்னும் அருமைச் சிறுவர், அந்த வள்ளல்பால், மிகுந்த விநயம் முதலிய உயரிய குணங்களுடன் பழகியிருந்து, தக்க ஆசிரியர்பால் அரிய பெரிய வித்தைகளைப் பேணிக் கற்றுத் தமக்கும் வள்ளலார்க்கும் நாட்டுக்கும் நாகரிகத்துக்கும் தமிழ்மொழிக்கும் உயர்வழிக்கும் ஊன்றுகோலாகவும் கொழு கொம்பாகவும் வளர்ந்துவந்தார்.

... ... ... ... இராமாயண மாமலை

அம்புநாட் டாழ்வான் அடிபணியும் ஆதித்தன்
கம்பநாட் டாழ்வான் கவி"
"போழ்வார் கதிரின் உதித்த தெய்வப் புலமைக் கம்பநாட்
டாழ்வார் பதத்தைச் சிந்திப்பவர்க் கியாதும் அரிய தன்றே"
"ஆதவன் புதல்வன் முத்தி அறிவினை அளிக்கும் அண்ணல்
போதவன் இராம காதை புகன்றருள் புனிதன் மண்மேல்
கோதவம் சிறிதும் இல்லான் கொண்டல்மால் தன்னை யொப்பான்
மாதவன் கம்பன் செம்பொன் மலரடி தொழுது வாழ்வாம்"

என்னும் இவைபோலும் உதாரணங்களால், "ஆதித்தன் கம்பன் என்றே இவர் அழைக்கப் பெற்றிருக்கிறார் என்பதை யுணரலாம்.

## அறிவின் அதிசயம்.

ஆதித்தன் கம்பனுடைய கல்வி கேள்விகளின் திறத்தையு அறிவின் ஆழத்தையும் ஆராய்ச்சியின் பரப்பையும் அறிதற் அளவுகோலாக நிற்பது, அவராலியற்றப்பெற்று, அறிவுலக போற்றும்படியாக இன்றும் என்றும் நின்று நிலவுறும் இராமா தாரம் என்னும் இராமாயணப் பெருங்காப்பியப் பனுவலேயாகும்.

"ஆசிரியர் கம்பர்" உடலின் தோற்றத்தைக் கடலென கண்டுளார் என்பதும், உயிரின் இயக்கத்தை யுட்புகுந்துணர்ந்த ரென்பதும், பரத்தின் பரப்பைப் பார்த்துளங் கிளைத்தவரென்பது அறம் பொரு ளின்ப வகைகளை யாய்ந்தனுபவித்தவ ரென்பது அந்தணத் தன்மையையும் அரசியல் முறையையும் ஆழ்ந்தறிந்த ரென்பதும், ஆடூஉக் குணங்கள் மகடூஉக் குணங்களை யாரா தோர்ந்தவ ரென்பதும், ககோள பூகோளப் பொருள்களை ஞான கண்ணாலும் ஊனக்கண்களாலும் தெள்ளத் தெளிந்து உள்ள உயர்ந்தவரென்பதும், கண்டப் பொருள்களை கண்டு கண்டுணர்ந்து அகண்ட வஸ்துவின் ஆற்றலைத் தெரிந்து, மண்டல மாண்பையு விண்டல விரிவையும் கண்டு வியந்து களித்தவ ரென்பதும் பிறவு கம்ப ராமாயணத்தால் வெளியாகின்றன.

ஆதித்தன் கம்பன் சடையப்ப வள்ளலாருடைய அபிமான புத்திரராகவே, சீர் சிறப்பொடு வளர்ந்து கல்வி கற்றுப் பெருமை யுடனிருந்தபோதிலும், தம்மைச் சிசுப்பிராயத்திலிருந்தே எடுத்துப் பாலூட்டித் தாலாட்டி வளர்த்துத் தக்க வயதில், தகுந்த பெரியா ரிடம் ஒப்புவித் துதவிய மகோபகாரியாகிய உவச்சரை மறந்தாரலர். ஊருக்கு வெளிப்புறம் நீண்ட தூரத்திலுள்ள உவச்சர் வீடுசென்று, சேமலாபங்களை விசாரித்து வருதலையும் விரதமாகக்கொண்டு வருபவ ராக இருந்தார். பத்தாவது வயது நிரம்பிவரும்போதே, கல்வியும் நிரம்பிக் கனமும் மனமுங் கனிந்து விவசாயம் விவகாரம் முதலிய வாழ்க்கைத் துறைகளில் தெளிந்து, அனைத்து முணர்ந்தவொரு ஆசான்போலவே மதிக்கப்படலாயினர். பெரியாரும் சிறியாரும் கற்றாரும் மற்றாரும் புனிதரும் புலவரும் "ஆதித்தன் கம்பன், உத்தியிலும் புத்தியிலும் உயர்ந்தவன்; உக்தியிலும் உழைப்பிலும் உண்மையானவன்; பேராசிரியனாவதற்கேற்ற பெரும் பேறுடைய வன்" என்று போற்றி யழைத்திடுமாறு பெருமைவாய்ந்திருந்தார். தம்மொடும் கல்வி பயின்றுவரும் நண்பர்களுள், இணையாரமார்பர் என்னும் வள்ளலாரது இளஞ்சோதரருடன் இணைபிரியாமலிருந்து, "இராம லக்ஷ்மணர்" என்னும்படி வாழ்ந்துவந்தனர்.

சிந்தாமணி சிலப்பதிகாரம் முதலிய காவியங்களிலும், திருக் குறள் முதலிய நீதி நூல்களிலும் மற்றும் இலக்கண நூல்களிலும், சோதிடம் வாகடம் முதலிய சாத்திரங்களிலும் வயதளவுக்கு மேம் படவே தேர்ச்சிபெற்றிருந்தார். சிலச்சில காலங்களில், இணையார மார்பரும் தாமுமாக, வள்ளலாருடன் சென்று, வயல் வரப்புகளையும் காடுகரைகளையும் கரம்பு குரம்புகளையும் மதகு மடைகளையும் தோட் டம் துறவுகளையும் கழனி களங்களையும் பார்த்துவருதலுமுண்டு. ஆன்றோர் சான்றோர்களுடன் வள்ளலார் விவகாரம் வித்தை முதலிய எத்துறைகளிலும் விவகரிக்கும் காலங்களிலெல்லாம் உடனிருந்து விஷயங்களை ஊன்றிக் கவனஞ் செலுத்துவதுண்டு. சிற்சில இரவு களில், அவற்றைப்பற்றிச் சிந்திப்பதுமுண்டு.

---

## கடவுள் அருளைக் கப்பர் பெறுதல்.

உவச்சருக்கு வயது முதிர்ந்து விட்டபடியினால் தள்ளாமை யதிகமாகிச் சிறுவர்களது உதவியும் போதாமைகண்டு, தம்மாலியன்ற அளவில் உதவி செய்து கொண்டிருப்பவராகிய ஆதித்தன் கம்பன் அங்ஙனம் ஒருநாள், சடையப்ப வள்ளலாரது அநுமதிகொண்டு சென்று, தமது வளர்ப்புத் தந்தையைக் கண்டு அவரது மிகுந்த தளர்ச்சிகண்டு மனஞ் சகியாது கவலையுடனே நெடுநேரம் அந்த உவச்சர் குடிலிலேயே வீற்றிருந்து, அவர்க்கு வேண்டிய உபசாரங்க ளெல்லாம் செய்திருந்து, அன்றைய பூஜையைத் தாமே செய்து, அன்று ஏதோ திருவிழாத்தினமாக இருந்தபடியினால் நீண்டநேரம் காளி கோயிலிலேயே தங்கி விட்டனர். பாதியிரவு கழிந்து நிசியும் அணுகும்போது, திருவிழாக்கொண்டாடினவர்களும் பரிசனங்களும் பிரசாதங்கள் பெற்று விலகிக் கழிந்தபிறகு, அந்நேரத்திற் சடையப்ப வள்ளலாராகிய பிரபுவின் மனைக்கேகுவதற்கு நாணினவராகி, உவச்சர் குடிலில் பெருங்கூட்டத்திலும் பெருங்கவலைக் கடலுக் கிடையிலும் வதிந்திருப்பதற்கு மனங் கொள்ளாது, அம்மனுக்கு நிவேதன மாகியிருந்த பழம் முதலிய பிரசாதங்களிற் சிறிது சுவீகரித்துக் கொண்டு, அன்றிரவை யந்தக் கோயிலிலேயே தனித்திருந்து கழிப்பதெனத் தீர்மானித் திருந்து விட்டனர்.

சுமார் பன்னிரண்டு வயதளவே கொண்ட சிறுவரானபடியினு லும் புத்திடமாகவும் தனியிடமாகவும், அந்தக் கோவில், ஊருக்கு நெடுந்தூரம் புறம்பே இருந்தபடியினாலும், வயதி னியற்கைக்கேற்ற படியே நித்திரை வராமல் துணுக்கங் கொண்டிருந்தார். எனினும், கற்றறிந்தவரானமை பற்றி, எங்கும் நிறைந்துள பரம் பொருளை நினைத்துத் தாம் கற்றுள தோத்திரப் பாக்களையும் அறவுரைகளையும் ஜீவகாருண்யச் செய்யுள்களையும் சொல்லிக்கொண்டே, அக்காளி பிம் பத்தின் எதிரில் பத்மாசனத்தவராக வீற்றிருந்தவர், நீண்டகால ஏகாக்ரத்தால் இயற்கைச் சமாதி கைகூடித் தம்மை மறந்து தம்பம் போலாய்விட்டனர்.

சமாதியினிடையே யோகிகட்குத் தோன்றும், அத்யத்புதத் தோற்றங்களும் பத்துவித வாத்யங்களும் அவரை யானந்த

வாரிதியில் ஆழச் செய்து விட்டன. அவரது மனோ நிர்ணயத்தில் தீர்மானித்து வைத்திருந்த தெய்வ ஸ்வரூபங்களெல்லாம் இடையில் தோன்றிக் காட்சியளித்துப் போயின. பாலியத்தில் நெடுநாட் பழகிய காளியின் வடிவமும், பக்தி ததும்பிய காலங்களில் அவர்க்குத் தோன்றிக்கொண்டிருக்கும் ஆஞ்சநேய ரூபமும், அகடித கடின சாமர்த்தியங்கொண்டதொரு அத்புத வுருவமாக அவர் பலகாலும் மதித்திருந்த நரசிங்கப் பெருமான் உருவமும் அவரது மனோ லோகத்தில் தாண்டவமாடிக்கொண்டிருந்தன. அப்போது சகல லோகக் காட்சியும் சகல கலாப்பிரவீணதையும் ஸர்வ திருஷ்டி கோசரமும் அவரது பரந்த உள்ளத்திற் பதிந்து விட்டன. விடியற் காலத்துச் சில் என்னும் மந்தமாருதம் வீசி, ஆதித்தன் கம்பரது அன்புருவத் திருமேனியெல்லாம் அளைந்தது. நிஷ்டையும் சிறிது சிறிதாகக் கலைந்து, கண்விழித்துப் பார்த்தார். அறுவகைச் சுவை நிறைந்த அமுதருண்டியில் திளைத்தெழுந்தவன்போல், உள்ளப் பூரிப்புடன் உவந்தெழுந்தார். ஆதித்தன் கம்பன், தனது யோக நித்திரையினின்றும் எழுந்தான் என்பதைக் கண்டனன்போலும், ஆதித்தனும் கிழக்கு திக்கினின்றும் வெளிவந்தான். சூழ்ந்த இருளை யெல்லாம் ஓட்டினன். அதனைக் கண்டின்புற்ற கம்பர்க்குத் தமது மனத்திருளெல்லாம் மாயமாக ஓடினதுபோலும் உணர்ச்சி தோன்றிற்று. அவர்க்கு உலகத் தோற்ற மெல்லாம் நென்னற் கண்டது போலல்லாமல், ஒரு புதிய தோற்றத்தைக் காட்டியது. தெருளுலகமாகவே கண்டு திளைத்தார். பெருங் கொடை வள்ளலாகிய சடையப்பரது நினைவு முனைத்திடவே இனிக் காலந்தாழ்த்தல் கூடாதெனச் சடையர் பெருமனையை நாடி நடந்தார்.

## வாழ்க்கையின் விஸ்மிதம்

காலையில், வெகு நேரத்திலேயே, தந்தையைப் பார்த்துவரச் சென்ற ஆதித்தன் கம்பன், மாலையில் வெகுநேரமாகியும் வராமை கண்டு, வள்ளல் மனையில் உள்ளவர்கட் குள்ளே பரபரப்பு அதிக முண்டாயிற் றென்றாலும், உவச்சரின் மூப்பினைக்கருதி, ஆதித்தன் கம்பன், அவருக்குரிய அரிய தொண்டுகள் ஆற்றிக்கொண்டிருக்கலா மென்றெண்ணி, அறிஞர்களாயினமையின், 'இரவு நேரமே, அவரும்

சேருவார்' என்று வாளா இருந்தனர். இரவிலும், நேரங்கழிந்தும் வாராமைகண்டு மனங் கலங்கினர். வள்ளலார் வரையிலும் செய்தி எட்டிவிட்டது. பொறுமை வாய்ந்த பெருமை யாரும், மனத்தை யலைய விடாமல், உவச்சரது மூப்பின் பொருட்டு, அவர் குடியில் அன்று தங்கியிருத்தல் நேர்ந்திருக்கும் என்றே தக்க சமாதானம் கூறி, யாவரையும் நித்திரைக்கு அனுப்பிவிட்டனர். யாவரும் ஏகினராயினும், நித்திரையில் கம்பனைக் காணுக்கவலையை யொழித்தல் இயலாத இணையாரமார்பற்குமட்டும், நித்திரை வாராமலே மனங் கலங்கி யிருந்தது.

காலையில்—அதிகாலையில் வள்ளலாரிடம் அநுமதி பெற்று ஆதித்தன் கம்பனை யழைத்து வரும்படியாக ஆட்களை யனுப்பினவர் இணையாரமார்பரேயாவர். காளி கோயிலினின்றும் கடவுளருள் பெற்று விரைந்த கம்பர், பெருமனையில் நடந்துள பரபரப்பை யெல்லாம், எதிரே வந்த ஆட்கள் மூலம் அறிந்து, கவன்று பயந்து 'வள்ளலாரையும் கலக்கிவிட்டோமே' என்று நாணி விரைந்து விரைந்து ஏகி, அதிகாலையில் எழுந்து அனுஷ்டானஞ் செய்து கொண்டிருக்கும் பழக்கமுடைய சடையப்ப வள்ளலாரை, அவ் வனுஷ்டான வேளையிலேயே, சென்று வணங்கிக் கண்டனர் அனுஷ்டானம் முடிந்தவுடன், வணங்கி நிற்கும் ஆதித்தன் கம்பனை நோக்கி, யவனதுமுகப் பொலிவில் அருட்சக்தி நிறைந்த ஞான வொளி தாண்டவமாடிக் கொண்டிருத்தலை யொருவாறு உணர்ந்தன ராயினும், அதனை வெளிக்காட்டாது, உவச்சரது செய்தியெல்லாப் கேட்டுத் தெரிந்துகொண்டு, அவ்வுவச்சருடைய பிற்கால வாழ்வுக்குப் பொதுவாய் அவர் குடும்பத்துக்கும் என்றும் வறுமைப்பிணி யணு காதவாறு ஏற்பாடுகளும் செய்தனர்.

கடவுளருள்பெற்ற ஆதித்தன் கம்பர்க்கு அறியாமை யென் பதே தோன்றாத உணர்ச்சியானது உள்ளத்திலிருந்து விளையாடியது எந்தப் பொருளைக் காணினும் அந்தப்பொருளை யூடுருவிக் கவனிக் கும் குணமும், அதனது தோற்றம் வளர்ப்பு செயல் பயன் அழிவு என்னும் பஞ்ச விலக்கணங்களையும் ஆராயும் ஆற்றலும், உண்மை யினுதாரணைத் தீர்மானிக்கும் திறனும், இயற்கையாகவே தோன்

றிக் கொண்டிருந்தன. திரிகரணங்களாலும் தீங்கு செய்தாரிடத்தும் பொறுமையும் வகுப்பு முறையில் நோக்கம் வைக்காத அளவிலெழுந்து முனைத்து நிற்கும் பரந்த அன்பும், அதன் பயனாகத் தோன்றிய—பக்தி பிரேமை கருணையென்னும்—மூவகை இன்ப முதிர்ச்சியும் தின வாழ்க்கையில் தாண்டவமாடிக்கொண்டிருந்தன.

"செவிக ளாற்பல கேட்கில ராயினும் தேவர்க்
கவிகொள் நான்மறை அகப்பொருள் புறப்பொரு ளறிவார்
கவிகள் ஆதுவார் காண்குவார் மெய்ப்பொருள் காலாற்
புவிகொள் நாயகர்க் கடியரின் அடிமையைப் பூண்டார்"

என்று இரணியன் வதைப்படலத்தில் அவர் கூறிவைத்துள்ள உள்ளக்கிளர்ச்சியும் உள்ளவளர்ச்சியும் உள்ளநெகிழ்ச்சியுமே அந்தப் பெரிய அன்பராகிய கம்பரிடம் ஊடாடிக்கொண்டிருந்தன.

## இயற்கைக் கவிகள் எழுச்சி.

மேற்குறித்துள கவியில் "கவிகளாகுவார்" —என்று காட்டியிருத்தல்போலவே, வாழ்க்கையில் விம்மிதங்கள் தோன்றுங் காலங்களிலெல்லாம், அவரறியாமலே அவரது வாக்கினின்றும் அருங் கவிகள் தோன்றிக்கொண்டிருந்தன என்ப. அங்ஙனந் தோன்றிய கவிகள் பற்பல என்பர். கவனிக்கப்படாதன அழிந்தன அழிபட்டன மறைந்தன மறைபட்டன என்னும் வகையில் பல கவிகள் கழிந்துபோக எஞ்சிய கவிகளுள்ளும் மிஞ்சிக் கிடைத்துள மிகச் சில வற்றில், இரண்டு கவிகளை யீண்டுத் தருகின்றோம்.

"மெய்கழுவி வந்து விருந்துண்டு மீளுமவர்
கைகழுவ நீர்போதுங் காவிரியே—பொய் கழுவும்
போர்வேள் சடையன் புதுவையான் இல்லறத்தை
ஆர்போற்ற வல்லார் அறிந்து."
"கன்னி அழிந்தனள் கங்கை திறம்பினள்
பொன்னி கரைகடந்து போனாளென்—றிந்நீர்
உரைகிடக்க லாமோ உலகுடைய தாயே
கரைகடக்கல் ஆகாது காண்."

என்னும் இவற்றைக் கவனிப்போமாக.

"ஸ்நாநானுஷ்டானங்கள் முடித்துவந்து, சடையப்பவள்ளலா ருடைய இல்லத்திற் புகுந்து நாடோறும் இடப்பெறும் விருந் துண்டு திளைத்துமீளும் அத்துணைப் பெருங் கூட்டத்திற்கும் கைகழுவ நீர் கொடுத்தற்கே இக் காவிரிப்பெருக்கு, போதும் போதும்; பொய்மை யொழிக்கும் போர்க்களத்துக்கு வேள்போன்ற வராக முனைத்துநிற்கும் புதுச்சேரிக்கொடை வள்ளலாராகிய சடையப்பரது இல்வாழ்க்கையின் சிறப்பை அறிந்து போற்ற வல்லாராக இவ்வுலகில் ஆரிருக்கின்றனர்" என்பது முதற் கவியின் முடிந்த பொருளாகும்.

இந்த வெண்பா, மூவலூர்ச்சிவன் கோயிலிற் கண்டதொரு சிலாசாஸனத்திலும் எழுதப்பெற்றுள தென்ப.

இது, "காவிரி எச்சிறப்பட்டது என்றபோது, கம்பர் பாடிய கவி" என்னுந் தலைப்பின்கீழ்த், தமிழ் நாவலர் சரிதையிற் குறிக்கப் பெற்றிருக்கின்றது. சடைய வள்ளலாரது இல்வாழ்க்கையின் பெருமையையும் விருந்திடு சிறப்பையும்பற்றியே கூறியதாகும் இது. வள்ளலார் பெருவிருந்திட்டு மகிழ்தலிற் பெரு நோக்கமுடையா ரென்பதை, அப்பெரியார் பெற்றுள "திரிகர்த்தராயன்" என்னும் சிறப்புப் பெயரே நன்கு விளக்கிக்கொண்டிருக்கின்றது. இப்பெய ரின் வரலாற்றைப் பின்னர்க் கூறுவோம்.

இந்நிகழ்ச்சியைச் சோழமண்டல சதகம் குறித்துக்கொண் டிருக்கும் பெருமையைப் பின்வருங் கவியிற் காண்க.

"விருந்து நுகர்வோர் கைகழுவ விளங்கும் புனற்கா விரியென்றார்
தருந்தா யனைய புகழ்ப்புதுவைச் சடையன் கொடையார் சாற்ற வல்லார்
பரிந்தார் எவர்க்கும் எப்போதும் பாலும் சோறும் பசிதீர
வருந்தா தளிக்க வல்லதன்றோ வளஞ்சேர் சோழ மண்டலமே"

இந்தக்கருத்தை விளக்குந் தன்மையுடையனவாக, இராமாவ தாரத்தில் (இராமாயணத்தில்) சடையப்பரைப் புகழ்ந்தோதப் பெற்றனவாகக் குறிக்கப்பெற்றிருக்கும், ஒருபது செய்யுட்களிற் சில காணலாகும். பின்வருங் கவிகளை நோக்குக:—

"விண்ணவர் போய பின்றை விரிந்தபூ மழையி னூடே
தண்ணறுங் கான நீங்கித் தாங்கருந் தவத்தின் மிக்கோன்
மண்ணவர் வறுமை நோய்க்கு மருந்தன சடையன் வெண்ணெய்
அண்ணல்தன் சொல்லே யன்ன படைக்கலம் அருளி னானே"

—பாலகாண்டம்—வேள்விப்படலம் (தாடகா வதத்துக்குப்பின்)

" மஞ்செனத் திகழ்தரு மலையை மாருதி
எஞ்சலிற் கடிதெடுத் தெறியவே நளன்
விஞ்சையில் தாங்கினன் சடையன் வெண்ணெயில்
தஞ்சமென் றோர்களைத் தாங்குந் தன்மைபோல்."

உயுத்தகாண்டம்—சேதுபந்தனப்படலம்.

"வாசங்கலந்த மரைநாள நூலின் வகையென்பதென்ன மழை யென்று
ஆசங்கை கொண்ட கொடைமீளி யண்ணல் சரராமன் வெண்ணெ யணுகும்
தேசங்கலந்த மறைவாணர் செஞ்சொ லறிவாளர் என்றி முதலோர்
பாசங்கலந்த பசிபோ லகன்ற பதகன் துரந்த உரகம்"

உயுத்தகாண்டம்—நாகபாசப்படலம்.

இனிக் "கன்னியழிந்தனள்"—என்னும் அடுத்துள்ள கவியைக் கவனிப்போம்.

பொருள் :—"குமரி நதி யென்னும் கன்னி அழிந்தே போய் விட்டனள். சுர நதியாகிய கங்கையானவள், பகீரத சக்கரவர்த்தியினுடைய பிரார்த்தனைக் கிணங்கித் தனது எல்லையாகிய வானையுங் கடந்துவிலகிப் பூமியிலிழிந்து, பின்பு பாதலத்திலுஞ் சென்று, இங்ஙனம் வரம்பைக் கடந்தொழிந்திருக்கின்றாள். "இதோ பொன்னி யென்னும் இந்தக் காவிரிநதியும் தனது கரையழிந்து போயினாள்; பாருங்கள்" என்று உலகோர் இழித்துச் சொல்லும் படியாக, இந்த நீருக்கு என்றும் அழியாத பழிச்சொல் உண்டாகலாமா? உலகுடைய தாயே! காவேரியே!! நீ பெருக்கெடுத்து ஓடி வந்து கரைகளை யழித்துக் கட்டுக் கடங்காமற் செல்லக்கூடாது; அடங்குவாய் !!!" என்பதாம்.

காவேரி, உடனே அடங்கிப் போய்த் தன்னளவில் ஓடினபடியினாற் கம்பரை யாவரும் புகழ்ந்தெடுத் தோதினர் என்ப. இந்தக்

கவியாலும் பிறகவிகளாலும் கம்பர் கவிகளில் தெய்வ சக்தியுள்ள தென்பது பிரஸித்தமாயிற்று.

இந்தக் கவி, தமிழ் நாவலர் சரிதையில், "காவிரி பெருக் கடங்கப் பாடியது" என்னுந் தலைப்பின்கீழ்க் குறிக்கப் பெற்றுள்ளது.

## மூவேந்தர் விருந்தும் மும்மணிக் கோவையும்.

ஆதித்தன் கம்பன், இங்ஙனம் கல்வியாலும் ஒழுக்கத்தாலும் வாக்கினாலும் வரத்தினாலும் வளம் பெற வளர்ந்து வந்தார் வயதோ பதினாறு கடந்த அளவேதான். வழக்கமும் நற்பழக்கமும் வரம்பு கடவாதிருந்தன. அருட் சக்தியின் ஆவேசம், ஆதித்தன் கம்பனது கவிகளில் பொலிவுறுதலைக் கண்ட பெரியார்கள், "இவர் ஒரு தெய்வப் புலவர்" என்று கொண்டாடினார்கள். தெய்வப் புலமை வாய்ந்தவர் என்று கம்பரைக் குறிக்கும் போதெல்லாம் வள்ளலாரையும் புகழ்ந்து பேசாதவர் இலராகையால், வள்ளலாருடைய ஆனந்தத்துக்கும் அளவில்லாமலிருந்தது.

கம்பரோ, எள்ளளவாவது செருக்கில் ஆழ்ந்து விடவில்லை வித்தையேற வேற விநய ஸம்பத்தியும் ஏற்றம் பெற்றிருந்தது வள்ளலாரைக் காணவரும் பெரியாரொடு பழகும் போதும், வள்ளலாருடன் வேத்தவை சென்று, மன்னவர் கூட்டத்தாருடன் பழகும் போதும், வரம்பு கடவாதிருந்து, வள்ளலார்க்கும் தமக்கும் பெரும் புகழாக்கி வந்தார். வள்ளலாரைப் பெற்ற அன்னையார்க்கும் கம்பரிடம் என்றும் அழிந்திடாததொரு அபிமானம் இயற்கையிலேயே தோன்றியிருந்தது. அவ்வம்மையாரைக் கம்பரும் தெய்வ சக்தியம்சமென்றே போற்றி யூழியம் முதலாயின உவந்திருந்தார் இவை யிங்ஙனமாயினும், கம்பரது புகழ் ஓங்கி வருதலைக் கேட்டின் புறும் பாக்கியம் உவச்சர்க்கு மாத்திரம் இலதாயிற்று. உவச்சர் மூப்பின் வாய்ப்பட்டு இவ்வுலகினின்றும் மறைந்தொழிந்தார் அவரது குடும்பத்தில் வறுமை நோய் எட்டிப் பாராதபடி, வள்ளலார் வகுத்திருந்தார்கள்; ஆதலால், கம்பரது மனம் அந்தக் குடும்பக் கவலையினின்றும் விடுதலையடைந்திருந்தது.

இத்துணையும் வாய்க்கப் பெற்றிருந்தும் கம்பர், சத்திய நோக்க மும் சுதந்தர வெழுச்சியும் இயற்கையின் பயனைப் பெற்றிருந்த படியால், பரந்த நோக்கமின்றித் தந்நலம் பாராட்டு மியல்புடையார் யாவராயிருப்பினும், அவரிடம் மனம் நெகிழாத் தன்மையுடன் நிமிர்ந்த நோக்குடையராக இருந்தாரென்பது, அவரது சரித்திரத் தில் மறக்கப்படாத தொரு விஷயமாகும். "இவ்வியற்கை யுடை யார் உலக வாழ்க்கையில் வெற்றிபெறுதலில்லை; அதாவது அவர் இடைவிடாத உலக இன்பத்தைப் பெறார்" என்பது உண்மை யிலும் உண்மையாகு மன்றோ!

உத்தேசம் நான்காம் நூற்றாண்டில், பராக்கிரமமுடைய பல்ல வர்களென்னும் ஆந்திர தேசத்தவர்களில் ஒருவகையார், தென் னாட்டிற் புகுந்து, சோழநாடு மலைநாடு கொங்கு வாணகப்பாடி முதலிய பழைய ராஜ்யங்களைக் கைப்பற்றிக்கொண்டு, சுமார் ஐந்து நூற்றாண்டுகள் அளவும் ஆண்டுவந்தார்கள். அவர்கட்குக் காஞ்சி புரமும் மாமல்லபுரமும் இராஜதானி நகரங்களாக அமைந்திருந்தன சோழர்கள் பல்லவர் கீழிருந்து அரசாள வேண்டியதாயிற்று. பாண்டியர்களும் பலங்குன்றி யிருந்தார்கள்.

கி. பி. ௮௫௦-ல் புதிய சோழ அரசகுல மொன்று தஞ்சையில் தோன்றிற்று. இந்தச் சோழ குலத்தார்க்கும்—முன்னம் உறை யூரிலிருந்து ஆண்டவர்களென்று சரித்திரத்தினற் கேட்கப்படுகிற —பண்டைச் சோழ குலத்தார்க்கும் தொடர்புண்டோ, தெரியாது. இந்தப் புதுச்சோழ குலத்தையாரம்பித்த அரசன் விஜயாலயன் என்பான், முத்தரைய மன்னரிடமிருந்து, தஞ்சையையும் வல்லத் தையும் கைப்பற்றிக்கொண்டு, ஆட்சி செய்யத் தொடங்கினன். அப்போது காஞ்சீபுரம் பல்லவர் கீழும் மதுரை பாண்டியர் கீழும் இருந்தன. பாண்டியர் மகிமை குன்றியிருந்தார்கள். பல்லவ அரசர் பலமும் மங்க ஆரம்பித்தது. சேர அரசரும் ஈழ அரசரும் பிரஸித்தியற்று வாழ்ந்திருந்தார்கள். இவர்கட் கிடையில், சுதந்திர வெழுச்சியுடன் விஜயாலயச் சோழன் நிமிர்ந்து நின்றான்.

இடங்கழி மகனாகிய இந்த விஜயாலயன், அக்காலத்தில் ஆண்டுகொண்டிருந்த கைதேர்ந்த பல்லவ மன்னனைக் கொன்று,

தஞ்சையில் சோழர் ஆட்சியைத் தாபித்ததோடு நில்லாமல், பாண்டி நாட்டையும் கைப்பற்றக் கருதி, அப்போது மதுரையி லிருந்து ஆண்டுவந்தவனாகிய—பாண்டியன் வரகுணனை யெதிர்த் துத் தோல்வியுற்றான். இந்த வரகுணன் இறந்த பின்னரே விஜயா லயன் ஆட்சிபுரியத் தொடங்கியிருத்தல் வேண்டுமென்று தெரி கிறது.

கி. பி. அ௱௦-ம் ஆண்டிலிருந்தே தமிழ்நாட்டரசர்கள் தென் னாட்டிலிருந்து பல்லவராட்சியைத் தொலைத்திட வேண்டுமென்று முயன்றுகொண் டிருந்தார்க ளென்பது ஊஹிக்கப்படுகின்றது. சோழ பாண்டியர்கள் சுயாதீனமடையத் தருணம்பார்த்துக் கொண் டிருந்தார்கள். அதற்குச் சாதகமாகத் தம்முட் பெண்களைக் கொடுக்கல் வாங்கல் செய்துகொள்ளத் தலைப்பட்டார்கள். கி. பி. அ௱உ-ல் பட்டந்தரித்தவனென்று சொல்லப்பெறுகின்ற வரகுண பாண்டியனுடைய தாயார் ஒரு சோழன் மகள். விஜயாலயன் மகனான ஆதித்தன் என்னும் அரசற்குத் தென்னவன் மாதேவியார் என்னும் ஒரு மனைவியிருந்தனள்; அவளும் ஒரு பாண்டியன் மகளென்று தெரிகின்றது. இப்படியிருந்தும் விஜயாலயன் ராஜ்யாபேக்ஷையினால் பாண்டியருடன் போர்புரியத் தொடங்கி னான்; அதனால் தோல்வியுற்றான். விஜயாலயன் மகனாகிய ஆதித் தன் என்பானே பாண்டியற்கு மிகவும் உதவிபுரிந்தான் என்பது திருவிளையாடற் புராணக் கதைகளால் ஊஹித்தறியப்படுகின்றது

விஜயாலயனுக்குப் பின், அவன் மகன் ஆதித்தன் என்பானே தஞ்சையிலிருந்து அரசாளத் தொடங்கினான். இவன் உறையூரை ராஜதானி நகரமாக ஆக்கிக்கொண்டிருந்த காலத்தில்தான், கொல்லி மலையைக் கைப்பற்றிக்கொண்டான் என்பது தெரிகின்றது. இந்த ஆதித்தன் சேர பாண்டியர்களுடன், நேசம் பாராட்டி வந்தவன் இவ்வாறு இவர்கள், தம்முள் ஐக்கியமாக இருந்து கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டின் கடைசியில் பல்லவர்களை முற்றும் ஜயித்தார்கள் பாண்டியன் மாறன் சடையனும் வரகுண பாண்டியனும் மதுரையி லிருந்த மன்னர்களாவார்கள். சேர மன்னன் ஸ்தாணுரவியும் இருந் தான். இந்த வரகுணன் இரண்டாமவன் போலும்

ஆதித்த மன்னற்கும் நம்து சடையப்பவள்ளல்லார்க்கும் நட்புரிமை மிகுதியுமுண்டு. இருவரும் ஏறக்குறைய சமவயதுடையவர்களென்பது கேட்கப்படுகின்றது. பெருங்காணி வளத்தினலும் பெருங்கொடையினலும் மிக்க சிறப்புற்றிருந்த சடைய வள்ளற் பெருமான் தேசாபிமானமும் சுதந்திர வெழுச்சியும் உடையவராக இருந்தபடியால், தமிழ் நாட்டிற் புகுந்து ஆட்சி செலுத்தும் அன்னிய அரசர்களை நாட்டிலிருந்து அகற்றுதற்கு வேண்டிய பேருதவிகளெல்லாம் புரிந்து கொண்டிருந்தார். ஆதித்த மன்னன் பொருட்டு வள்ளலார், நேசக்கட்டுகளையும் தேசக்கட்டுமையாகவும் பல பொருள்கள் தன மூலமாகவும் தானிய மூலமாகவும் பலப்பல சமயங்களில் உதவியுள்ளாரென்பது, வள்ளலாரது சரித்திர உண்மைகளிலொன்றுமெனப்.

வள்ளலார், தமிழ் நாடு காரணமாகத் தம்முள் கலகப்பட்டுக் கொண்டிருக்கும் முத்தமிழ் வேந்தர்களையும் ஒன்றுகச் சேர்த்துச் சமாதானப்படுத்தி ஒற்றுமையை நாட்டினவரென்பது விளங்குகின்றது. சேர சோழ பாண்டி மன்னர்களை மாத்திரமல்லாமல் ஈழத்தரசர்களையுங்கூடத் தமிழ் நாட்டரசர்களுடன் பிணக்கில்லாமலிருத்தற்கு வேண்டிய பிரயத்தனம் செய்தவரென்பதும் தெரிகின்றது. ஒரு சமயம், ஈழநாட்டரசனொருவனிடமிருந்து போந்ததொரு சீட்டுக் கவியின் நிமித்தம், நூறுயிரக்கல நெல் கப்பல் மூலம் கொடுத்தனுப்பி, அந்நாட்டின் பஞ்சத்தை நிவர்த்தி செய்தருளினரென்பது, வள்ளலார் சரிதத்துள் ஒரு பகுதியாகும்; இதனைக் கீழ்க் காணப்பெறும் செய்யுட்களாலும் செய்யுள் அடிகளாலும் உணரலாம்.

> ... ... ... ... ... ... —"வென்றிதரும்
> ஓராளை நூறுயிரக் கலநெல் லோர்கவிக்குச்
> சீராக நல்குந்தி யாக்கை—"

என்னும் திருக்கைவழக்கமும்,

> "தேனுர் தொடையார் பராச சிங்கப்பெருமான் செழுந் தமிழ்க்குக்
> கானுர் நெல்லின் மலைகோடி கண்டிநாடு கரைசேரக்
> கூனுர் கப்ப லாயிரத்திற் கொடுபோயளித்த கொடைத்தடக்கை
> மாறு கரன்சங் கான்சடையன் வளஞ்சேர் சோழமண்டலமே"

என்னும் சோழமண்டல சதகச் செய்யுளும்,

"இரவுநண்பகல் ஆகிலென்பகல் இருளறுவிர வாகிலென்
இரவியெண்டிசை மாறிலென்கடல் ஏழுமேறிலென் வற்றிலென்
மரபுதங்கிய முறைமைபேணிய மன்னர்போகிலென் ஆகிலென்
வளமையின்புறு சோழமண்டல வாழ்க்கைகாரண மாகவே
கருதுசெம்பொனின் அம்பலத்தொரு கடவுணின்று நடிக்குமே
காவிரித்திரு நதியிலேயொரு கருணைமாமுகில் துயிலுமே
தருவுயர்ந்திடு புதுவையம்பதி தங்குமன்னிய சேகரன்
சங்கரன்தரு சடையன் என்றொரு தருமதேவதை வாழவே"

என்று அந்தச் சீட்டுக்கவியும் பொலிந்துகொண்டிருக்கின்றன.

நஞ்சடையவள்ளலாரது, நட்புரிமையினாலேயே, அவரது ஜீவியகாலம் வரையில், தமிழ் மூவேந்தர்களும் தம்முட்கலகம் விளைவித்துக்கொள்ளாமல் இருந்தார்களென்று தெரிகின்றது. அதனாலேதான் ஆதித்தசோழன் பாண்டிய மன்னரிடம் ஒற்றுமை பாராட்டிவந்தான்போலும். ஆதித்தன் தந்தை விஜயாலயனும் ஆதித்தன் மகன் பராந்தகனும் பாண்டியருடன் போர் நிகழ்த்தினார்களென்பது சரித்திரங் கண்ட உண்மையாகும். சரித்திர உண்மை கொண்டு பார்க்கும்போது, தமிழ்நாட்டு மூவேந்தரும் ஒற்றுமை பாராட்டிய காலம் ஒன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதிதானென்பது தெளிவாகின்றது. இதுவே சடையவள்ளலார் காலம். இதற்குத் தக்க காரணமாகப் பின்வரும் நிகழ்ச்சியைக் கவனிக்க.

இங்ஙனம் ஆதித்தன் முதலிய முத்தமிழ் வேந்தர்களும் கூடிப் பல்லவர்களை முறியடித்துத் துரத்தித் தமிழ் நாட்டைச் சுயாதீனப் படுத்திக்கொண்டு விட்டார்கள். இப்பெரும்பேற்றுக் கறிகுறியாக நம் சடையப்ப வள்ளலார், தமது முயற்சி பயன்பெற்ற தென்பதைக் கருதி அம்மன்னர் மூவரையும் பரிசனங்களுடன் தஞ்சையிற் குழுமச்செய்து, கூட்டப் பெரு விருந்தளித்தாரென்பதை யவரது சரித்திரம் கூறிக் கொண்டிருக்கின்றது. அக்காலையில், அம்மூவேந்தரும், வள்ளலாரது கொடைத் திறத்தையும் தேசாபிமானத்தையும் மதித்து, அவரது பேருதவியிருந்திராவிடில் பல்லவராட்சியினின்றும் முத்தமிழ் நாடு விடுதலையை யடைந்திரா தென்பதை யுணர்ந்து, வள்ளலார்க்கு, அவரது புகழ்க் குறிகுறியாகத் திரிகர்த்தராயன்

என்னும் பட்டப் பெயரொன்றளித்து, அப்பெயர், அவரது வம்சத்தினர்க்கே குடிப் பெயராகப் பொருந்தியிருக்கும்படியும் செய்தார்கள். இந்த உண்மையைப் பின்வருஞ் சோழ மண்டல சதகச் செய்யுள் விளக்கிக்கொண்டிருக்கிறது.

" அளிக்கும்படைமூவேந்தருங்கொண்டாடும்விருந்தா லதிசய மாய்த்
திளைக்குந்திரிகர்த்தராயனெனச்செப்பும்வரிசைத்திறஞ்சேர்ந்தோன்
விளைக்கும்அரிசிமாற்றியநீர்வெள்ளங்கிழங்குவிளையுமென
வளைக்கும்பெருமைப்புதுவையர்கோன்வளஞ்சேர்சோழமண்டலமே"

எனவே, இந்நிகழ்ச்சி யுண்மையால், சடையவள்ளலார் ஒன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்தவ ரென்பது நன்கு விளங்குகின்றது. இந்த மகாநாடு கூடிய காலம், ஆதித்த சோழ மன்னன் ஆட்சிபெற்ற சமீப காலமாக இருந்திருத்தல் வேண்டு மென்பதும் ஊஹிக்கப் படுகின்றது.

இந்த நிகழ்ச்சியைச் சிறப்பித்துத்தான், சடையப்ப வள்ளலாரது அபிமான புத்திரராக வளர்ந்து தெய்வப் புலமையும் வாய்ந்திருந்த ஆதித்தன் கம்பன், முத்தமிழ் வேந்தர்தம் பெருமைகளையும் விளக்கக் கூடியதாகிய ஒரு புகழ்நூலாக மும்மணிக்கோவை யொன்று இயற்றியுள்ளாரென்பது விளங்குகின்றது. இவ்வரிய நூலானது, மூவேந்தரது பெருமைகளையும் வள்ளலாரது கொடைத்திறத்தையும் முத்தமிழ் வேந்தரது ஒற்றுமையையும் தென்றமிழ் நாட்டினது விடுதலையையும் கூறியுள்ளதொரு பொது நூலாயிருந்தும், யாவராலும் நன்கு மதிக்கப் பெற்றதாயிருந்தும், ஓர் அரிய பெரிய நிகழ்ச்சிக்கு அறிகுறியாயிருந்தும், அஃது என்றும் நின்று நிலவுறாமல் அழிந்து மறைந்தொழிந்திடும்படி யானதொரு அபாக்கியத்தை நந்தமிழ் நாடு செய்துவைத்திருந்த தென்பதை யெழுதுதற்கு எழுதுகோல் நடுக்குறுகின்றது. அந்நூல் நின்று நிலவாமல் பொன்றி மறைந்த தற்கொரு தக்க காரண மிருத்தல் வேண்டும்; அக்காரணமும் தக்கதொரு பெரிய இடத்திலிருந்து புறப்பட்டதாயிருத்தல் வேண்டும்.

இங்ஙனம், மும்மணிக்கோவை யென்னும் அரியதொரு நூலைப்பாடிச் சபையைச் சிறப்பித்த—தெய்வப்புலமை வாய்க்கப் பெற்றிருந்த ஆதித்தன் கம்பரை, ஆதித்த சோழ மன்னன், அரிய பெரிய சம்மானங்களும் மற்றும் அரசாங்க விருது முதலியன வும் அளித்துச் சிறப்புச்செய்து, அந்த அரிய நூலாகிய மும்மணிக் கோவையைத்தான் அங்கீகரித்து ஏற்றுக்கொண்டு, ஆதித்தன் கம்பரைத் தனது ஆஸ்தான பண்டிதருள் ஒருவராகவும் ஆக்கிக் கொண்டனன். அவ்வமயம், கம்பருக்கு வயது இருபது நிரம்பி யிருக்கலாம்.

## ஆதித்த னவையில் ஆதித்த கம்பன் அமர்தல்.

"தவலருந் தொல்கேள்வித் தன்மை உடையார்
இகலிலர் எஃகுடையார் தம்முட்குழீஇ
நகலின் இனிதாயிற் காண்பாம் அகல்வானத்
தும்பர் உறைவார் பதி"

என்று அறிஞர் தீர்மானித்தபடி, பண்டிதர் கூட்டம் ஒருமனப்பட்டுக் கூடுவதில்லைபோலும்.

ஆதித்தன் கம்பர், அடைந்துவரும் அரிய ஞானத்தையும் அதன்மூலம் பெறும் புகழையும், அறிஞரும் அரசரும் அன்னோரிடம் அன்பும் ஆதரவும் காட்டிவருதலையும் விரும்பாதவருமுண்டோ வென்று எண்ணலாம். சராசரங்களில் அநுப்ரவேசங்கொண்டு பரம கருணை காட்டிவரும் சர்வேசுவரனையே விரோதிப்பவர் உலகி லுண்டெனக் காண்கின்றோமாகலின், வேறென் விளம்புதற்குளது!

ஆதித்தன் கம்பரது சிறப்பினைக்கண்டு விரும்பாத வியக்திகள் இரண்டு அரண்மனைக்குள்ளேயே உறைந்துவந்தன. ஒரு வியக் திக்கு அசூயை காரணம்; மற்றொரு வியக்திக்கு அதிகாரம் காரணம். ஆதித்த மன்னனோ அறிஞனும் அரசனுமாகலான், ஆசாரிய மரியாதையையும் அதிகாரச் சிறப்பையுங்கொண்டு, சிறி தும் வேறுபாடு காணப்பெறுதிருந்தான்.

மற்றும், ஆதித்த சோழன் ஆதித்தன் கம்பர்க்கு ஆதரவு காட்டிய தன்மையெல்லாம், "எட்டுத் திசையும் பரந்தநிலா எறிக்

குங்கீர்த்தி ஏருழவ" ராகிய சடையப்ப வள்ளற் பெருமான் பொருட்டேயன்றே? தந்தை விஜயாலயனிடம் பிணங்கித் தனித்திருந்த காலமெல்லாம், தக்க துணையாக நின்று தனத்தாலும் இனத்தாலும் உதவித், தன்னை யிந்த நிலைக்குக் கொணர்தற்குப் பெரு முயற்சி யெடுத்துக்கொண்ட வள்ளற்பெருமானை யித்துணை விரைவில் மறந்திடற்குக் கூடாத மன்னன், ஆதித்தன், கம்பர்க்குப் பதவியும் பொருளும் சிறப்பும் சீரும் அளித்துள வெல்லாம் உள்ளன்பு கொண்டோ? வள்ளல் உள்ளத்தை வெள்ளமாக்கிப் பெருக்கிடற்கேயா மென்க.

அரண்மனையின் உள்ளும் புறமும் நாடும் நகரமும் வள்ளலார்க்கு வணக்கங் காட்டும் உரிமையுண்டு என்னலும் வேண்டுமோ! வள்ளலாரது ஆணை அரண்மனையினுள்ளும் தோன்றாத் துணையாக உலாவிக் கொண்டிருந்தபடியால், ஆதித்தன் கம்பர்க்கு அரண்மனையினுள், வெளிப்படையாக வெறுப்புக் காட்டினவர் இலராயிருந்தனர். ஆகலின், ஆதித்தன் கம்பர்க்கு அரசன் அவையின் அக்ராஸனப் பதவியும் அதிவிரைவிற் கைகூடிவிட்டது.

"எட்டுத் திசையும் பரந்தநிலா எறிக்குங் கீர்த்தி ஏருழவர்
சுட்டப் படுஞ்சீர் வெண்ணெய் நல்லூர்ச் சடையன் கொடிலன்
சரிதமெலாம்
ஒட்டிப் புகழ ஆயிரநா படைத்தார்க்கன்றி யொரு நாவின்
மட்டுப் படுமோ அவன்காணி வளஞ்சேர் சோழ மண்டலமே".

என்னுஞ் சதகச் செய்யுள் இங்குக் கவனிக்கத்தக்கது.

ஆதித்த மன்னன், இயற்கையில் பேரறிவுடையவனாகவும் கற்றறிந்த மன்னனாகவும் பொது நெறியின் நோக்குடையனாகவும், பொது மதத்தின் போக்குடையனாகவும்—திரு ஆலங்காட்டுப் பட்டயம் அறைந்துள்ளபடியே—"கல்வியிற் குருவாகவும் வித்யா விநோதனாகவும் துஷ்ட நிக்ரஹ சிஷ்டபரிபாலகனாகவும்" இருந்தபடியால், அறிவிற்றெளிவு காட்டும் ஆதித்தன் கம்பரைப் போற்றிப் புணர்ந்து புதுப்பொருள் கோடற்கும் தலைப்பட்டான். "தான் புதுநாடு கொளற்பொருட்டுப் புறம்பேசெல்லும் போது" தவிர, மற்றைக் காலங்களில், பிரபக்களையும் பண்டிதர்களையும் அவைப்

புலவர்களையும் அத்தாணியதிகாரிகளையும் அடிக்கடிக் கூட்டுவித்துப், பண்டிதர்களுள் வாதம் நிகழ்த்தச் செய்தும், வியாக்கியைகள் செய்யச் செய்தும், விவகாரங்கள் புரியச்செய்தும், அவரவர் தகுதிக் குரிய அரிய பரிசளித் தாதரித்ததுண்டு.

"புலி புகழ் சென்னிபேர் அபயன் தோள் புகழ்
கலி கடம் மனையெனக் கனகராசியும்"

எனவும்,

"சென்னி நாள் தெரியல் வீரன் தியாகமா விநோதன்"

எனவும், கம்பர் தமது இராமாவதாரத்திற் குறித்துள சோழர் பெருமை இது பற்றியே போலு மென்ப.

அவ்வவ்வமயங்களில் அவையில் நடந்தேறும், சமத்தி பூர்த்தி யிலோ வாத நிகழ்ச்சியிலோ வியாக்கியான வகையிலோ ஆதித்தன் கம்பரை யதிகரித்திடுவார், ஆருமிலராயினர். ஆதித்த மன்னன் அறிவிற் சிறந்தவனாதலால், கம்பரது மேதையிற் களிப்பெய்தி, இவ்விளம் பிராயத்தில் இத்துணையாற்றல் இவர் வாய்த்திருத்தலால், இவரால் தமிழுலகுக்குத் தக்க நலமுண்டாம் போலும் என்று, வியந்து விதந்து போற்றுவான். சில சமயங்களில் வள்ளற்பெரு மானும், ஓய்வு ஏற்படுத்திக்கொண்டு, அரசவையை யலங்கரிப்ப தும் உண்டாமென்ப.

ஆதித்த மன்னற்குச் செம்பியன் மாதேவியார் குலமாணிக்க நம்பிராட்டியார் திரைமூரல் மாதேவியார் தென்னவன் மாதேவியார் என்னுமிவர்கள் வாழ்க்கைத்துணை நலங்களாக வாய்த்திருந்தார்கள். இவர்களல்லாமற் சில போகியாரும் மன்னர்க்குப் பொழுதுபோக்கில் துணைபுரியுமவர்களாக இருந்தாரென்ப. மன்னற்குப் **பராந்தகன் கன்னரதேவன்** என்னும் புதல்வரிருவர் இருந்தனர். இப் புதல்வர் கட்குக்கல்வி பயிற்றிய ஆசிரியர் வாணியத்தாதரென்பது ஊஹிக்கப் படுகின்றது. இவ்வாசிரியர், போதிக்கும் ஆற்றல் பொருந்தியவர். இலக்கண இலக்கியங்களிலும் சாத்திரப் பிரிவுகளிலும் மற்றும் முத் தமிழ் நூல்களிலும் முறைபோகிய பயிற்சிபெற்றவர். ஆசிரியர் தாதரும் அரசவையை அலங்கரிப்பதுண்டு.

அரண்மனை வித்தியார்த்திகள் இருவருள் பராந்தகனிலும் கன்னரதேவன் படிப்பில் மிகத் தேர்ச்சி பெற்றுவந்தான். இளம் பிராயமுதலே கன்னரதேவர்க்கு இறைவன் பக்தியில் மனம் ஈடு பட்டதுண்டு. பராந்தகனுக்கோ நாட்டைப் பிடிப்பதிலும் நாட்டைப் பரப்புவதிலும் நோக்கம் பரந்திருந்தது. "புராந்தகனுக்குச் சமான மாகிய அந்த பராந்தகன் புராந்தக பக்தியிற் புனிதமுடையா"னென்று ஆலங்காட்டுப் பட்டயம் அறைந்துகொண்டிருக்கின்றது.

எனினும், இளவரசரான பராந்தகற்கு, ஆசிரியர் தாதரிடம் அன்பும் பணிவும் ஆதரிக்கும் நோக்கமும் அதிகம் வளர்ந்திருந்தன. ஆசிரியர் தாதனுர் அதிக நாகரிகம் வாய்ந்தவர். சமயம் நோக்கி, ஒருவரை யாக்கவோ காக்கவோ ஆற்றல் படைத்தவர். அவையில் நடந்தேறும் வாத நிகழ்ச்சியையோ விவகார நிகழ்ச்சியையோ உட னிருந்து கவனித்தற்குப் பராந்தக இளவலார்க்குப் பல காலங்களில் வாய்ப்பு நேராதிருப்பினும், இவ்வாசிரியர் மூலமாக, ஏதொன்றும் விடாமல் எல்லாச் செய்தியையும் தெரிந்துகொள்வதுண்டு. எவ் வகையிலோ பராந்தகர்க்கு, ஆதித்தன் கம்பரிடம் அன்பு தோன்ற வில்லை; உள்ளம் உருகவில்லை; வெறுப்பும் அங்குரித்திருந்தது. ஒருவகை வன்பு உள்ளத்தில் ஊறிக்கொண்டிருந்தது. அந்த வன்பு மன்னர் பொருட்டாகவும் வள்ளலார் பொருட்டாகவும் ஆசிரியர் பால் அன்பின் பொருட்டாகவும் ஊறியிருக்கலாம்.

அவையில், ஆதித்த மன்னரைத் திருத்தி செய்தற்பொருட் டாகக் கம்பர், ஸமத்தி பூர்த்தியாகவோ ஸமய ஸ்பூர்த்தியாகவோ இயற்றியுள்ள பலதுறைக் கவிகளிற் சிலவற்றை வேறொரு அதி காரத்தில் வகுத்திடுவோமாக.

## கவிச் சக்ரவர்த்தியாங் கம்பர்.

இங்ஙனம் ஆதித்தன் கம்பன் என்பார், அரசனவையில் ஆதிக்கமுற்று எல்லாப் புலவரினும் மேம்பட்டவராக மதிக்கப்பெற் றிருந்த அளவில், ஆண்டுகள் இரண்டின்மேலுங் கழிந்துபோயின. இவ்விரண்டாண்டுக்குள் கம்பர்பெருமானது, அறிவும் புகழும் ஆற் றலும் அமைவும் சோழநாட்டில் மாத்திரமன்றி மதுரை முதலிய

பிறநாடுகளிலும் பரவின. இவ்விரண்டாண்டுக்குள் கண்டசுத்தியாகவோ ஸமஸ்யாபூர்த்தியாகவோ விநோதங்களாகவோ விடுகவிகளாகவோ இயற்றப்பெற்றுள்ள கவிகள் அனந்தமென்பார்.

அக்கவிகளின் அமைப்பையும் ஆழத்தையும் அறிஞர்கள் அறிந்தறிந்து உள்ளம் நெகிழ்வார்கள். பண்டிதர்களும் போற்றும்படியான வகையில் அத்துணை வியப்புள்ளன என்றால் மிகையாகமாட்டாது. அரசனிடத்துப் பரிவினராகவோ பரிசிலராகவோ வந்து செல்லும் காவலரும் பாவலரும், இவரது கவிகளிற் காணும் அருட்சக்தியைக் கவனித்து, இவரைத் தெய்வப் புலவர் என மதித்துப் போற்றிச் செல்வார்கள்; பிரபுக்களும் மன்னர்களும், அவ்வக்காலங்களில் ஈந்துள்ள பரிசுகளும் அனந்தம்.

இவ்வண்ணம், பாவலரும் காவலரும் பரிந்து போற்றத்தகுந்தவராகத் தனது ஆஸ்தானத்தில், ஆதித்தன்போல் ஒளிதந்து விளங்கும் ஆதித்தன் கம்பரிடத்தில் ஆதித்தசோழ மன்னர்க்கு அளவுக்கடங்காத பிரேமை உதித்தபடியால், இவரது புலமைக்கு அறிகுறியாக ஒரு சிறப்பு விழாவைக் கொண்டாடல் வேண்டுமென்னுமோர் உள்ளக்கிளர்ச்சி தோன்றிற்று. மன்னன் வள்ளலாரிடம் கலந்து, பல்லோர் கூடும் பேரவை கூட்டிப் பாவலரைப் புகழ்ந்து போற்றிக் "**கவிச்சக்கரவர்த்தியாங் கம்பர்**" என்னும் சிறப்புப் பெயரை உவந்தளித்தனன்.

அன்றியும் அவர் சிறந்திருந்து வஸிப்பதற்குரிய படியாகவும் அவர்க்கு வேண்டிய பொருள்களை விளைவித்துக் கொள்ளவேண்டிய படியாகவும் ஒரு தக்க இடமிருத்தல் வேண்டுமென்னும் பேரெண்ணமும் பேரன்புங் கொண்டு, ஆதித்தன் கம்பரையாதரித்துக் கொண்டிருக்கும் சடைய வள்ளலார் வாழ்ந்து வரும் வெண்ணெய் நல்லூர் என்று அழைக்கப்பெறும் க்கிராம மங்கலத்துக்கு அருகில் உள்ளதொரு பகுதி நிலத்தைப் புலவர்க்கு-மானியமாக அளித்து, அதற்குக் **கம்ப நாடு** என்னும் பெயரையுமீந்தான் அரசன் என்பர்.

இந்த நிலத்தைத்தான் பின்னர் ஆதித்தன் கம்பன், தமதன்பிற்குரிய இல்லாளொடும் இனிதிருந்து இல்லறம் நடாத்துதற்கு இடமாக வகுத்துக் கொண்டார் என்பதும் கேட்கப்படுகின்றது.

அந்த இடமே, தற்போது, தேரழுந்தூர் எனப்பெறும் திருவழுந்தூர் அக்கிராரத்துக்கு அரை மைல் தெற்கில் **கம்பர் மேடு** என்னும் பெயருடன் பாழிடமாகக் கிடக்கின்றதென்றும் கூறிக் கின்றார்கள்.

அன்று பராந்தக இளவலும் ஆசிரியத் தாதரும் அவையில் இருந்தார்கள். அனைவரும் மதிப்புடன் கொண்டாடிய அச் சிறப்பு விழாவினை, அவ்விருவரும் நன்கு மதித்திலர் என்பது யாவரும் அறிந்துகொள்ளும்படியே நிகழ்ந்தது.

அனைவருமறிந்ததொரு செய்தியைக் கம்பரும் வள்ளலும் அறிந்துகொண்டுள்ளார்கள் என்னலும் வேண்டுமோ! என்னினும், இந் நிகழ்ச்சியை யொருபொருட்டாகவே, அவ்விருவரும்—சத்திய வாழ்க்கையும் சுதந்திரப்போக்கும் உடையவர்களாகையால்—மதித் திலர். அரசிளங் குமரனும் அரண்மனை யாசிரியரும் இருந்த தன்மையிலும் புரிந்த செயலிலும் ஆதித்தசோழ மன்னற்கு உள்ளம் சிறிது துணுக்குற்றது. பராந்தகனுடைய அந்தரங்கத்தையும் ஆற் றலையும் அவன் தனது ஆசிரியர்பால் வைத்திருக்கும் ஆதரவையும் நன்கு உணர்ந்தவனாதலால், அவ்விருவரையுங் கலந்தாலோசியாமல், இங்ஙனம் பகிரங்கத்தில் ஒரு வெறுப்பு நிகழும்படியாகச் செய்து கொண்டோம் என்னும் பச்சாத்தாபம் ஆதித்த மன்னரிடம் அங் குரித்தது.

“பொன்னிசூழ் புனனா டென்னுங் கன்னிதன்
நன்னுதற் பொட்டென மன்னிப் பொலிந்த
திருவழுந் தூரிற் பொருவிறந் தமர்ந்தோன்
புவிச்சக்ர வர்த்திகள் போற்றிப் பழிச்சும்
கவிச்சக்ர வர்த்தியாம் கம்பநாட் டறிஞன்
வாணி வரத்தால் ஏனுறு தமிழில்
அகத்தியம் தொல்காப் பியமவி நயமுதல்
மகத்துவந் திகழும் இலக்கண முணர்ந்தோன்
ஏந்து சங்கத்தி யாப்புமிக் குயர்ந்தோன்
அற்புதம் மருவுங் கற்பனைக் களஞ்சியம்”

என்றும் மேலும் பிற்பட்டாரும் புகழும் படியாக **ஆதித்தன் கம்பன் ஆதித்தன் அவையை அலங்கரித்திருந்தனர்.**

ஒழுக்கத்திலுயர்வும் உலகியலறிவும் நன்கு படைத்திருக்கும் " கவிச்சக்கரவர்த்தி கம்பரை, யினித் தனிவாழ்க்கையில் ஸஞ்சரித்திடவிடலாகாது ; இல்லறத்தில் இருத்திவிடல்வேண்டு " மென்னும் எண்ணம், வள்ளலாரது உள்ளக்குகையில் ஊன்றிக் குடிகொண்டு விட்டது. அதற்காகப் பலபடியிலும் ஆராய்ந்து ஆலோசிக்கலாயினர். முடிவில் ஒரு தீர்மானத்துக்கு வந்து சேர்ந்தனர்.

" தாய்தந்தை யின்னாரென்று அறியாதபடியே, கம்பர் இந்த இருபத்திரண்டு வருஷகாலமும் வளர்ந்துள்ளாராலும், காராளர் தம்மரபின் கனவொழுக்கங்களையே கைப்பற்றி யொழுகிவந்துள்ளா ராலும், சிசுப்பிராயம் முதல் நனவுக்காலம் வரையில் உவச்சர் மகனாகவே வளர்ந்துவந்த உண்மை உலகறிந்துள்ளதொன்றாகலான், தக்கதொரு கன்னியைத் தேடற்கு வள்ளலார் தயங்கி நின்றார். உயர்குடிமையைக் கருதியபடியால், உவச்சர்குலத்திற் பெண் கொள்ளப் பிரியப்பட்டிலர்போலும். " கம்பர் கவிச்சக்கரவர்த்தி யாயினும் கனவொழுக்கமுடையவராயினும், காராளர் பெண் கொடுக்கக் கருத்துடையராகார் ; ஆதலின், தஞ்சையிலும் அதன் சுற்றுப்புறங்களிலும், கம்பர்க்குரிய கன்னி பிறந்திராள் " என்பதை வள்ளலார் நன்கு தீர்மானித்திட்டார். ஆதலால், "அயல்நாடு சென்றே அன்னவளைத் தேடிக் கொளல்வேண்டு" மென்று தீர்மானித்திருந்தார்.

இங்ஙனமே " கம்பரும், விதிப்படி மணக்கப் பெற்றதொரு மனையாளுடன் வாழ்க்கை நடத்தும் வாய்ப்புப் பெறாதவராகவே வாழ்ந்திருந்தனர் " என்பதைச் சரித்திரப் போக்கினால் உணர்ந்து கொள்கிறோம்.

---

௬உ. அ.

# கம்ப ராமாயணப் பயன்-தொடர்ச்சி.

---

அன்ன தானம் அகிலநல் தானங்கள்
கன்னி தானம் கபிலைநல் தானமே
சொன்ன தானப் பயனெனச் சொல்லுவார்
மன்னி ராம கதைமற வார்க்கரோ. அ

**பொழிப்புரை :**—நிலைபெற்ற இராம கதையை மறவாமல் எப்போதும் பாராயணம் செய்வோர்க்கு அன்ன தானத்தின் பயனும், சிறந்த பூதானங்களின் பயனும், கன்னிகாதானப் பயனும், கோதானப் பயனும், என்று இவ்வாறு நூல்களிற் சொல்லியிருக்கும் எவ்வகைத் தானப் பயன்களும் சித்தித்திடும் என்று அறிஞர்கள் சொல்லுவார்கள். (அரோ—ஈற்றசை.)

**குறிப்புரை :**—இராம சரித்திரத்தை யுணர்ச்சியுடனிருந்து படன சிரவணங்கள் செய்வார்க்குத் தேகத்தை நன்கு போஷித்துக்கொள்ளும் முறையும், பூமியைச் செழித்திடச் செய்யும் முறையும், குடும்ப பரண முறையும், கோ ரக்ஷணத்தாற் பயன்பெறு முறையும் முதலாகச் சொல்லும் எத்துறை முறைகளும் போதமாவதால், அவ்வம் முறைக்காகச் செய்யப்பெறும் அவ்வத் துறையின் தான பயன்களும் சித்தித்திடும் என்று உறுதி கூறினவாறு மென்க. "அகிலநல் தானம்"—என்பதற்கு "எல்லாவிதமான நல்ல தானங்களும்" என்றுமாம். கன்னி—கந்யா என்னும் வடசொற் சிதைவு; "சொன்னதானம்" —என்பதற்கு "ஸ்வர்ண தானம்" என்றும் பொருள் கூறுவர். கபிலை—பொன்னிறப் பசு என்பது மரபு; கபிலை—பொன்னிறமாகலின்; இது எல்லாப் பசுக்களையும் உபலக்ஷணத்தாற்குறித்து நிற்கின்றது.

வென்றிசேர் இலங்கை யானை வென்றமால் வீரம் ஓத
நின்றரா மாய ணத்தின் நிகழ்ந்திடு கதைகள் தம்மில்
ஒன்றினைப்படித்தோர் தாமுமுரைத்திடக்கேட்டோர்தாமும்
நன்றிது என்றோர் தாமும் நரகமெய் தீதி டாரே. ௯

பொழிப்புரை:—வெற்றி பொருந்திய இலங்கைக் கதிபனை இராவணனைப் போரில் வென்று கொண்ட திருமாலின் அம்சபூதரான ஸ்ரீராமபிரானது வீரப்பிரதாபத்தை யெடுத்துப் புகழ்ந்தோதுதற்காகவே நிலைபெற்றுள்ள இந்த ராமாயண காவியத்தினுள், வந்து வழங்கிக் கொண்டிருக்கும் பல கதைகளுக்குள், ஒரு கதையினைப் படித்துணர்ந்தவர்களும், ஒருவர் எடுத்து விதந்துசொல்லக் கேட்டவர்களும், இது நன்றாயிருக்கின்றதென்று கொண்டாடினவர்களும் நரகத்தையடையவே மாட்டார்களென்பதாம்.

குறிப்புரை:—இராமாயணத்துள் வழங்கிவரும் ஒவ்வொரு கதையுமே ஸத்ய தர்ம வாழ்க்கையையுந் தேக தத்துவ உணர்ச்சியையும் ஆத்ம தத்துவ போதத்தையும் பர தத்துவத்தையும் உணர்த்திக்கொண் டிருக்கிறபடியால், அவ்வொரு கதையினையும் உணர்ச்சியுடன் கேட்பார்க்கு ஆன்ம போத முதித்து நரக வாஸனை பெறமாட்டாதவராவார் என்னும் உறுதி கூறப்பட்டது. நரகமது—"அது"—பகுதிப் பொருள் விகுதி. (ஏ—ஈற்றசை. தாம்—இரண்டும் சொல்லசைகள்.)

இராகவன்கதையிலொருகவிதன்னினோகபாதத்தினைஉரைப்போர்
பாரவருமலரோனுலகினிலவனும்பன்முறைவழுத்தவீற்றிருந்து
புராதனமறையுமண்டர்பொற்பதமும்பொன்றுநாளதனினும்பொன்றா
அராவணையமலனுலகெனும்பரமபதத்தினை அணுகுவரன்றே. ௧0

பொழிப்புரை:—இராமாவதார காவியத்திலுள்ள ஒரு செய்யுளினது, ஓரடியை மாத்திரமும் சொல்பவர்களும் (இவ்வுலகினின்று பிராகிருத சரீரம் விட்டு மறைந்தபின்) பிரமலோகத்தையடைந்து, புகழ்தற்கரிய மேன்மை தங்கியதாகிய அந்தப் பிரமலோகத்தில், அவனும் தமது புகழை யெடுத்து விதந்து ஓதும்படியாகப் பெருமையுடனிருந்து, பிறகு, மிகப் பழைய வேதங்களும், அவ்வேதங்களிற் சொல்லும் தேவர் உலகங்களும் அழிந்து ஒழிந்துபோகின்றதாகச் சொல்லப்பெறும் கற்பாந்த காலத்திலும் அழியாததாக அறிஞர்களால் ஓதப்பெறுவதான, அனந்த சயனனது உலகமாகிய பரமபதத்தையே சேர்வர் என்பதாம். (அன்றே-தேற்றம் ஈற்றசை)

குறிப்புரை:—"ஏக ஏகம் அக்ஷரம் ப்ரோக்தம் மஹாபாதக நாசநம்" என்னும் வான்மீகியின் பலசுருதி சுலோகத்தை விவரித்துச் சொல்லவந்த

பாசுரமாக இது விளங்குகின்றது. ஒரு கவி—"ஒப்பற்ற" கவியென்று பொருள் செய்து, இராமன் கதையில் ஒப்பற்ற கவியாக அமைந்து கிடக்கும் "ஸ்ரீராமஸ்தோத்ர கவிகட்குள்"—ஒரு கவியின்—ஒரு பாதத்தைச் சொன்னாரும் கேட்டாரும், "ராமநாம ஸ்மரணை" செய்தாரடையும் பயனை யடைவாரென்பது ஒரு தலையாமென்னும் உறுதிப் பொருள் கொள்வாருமுளர். பரமபதம்—மேலான வீடு; பரம்-மேல் என்பதாம். பரம பதம்—மோக்ஷம்!

ஆதியரி யோநமநா ராயணர்தி ருக்கதைய றிந்தனுதி
னம்பரவுவோர்
நீதியது போகநெறி நின்றுநெடு நாளதினி றந்துசக
தண்டமுழுதுங்
காதிபர்க ளாயரசு செய்துளநி னைந்ததுகி டைத்தருள்பெ
றுத்துமுடிவில்
சோதிவடி வாயழிவில் முத்திபெறு வாரெனவு ரைத்த
சுருதித் தொகைகளே. கக

பொழிப்புரை:—தொடங்குங் காலத்தில், ஹரி: ஓம் நம: என்று கூறி வணங்கி, ஸ்ரீமந்நாராயணனது திருக்கதையாகிய இராமாவதார காவியத்தை உண்மை யுணர்ச்சியுடன் தெரிந்து கொண்டு, நாள்தோறும் துதிப்பவர்கள், முறைப்படியே நெடுங்காலம் இவ்வுலகத்துற்ற அநுபோக நெறியில் தவறாதிருந்து, பின்பு, அந்தச் சிற்றின்ப சுகாநுபவத்தினின்றும் கடந்து, இந்தப் பிரம்மாண்டம் முழுதுக்கும் அதிபர்களாக வீற்றிருந்து, தாம் நினைத்தவெல்லாம் கிடைக்கப் பெற்றுப் பின்னர்ப் பகவானுடைய பூர்ணாநுக்கிரஹமும் பெற்று, முடிவில், பெருஞ்சோதி வடிவமாகிய அழியாத ஆத்ம தத்துவ நிலையடைந்து மோக்ஷத்தைப் பெறுவார்களென்று வேதத் தொகுதிகள் சொல்லியுள்ளன. (ஏ—ஈற்றசை.)

குறிப்புரை:—ஒவ்வொரு ஜீவாத்மாவும் பரமாத்ம அம்சத்திலிருந்தும் தோன்றிப் பிரிந்து, பிரகிருதியுள் ஒடுங்கியிருப்பதுவே உண்மையாதலின், அந்தப் பிராகிருத சரீரத்தின் நிவ்ருத்தியை யடைதற்கென்று வேதத் தொகுதி யுரைத்துப் போகும், நிவ்ருத்தி மார்க்கத்தை ஸோபானக் கிரமப்படி சொன்ன முறையாகும் இது. இது கற்பிப்பது உத்தம பக்குவம்

பெற்ற ஆன்மாக்களுக்குத்தான் என்பதுவே வேதாந்தம். அந்தப் பிராப்யமும் ஸ்ரீராமாயணத்தாலே லப்யமாம் என்னும், உண்மையை விளக்கி உறுதி கூறினதாகுமென்க.

இனையநற் காதை முற்றும் எழுதினோர் வியந்தோர் கற்றோர்
அனையது தன்னைச் சொல்வோர்க் கரும்பொருள் கொடுத்துக்
கேட்டோர்
கனைகடற் புடவி மீதே காவலர்க் கரசாய் வாழ்ந்து
வினையம் தறுத்து மேலாம் விண்ணவன் பதத்திற் சேர்வார். கஉ

கருத்துரை :—இதன் பொருள் வெளிப்படை. இக்கதையை முற்றும் சொன்னாரும் கேட்டாரும் எழுதினாரும் இகபர சுகங்களைப் பெற்றுப் பரமபதம் சேர்வர் என்பது கருத்தாம்.

குறிப்புரை :—வியத்தல்—களித்து மகிழ்தல். கனைகடல்—ஒலிக்கும் கடல்; புடவி—பூமி. காவலர்க்கரசு—மன்னர் மன்னன் அதாவது சக்கரவர்த்தி. வினையம்—பிறவிக்கேதுவான இருவினைகளும் என்பதாம். மேலாம் விண்ணவன்—பரம்பொருள். பதம்—பரமபதம்.

## இராமாயணத்தின் தொகை. (உத்தர காண்டத்துடன்.)

கரைசெறி காண்டம் ஏழு; கதைகளா யிரத்தெண் ணூறு;
பரவுறு சமரம் பத்து; படலநூற் றிருபத் தெட்டே;
உரைசெயும் விருத்தம் பன்னீ ராயிரத் தொருபத் தாறு;
வரமிகு கம்பன் சொன்ன வண்ணமுந் தொண் ணூற் றாறே. கங

குறிப்பு :—பொருள் வெளிப்படை. (கம்ப ராமாயணம்—பூர்வ காண்டம் ஆறும், உத்தரகாண்டம் ஒன்றும், ஆக ஏழு காண்டங்களின் தொகைக் குறிப்பாகு மிது.) காண்டங்கள்—எ; கதைகள்—க௮00; போர்—க0; படலங்கள்—கஉ௮; விருத்தங்கள்—கஉ0கசு; சந்தங்கள்—கூசு வகைகள்; வண்ணம்—சந்தம்; சந்தங்கள் மாத்திரம் கம்பன் சொன்ன-என்று குறிப்பிட்டிருப்பதை யூன்றிக் கவனிக்க.

இராமாயணப் பயன் கவிகள் முற்றும்.

## பொது ஆராய்ச்சி.

மனித வாழ்க்கையின் உயர்பயன் ஆன்மாநுபவந்தான். அதற்கடுத்தபடியில், அவ்வான்மாநுபவத்தைப் போலவே, மனிதனைத், தனிமையில் ஒப்பற்ற இன்பத்தை யனுபவிக்கச் செய்வது கவிதாநுபவமே. மற்றைய அநுபவமெல்லாம் நிலையாதன. கவிதாநுபவமே ஆன்மாநுபவச்சாயை யென்பதை விண்டுரைத்த லியலாது; அநுபவிக்கும்போதுதான் அறிதல்கூடும். அக் கவிதாநுபவத்தின் ஒப்பற்ற பயனையளிப்பது கம்பராமாயணக் காவியாநுபவந்தான் என்பது எமது உறுதியான கொள்கையாகும்.

"கம்பநாடன் கவிதையிற் போல் கற்றோர்க்கு இதயம் களியாதே"

என்பது கம்பராமாயணப் பாயிரமுமாம்.

ஏனெனில், தமிழ் மொழியில் மாத்திரமல்லாமல், எத்திறத்த மொழியிலும் வாழ்க்கையின் எல்லாச்சுவைகளையும் கவிச்சுவையில் அளித்து, ஆன்மாவினை உயர் நிலைக்கு உய்க்குமொரு காவியம் கம்பராமாயண மல்லாமல் வேறு இல்லையென்றே துணிந்து கூறலாகுமென்பது பெரியார்பலர் கொள்கையாகும். அதனால் அப் புலவர் பெருமானைக் கவிச்சக்ரவர்த்தி எனப்புகழ்வது புனைந்துரையாகமாட்டாது.

கவியுலகின் பேரரசர்கள் என்று சொல்லப்படுவா ரெல்லாரும், கம்பராமாயணத்திற் காணப்பெறும் சுவைகளில், ஒரு சில சுவைகளில் மாத்திரம், உயர்ந்திருக்கக் காணலாம். எல்லாச்சுவைகளையும் ஒருங்கே காணவேண்டுமாயின், யாவரும் கம்ப ராமாயணத்தைக் கற்றுக் கற்றுத் தேர்ந்து தேர்ந்து தெளிந்து தெளிந்து உணர்ந்து உணர்ந்து அநுபவிக்க வேண்டியவர்கள் தாம்.

"மேலை நாட்டுக் கவியரசர்கள் எனப்புகழ்ந்து ஓதப்பெறும் பெரும் புலவர்களாகிய ஹோமர் விர்ஜில் தாந்தே ஷேக்ஸ்பியர்

மில்டன் மோலியேர் கதே ஆகியவர்களும் கவிதையின் உயர்ந்த அம்சங்களில் கம்பருக்குக் கீழேதானிருக்கிறார்க" ளென்று, பல பாஷைகளையும் படித்தறிந்து தெளிந்த பெரியாரொருவர் தமது ஆராய்ச்சியில் எழுதியிருக்கிறார்.

"நொய்தின் நொய்யசொல் நூற்கலுற் றேனெனை
வைத வைவின் மராமரம் ஏழ்தொளை
எய்த எய்தவற் கெய்திய மாக்கதை
செய்த செய்தவன் சொன்னின்ற தேயத்தே"

என்றும்,

"ஆங்கவன் புகழ்ந்த நாட்டை அன்பெனும் நறவம் மாந்தி
மூங்கையான் பேச லுற்றான் என்னநான் மொழிய லுற்றேன்"

என்றும், கவிச்சக்ரவர்த்தியாகிய கம்பரே தாமியற்றிய இராமாயணத்தின் முதனூலாசிரியரைப் புனைந் துரைத் திருக்கின்றாராயினும், இரண்டு காவியங்களையும் ஒருசேரப் படித்துப் பாரபக்ஷமில்லாமல் அநுபவிப்பார்க்குக் கம்பர் கூறியது புனைந்துரையாகவே தோன்றும். வான்மீகத்தில் சில ஸர்க்கங்களும் கம்பராமாயணத்திற் சில படலங்களுமாகச் சில மாதங்களேனும், உணர்ச்சியுடன் ஓதி வருவார்தாம் இவ்வுண்மையை யறிதல்கூடும். இஃது எமது முப்பது ஆண்டுகளிற் கண்ட அநுபவமாகும்.

கம்பரது புனைந்துரை அவையடக்கமாமென்க.

"தாம் எடுத்துக்கொண்ட இராமாயணக் கதையில், கம்பர், வான்மீகியை மிகவும் நெருங்கியே பின்பற்றிப் போயிருக்கிறார்" என்பது பிரசித்த வாக்கியமாகுலும், ஊன்றிப் படித்தறிவார்க்கு அவ்வாக்கியம் அப்பிரஸித்தமாகவே தோன்றிவிடும். ஏனெனில், அங்கங்கே, கதைப் போக்கிலுங்கூடச் சிலபல அரிய மாற்றங்களைக் கம்பர் கையாடியிருக்கிறார் என்பது நன்கு புலனும். அம் மாற்றங்

கள் திரோதாத்த நாயகனது உத்தம குணங்கட்கு உத்தமத்தை யூட்டுவனவாகவும், ஆரியத்திலும் வேறு பல புலவர்கள் கூறி வைத்த உண்மைகளை யுரைப்பனவாகவும் காணலாம். அம் மாற்றங்கள் இலக்கண வரம்பு கடவாதன வென்பது பின்வரும் சூத்திரத்தினால் விளக்கமுறும்.

"முன்னோர் நூலின் முடிபொருங் கொத்துப்
பின்னோன் வேண்டும் விகற்பம் கூறி
அழியா மரபினது வழிநூ லாகும்"—பவணந்தி யாசிரியர்.

நூல் முடிபும் அழியா மரபும் கம்பராமாயணத்தில் நன்கு காணப் பெறும். வேண்டும் விகற்பம், தேசத்தையும் காலத்தையும் பாஷையையும் பற்றியவாமென்க.

இராம ஜனனத்தில் ஆரம்பித்து இராவணவதத்தில் முடித்து ஆறு காண்டங்களையும் வான்மீகியின் அடிபற்றித் தமிழ்க்காவிய வரம்புக்கிணங்க நூலியற்றியதே கம்பர் முறையானாலும், சிறு மாற்றங்களும் பெரு மாற்றங்களும் செய்திருக்கிறார்.

பெரு மாற்றங்கள்.

பாலகாண்டத்தில் வான்மீகி மிக விரித்துச் சொல்லியிருக்கும் சுப்பிரமணிய ஜனனம் கம்பராமாயணத்தில் ஒரே கவியில் மிகச் சுருக்கிச் சொல்லப்பட்டிருக்கின்றது. அயோத்தியா காண்டத்தில், "குகனும் பரதனும்" என்பது இரு புலவர்களையும் வேறாக்கி விடுகிறது. குகப்படலம் ஒரு உயர்ந்த படலமென்பதைப் படித்தாரும் கேட்டாரு முணர்வர். ஆரண்ய காண்டத்தில், ஸீதாபஹரணத்தில் இரு புலவர்களும் மாறுபட்டிருக்கிறார்களென்பதை யாவரும் அறிவர். கிஷ்கிந்தா காண்டத்தில் அநுமன் நட்பும் வாலி வதமும் கம்பரைத் தத்துவவுணர்ச்சியிலும் வாதவாழ்க்கிலும் உயர்ந்த நிலையில் நிறுத்தியுள்ளன. சுந்தர காண்டத்

தில், கம்பர், அநுமனைத் "தோன்றாத் தோற்றித் துறைபல முடிப்பி னும், தான் தற்புகழ்தல் தகுதியன்றே" என்னும் உயர்குணம் பெற்றவனாக்கிவிட்டார். யுத்தகாண்டத்தில், "இரணியன் வதைப் படலம்" ஒரு தனிக்காவிய வொழுங்கையே பெற்று மலையிலக் காக நிற்கின்றது. பிறவும் பல.

சிறு மாற்றங்கள்.

பாலகாண்டத்தில், சீதையும் இராமனும் காண்டல் கருதல் காதல் கோள்ளல் என்றது சிறப்பல்லவா! அயோத்தியா காண் டத்தில் "இராமனும் கைகேயியும்" "இலக்குவன் சினம்" "இராமனும் சீதையும்" "பரதன் உரிமைக்குரியவன் ஆகாமை" முதலிய பல. ஆரணிய காண்டத்தில் அயோமுகிக்கதை வான் மீகத்தில் சில சுலோகங்களாலும் கம்பரில் தனிப்படலத்தாலும் விளக்கப்பட்டிருக்கின்றது. கிஷ்கிந்தா காண்டத்தில், வான்மீகி தாரை வேறு; கம்பர் தாரை வேறு என்பது காணப்பட்டுக் கிடக் கின்றது. சுந்தரகாண்டத்தில், இராவணசபையில் அநுமான் இராம பரத்வம் கூறினமை கம்ப ராமாயணத்தில் உயர்ந்து நிற்கின்றது. இதுவே, வீடணன் இராவணனால் விலக்கப்படுதற்கு மூலகாரண மாகவும் ஊஹித்துணர வைக்கப்பட்டிருக்கின்றது. அநுமனது தூத விலக்கணத்தை இது உயர்த்திவிட்டதன்றோ! யுத்த காண் டத்தில், மாயாஜனகப்படலம் கம்பரது பக்தி வரம்பைக் காட்டி நிற்கின்றது. வான்மீகியில் சில சுலோகங்களாற் குறிக்கப்பெற் றிருக்கும் மூலபலவதம் கம்பரில் பெரும்படலமாகிப் போர்க்களத் தை நடித்துக்காட்டுவோர்க்கு நற்பயன் தந்து நிற்கின்றது. கம்ப ரது மீட்சிப் படலம், 'நுனியிலிருந்து கரும்பு தின்பார் காணும் அடிக்கரும்பின் சுவையை அறிவித்துக் கொண்டிருக்கின்றது. பின்னும்பல; விரிப்பிற் பெருகும்.

தாமே காண்பார் தம்மய மாவார்.

இத்தகை மாற்றங்களை வடநூற் புலவரிடத்தும் நன்கு காண லாம். அம்மாற்றங்களிற் சில சுவை கெடும் முறையிலும் அமைக் கப்பட்டுக் கிடக்கின்றன.

வங்காளி பாஷையில் கிருத்திவாஸன் விடணனைத் தேசத் துரோகி குலத்துரோகி யாக்கிவிட்டான். மதுசூதன தத்தன் என் னும் வங்கக்கவி, ராமாயணத்தை மேகநாதவத மாக்கி மேல்நாட்டு முறையைத் தழுவி யெழுதியிருக்கிறான். ஹிந்தி பாஷையில் துளசீதாஸர் பாலகாண்டத்தைப் பல உபாக்கியானங்களாற் பெருக் கியும் மற்றைக் காண்டங்களைச் சுருக்கியும் யுத்தகாண்டத்தை லங்கா காண்டமாக்கியும் உத்தர காண்டம் லவ குச காண்டம் என்னும் இரண்டு காண்டங்களைப் பின்னே விரித்தும் போயிருக்கிறார்.

மற்றும் பிரஸந்நராகவம் முதலியனவும் பட்டிகாவ்யம் ஜானகீ பரிணயம் முதலியனவும் காவியச் சுவை கருதியும் கதைச் சுவை கருதாமலும் ஆக்கப்பட்டிருக்கின்றன. இன்னும், வட மொழியில் எழுதப்பட்டு நிரம்பிக்கிடக்கும் எல்லாப் புராணங்க ளும் இராம சரிதத்தைச் சொல்லுமாயினும், சரிதச் சுவையை மாறுபடுத்தியே கூறியிருக்கின்றன.

கதை சொல்லும் முறையும் வாக்கின் நடையும் வர்ணனை யலங்காரங்களும் மனித வியக்கங்களையும் உணர்ச்சிகளையும் எடுத் துக் கூறும் மாதிரியும் கம்பருடைய காவியத்தில் தான் ஒழுங்கில் அமைந்திருக்கின்றன.

கம்பருக்கும் வான்மீகருக்கும் உண்டாயிருக்கும் மாறுபாடு கட்கெல்லாம் முக்கிய காரணமாக நிற்பது எதுவெனில், 'ஸ்ரீராம பிரான், கம்பநாட்டாழ்வாரது உள்ளத்திற் பரம்பொருளாகப் பொலிவுடன் நிறைந்து நிற்றலும், வான்மீகரது மனத்தில் மானிட னாகக் குறுகி நின்றதுந்' தான். வான்மீகத்திலும் மூன்று நான்கு இடங்களில், ஸ்ரீராமனது பரத்வ நிலையை உணர்த்தும் சுலோகங்

களைக் காண்கின்றோமாயினும், "அவை பிற்பட்டுச் சேர்க்கப் பெற்றவை" யென்று, அவற்றை வடமொழிப் புலவர் பலர், அகற்றி யொதுக்கிக் கொண்டிருக்கின்றார்கள்.

கம்பரது காவியத்தில் காம்பீரியமே சிறந்த குணம். கம்பரது சிங்கார ரஸத்துக்கு இங்காரும் ஒப்பாவாரிலர். சோக ரஸத்தைச் சொல்லுமிடங்களில் படிப்பாரும் கேட்பாரும் கண்ணீரைப் பெருக்கிக் கலங்கி நிற்கக் கண்டிருக்கிறோம். வீரமும் வியப்பும் ரௌத்திரமும் சாந்தமும் கம்பரது சொந்தமான ரஸபாவங்களாம்.

கம்பரது காவியத்தை யநுபவிக்கும்போது, சமுத்திரத்தின் ஆழமும் அகலமும், இமயத்தின் உருவமும் உயர்வும், மாமல்லபுரக் கோயில்களின் அமைப்பும் ஆற்றலும், சமணச் சிலைகளின் உறுதியும் உணர்ச்சியும், ரோமச் சிலைகளின் ஆக்கமும் அழகும் நமது நினைவுக்கு வருகின்றன.

கம்பருடைய இராம இராவணர்கள், இலக்குவ இந்திரஜித்தர்கள், வாலி அநுமர்கள், சீதா மந்தோதரிகள் முதலிய யாவரும் வான்மீகத்திற் காணப்பெறும் அவர்களைக் காட்டினும் பன்மடங்கு உயர்ந்தவர்களாக ஆன்ம வுருவில் தோன்றி நிற்கின்றார்கள் என்பது அநுபவஸித்தம். வான்மீகர் வனங்களில் ஸஞ்சரிப்பவர், கம்பர் நாட்டில் வாழ்பவர்; ஆனாலும், பிரகிருதியின் தோற்றங்களைக் கூறுவதில், இரு புலவர்களும் வெற்றி தோல்வியும் உயர்வு தாழ்வுந் தோன்றாமல் தோள்தட்டி நிற்கின்றார்கள் என்பதனைப் படித்தே யுணரல் வேண்டும்.

கம்பர், உவமை கூறுவதிலும் பிரகிருதியை வர்ணித்திருக்கும் பெருமையைக் காண்க :—

"கலையாழி கதிர்த்திங்கள் உதயத்தில் கலித்தோங்கும்
அலையாழி யெனவளர்ந்தார் மறைநான்கும் அனையார்கள்;"

சூர்யோதயம் :—

1. "புதையிருளின் எழுகின்ற புகர்முகயா
னையினுரிவைப் போர்வை போர்த்த
உதயகிரி யெனுங்கடவுள் நுதல்கிழித்த
விழியேபோல் உதயஞ் செய்தான்."

2. "மீனுடை யெயிற்றுக் கங்குல் கனகனை வெகுண்டு வெய்ய
கானுடைக் கதிர்கள் என்னும் ஆயிரம் கரங்கள் ஓச்சித்
தானுடை உதய மென்னும் தமனியத் தறியுள் நின்று
மானுட மடங்கல் என்னத் தோன்றினன் வயங்கு வெய்யோன்"

பொருள்கள் :—

1. நிறைந்த இருளாகத் தோன்றியிருக்கின்ற புள்ளி முகமுடை யானையினுடைய தோலைப் போர்த்துக் கொண்டிருக்கும், உதயகிரியாகிய பரமசிவப் பெருமானுடைய நெற்றியைக் கிழித்தெழுந்த நெருப்புக்கண்போல, சூரியன் (உதயகிரியின் உச்சியைப் பிளந்துகொண்டு) தோன்றினன்.

2. இருளாகிய இரணியனைக் கிழிப்பதற்கு உதயகிரியாகிய தூணைப் பிளந்துகொண்டு நரசிங்கம்போல் சூரியன் தோன்றினான்.

மனிதர் இருதயத்துள்ள உணர்ச்சிகளையும் உட்கிடைகளையும் எடுத்துக்கூறுவதில் கம்பருக்குக் கம்பரே சமானராக நிற்கின்றார் என்று சொல்லவேண்டியதுதான்.

"சிந்தையிற் சிறிது துயர் சேர்வுறத் தெருமரலின்
நொந்தயர்த் தனரனையர் நோவுறச் சிறியரலர்
அந்தரத் தமரரலர் மானுடப் படிவர் மயர்
சிந்தனைக் குரிய பொருள் தேடுதற் குறுநிலையர்"

"தருமமுந் தகவு மிவர் தனமெனுந் தகையரிவர்
கருமமும் பிறிதொரு பொருள் கருதியன் றதுக ருதின்
அருமருந் தனைய திடை யழிவுவந் துளத னை
இருமருங் கினு நெடிது துருவுகின் றனரி வர்கள்."—

கிட் - அனுமப் படலம்.

பிரதி நாயகன் மறம் :—

யுத்தகாண்டத்தில், இராவணன், தோற்றுவந்த இந்திர சித்தன் பேசிய வார்த்தையைக் கேட்டு, கோபித்துக்கூறியது ;

"முன்னையோர் இறந்தார் எல்லாம் இப்பகை முடிப்பர் என்றும்
பின்னையோர் நின்றார் எல்லாம் வென்றனர் பெயர்வர் என்றும்
உன்னைநீ அவரை வென்று தருதியென் றுணர்ந்து மன்றால்
என்னையே நோக்கி யானிந் நெடும்பகை தேடிக் கொண்டேன்."

"வென்றிலே னென்ற போது வேதமுள் ளளவும் யானும்
நின்றுளேன் அன்றே மற்றவ் விராமன்பேர் நிற்கு மாகில்
பொன்றுதல் ஒருகா லத்தும் தவிருமோ பொதுமைத் தன்றே
இன்றுளார் நாளை மாள்வார் புகழ்க்குமோர் இறுதி யுண்டோ"

தான் இராமன் மேலெறிந்த சூலம், இராமனது உங்காரத்தால் உக்கு வீழ்ந்த போது, இராவணன் கூறியது :—

"சிவனோ அல்லன் நான்முகன் அல்லன் திருமா லாம்
அவனோ அல்லன் மெய்வரம் எல்லாம் அடுகின் றான்
தவனோ வென்னிற் செய்து முடிக்கும் தானல் லன்
இவனோ தானவ் வேத முதற்கா ரணனென் றான்."

"யாரே னுந்தா னாகுக யானென் தனியாண்மைப்
பேரே நிற்க வென்று முடிப்பேன் பெயர்கில்லேன்
நேரே செல்வேன் கொல்லு மெனிற்றான் நிமிர்வெற்றி"
வேரே நிற்கும் ... ... ... ...

இரணியன் வதைப்படலம் — இரணியன், பிரஹலாதனை நோக்கி ;

"கேளிது நீயுங் காணக் கிளர்ந்தகோ ளரியின் கேழில்
தோளொடு தாளும் நீக்கி நின்னையும் துணித்துப் பின்என்
வாளினைத் தொழுவ தல்லால் வணங்குதல் மகளி ரூடல்
நாளினும் உளதோ என்றான் அண்டங்கள் நடுங்க நக்கான்."

முன் பக்கத்திற் காட்டப் பெற்றுள்ள ஐந்து கவிகளுள் முன்னைய இரண்டும், இராவணன் இந்திரஜித்தனைச் சினந்து கூறிய செய்திகளென்பதை முன்னமே குறித்துள்ளோம்; அவை, கம்பராமாயணம் — உயுத்த காண்டம் — இந்திரஜித்து வதைப் படலம் — எட்டாவது பத்தாவது செய்யுட்களாகும். அவற்றின் பொருள்கள் :—

"இதற்கு முன் இறந்துபோயொழிந்த வீரர்களெல்லோரும் இந்த என் பகையை முடித்திடுவர்" என்றாவது, "இன்னும் போர் ஆற்றுதற்கென்று குழுமியிருக்கும் எஞ்சிய வீரர்களெல்லோரும் வெற்றி பெற்றுத் திரும்புவார்" என்றாவது, "நீ அம்மானுடனை வென்று வெற்றி யெய்வையமாக்குவை யென்றாவது, நம்பிக் கொண்டு இந்தப்பகையைத் தேடிக்கொண்டவனல்லேன்," என்னை — என் வீரத்தை நம்பியே இந்த நெடும் பகையைத்தேடிக் கொண்டவனானேன்."

"மற்றும், இதுவொன்று நினைந்து கொள்; நான் போரில் வென்றிலேன் என்றபோது, "போர்க்களத்திற் புறங்கொடுத் தோடாமலும் எதிரியைச் சரண் புகாமலும் முடிவுவரை நிலைத்து நின்று பெரும் போராற்றி மார்பகத்திற் பாணமேற்று, இந்த நிலையாத பிராகிருத சரீரத்தை யிங்கேயே கிடத்திட்டுப் புகழால் அழியாத திவ்ய சரீரம் பெற்று வீரஸ்வர்க்கத்தில் இராவணன் வாழ்கிறான்" என்று என் பெயர் வேதமுள்ளளவும் நிற்கு மல்லவா? அல்லது நான் வெற்றிகொண்டு, இராமன் தனது பெயர் உலகில் நிலைத்து நிற்கும்படியாக வீர ஸ்வர்க்கம் புகுந்தானாயினும், எனக்கு மரணம் என்பது தவிர்ந்து போய் விடுமா? "பிறந்தார் இறப்பார்" என்பது பொது இயற்கை யல்லவா! "இன்றைக்கு

இருப்பவர் நாளை மாண்டொழிவார்" என்பது மெய்யன்றே ! புகழுக்கு இறுதியுண்டோ ?"

என்று இராவணனாகிய சுத்த வீரனது உயர் கொள்கையைக் கூறியிருக்கும் படியைக் காண்க.

அடுத்த இரண்டு செய்யுட்களும், கம்பராமாயணம் - உயுத்த காண்டம் — இராவணன் வதைப்படலத்தில் — 125, 126-ம் செய்யுட்களாக அமைந்து கிடக்கின்றன. அவை, "தனது சூலம் இராமனால் அழிந்தொழிந்த போது, இராவணன் கூறியன" என்று முன்னமே தெரிவித்துள்ளோம். அவற்றின் பொருள்கள்:—

"இதோ என் எதிரில் நிற்கும் இந்த வீரன், எனக்கு இச்சூலாயுதத்தை யளித்திட்ட அச்சிவபிரான் தானோ? அல்லன் ; மற்றை நான்முகனாக இருக்கலாமோ ? அப்படியுமல்லன் ; அன்றெனில் உருவம் பலம் தறுகணாண்மை நிறம் இவற்றை நோக்குங்கால், அந்தத் திருநெடுமாலாகிய விஷ்ணுவாக இருக்கலாமோ ! வெனில், அப்படியுமல்லன் ; மானுடப்படி வருகலான். அன்றெனில், மானுடனாகப் பிறந்தும் தவத்தில் மேம்பட்ட வீரனாக இருக்கலாமோ வென்னில், இவனது உருவத்தின் சிறுமையையும் மேனியின் ஸௌகுமாரத்தையும் நோக்கும்போது, அப்படியுமல்லன் என்பது வெளியாகின்றது ; ஆகையால் எல்லாமாய் அல்லவுமாய் எவ்வுலகத்திலும் எக்காலத்திலும் எல்லா வுருவிலும் தோன்றுகின்றவனென்று — நான் கூறும் வேதத்திற் சொல்லப் பெற்றிருக்கும் முதற் காரணனாகத்தானிருத்தல் வேண்டும் என்று எண்ணுகின்றேன்."

"யாராயிருந்தாலும் இருக்கட்டும்; யான் இதுவரையில் யாரையும் வணங்காதவன்" என்னும் புகழ் பெற்ற எனது தனியாண்மைப் பெயரே நிலைத்திருக்கும்

படியாகப் போர் செய்து வென்று முடிப்பேன்; போரினின்றும் பெயர்ந்திருக்க ஒருப்படேன்; அவ்விராமன் முன்னிலையில் நேரே சென்று நிற்பேன்; போர் புரிவேன்; என்னையவன் கொல்வானாயின், "எதிரியை வணங்காது போராற்றி மார்பகத்துப்பாணமேற்று வீர ஸ்வர்க்கம் புகுந்தான்" என்னும் நிமிர்ந்த வெற்றியின் வேர் நிற்குமன்றோ! " * * " என்றான் என்பதாம்.

இது, கம்பநாட்டாழ்வார் எடுத்துக் காட்டும் சுத்த வீர லக்ஷணங்களில் ஒன்றாம் என்க. இதற்கடுத்துக் குறித்திருக்கும் செய்யுளும் இதே பொருளுடையது தான்; ஆயினும், அது, கம்பருடைய — மற்றொரு வீர ரத்தினமாகிய — இரணியனுடைய கூற்றாக அமைந்து கிடக்கின்ற தென்பதைக் குறித்துள்ளோம். அது கம்பராமாயணம் — உயுத்தகாண்டம் — இரணியன் வதைப் படலம் — 146-ம் செய்யுளாகும்; இதன் பொருள் வெளிப்படை. பிரஹலாதனைப்பார்த்து, இரணியன்,

"இதனைக் கேட்பாயாக; நீ காணும் போதே, என் மேல் கிளர்ந்து நிற்கும், இந்த நரசிங்கத்தினுடைய வளம் மிகுந்த தோள்களுடன் தாள்களையும் நீக்கி, உன்னையும் கொன்று, பின்னர் இச்செயல்களை யாற்றுதற் குதவியாக இருந்த எனது வாளினை வைத்துக் கும்பிடுவேனல்லாது, மற்வறைக் கும்பிடுவேனென்றெண்ணாதே; வணங்குத லென்பது என்னிடமேது! எனது அரண்மனைப் பெண்களின் ஊடற்காலத்திற்கூட வணங்குதலென்பது என் வழக்கமல்லவே" என்றான்.

என்று, சுத்த வீரனது ஆண்மையை — மறத்தைக்கூறியிருத்தலைக் காண்க. இக்கூற்று — இக்கொள்கை — கம்பரது தனிக்கொள்கையாமன்றோ!

எனவே, இதுகாறும் கூறிப்போந்த குறிப்புக்களாலும் காட்டிவந்த கவிகளாலும், கம்பராமாயணம் ஒரு தனிப்பெருங் காவிய ஒழுங்கைப் பெற்றிருக்கின்றதென்பது வெகு நன்றாக விளங்கி யிருக்கின்றது. இதனை யொரு மொழி பெயர்ப்புக் காவிய மென்பார் கூற்று பயனிலதாம் என்க.

கம்பராமாயணப் பாயிரத்திற் காணப்பெறும், பின்வரும் கவியாகிய,

“கழுந்தராய் * * *
* * * *
விழுந்த ஞாயிறு எழுவதன் முன்மறை வேதிய நடனாய்ந்
தெழுந்த ஞாயிறு விழுவதன் முன்கவி பாடிய தெழுநூறே”

என்னுஞ் செய்யுள், இருபெரும் புலவர்களுடைய காவியங்களையும் ஒருங்கு வைத்தோதாத — கம்ப ராமாயண ஆராய்ச்சி யில்லாத ஒருவர் வாக்கென்பது வெளியாகின்றது.

கம்ப நாட்டாழ்வார், வான்மீகியின் கதைப் போக்கை யெடுத்துக்கொண்டு, ஒரு உத்தம நாயகனது சரிதத்தைச் சொல்லு முகத்தால், உலகினர்க்கு, உயரறங்களைக் கூறுவதற் கென்றமைத்துக் கொண்ட, ஒரு தனிப் பெருந் தமிழ்க் காவியத்தையே புனைந்துள்ளா ரென்பது போதருகின்றது.

“ஒரு உத்தம நாயகனுடைய உத்தம சரித்திரத்தைச் சொல்லி, அவ்வுத்தமனது வாழ்க்கையில் நேரும் சுக — துக்கச் செய்திகளைத் தக்க பிரமாணங்களுடனும் நீதிகளுடனும் எடுத்து உதஹரித்து சத்தியம் தருமம் தியாகம் க்ஷமை இவற்றைப் பிரதான குணங்களாக நிலைக்கக் காட்டி, நவரஸங்களையும் பொருத்திச் சொல்லுவதற்கு ஆற்றலும் அறிவும் அவாவும் தவமும் அமைந்துள்ள கம்பநாட்டாழ்வாருக்கு, வால்மீக ராமாயணத்திற் கேட்டும் கண்டும் படித்துமுள்ள ஸ்ரீராமபிரானல்லாமல் — அவரது சரித்திரமல்லாமல், — வேறு நாயகனும் — வேறு சரிதமும்

தமது அபிப்பிராயங்களை விரிப்பதற்குக் கிடைக்கப் பெறுமை யினால், கம்பநாட்டாழ்வார், ஸ்ரீ வான்மீகி பகவானுடைய கதைப் போக்கினைத் தமது இராமாவதார காவியத்துக்கு மேல்வரிச் சட்ட மாக்கிக் கொண்டாரென்பது வெளியாகின்றது. ஏன்? ஆரியத் திலும், பல புலவர்க்கு ராம சரிதத்தைச் சொல்லுதற்கு ஸ்ரீ வான் மீகமே மேற்கோள் நூலாக இருந்திருக்கக் காண்கிறோம். எனி னும், ஒவ்வொரு புலவரும் தத்தமது லக்ஷ்யங்களைத் தத்தம் காவ் யங்களில் நிறுத்துதல் வேண்டித் தமது கதா நாயகனிடத்திலும் கதையிலும் சில பல மாற்றங்களைச் செய்து கொண்ட இயற்கை போலவே கம்பநாட்டாழ்வாரும், தமது காவியலக்ஷ்யங்களைத் தமது கவிகளில் நிறுத்துவதற்காகக் கதைப் போக்கிலும் கதா நாயக — நாயிகைகளிடத்தும் சில பல மாற்றங்களைச் செய்திருக் கிறாரென்று ஊகிக்கக்கிட மிருக்கின்றது. அந்த மாற்றங் களிலும், வேறு புராணங்களையோ காவியங்களையோ உத்தம நாடக நூல்களையோ ஆழ்வார் பிரபந்தங்களையோ மேற்கோள் நிலையிற் கொண்டுதான் தமது காவியத்தைப் பூர்த்தி செய்திருக் கின்றாரென்பது ஆராய்ச்சியாற் கிடைக்கின்றது.

கம்பர் தமது கதா நாயகனாகிய ஸ்ரீ ராமபிரானை "நடையின் நின்று உயர் நாயகன் என்கிறார். கம்பராமாயணம் — பாலகாண் டம் — பாயிரப்படலம். இதன் பொருள் வெளிப்படையாம்.

கம்பநாட்டாழ்வாரது ஆற்றலுடைமையும் அறிவுடைமையும் பிறவும், அவரை, இப்பெருங் காப்பியத்தைப் புகழ் தோன்றச் செய்வதற்குத் தூண்டிவிட்டன வென்றே துணிந்து கூறலாம்.

"கல்வியிற் பெரியவன் கம்பன்" என்றும், "கம்ப நாடன் கவி தையிற் போல் கற்றோர்க்கு இதயம் களியாதே" என்றும், "இது வென்ன கம்ப ராமாயணமோ!" என்றும், "கம்ப சூத்திரம்" "கம்ப சித்திரம்" என்றும் புகழ்ந்து உலகம் கூறும் உயரிய வழக்கு உண்மையாலும், இவ்வழக்கு மற்றைக் காவியங்கள் பொருட்டு

ஏழாமையாலும், கம்பரது காவியம், மற்றைக் காவியங்களினும் மிகச் சிறந்த தென்பதையும், பண்டிதரும் பாமரரும் ஒருங்கே புகழும் உத்தம காவியம் கம்பராமாயணந்தான் என்பதையும் நன்கு உணர்கின்றோமல்லவா!

கம்பராமாயணத்தில், காண்டங்களினுடைய — படலங்களினுடைய தனித்தனிச் சுவைகளையும் தொடர்புச் சுவைகளையும் நன்கு காண்பது மாத்திர மன்றி, எல்லாக் காண்டங்களிலும் எல்லாப் படலங்களிலும் காவியத்தின் சுவை தொடர்ந்திருத்தலையும் காண்கின்றோம். இத்தொடர்பைக் கம்ப ராமாயணத்தில், "சொல்லாலும் பொருளாலும் உவமையாலும் உருவகத்தாலும், படலத் தொடு படலத்தையும் காண்டத்தொடு காண்டத்தையும் காண்டத் தொடு படலத்தையும் தொடுத்திருக்கும் தொடர் சங்கிலி" யாகக் காணலாம். சில உதாரணங்களைக் கம்பர் கவிகள் மூலமாகக் காட்டுவோமாக.

1. சொல்லின் தொடர்பு.

"தருவனத்துள் யானியற்றுந் தவவேள்விக்
இடையூறாத் தவஞ்செய் வோர்கள்
* * * *
* * * *
செருமுகத்துக் காத்தியென நின்சிறுவர்
நால்வரினுங் கரிய செம்மல்
* * * *
* * * *"

பாலகாண்டம் — கையடைப்படலம் — **10**-ம் செய்யுள்.

கரிய செம்மல் என்னும் சொற்றொடரை மேல், இதே காண்டம் — தாடகைப் போர்ப்படலத்தின் — 72-ம் செய்யுளாகிய,

"சொல்லொக்குங் கடிய வேகச் சுடுசரம் கரிய செம்மல்
அல்லொக்கும் நிறத்தி னாண்மேல் விடுதலும் வயிரக் குன்றக்
* * * *
* * * *

இந்தக்கவியிலுள்ள கரிய செம்மலோடு பொருத்திப் பொருள் காண்க.

மற்றும்,

"குருவின் வாசகங் கொண்டு கொற்றவன்
திருவின் கேள்வனைக் கொணர்மின் சென்றென
* * * *
* * * *"

பால — கையடைப்படலம் - **16**-ம் செய்யுள்.

இச் செய்யுளிற் காணும் திருவின் கேள்வன் என்னும் சொற்றொடரை மேல், இதே காண்டம் — வேள்விப்படலத்தின் — 52-ம் செய்யுளாகிய,

"திருமகள் நாயகன் தெய்வ வாளிதான்
வெருவரு தாடகை பயந்த வீரர்கள்
* * * *
* * * *"

இந்தக் கவியிலுள்ள திருமகள் நாயகன் என்பதனோடு பொருத்திப் பொருள் காண்க.

இன்னும்.

"அந்தமில் அழகனை அணுகி லாமையால்
பைந்தொடி ஓவியப் பாவை போன்றனள்
* * * *
* * * *"

பால — மிதிலைக் காட்சி 39-ம் செய்யுள்.

இச் செய்யுளிற் காணும் பைந்தொடி என்னும் சொற்றொடரை மேல், இதே படலத்தின் 147-ம் செய்யுளாகிய,

"ஏகும் நல்வழி அல்வழி யென்மனம்
ஆகு மோஇதற் காகிய காரணம்
பாகு போன்மொழிப் பைந்தொடி கன்னியே
ஆகும் வேறிதற் கையுற வில்லையே"

இந்தக்கவியிலுள்ள பைந்தொடி என்பதனோடு பொருத்திப் பொருள் காண்க.

இனியு மொன்று,

"இந்த நெடுஞ்சொல் அவ்வேழை கூறும் முன்னே
வெந்த கொடும்புணில் வேல் நுழைந்த தொப்ப
* * * *
* * * *"

கம்ப ராமாயணம் — அயோத்தியா காண்டம் — கைகேசி சூழ்வினைப்படலம் 20-ம் செய்யுள்.

இச்செய்யுளிற் காணப் பெறும் வேல் என்னும் சொல்லினை, மேல், உயுத்த காண்டம் — மீட்சிப்படலத்தின் 118-ம் செய்யுளாகிய,

"அன்று கேகயன் மகள்கொண்ட வரமெனு மயில்வேல்
இன்று காறுமென் னிதயத்தி னிடைநின்ற தென்னைக்
கொன்று நீங்கல தின்று நீங்கியதுன் குலப்பூண்
மன்ற லாகமாங் காந்தமா மணியின்று வாங்க"

இந்தக் கவியிலுள்ள வேல் என்பதனோடு பொருத்திப் பொருள் காண்க. இவ்விரண்டு செய்யுட்களுக்கு மிடையில் ஏறக்குறைய 8000 செய்யுள்கள் உள்ளன வென்பதை நேயர்களின் நினைவுக்குக் கொண்டு வருகின்றோம்.

இங்ஙனம் காண்டந்தோறும் படலந்தோறும் தொடர்சங்கிலிகள் காணலாம்; விரிப்பிற் பெருகும்.

மேல், பொருளின் தொடர்புக்கு ஒரு உதாரணங் காட்டி வியாஸத்தைத் தொடர்வோமாக.

2. பொருளின் தொடர்பு.

" அன்னமென் னடையவட் கமைந்த காமத்தீ
தன்னையுஞ் சுடுமெனத் தரிக்கி லானென
நன்னெடுங் கரங்களை நடுக்கி யோடிப்போய்
முன்னைவெங் கதிரவன் கடலில் மூழ்கினான் "

பாலகாண்டம் – மிதிலைக்காட்சி – 61-ம் செய்யுள்.

இச் செய்யுளிற் காணப் பெறும் பொருளை நன்கு கவனித்து, மேல், இதே படலத்தின் – 150-ம் செய்யுளாகிய,

" ததையுமலர்த் தாரண்ணல் இவ்வண்ணம்
மயலுழந்து தளரும் எல்லை
சிதையுமனத் திடருடைய செங்கமல
முகமலரச் செய்ய வெய்யோன்
புதையிருளின் எழுகின்ற புகர்முகயா
னையிரினவைப் போர்வை போர்த்த
உதயகிரி யெனுங் கடவுள் நுதல்கிழித்த
விழியேபோல் உதயம் செய்தான்."

இந்தக் கவியின் பின்னிரண்டடிகளின் பொருளுடன் பொருத்திக் காண்க. முன் கவி சூரியாஸ்தமனத்தையும், பின் கவி சூரியோதயத்தையும் குறித்து நிற்கின்றன. இரண்டும் தற்குறிப்பேற்றமாகும். இச்செய்யுள்களையே உவமானத் தொடர்புக்கும் உதாரணமாகக் கொள்ளலாம்.

இங்ஙனம் இத்தொடர்புகள் கம்பராமாயணத்தில், தொட்ட தொட்ட இடமெல்லாம் – ஆயிரக்கணக்கில் காணப்படுகின்றமையால், நேயர்களின் ஆராய்ச்சிக்கே விட்டுச் செல்கின்றேம் ; விரிப்பிற் பெருகுமாகலான், இவ்வாராய்ச்சியின்கண் வருமிடங்களிற் கண்டு தெளியலாகும்.

> "கம்பராமாயணமானது, ஹோமர் எழுதிய இலியாதையும், விர்க்கிலீயன் எழுதிய ஏனயிதையும், மில்டனுடைய சுவர்க்க நஷ்டம் என்னும் காவியத்தையும், வியாஸ பாரதத்தையும், கம்பருக்கே முதனூலாக இருந்த வான்மீகி ராமாயணத்தையுங்கூடப் பெருங் காப்பிய லட்சணத்தின் அம்சங்களுள் அநேகமாய் எல்லாவற்றினும் வென்று விட்டதென்றே சொல்லுவோம்"
>
> —பாலபாரதி—வ. வெ. ஸு. ஐயரவர்கள் :

ஒரு மாபெருங் காவிய அமைப்பானது, ஒரு தேசத்தின்— ஒரு கண்டத்தின்—ஏன்? – ஒரு உலகத்தின் அமைப்பையே ஒத்திருத்தல் வேண்டும். உலகத்தோற்றமாவது—"ஸ்தாவர ஜங்கமங்களையும் பெரியவர் சிறியவர்களையும் உயர்ந்தார் தாழ்ந்தார்களையும் கற்றூர் மற்றூர்களையும் அரசர் பிரஜைகளையும் அதிகாரி அடிமைகளையும் ஆண்கள் பெண்களையும் கணவர் மனைவிகளையும் தந்தை தனயர்களையும் தாயர் மக்களையும் ஆசிரியர் மாணவர்களையும் கிழவர் குமரர்களையும் சிறுவர் சிறுமிகளையும் கோட்டை கொத்தளங்களையும் காடு நாடுகளையும் மேடு பள்ளங்களையும் மலை யாறுகளையும் விலங்கு பறவைகளையும் ஊர்வன நீர்வாழ்வனவற்றையும் பறப்ப நடப்பவற்றையும் மரஞ்செடிகளையும் கொடி புதர்களையும் மலர் பழங்களையும் இலை குழைகளையும் நாள்கள் கோள்களையும் விண் மண்களையும் இன்னோரன்ன பிறவற்றையும் கொண்டு இலங்குதலாம்." மாபெருங் காப்பியங்களும் இவ்வெல்லாப் பொருள்களையுங்காட்டி அவற்றின் இயற்கை செயற்கைகளையும் நடையுடைகளையும் உறவு பகைகளையும் குணதோஷங்களையும் நன்மை தீமை

களையும் மற்றும் தொடர்புடை யெல்லாவற்றையும் தெரிந்து விளக்கவேண்டியவைகளாக இருத்தல் வேண்டும். ஒரு பெருங் காப்பியத்தை யுணர்ந்திடல் உலகத்தை யுணர்ந்திடலாதல் வேண்டும். இதுவே மாபெருங்காப்பியத்தின் மாட்சியாகும்.

உலகமாகிய அவயவிக்கும் உலகப் பொருள்களாகிய அவயவங்களுக்கும் தொடர்புகள் பின்னிக்கிடத்தல் போல், பெருங் காவிய மாகிய அவயவிக்கும் படலங்களும் காண்டங்களும் வியக்திகளும் மற்றைப்பொருள்களும் இயற்கை களுமாகிய அவயவங்கட்கும் தொடர்பு பொருந்தியிருத்தல் வேண்டும். உலகத்துக்கும் அதன் பாகங்கட்கும் தொடர்பும், பாகங்கள் தமக்குள் தொடர்பும் பெற்றிருக்கும் போதுதான் உலகம் ஒழுங்கில் நடைபெறும் என்பது போலப், பெருங் காப்பியங்களும், தனித்தனிப் பாகங்களில் இன்சுவை காட்டி மிளிர்வதுடன், பாகங்கட்குப் பாகங்கள் தொடர்பு பெற்று — அங்ஙனம் வியஷ்டித் தொடர்பு கொண்டிருத்தல் போலவே, காவியத்தின் சமஷ்டித் தொடர்பும் பெற்றிருத்தல் வேண்டும். அப்போது தான் — அந்தக்காவியந்தான் — ஒழுங்கு பெற்றிலங்குவ தொன்றாகும். தனிப்பாகங்களின் சுவைகள் மட்டும் காவியரசனையை யுண்டாக்கி விடமாட்டா; காவியரசனை யென்பது ஸமஷ்டியிற் காணப்பெறும் சுவையேதான். எத்தனைக் கெத்தனை இந்தரசனை யொழுங்கு பெற்றமைந்திருக்கிறதோ அத்துணைக்கத்துணை ரஸிகர்கள் இருதய முருகிப் பிரம்மானந்தத்துக்கு ஒப்பான ஆனந்தத்தையனுபவிப்பார்கள். அப்போதுதான் காவியானுபவமானது, ஆன்மாநுபவச்சாயை யென்பதை யறிவுறுத்தும்; அச்சுவை பெறாத காவியங்கள் ஆன்மாநுபவத்தைத் தரமாட்டா. கம்பராமாயணம் ஆன்மாநுபவத்தைத் தருதலால், அதனுள், வியஷ்டி சமஷ்டித் தொடர்புகள் ஒழுங்கில் அமைந்துள்ளன என்பது உறுதி.

நமது கம்பராமாயண ஆராய்ச்சியின் முதற்பகுதியாகிய கம்பரது சரித்திர ஆராய்ச்சியைக் கம்ப நாடர் இரண்டாம்

பொய்கையின் பன்னிரண்டாம் மலருடன் முடித்தபின்னர், நாம், கம்பராமாயண ஆராய்ச்சியின் இரண்டாவது பகுதியாகிய இந்தப் பொது ஆராய்ச்சியைத் தொடங்கியிருக்கிறோம். இதன் பின்னர்ச் சிறப்பாராய்ச்சி விசேஷஆராய்ச்சி தனிச்செய்யுளாராய்ச்சி ஒழிபாராய்ச்சி என்னும் வகையில், இந்த ஆராய்ச்சிப் பகுதியைக் கடைபோகச் செலுத்தக் கடமைப் பட்டிருக்கிறோம். அன்பர்களினுடைய ஆதரவும் இறைவனது இன்னருளும் துணை நின்று உதவுமென்று துணிந்திருக்கிறோம்.

பொது ஆராய்ச்சியென்று வகுத்துக் கொண்டது, காவியப் பொதுமைக்கும் கம்பராமாயணத்துக்கும் தொடர்பு காட்டி யாராய்தலென்பதும், மற்றும், வான்மீகருக்கும் கம்பருக்கும் பொது வகையில் தொடர்புகாட்டி யாராய்தலென்பதுமாகும். எனவே, காவியப் பொதுமைக்கும் கம்ப ராமாயணத்துக்கும் தொடர்பு காட்டி முன் பக்கங்களிற் கூறியவற்றுடன் இன்னும் சில கூறிப், பின், வான்மீகர்க்கும் கம்பர்க்கும் பொதுவகைத் தொடர்பை யெடுத்துக்கொள்வோம்.

முதலில் ஸ்ரீ வான்மீகி முனிவர் செய்தருளிய ஸ்ரீராம சரித்திரத்தின் பெயராகிய ராமாயணம் என்பது,

"முதனூல் கருத்தன் அளவு மிகுதி,
பொருள் செய்வித்தோன் தன்மை முதல் நிமித்தினும்,
இடுகுறியானும் நூற்கெய்தும் பெயரே"

என்னும் சூத்திரத்தால் கம்பர் செய்துள்ள இத்தமிழ் நூலுக்கும் பெயராகக் "கம்பராமாயணம்" என்பதே அழைக்கப் பெற்றிலங்குகிறது.

"ராமாயணம்" என்பது, ராம + அயநம் என்னும் இரண்டு பதங்கள் சேர்ந்தது; இது நூல் பெயராதலால், வடநூலிலக்கண விதிப்படி, நிலை மொழிக்கண் "ரகாரம்" வந்தமையால், வரு

மொழி "நகாரம்" "ணகார"மாயிற்று. "சூர்ப்பணகை" "சரவணம்" என்பன போலவாம் என்க.

"ராம" என்பதற்குத் "தன் குணங்களாலும் உரைகளாலும் செயல்களாலும் யாவரையும் சந்தோஷிப்பிக்கச் செய்பவன்" என்பது பொருளாம். "அயநம்"—என்பதற்கு "இடம்" எனவும் "அடையக்கருவியாயுள்ளது" எனவும் பொருள் கூறப்படும். எனவே ராமாயணம் என்பதற்கு "இராமனையடைதற்கு அல்லது அறிதற்குக் கருவியான நூல்" என்பது திரண்ட பொருளாகக் கிடைக்கின்றது.

இதிஹாஸம் புராணம் காவ்யம் என்னும் நூல் வகைகளில் இராமாயணம் இதிஹாஸமாகும். இதிஹாஸமாவது — உபதேச பரம்பரையில் வந்த தொரு உத்தம நாயகனது பழைய சரித்திரத்தை ஆதாரமாகக்கொண்டு, பல உபகதைகளைத் தழுவிப் பல தர்மங்களும் புலப்படும்படி விரித்துக் கூறும் நூலாகும். இதிஹாஸம் புராணத்தினுஞ் சிறந்த தென்பர்.

கம்பராமாயணம் என்னும் இந்தப் "பொருள்தொடர் நிலைச் செய்யுள்" நூலானது, காப்பியம் பெருங்காப்பியம் என்னும் இரண்டுவகைகளுள் பெருங்காப்பியத்தின் பாற்படும். பெருங் காப்பியம் — மஹா காவ்யம் என்பதாம். பெருங்காப்பியத்தின் இலக்கணத்தைத் தண்டியாசிரியர் தமது அலங்கார நூலின்கண் பின்வருமாறு சூத்திரித்திருக்கிறார்; அது :—

"பெருங்காப் பியநிலை பேசுங் காலை
வாழ்த்து வணக்கம் வருபொரு ளிவற்றினொன்
றேற்புடைத் தாகி முன்வர வியன்று
நாற்பொருள் பயக்கும் நடைநெறித் தாகித்
தன்னிக ரில்லாத் தலைவனை யுடைத்தாய்
மலைகடல் நாடு வளநகர் பருவம்
இருசுடர்த் தோற்றம் இனையன புனைந்து

நன்மணம் புணர்தல் பொன்முடி கவித்தல்
பூம்பொழில் நுகர்தல் புனல்விளை யாடல்
தேம்பிழி மதுக்களி சிறுவரைப் பெறுதல்
புலவியிற் புலத்தல் கலவியிற் களித்தலென்
றின்னன புனைந்த நன்னடைத் தாகி
மந்திரந் தூது செலவிகல் வென்றி
சந்தியில் தொடர்ந்து சருக்க மிலம்பகம்
பரிச்சேத மென்னும் பான்மையில் விளங்கி
நெருங்கிய சுவையும் பாவமும் விரும்பக்
கற்றோர் புனையும் பெற்றிய தென்ப"

என்று வகுத்திருக்கிறார். இதன் பொருள் வெளிப்படையே. அன்றியும், ஆசிரியர் தொல்காப்பியனார், செய்யுளியலில், "பாக்கள் நான்" கென்றும், அவற்றை "அறம் பொருள் இன்ப வகையாற் கூறுக" என்றும் கூறிப் பின்பு, அம்மை முதலிய எட்டுத் "தொடர் நிலைச் செய்யு"ட்கு இலக்கணம் வகுத்துக் கூறுமிடத்து,

"இழுமென் மொழியால் விழுமியது நுவலினும்
பரந்த மொழியான் அடிநிமிர்ந் தொழுகினும்
தோலென மொழிப தொன்மொழிப் புலவர்"

என்னும் சூத்திரத்தால், "அறம் பொருள் இன்பம் வீடு என்னும் விழுமிய பொருள் பயப்பப் பழையதோர் கதைமேல் காவியம் கூறின் அது தோல்" என்று கூறினமையின், கம்பராமாயண மென்னும் இப்பெருங் காப்பியம் தோல் என்னும் வகுப்பைச் சேர்ந்ததாமென்ப.

தோல்—தோன்மை (பழமை) யென்னும் பண்புச் சொல் லின் அடியாகிய தோல் என்பது முதல் நீண்டு பெயர்த் தன்மை பெற்றுத் தோல் என்றாயிற்று; எனவே, தோல் என்னும் பெயரால், இது, தொன்மைக்கதையைச் சொல்லும் நூல் என்பது போதருகின்றது; இதிஹாஸம் என்பதற்கும் இதே பொருளாக

வடமொழிப்புலவர் வகுத்திருக்கிறார்கள். எப்படி? "இதி+ஹ+ஆஸ=இப்படி முன்னம் நடந்ததாம்" எனவே, இராமசரிதம் ஒரு பழைய உண்மைச்சரிதம் என்னும் முறையில் முன்னோர் வகுத்திருக்கின்றார்கள் என்பது உண்மையிலும் உண்மை.

வான்மீகி ராமாயணம்.

"ரகுவர சரிதம் முநிப்ரணீதம்
தச சிரஸஸ்ச வதம் நிசாமயத்வம்"

என்னும் வான்மீகத்தின் இரண்டாவது (பாலகாண்டம்) ஸர்க்க சுலோகத்தினால், ரகுநாதன் சரித்திரம் இராவண வதம் என்னும் பெயராலும் அழைக்கப்படுகிறது என்பது வெளியாகின்றது. மற்றோரிடத்தில், வான்மீகி பகவான் "ஸீதாயாஸ் சரிதம் மஹத்" என்றும் கூறியிருக்கிறார். அதாவது "பெருமை பொருந்திய ஸீதையின் சரிதம்" என்று பொருளாம்.

எனவே, ரகுநாதனாகிய ஸ்ரீராமபிரானுடைய சரித்திரமானது, ஸ்ரீவான்மீகி பகவானாலேயே, ராமாயணம் என்றும் ஸீதை சரிதம் என்றும், ராவண வதம் என்றும் கூறப்பட்டிருப்பதாகத் தெரிந்து கொள்ளுகிறோம். அதன் காரணத்தைப் பின் வருமாறு வகுத்துக்கொண்டு உணர்வோமாக.

ராகவனுடைய சரித்திரத்தின் விஷயமானது வதந்தானல்லவா? ஆகையால் இதற்கு ராவண வதமென்னும் பெயர் பொருந்துவதாயிற்று; ராவண வதத்துக்கு வித்தாகவும் வேராகவுமுள்ளவை ஸீதா பஹரணமும் ஸீதையின் சிறையுமாகும்; எனவே இவ்விரண்டிற்கும் காரணமாகவுள்ளது ஸீதையின் கற்பின் சரிதந்தானாகலான், சீதையின் பாதிவிருத்ய சரிதம் பிரதானமாயிற்று; ஆரண்யத்திலிருந்த ஸீதையை இராவணன் அபஹரிப்பதற்குக் காரணங்களாக நிற்பன ராமபிரானுடைய வனப்ரவேசமும் அதற்கு முக்கியமாயிருந்த ராமபிரானுடைய த்யாகமுந் தானாகலான்,

அவ்விரண்டையும் குறிப்பதாகிய ராம சரிதமும் வேண்டியதாகை யால் ராமாயண மென்னும் பெயரும் பொருந்துவதாயிற்று.

ஆகையால் ராமனுடைய த்யாக சரித்திரத்தைச் சொல்லு வதாகிய அயோத்தியா காண்டம் பிரவேச மாகவும், பிறகு ஸீதா பஹரணக் கதையையும் ராமனது வனப்பிரவேசத்தையும் குறிப் பதாகிய ஆரணிய காண்டம் மத்யபாக மாகவும், ஸீதையின் சிறை வாசத்தையும் கற்பின் மகத்துவத்தினையும் எடுத்துக்காட்டு வதாகிய சுந்தர காண்டம் உத்தமமாகவும், ராவணன் போரையும் வதத்தையும் தெரிப்பதாகிய யுத்தகாண்டம் பிரதானபாக மாகவும் கொள்ளப் படுகின்றன. ராமபிரானுடைய தியாகமும் வீரமும் பரோபகாரமும் துணைக்கோடலும், ராவண வதத்துக்கு அவசியங் களாகையால், அவற்றைப் போதிக்கும் கிஷ்கிந்தா காண்டம் உபக் யானமாகவும் அமைந்து ராம சரிதம் ஐந்து காண்ட விஷயமாகவே, ஸ்ரீ வான்மீகி பகவானுக்கு நாரத மஹரிஷியினால் போதிக்கப் பெற்றதாக, வான்மீகத்தின் முதல் ஸர்க்கமாகிய — நாரதீயம் — என்னும் — ஸங்க்ஷேப ராமாயணம் கூறுகின்றது.

இந்த ஐந்து காண்டக் கதைக்கும் தாயகமாக — ஸ்ரீ ராமனு டைய பிறப்பும் ஸீதையினுடைய பிணைப்பும் கூறவேண்டியது அவசியமாகலால், ஸ்ரீ வான்மீகி பகவான் பாலகாண்டத்தை முக வுரையாகவும் அவதாரிகையாகவும் மங்கலமாகவும் குறித்துக் கொண்டு ஆரம்பித்திருக்கிறார் என்பது போதருகின்றது. எனவே, ராமாயணம் ஆறு காண்டங்களால் அமைக்கப்படல் வேண்டிய தாயிற்று.

கதாநாயகனாகிய ஸ்ரீ ராமபிரானுடைய தியாகமும் க்ஷமையும் வீரமும் தீரமும் ஜயமும் உத்தமோத்தம நாயகனது லக்ஷணங்களாக அமைந்து, ஸாமானிய மனிதர்களினும் அவனை யுயர்த்திக், கம்பர் கூறுகிறபடி "நடையின் நின்று உயர் நாயகன்" ஆக்கித், தெய்வத் தன்மையை வெளிப்படுத்தியுள்ளபடியால், உத்தம கவிகள், ஸ்ரீ

ராமபிரானைத் துஷ்டநிக்ரஹ சிஷ்ட பரிபாலனங்களும் தியாக க்ஷமா தீர வீர பராக்ரமங்களும் பொருந்திய — பரப்ரம்மத்தின் காத்தற் றொழிலாகிய ஸ்திதி சக்தியைக் காட்டும் மூர்த்தியாகிய — ஸ்ரீ மஹா விஷ்ணுவின் அம்சமாகவே தெரிந்து வர்ணித்துள்ளார்கள்; இவ்வுண்மையை ஸ்காந்தம் ஒரு சுலோகத்தினால் உணர்த்திக் கொண்டிருக்கின்றது.

"வேத வேத்யே பரே பும்ஸி, ஜாதே தசரதாத் மஜே
வேத ப்ராசேதஸா தாஸீத், ஸாக்ஷாத் ராமாயணாத்மநா"

என்பதாம்.

பொருள் :—"அறிவுத் தொகுதியாகிய வேதத்தில் விதந்து கூறப்படும் பரம் பொருளே தசரத குமாரனாக அவதரித்ததுள்ளமையால், அந்த வேதமானது ராமாயணம் என்னும் பெயருடன் பிரசேதஸின் குமாரராகிய வான்மீகியிடமிருந்து தோன்றி விட்டது." என்றவாறாம்.

அந்த வேதத் தொகுதி இருக்கு எஜுர் ஸாமம் என்னும் மூன்றேயாக விதந்து ஓதப்பெற்று, அவற்றுள் ஜீவர்கட்கு அவசியம் உரிமையுடையதாகிய — கைங்கரிய தர்மத்தினைக் குறிக்கும் நடு வேதமாகிய-எஜுர், ஏழு ஸம்ஹிதைகளுடன் விளங்குவது போல, ஜீவர்களின் முன்னேற்றத்துக் குரிய தர்ம நூலாகப் போதிக்கப் பெறும் ராமாயணமும் ஏழு காண்டங்களால் இலங்க வேண்டிய பெருமையை வஹித்து, இன்று உத்தர காண்டத்துடன் ஏழு காண்டங்களாகப் பிரகாசித்துக் கொண்டிருக்கின்றது.

வேதமும் ராமாயணமும்.

அறிவுத் தொகுதியாகிய வேதங்களுள் ஜீவர்கட்குச் சிறப்புரிமையாயுள்ளது எஜுர்வேதம்; அது போல் ஜீவர்கட்கு அறிவு புகட்டும் நூல்களாகிய காவ்யங்கட்குள் சிறப்புரிமை பெற்றது ராமாயணம். அந்த எஜுர் வேதத்திற் சிறப்பாகப் போற்றப்

படுவதாகிய காயத்ரீ இருபத்து நான்கு அக்ஷரங்களைப் பெற்றிருக்கின்றது; இராமாயணமும் (வான்மீகி ராமாயணம்) அந்த இருபத்து நான்கு அக்ஷரங்களைத் தனித்தனித் தலைப்பாக உடைய இருபத்து நான்கு சுலோகங்களை ஆயிரத்துக்கு ஒன்றாகக் கொண்டு இருபத்து நான்காயிரம் சுலோகங்களால் விளங்கிக் கொண்டிருக்கின்றது. அந்த காயத்ரீ சூரிய பகவானுடைய பெருமையைச் சொல்லுகிறது; இராமாயணமும் சூரிய வம்சத்தின் பெருமையைச் சொல்லிக் கொண்டிருக்கிறது. காயத்ரீ சூரியன் பெருமையைச் சொல்லுவதுபோல் சூரிய மண்டல மத்திய வர்த்தியாகிய ஸ்ரீமந் நாராயணனுடைய ஸ்துதி மந்திரமாக இலங்குகின்றது; இராமாயணமும் சூரியவம்சத்தின் பெருமையைச் சொல்லுவது போல், அந்த சூரிய வம்சத்தில் அவதரித்த — ஸ்ரீமந்நாராயணனுடைய அம்ச பூதராகிய — ஸ்ரீ ராமபிரானுடைய புகழாகவே இலங்கிக் கொண்டிருக்கின்றது. வேதம் லௌகிக தர்மங்களையும் பாரலௌகிக மாகிய மோக்ஷ தர்மத்தையும் போதித்துக் கொண்டிருத்தல் போல், ராமாயணமும் அறம் பொருள் இன்பங்களாகிய லௌகிகதர்மங்களையும் வீடாகிய மோக்ஷ தர்மத்தையும் போதிக்கின்றது.

அன்றியும், வேதத்தில், — சத் சித் ஆனந்தமென்றோ, — ஜகத் ஜீவ பரமென்றோ, — சித் அசித் ஈச்வரனென்றோ, — பதி பசு பாசமென்றோ — ஞாதா ஞானம் ஞேயம் என்றோ — பல மதத்தினரும் பல வகையிற் குறிப்பனவாகிய தத்வ த்ரயங்க (தத்துவங்கள் மூன்றாக)ளையும் விதந்து ஓதுதல் போல், ராமாயணத்திலும், — ஆனந்த கனனாகிய — பரனாகிய — ஈச்வரனாகிய — பதியாகிய — ஞேயமாகிய — பிரமேய மாகிய — வகையில் அவரவர் சொல்லும் பரப்பிரம்மத்தின் அம்சமாகிய ராமனையும், சத்தாகிய — ஜகத்தாகிய — அசித்தாகிய — பாசமாகிய — ஞானமாகிய — பிரமாணமாகிய — வகையில் அவரவர் சொல்லும் மாயையின் அம்சமாகிய ஸீதையையும், சித்தெனவும் — ஜீவனெனவும் — சித்தெனவும் — பசுவெனவும் — ஞாதாவெனவும் — பிரமாதாவெனவும் — அவரவர்

பெயர் சொல்லியழைக்கும் ஜீவனுடைய அம்சமாகிய லக்ஷ்மணனை யும் பற்றியே விதந்து ஓதிக் கொண்டிருக்கிறது. ஆகையால் வேதமே ராமாயணமென்பது பிரமாண மாகின்றது.

கம்பர் இராமாவதாரம்.

கம்ப நாட்டாழ்வார், தாம் செய்தமைத்துதவிய இந்த ராம சரித்திர நூலுக்குத் தந்த பெயர், இராமாவதாரம் என்பதாகும். இவ்வுண்மை பின் வருஞ் செய்யுட்களால் நன்கு புலனாகும்.

" நடையின் நின்றுயர் நாயகன் தோற்றத்தின்
இடைநி கழ்ந்த இராமாவ தாரப் பேர்த்
தொடை நிரம்பிய தோமறு மாக்கதை
சடையன் வெண்ணெய் நல்லூர்வயின் தந்ததே "

என்னும் கவியாலும்,

" இத்த லத்தும் இராமாவ தாரமே
பத்தி செய்து பரிவுடன் கேட்பவர்
பத்தி மிக்கரும் புண்ணிய மூர்த்தரும்
எத்த லத்தும் அவனடி யெய்துவார் "

என்னும் கவியாலும் நன்கு விளக்க முறுகின்றது.

இவ்விரண்டும் "கம்ப ராமாயணப் பாயிரச் செய்யுட்கள். மற்றும், புறத்திரட்டு என்னும் நூலுடையாரும், பழைய செய்யுள் திரட்டு நூலாகிய தமது பழைய நூலில், கம்ப ராமாயணத்துக்குக் கம்பர் இராமாவதாரம் என்றே பெயர் வழங்கியிருக்கிறார்.

எனினும், அதே கம்பராமாயணப் பாயிரப் படலத்தில், இதற்கு இராமன் கதை என்னும் பெயரும் குறித்திருக்கக் காண்கிறோம். இக்குறிப்பைக் காட்டும் செய்யுட்கள் பின் வருவன.

" ஓசை பெற்றுயர் பாற்கட லுற்றொரு
பூசை முற்றவும் நக்குபு புக்கென
ஆசை பற்றிய றையலுற் றேன்மற்றிக்
காசில் கொற்றத்தி ராமன் கதையரோ. "

"சம்ப நாடன் னுமைசெவி சாற்றுபூங்
கொம்ப னுடன் கொழுநனி ராமப்பேர்
பம்ப நாடழைக் குங்கதை பாச் செய்த
கம்ப நாடன் கழல்தலை யிற் கொள்வாம்"

என்றும் குறித்திருத்தலை யறிகிறேம்.

மற்றும், கம்ப நாட்டாழ்வாரே, இந்த நூலுக்கு – இராமாயணத்துக்கு - இராமன் தோள்வலி என்னும் பெயரும் தந்துள்ளார் என்பதை ஊஹிக்கற்கும் இடமிருக்கின்றது. இக்குறிப்பைத் தரும் கவியானது,

"நாடிய பொருள்கை கூடும் ஞானமும் புகழும் உண்டாம்
வீடியல் வழிய தாக்கும் வேரியங் கமலை நோக்கும்
நீடிய வரக்கர் சேனை நீறுபட் டழிய வாகை
சூடிய சிலையி ராமன் தோள்வலி கூறு வோர்க்கே"

என்பதாம்; இக்கவி, கம்பர், நூற்பயன் கூறு மிடத்துக் குறித்த தொன்றாகும்.

இன்னும் சிறப்புப் பாயிரத்திற், காணப்பெறும்,

"எண்ணிய சகாத்தம் எண்ணூற் றேழின்மேற்
சடையன் வாழ்வு
நண்ணிய வெண்ணெய் நல்லூர் தன்னிலே கம்ப நாடன்
பண்ணிய இராம காதை பங்குனி அத்த நாளில்
கண்ணிய அரங்கர் முன்னே கவியரங் கேற்றி னானே"

என்னும் கவியினால், இதற்கு இராம காதை என்னும் பெயரும் வழங்கப் பெற்றதாகக் காண்கிறோம்.

பின்னும், இதற்குக் கம்ப நாடகம் என ஆக்கியோன் பெயராலே ஒரு பெயரும் அமைந்திருந்ததாக அறியப்படுகின்றது.

மிகப் பிரஸித்தராக வாழ்ந்துவந்த பெரியார்களை, அவர்கட்கு, அவர்கள் பெற்றோரால் இட்டு வழங்கப்பெற்ற பிள்ளைப் பெயராலழையாமல் — கௌரவம் குறித்து — அவர்கள் பிறந்த ஊர், செய்த செயல் முதலிய வேறு காரணங்கள் பற்றிய பெயர்களாலும் வழங்கப் பெறுதல் வழக்காறாகும். கவி சக்ரவர்த்தியாகிய கம்பரையும் அவர் விளங்கியிருந்த நாட்டின் பெயரால் "கம்ப நாடர்" "கம்ப நாடுடைய வள்ளல்" "கம்ப நாட்டாழ்வார்" என்று அழைத்திருத்தலையும் உணர்கிறோம். இப்பெயர் நாட்டால் வந்த சிறப்புப் பெயராகும்.

இதுவே காரணம் பற்றிப் போலும் — அதாவது அவர் வாழ்ந்து விளங்கியிருந்த கம்ப நாட்டகத்தைப்பற்றிய காரணத்தாற் போலும் — இவர்க்குக் கம்ப நாடகர் என்பது பெயராயமைந்து, இம் மகா கவியால் இயற்றப் பெற்றுள்ள நூலாகிய இராமாயணத்துக்குக் கம்ப நாடகம் என்னும் பெயரமைந் திருத்தலையும் படிக்கிறோம், எங்கே?

திருவாய் மொழி முப்பத்தாறாயிரப்படியில்,

"தீ முற்றத் தென்னிலங்கை யூட்டினான்" — இராவண பயத்தாலே முன்பு அரைவயிறாக ஜீவித்த அக்னி, "ஒள்ளெரி மண்டி உண்ண" என்கிற படியே, வயிறு நிறைய வுண்டு ஜீவிக்கப் பெற்ற தாயிற்று. பெருமானை யண்டை கொண்ட பலத்தாலே, நெருப்புத் தின்று தேக்கிடுகின்றது என்னக் கடவதிறே" என்ற வடக்குத் திருவீதிப் பிள்ளை ஈட்டையும்,

"என்றுகொல் குரங்கன்ன திவ்வலியுள திலங்கை
நின்றுவெந் துமாநீ றெழுகின்றது நெருப்புத்
தின்றுதேக் கிடுகின்றது தேவர்கள் சிரிப்பார்
நன்றுநன் றுபோர்வலியென விராவணன் நக்கான்."

கம்பரது — சுந்தரம் — இலங்கையெரியூட்டுக் கவி

இது கம்ப நாடகம்; என்று ஆத்தான் ஜீயரும், குணகரம் பாக்கம் ராமாநுஜ ஜீயரும் வகுத்த அரும்பதவுரைகளையும் நோக்கு மிடத்துத் தமிழ்ப் பெருங் காப்பிய மாகிய கம்ப ராமாயணத் துக்குக் கம்ப நாடகம் என்னும் பெயரும் வழங்கப் பெற்றிருந்த தென்பது நன்கு புலனாகின்ற தென்க.

எனினும், புறத்திரட்டுடையார் குறிப்புப்படி இதற்குக் கம்பர் இராமாவதாரம் என்னும் பெயரே சிறப்பாக ஓதப்படு மாறாலும், உலக வழக்கும் பண்டிதர் வழக்கும் கம்பராமாயணம் என்னும் பெயரையே வற்புறுத்திக் கொண்டிருக்கின்றன.

கம்ப ராமாயணம் ஒரு மாபெருங் காப்பிய மென்பதை முன்னரே குறித்துள்ளோம். வடமொழியாளர் மகா காவியம் என்று கூறுவதைப் பெருங்காப்பியம் என்று நாம் குறிக்கிறோம். இது பல தொடர்க்கவிகளால் அமைக்கப் பெற்றிருத்தலின், தமிழாசிரியர் பொருட்டொடர் நிலைச் செய்யுள் என்னும் வகையிற் குறித்திருக்கிறார்கள். என்னை :—

"தமிழ் நாட்டின் கருப்பொருள் உரிப்பொருள்களை அமைத்து, அறம் பொருள் இன்பங்களை விளக்கி, அரசர்கள் வள்ளல்கள் முதலியோரது புகழ்ச் செயல்களையும் சரிதங்களையும் விரித்துப்பாடிய நூல்கள் — சொற்றொடர் நிலைச் செய்யுள், பொருட்டொடர் நிலைச் செய்யுள் - என வரையறுக்கப்பட்டிருக்கின்றன."

காவியம் என்னும் பெயராவது காவிய விலக்கணமாவது, தொல் காப்பியத்திற் கூறப்பட்டதில்லை. வட மொழியிலும், காவ்யம் என்பது, முன்னாளில், "கவியொருவன் செய்தது காவ்யம்" எனப் பொது வகையால் வழங்கி வந்ததல்லாமல், கவித் தொடர்புடைய தொரு நூலைச்சுட்டி யிலக்கணம் வகுத்த தில்லை யெனக் காண்கிறோம். வான்மீகி முனிவர் அருளிச் செய்த இராமாயணம் சிறப்பு வகையால் காவ்யம் என்று வழங்கப்

பெற்றது. அதுமுதல் அத்துறைப்பட்ட நூல்கள் காவ்யம் என வழங்கப்படலாயின.

### செய்யுள் அல்லது கவி.

தமிழில் பெரும் பேரிலக்கண நூலாக — இன்று வரையினும் பிரமாண நூலாகத் — தமிழ் புலவர்கைக்கொண்டுள்ள — ஒல்காப் புகழுடைத் தொல்காப்பியனுர் இயற்றியருளிய தொல்காப்பியமும், செய்யுள் இலக்கணத்தைச் சொல்லி யிருக்கிறதே யொழிய — செய்யுள் தொடர்பும் பொருள் தொடர்பும் அணிவகைகளும் பல பெற்றதொரு பெருங்காப்பிய இலக்கணத்தைப் பற்றிக் குறிக்க வில்லை. பின்புள்ளாரும் தொல்காப்பியர் அடி பற்றியே செய்யுள் இலக்கணத்துக்கே வரம்பு கட்டிப் போயிருக்கிறார்கள்.

"தொல் காப்பியர்"—

"எழுத்து முதலா வீண்டிய அடியில்
குறித்த பொருளை முடிய நாட்டல்
யாப்பென மொழிப யாப்பறி புலவர்"

யாப்பு = செய்யுள்.

"பவணந்தி முனிவர்"—

"பல்வகைத் தாதுவின் உயிர்குடல் போற்பல
சொல்லான் பொருட்கிட னாகவு ணர்வினின்
வல்லோ ரணிபெறச் செய்வன செய்யுள்"

செய்யுள் = கவி.

இவர், அணியையும் செய்யுளையும், உயிரையும் உடலையும் போல் குறித்திருக்கிறார். உயிரில்லாவிடில் உடல் பிணமாம்; "அணியில்லாத செய்யுளும் ——"; என்று கூறியிருக்கிறார்.

"மாறனலங்கார முடையார்"-

"பாவினை யொலிபெறப் படனஞ் செய்திடும்
நாவின னாகி நாற்கவிப் புலவோர்
புதுமொழி புணர்ப்புழிப் பொறிப்பவ னாகியும்
மனப்படும் ஒருபொருள் மதித்தவர் ஒருமொழி
எடுத்ததற் கியைபுற எதிரெதிர் பன்மொழி
தொடுப்பதும் பெயர்வினை கோப்புறப் பிறிதடி
தொடுப்பதும் தொடைபல தொடர்ந்தொரு பாவாய்
முடிப்பதுங் குறிக்கொளல் முதற்கார ணம்மே"

"சொற் பொருள் அணிநலன் தோயா தாயினும்
மடியா தெடுத்தடி மடக்குத லின்றாய்
யாப்பின துறப்பிழுக் காதிறு தியில்வினை
கோப்புற முடித்தல் அதன்முதற் குறிப்பே".

"அருமணி நிரலமைத் தன்ன சொல்நலன்
ஒளியதன் உட்கிடந் தன்ன பொருள்நலன்
அழகதற் காக்கமைத் தன்ன அணிநலன்
உரனுடைப் பழம்பாட் டிணர்வழிப் புணர்த்தோர்
உரனுடைப் பாட்டினர் வாய்மையின் வருமே"

என்று கவிகளின் அமைப்பை நன்கு கூறிப் போயிருக்கிறார்கள். பிற்கூறப் பெற்ற "மாறனலங்கார" த்தில் தொடர்பும் ஊன்றித் துணைவைக்கப் பெற்றிருக்கின்றது. எனவே கவிகள், சொற் சுவையும் பொருட்சுவையும் அறிந்து ஆக்கப்படல் வேண்டும் என்பது கருத்தாகும்.

## கம்பர் கவி

கம்பர் சொற்சுவை பொருட்சுவை யிரண்டும் நன்குணர்ந்த கவி வாணர். தாமுணர்ந்த பொருள்களுக் கியைபுடைய சொற்கள் தாமே வந்து பதியக் கூடிய பாக்கியம் படைத்தவர். உத்தம கவிஞரைப் பற்றிக் கூற வரும்போது, கம்ப நாட்டாழ்வார்;—

பால காண்டம் — நகரப்படலம் — முதற்கவியில் —

"செவ்விய மதுரஞ் சேர்ந்தநற் பொருளிற்
சீரிய கூரிய தீஞ்சொல்
வவ்விய கவிஞர் * * *"

என்று திறம்படக் கூறியிருக்கிறார்.

கம்பர் கவியில் இலக்கண அமைதியுண்டு; அழகும் ஆழமுமுண்டு; விரும்பிய பொருளைப் படிப்பார் கேட்பாருடைய உள்ளத்தில், பசுமரத் தாணிபோற் பதியவைக்கும் பான்மை வாய்ந்தவர். அவர், சான்றோர் கவியைக் கூறும் திறம், தமது கவியைக் கூறிக் கொண்டபடியே தோன்றுகின்றது; பாருங்கள்:—

"புவியினுக் கணியாய் ஆன்ற பொருள்தந்து புலத்திற் றாகி
அவியகத் துறைகள் தாங்கி ஐந்திணை நெறிய ளாவி
சவியுறத் தெளிந்து தண்ணென் றொழுக்கமுந் தழுவிச் சான்றோர்
கவியெனக் கிடந்த கோதா வரியினை வீரர் கண்டார்"

—ஆரணியம்—சூர்ப்பணகை—முதற் செய்யுள்.

என்று கோதாவரி நதியைச் சான்றோர் கவிக்கு இலக்காக்கிச் செய்யுள் இலக்கணமே வகுத்திருக்கிறார்; காண்க.

மற்றும்,

பம்பைப் பொய்கையை வருணிக்கு மிடத்தில்,

—கிட்கிந்தா—பம்பைப் படலம்.

"கற்பக மனையவக் கவிஞர் காட்டிய
சொற்பொரு ளாமெனத் தோன்றல் சான்றது"

என்று, கவியில், சொல்லும் பொருளும் ஒத்திருத்தலையுணர்த்துகிறார். மாறனலங்கார முடையார் குறித்துளதும் இது வன்றோ!

ஓவியர் பலவர்ணங்களின் உதவி கொண்டு, விரைவில் ஓர் சித்திரம் வரைந்து பலர் மனத்தையும் கவர்வது போலவே,

"கவிஞனும் பற்பல சொற்களையும் பொருள்களையும் கொண்டு கவிகளமைத்துப் பலர் மனத்தையும் கவரல் வேண்டும்" என்னும் கவி மர்மத்தை உணர்ந்தவர்களில் கம்பர் மிகவும் உயர்ந்தவராவார்.

"கம்பரது கவியின் கொதிப்பில் பர்ன்ஸ் (Burns) என்னும் கவியின் கொதிப்பு நெருங்கிநில்லாது; கம்பர் கவியின் தெளிவிற்குச் சாஸர் (chaucer) எம்மாத்திரம்! மில்டனையும் ஷேக்ஸ்பியரையும் கம்பரது கவிகளின் உயர்விற்கும் விசாலத்திற்கும் ஒப்பிடலாமோ என்னவோ!!" —என்று காலஞ் சென்ற ஸ்ரீமான் செல்வகேசவராய முதலியார் அவர்கள் கூறியிருக்கிறார்கள்

"இயந்திரத்தைப் பிரித்துப் பார்க்கவர்கள் தாம், அதன் கட்டுக்கோப்பை நன்கு அறிந்தவர்களாவார்கள்; உறுப்பிலக்கணங்களை நன்கறிந்தவர்களே யாப்பிலக்கணத்தை நன்குணர்ந்தவர்களாவார்கள்; மனத்தின் விகற்பங்களையும் கூறுபாடுகளையும் பகுத்து அறிந்தவர்களே மனோ தத்வத்தையும் நன்கு அறிந்தவர்களாவார்கள். கவிகளைப் பன்னிப் பன்னிப் படித்தவர்களே கவியிலக்கணத்தைக் கண்டறிந்தவர்களாவார்கள்."—என்பர்.

கம்ப நாட்டாழ்வார், பிரபுக்களிடத்தும் மன்னவர்களிடத்தும், மிகவும் பழகியிருந்து, உலகத்தின்—உயிர்களின் தத்வங்களை நன்றாய் ஆராய்ச்சி செய்து உணர்ந்துள்ளவராகையால், மன்னவருடைய—மன்பதையினுடைய நடையுடைகள் சீர்சிறப்புகள் வழக்கவொழுக்கங்கள் இவற்றை எடுத்து ஓதும் ஆற்றல் அமைந்தவராக இருக்கிறார். தமிழ் நாடு முழுவதுமே யன்றிப் பிற நாடுகளிலும் காடும் மேடும் நாடும் நதியும் மலையும் மடுவும் முதலிய எங்கெங்கும் ஸஞ்சரித்துள்ள வராதலால், எவ்வகைத்தான தோற்றங்களையும் எடுத்துக் கூறும் சுவை இயற்கை மிகப் பொருந்தினவராக இருக்கிறார். இயற்கைக் குறிப்புகளைத் தற்

குறிப்பில் ஏற்றி புன்மைகளை விளக்குவதில் "கம்ப நாட்டாழ்" வாருக்குச் சோப்பமே கிடையாது.

அங்கே அங்கே எடுத்துக்கூறும் உவமானங்களை யோதி உணர்ந்தால், அந்த உபமானங்கட்கு மேல் இன்னொரு புலவன் எடுத்து ஓத முடியாதென்பதை யறிந்துகொள்வாய்; அவ்வுவமானங்கள் மிகப் பொருத்த முடையனவாகவும் கம்பீர நடையுடையனவாகவும் மிக்க ஆழமுடையனவாகவும், நன்கு ஆழ்ந்து ஆராய்ந்தால், பெரும்பாலும் முற்றுவமமாகவே பொருந்தியுள்ளனவாகவும் காணலாம்.

உதாரணங்கள்.

"எய்யென எழுபகை எங்கும் இன்மையால்
மொய்பொருதினவுறு முழவுத் தோளினான்
வையகம் முழுவதும் வறிஞன் ஓம்புமோர்
செய்யெனக் காத்தினி தரசுசெய்கின்றான்"

பொருள் வெளிப்படை; பாலகாண்டம் – அரசியல்–**12**-ம் கவி.

தசரத மன்னன், இந்த உலகை முழுவதையும், "ஒரு வறியன், தனது குடும்பப் பாதுகாப்பிற் குரியதாகிய ஒரே செய்நிலத்தை வெகு கருத்துடன் காப்பது போல் காத்தளிக்கின்றான்" என்பதாம். உவமை எத்துணை யழகாகவும் உண்மையாகவும் பொருத்தமாகவும் இருக்கின்றது பாருங்கள். இந்த உவமானத்தால், 'மன்னன் பூமண்டலத்தை யெவ்வளவு கவனத்துடன் பரிபாலிக்கின்றான்' என்னும் உண்மை வெளிப்படுகின்றதன்றோ! இவ் உவமை, காளிதாச மகா கவியிடம் விழுந்திருக்கும் விதமும் இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.

"உர்வீம் சசாஸ ஏகபுரீம் இவ"—ரகுவம்சம் (samskrit) "ஒரு நகரத்தைப் பாதுகாப்பது போல், உலகத்தைப் பரிபாலித்தான்" என்பது காளிதாஸ மஹா கவியின் பொருளாகும்.

அயோத்தியா காண்டத்தில்—மந்திரப் படலத்தில் தசரத மன்னவனது கூற்றிலமைத்துக் கூறியிருப்பதைப் பொருத்திக் காணுங்கள்.

"கன்னியர்க் கமைவருங் கற்பின் மாநிலம்
தன்னையித் தகைதர தருமங் கைதர
மன்னுயிர்க் குறுவதே செய்து வைகினேன்
என்னுயிர்க் குறுவதுஞ் செய்ய எண்ணினேன்"

என்னும் இக்கவியின் முன் மூன்று அடிகளையும் நன்கு பொருத்திப் பொருள் காணுங்கள். "கன்னியர்க் கமைவருங் கற்பு"—உவமை.

இப்படிப்பல; விரித்தெழுதல் மிகை;

—பாலகாண்டம்—தாடகைப்படலம் **72**-ம் செய்யுள் :—

"சொல்லொக்கும் கடிய வேகச் சுடுசரம் கரிய செம்மல்
அல்லொக்கும் நிறத்தி னாண்மேல் விடுதலும் வயிரக் குன்றக்
கல்லொக்கும் நெஞ்சில் தங்கா தப்புறங் கழன்று கல்லாப்
புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருளெனப் போயிற் றன்றே"

இது, தாடகையின் மார்பில் ஸ்ரீ ராமபிரான் எய்த அம்பானது அவள்மார்பில் தங்காமல் முதுகின்வழியாகவே புறத்துப் போனதைக் குறிக்க வந்துள்ளது; "கல்லாப் புல்லர்க்கு நல்லோர் சொன்னபொருள்" என்னும் உவமையைக் காண்க; இந்த உவமானம் எத்துணை யழகாக அமைத்திருக்கின்றது; பாருங்கள்! இந்த உவமையில் உலகியல்பு பொருத்தமாக அமைக்கப்பட்டிருத்தலை யுணர்க.

—பாலகாண்டம்—திருவவதாரப்படலம்—**127**-ம் செய்யுள் :—

"ஐயனும் இளவலும் அணிநில மகடன்
செய்தவம் உடைமைகள் தெரிதர நதியும்
மைதவழ் பொழில்களும் வாவியும் மருவி
நெய்தழல் உறுநிரை யெனநிலை திரிவார்."

ஸ்ரீ ராமபிரான் தம்பியாகிய லக்ஷ்மணனுடன், அயோத்தி மாநகரில், சாலை சோலை கோயில் குளம் முதலிய இடங்களில் இருவரும் இடைவிடாமல் ஸஞ்சரித்தலை புணர்த்த வந்துள்ளது, "நெறிக்குழல் உறுமிழை" யென்னும் உவமையாகும். அரசிளங் குமரர் இருவரும் இணைபிரியாதிருத்தலுக்கு, நெசவுகாரனுடைய தறியில் ஓடிக் கொண்டிருக்குங் குழலையும் இழையையும் உவமை கூறியிருக்கிறார். இந்த உவமை பொருளோடு பொருந்தியிருக் கும் அழகைக் கவனியுங்கள். "தறியில் வெறுங்குழல் ஓடினால் சேலையாகாது; தறியில் தனிமிழை யோடவும் முடியாது; குழலும் இழையுஞ் சேர்ந்துதான் ஓடவேண்டும்; அப்படி யோடினால் தான் சேலையாகும்; அது போலவே, பரனாகிய ராமனும் நரனாகிய லக்ஷ் மணனும அதாவது ஜீவனும் பரனும் சேர்ந்தே உலகமாயிருக் கிறார்கள்; அவர்கள் தனித்தேயிரார்கள். சேலை யென்னும் காரியம் தோன்றிய பிறகு, குழலாகிய காரணம் பிரத்தியக்ஷத்தில் இல்லை; நூலாகிய காரணம் மாத்திரம் தோன்றுகின்றது; அது போல், பரனும் நரனும் உலக காரணமானாலும், உலகமாகிய காரியப் பொருளில் பரனாகிய காரணப் பொருள் பிரத்தியக்ஷத்தில் காணப்படாமல் மறைந்திருக்கின்றது; ஜீவனாகிய காரணம் எங்கும் காணப்படுகின்றது." என்பது எத்துணை விளக்கமாகின்றது.

—அயோத்தியாகாண்டம்—மந்திரப்படலம்—செய்யுள் :—

"திரண்ட தோளினன் இப்படிச் செப்பலுஞ் சிந்தை
புரண்டு மீதிடப் பொங்கிய உவகையர் ஆங்கே
வெருண்டு மன்னவன் பிரிவெனும் விம்முறு நிலையால்
இரண்டு கன்றினுக் கிரங்குமோர் ஆவென இருந்தார்."

தசரத மன்னன், தான் அரசு கட்டிலிலிருந்து நீங்குவதை யும் ஸ்ரீராமபிரான் அரசு கட்டிலில் ஏறுவதையும்பற்றிச் சபையில் சொன்னபோது, அச்சபையிலுள்ளார், முன்னர்க் களிகொண் டனராயினும், "தசரத சக்ரவர்த்தியைப் பிரிய நேர்ந்திடுமே யென்னும் வெருட்சி கொண்டு, மன்னனையும் மகனையும் விட முடி

யாதவர்களாகி யிருந்த நிலைமை, "இரண்டு கன்றினுக்கு இரங்கும் ஓர் ஆ" என இருந்தது என்கிறார். இந்த உவமையின் அழகில், குடிகட்கும் மன்னர்கட்கும் உள்ள தொடர்பையும் பொருத்தத்தையும் நன்கு கவனித்துப் பொருள் கொள்ளல் வேண்டும். சபையோர் தாய்ப்பசுவாகவும் சக்கரவர்த்திகள் கன்றுகளாகவும் உவமிக்கப் பெற்றிருக்கின்றது. இதில் குடிகட்கும் அதிகாரிகட்கும் மந்திரிகட்கும் ஜனப்பிரதிநிதிகட்கும் உள்ள ராஜபக்தியைக் கருதல் வேண்டும். மன்னருடைய ஆக்கமெல்லாம் மன்பதைகளின் மனக்களிப்பால் ஆவனவென்பதை எத்துணை விளக்கமாகக் காண்கின்றோம்! தாய்ப்பால் இல்லெனின் கன்றுக்கு ஆக்கமேது?

—அயோத்தியா காண்டம் — கைகேயி சூழ் வினைப்படலம்:—

"இப்பொழு தெம்ம னோரால் இயம்புதற் கெளிதே யாரும்
செப்பருங் குணத்தி ராமன் திருமுகச் செவ்வி நோக்கில்
ஒப்பதே முன்பு பின்பவ் வாசகம் உரைப்பக் கேட்ட
அப்பொழு தலர்ந்த செந்தா மரையினை வென்ற தம்மா"

"இராமா! பரதன் நாடாளவும் நீ பதினான்கு வருஷம் காடாளவும் மன்னன் பணித்தான்" என்று இராமனிடம் மாற்றாந்தாயாகிய கைகேயி சொன்னபோது, ஸ்ரீராமபிரானுடைய திருமுகமண்டலம் இருந்தபடியைக் குறித்துள்ளது, "அலர்ந்த செந்தாமரை" யென்னும் இந்த உவமானம். "கைகேயி சொன்ன அந்த வார்த்தையைக் கேட்டற்குமுன் இராமனது முகம் செந்தாமரைக்கு ஒப்பதாக இருந்ததெனவும், அதனைக் கேட்டற்குப் பின்ன ரத்தாமரையை வென்றுவிட்டதெனவும்" சொன்ன குறிப்பால், இராமபிரானுடைய உள்ளக்கிடக்கை வெளிப்பட்டிருத்தலைக் காண்க. மற்றும், "இராமன் தமது அபிப்பிராயத்தினை வாக்கினு லுணர்த்தாமல், முகக்குறிப்பினால் உணர்த்தினார்" என்பதும் விளங்குகின்றது. ஏன்? நல்லது ஆயினும் வாக்கினால் உணர்த்தும்போது தொனி வேறுபாட்டால் பொருளும் கெட்டுவிடுவது இயற்கையாகலின், விழுமியோர், தமதுள்ளக்கிடக்கையைக் குறிப்

பின் உணர்த்துவதே யன்றி வாக்கிற் சொல்லார் என்னும் தத்துவமும் போதமாகின்றது.

இந்தப் பொருளையே, ராமாயண சம்பூ என்னும் கத்ய-பத்ய ரூபமான ஸம்ஸ்க்ருத காவியத்தில் அமைந்து கிடத்தலை யூன்றிப் பொருத்திக் காண்போமாக.

"வ்ருத்தி தநுமாத்ர த்ராணம் ஆஜ்ஞாபிதம் மே
ஸகல புவந பாரஸ் ஸ்தாபிதோ வத்ஸ மூர்த்நி—
த்விஹ ஸாகரதாயாம் ஆவஸ்யோ தர்க்கிதாயாம்
மயி பததி கரீயாந் அம்பதே பக்ஷபாத: = "

இதன் பொருள்:—"தாயே! இயற்கையிலேயே, ஒருவன் வேண்டிய பொருள்களெல்லாம் மற்றொருவர் உதவி வேண்டாதபடியே-சுலபத்திற் கிடைக்கக்கூடிய வனத்திலிருந்து எனது உடலை மாத்திரம், ஓரளவிட்ட பதினான்கு வருஷம், காப்பாற்றி வரும்படி எளியேனுக்குக் கட்டளையிட்டிருக்கிறீர்கள்; ஆனால், என்னினும் வயதிற் குறைந்த சிறுவனான தங்களுடைய சொந்த புத்திரன் பரதனுக்கோ, பலபேர்களின் உதவியை நாடிச் செயற்கையிலே, ஒருவன் தனக்குத் தேவையான பொருளையுண்டாக்கிக் கொள்ள வேண்டிய நாட்டிலே, அளவிடப்படாத நீண்டகாலமிருந்து, எல்லா உயிர்களையும் காப்பாற்ற வேண்டியபடியான கடமையைத் தலையில் சுமத்தியிருக்கிறீர்கள். இந்த இரண்டு செய்கைகளையும் நன்கு ஆராய்ந்து சீர்தூக்கிப் பார்த்தால், தங்களது மிகுதியான உள்ளன்பானது, தங்கள் வயிற்றிற் பிறந்த பரதனிடத்திற்காட்டிலும், தங்களது மாற்றவளாகிய கௌஸலையின் புத்திரனாகிய எளியேனிடத்தில் தான் அதிகமாக இருக்கின்றதென்பது நன்றாக விளங்குகின்றது." என்று இராமன் கைகேயினிடம் வாக்கினாற் சொன்னதாகக் குறித்திருக்கின்றார்.

கம்பநாட்டாழ்வார் சொன்னதாக முன்னங்குறித்த அந்த முகக்குறிப்புணர்ச்சிக்கும், இந்த போஜகவியில் குறித்துள்ள வாக்குணர்ச்சிக்கும் பொருள்களைப் பொருத்திக்காண்க.

கம்பராமாயணக் கவிகளிலெல்லாம் பெரும்பாலும் உவமையணிகளே மிளிர்ந்து கிடக்கின்றன; அந்த உவமங்களும் பலதிறத்திற் பேசப்பட்டிருக்கின்றன. எந்தக்கவிகளை யெடுப்பது! எந்தக் கவிகளைத் தொடுப்பது? எந்தக்கவிகளை விடுப்பது? அவரவர் தாம்தாம் படித்துப்படித்து உணர்ந்துகொள்ளவேண்டியதுதான் என்று சொல்வதே சுலபமாக இருக்கும்போலும்.

ஒருபொருளுக்கே உவமங்களை யடுக்கடுக்காகக் கொடுத்துக் கருத்துக்களைப் படிப்படியாக உயர்த்திக்காட்டும் அற்புதம் பொருந்திய கவி பலவற்றுள் இரண்டினை யெடுத்துக்கொண்டு ஈண்டு ஆராய்ந்துபார்ப்போம்.

—அயோத்தியாகாண்டம்—கங்கைப்படலம்—முதற்செய்யுள்:—

"வெய்யோ னொளி தன்மேனியின் விரிசோதியின் மறைய
பொய்யோவெனு மிடையாளொடு மிளையானொடும் போனான்
மையோமரகதமோமறி கடலோமழை முகிலோ
ஐயோவிவன் வடிவென்பதோர் அழியாவழ குடையான்."

இதற்குமுன் "நகர்நீங்கு படலத்தில்" படிப்பாரையும் கேட்பாரையும் "இராமன் மனைவி தம்பிகளுடன் நகரைநீங்கினான்' என்னும் செய்திக்குறிப்பினால், அழும்படியாகச் செய்துவைத்த கம்பர், இந்த "கங்கைப்படல"த்தில், ஆரம்பத்திலிருந்தே தாலாட்டுப்போற் பாடவும் கேட்கவும் இன்பந்தரும்படியான விருத்தத்திலும் சீரமைப்பிலும் தொடர்ந்திருக்கின்றார் என்பதைக், கவியைப்படிக்கும்போதே உணர்கிறோம்."

பொருள் :—" தங்களை வனத்தில் விட்டுச் செல்லவந்த சுமந்திரனை யனுப்பிவிட்டு, ஸ்ரீராமபிரான், தாம் முன்னும் தம்பி பின்னும் சீதை நடுவிலுமாக வனத்தில் நடந்து சென்று, கங்கைக்கரையை நோக்கிப்போயினார்;" அங்ஙனம் அம்மூவரும் போய்க்கொண்டிருக்கும்போது, "சூரிய வெப்பத்தினால் ஸ்ரீராமபிரானுடைய சுகுமாரமாகிய திருமேனி கன்றிடுமோ குன்றிடுமோ எவ்வாறோ!" எனக்கருதிய, கம்பநாட்டாழ்வார், இக்கவியின்,

முதலடியில் :—“ செய்ஞ்ஞாயிறுகிய சூரியனுடைய வெப்பமானது, கருஞாயிறுகிய ஸ்ரீராமசந்திரமூர்த்தியினுடைய திருமேனியின் ஒளியினுல், சில்லென்று மறைந்துபோயிற்று ” என்கிருர் ; இது ஸ்வாநுபவம்போலும்.

இரண்டாமடியில் :—“ இராமபிரான் முன்னும்-சீதை நடுவும்-லக்ஷ்மணன் பின்னுமாக நடந்து போனர்கள் ” என்கிருர். இது வழிநடையில் ஒருபெண்ணைக் காத்துநடத்திச் செல்லவேண்டிய முறைபோலும். இக்கருத்தினை,

ஸ்ரீ வான்மீகி பகவான்சொல்லும்போது,

“ அக்ரத : ப்ரயயௌ ராம : ஸீதா மத்யே ஸுமத்யமா—
ப்ருஷ்டதஸ்து தநுஷ்பாணி : லக்ஷ்மணோ அநுஜகாமஹ ” =

பொருள் :—“ இராமன் முன்னும் ஸீதை நடுவுமாகப் போனர்கள் ; பின்னலே, கையில் வில்லைக்கொண்டவனுகிய லக்ஷ்மணன் அவ்விருவரையும் (காத்துப்) பின்தொடர்ந்து போனன் ” என்று சொல்லியிருக்கிருர்.

வான்மீகி ராமாயணத்தின் வியாக்கியாதாக்களுள் ஒருவராகிய கோவிந்தராஜன் என்னும் பெரியார், இந்த சுலோகத்துக்குப் பொருள் சொல்லும்போது, ஸ்ரீராமாதிகளுடைய அவதார விசேஷத்தைக் கருத்திலமைத்துக்கொண்டு, “ இம்மூவரும் நடந்து சென்ற முறையானது,” பிரணவம் கால்கொண்டு நடந்துபோவது போலும் தோன்றுகின்றது ! என்று கூறியிருக்கிருர் ; இதனது உட்பொருள் கவனிக்கத் தகுந்தது ; அதற்காக உவமையை விரித்துப் பிரணவாக்ஷரங்களைப் பொருத்திப் பார்ப்போம்.

“ பிரணவம் மூன்று அக்ஷரங்களால் ஆனது ; அவை அ—உ—ம் ; அதாவது அகார உகார மகாரங்கள் ; அகாரம் விஷ்ணுவின் வாசகம் ; உகாரம் இலக்குமி வாசகம் ; மகாரம் அவ்விருவர்க்கும் தாஸனுன ஜீவனுடைய வாசகம்.”

பிரமாணம் :—

" அகார : சித்ஸ்வரூபஸ்ய விஷ்ணோர் வாசக இஷ்யதே
உகார : சித்ஸ்வரூபிண்யா ச்ரியே வாசி ததா விது :—
மகாரஸ்து தயோர் தாஸ ; இதி ப்ரணவ லக்ஷணம் " ௨

என்று பிரமாணம் இருப்பதாலும் " விஷ்ணு ஸ்ரீராமனாக வும், லக்ஷ்மி ஸீதையாகவும் ஜீவன் லக்ஷ்மணனாகவும் அவதரித்து, லோகதர்மத்தை நடத்திக்காட்டினார்கள் ; இதுவே ராமாயணத் தின் உட்பொருள் என்று பெரியோர் கருதுவதாலும்," அந்த வியாக்கியதா கோவிந்தராஜன் அந்த சுலோகத்துக்கு அப்படிப் பொருள்கொண்டார் என்று கேட்கிறோம்.

இந்த உண்மையைத் தெரிந்த கம்பநாட்டாழ்வார், வான்மீகி யின் அந்த சுலோகத்தை அப்படியே மொழிபெயர்த்திருக்கிறார் ;

இனி, மேல், அந்தக் கவியினுடைய நான்காமடி மூன்றாமடி களைப் பார்ப்போம்.

நான்காமடியில்:—" இராமபிரானது வடிவழகைக் கவி அனுப விக்கிறார்."

நாம் இங்கு எடுத்துக்கொண்ட விஷயத்துக்கு உரித்தானது, இந்த மூன்றடிதான். ஆகலான், அதனை நன்கு ஆராயப்புகு வோமாக :—

மூன்றாமடியில் :—" இராமபிரானுடைய திருமேனி நிறத்துக் கும் குணத்துக்குமாக உவமானப்பொருள்களை யெடுத்துச் சீர் தூக்கிப் பார்த்தற்பொருட்டு "மையோ மரகதமோ மறிகடலோ மழைமுகிலோ என அடுக்கிவைத்து, ஒவ்வொரு உவமையையும் எடுத்துக்கழித்துத்தள்ளிக் கடைசி உவமையை மாத்திரம் பொரு த்தி யுறுதிப்படுத்துகிறார்; இது ஐயவணி—ஸந்தேஹாலங்காரம் ; ஆகையால், முன்னுள்ள உவமைகளைக் கழித்துப் பின்னுள்ள தொன்றைக் கொள்ளப்பார்க்கிறார் ; எப்படி ?

மையோ--மை + ஓ:—

இங்கே, "மை"—இராமபிரானுடைய திருமேனி நிறத்துக்கும் ஒளிக்கும் உவமானமாக எடுத்துக்கொள்ளப் பெற்றது; ஆனால் மை என்பது அற்பவஸ்து; ஆதலினால் கழித்துத் தள்ளப்பட்டது; கனவஸ்துவுக்கு அற்பவஸ்துவை உவமை கூறல் நீசோபமை என்று அலங்கார சாஸ்திரம் கூறுகின்றது; ஆகலான் என்க.

மரகதமோ—மரகதம் + ஓ; மரகதம் — பச்சைமணி.

இங்கே, "மரகதம்"—கனவஸ்துவாகையால், இராமபிரானுடைய திருமேனி நிறத்துக்கும் ஒளிக்கும் உயர்வுக்கும் மதிப்புக்கும் உவமானமாக எடுத்துக்கொள்ளப் பெற்றது; ஆனால், ஆராய்ந்து பார்த்துக் கழித்துத்தள்ளிவிடப்பட்டது; ஏனெனில், மரகதமணி நிறத்தாலும் ஒளியாலும் உயர்வாலும் மதிப்பாலும், இராமபிரானுடைய திருமேனிக்கு ஒப்பாகுமானாலும், நிறம் ஒளி உயர்வு மதிப்புடன் இராமன் திருமேனியில் குணமும் அருளும் நிறைந்திருப்பதால், அவ்விரண்டும் மரகதமணியில் காணப்படாமையாலும், உயர்ந்த அருள் என்பது மணியில் சிறிதும் இல்லாமையாலும் உவமை பொருந்தவில்லையென்று தள்ளப்பட்டதென்க. ஸர்வஸுலபமாக—யாவர்க்கும் கிட்டக்கூடியவராக ஸ்ரீராமபிரான், இருக்கிறார்; மரகதமணியோ—தனமுடையவர்கட்கு மாத்திரம் கிட்டக்கூடியதாகவும் தரித்திரர்கட்கு எட்டக்கூடாததாகவும் இருக்கின்றது. ஆகையால் உவமை பொருத்தமாகவில்லையென்று தள்ளப்பட்டது.

மறிகடலோ—மறிகடல் + ஓ:—

இங்கே, "மறிகடல்"—பரந்த வஸ்துவாகையால், ஸ்ரீராமபிரானுடைய திருமேனியின் நிறத்துக்கும் ஒளிக்கும் உயர்வுக்கும் மதிப்பும் அகற்சிக்கும் ஆழத்துக்கும் காட்சிக்கும் உவமானமாக

எடுத்துக்கொள்ளப்பெற்றது ; ஆனால் ஆராய்ந்து கழித்து தள்ளப்பட்டது; ஏனெனில், நிறம் ஒளி உயர்வு மதிப்பு அகற்சி ஆழம் தோற்றம் இவைகளில் மாத்திரம் எடுத்துப் பார்க்கும்போது, "இராமன் பரந்த அறிவுடையவர்; கடலும் பரந்திருக்கிறது. இராமன் விரிந்த நோக்கமுடையவர்; கடலும் விரிந்திருக்கிறது. இராமன் பசிய நிறமுடையார்; கடலும் பசந்திருக்கிறது. இராமன் ஜோதியுடையார்; கடலும் ஒளியைப் பெற்றுக்கொண்டிருக்கிறது. இராமன் உயர்ந்த குணமுடையவர்; கடலும் உயர்வாகக் கருதப்படுகிறது. இராமன் யாவராலும் மதிக்கத்தகுந்தவர்; கடலும் மதிக்கப்படத்தகுந்ததுதான். இராமன் அகன்ற கேள்வியுடையவர்; கடலும் அகன்றிருக்கின்றது. இராமன் ஆழ்ந்த கருத்துக்கொண்டவர்; கடலும் ஆழங்கொண்டுள்ளது. இராமன் அருளின் முடிவு தோன்றாத காட்சியுடையவர்; கடலும் அக்கரை முடிவு தோன்றாத காட்சியுடையது" என்று இங்ஙனம் எடுத்து ஒப்புக் கூறுவோமானாலும், இராமன் எல்லார்க்கும் பிரயோஜனகாராக இருக்கிறார் என்னும்போது, கடல் உவமானமாகக் கிட்ட நிற்க முடியாமல் ஓடிப்போகின்றது ; ஏனெனில்—கடல் தனது ஒலியாலும் உவர்ப்பாலும் அலையாலும் அரசாலும்—தன்னைப் பிரயோஜனமாக்கிக்கொள்ள வருவோர்களை மறித்துத்தள்ளி அடித்துத் தூரத்தி விடுகிறது ;— அதனால்தான் கம்பர், கடலை, மறிகடல் என்றார் போலும்—(மறிகடல் = "மறித்துத்தள்ளும் கடல்"—என்றுமாம்) எனவே, கடலும் இராமனது திருமேனிக்கு யுவமையாகப் பொருந்தவில்லையென்று கழித்துத் தள்ளிவிடப்பட்டது.

மழைமுகிலோ—மழைமுகில் + ஓ :—

இங்கே, "மழைமுகில்"—உயர்ந்த வஸ்துவாகையால் ஸர்வ விதத்திலும், ஸ்ரீராமபிரான் திருமேனிக்கு உவமானமாக எடுத்துக்கொள்ளப்பெற்று சித்தாந்தமாக்கப் பெற்றது. எப்படியெனில், இராமபிரான், கருநிறமும்-குளிர்ந்த தன்மையும்-தண்ணிய ஒளியும்-மேலான நிலைமையும்-பரந்த நோக்கமும்-விரிந்த எண்ணமும்

இன்னார் இனியார் உயர்ந்தவர் தாழ்ந்தவர் கற்றார் மற்றார் என்னும் பேதம் காணாமல் யாவர்க்கும ஒப்பநின்று அவ்வவர் தாபங்களாகிய கஷ்டங்களை யொழித்துத், தளர்ந்தார் பிரிந்தார் இழந்தார் பசித்தார்கட்கு—ஓடியுதவும் குணமும்-படைத்துள்ளபடியே, மழைமுகிலும், "கைம்மாறு வேண்டாக் கடப்பாடு" என்றபடி, ஈகை சிறிதும் பெறாத கடலின் நீரைத் தலையாற் சுமந்து, கறுத்துக்-குளிர்ந்து-கனத்து - உயர்ந்து - பரந்து - விரிந்து - பேதமில்லாமல் எங்கும் திரிந்து-எல்லாருடைய தாபமும் போகும்படியாக நிறைந்த மழையைப் பெய்து கொடுத்து-இழந்தார்க்கும் பசித்தார்க்கும் உற்றிடத்து உதவுகின்றது ;—"இதனால்தான் கம்பர், இதனை மழைமுகில் என்றார் போலும்—இங்ஙனம் சராசரம் சேதனை சேதனம் என்று பாராமல் மழைபெய்து உதவும் தன்மையும் தண்மையுமுடைமையால், கருணை மழைபெய்துகொண்டிருக்கும் இராமபிரானுக்கு எவ்வாற்றானும் உவமையாக எடுத்துக்கொள்ளப்பெற்று சித்தாந்தமாக்கப்பெற்றது.

இங்ஙனமே எல்லாவற்றையும் எடுத்து ஆராயப்புகுந்தால், பொது ஆராய்ச்சியே மிக விரிந்துவிடுமே! மற்றை யாராய்ச்சிகட்குப் புஸ்தகம் அமைக்க முடியுமா ? ஆயினும், இன்னொன்றேனும் எடுத்துக்காட்டி இந்தவகை யுவமான ஆராய்ச்சியை நிறுத்திக் கொள்வோம்.

—உயுத்தகாண்டம்—இராவணன் வதைப்படலம் **58**ம் கவி :—

" மந்தரக் கிரியென மருந்து மாருதி
தந்தவப் பொருப்பென புரங்கள் தாமென
கந்தருப் பந்நகர் விசும்பிற் கண்டென
அந்தரத் தெழுந்தது அவ்வரக்கன் தேரரோ "

என்னும் செய்யுளின் பொருளைப் பார்ப்போமாக :—

இஃது, இராவணன், புத்திரர் பௌத்திரர் முதலிய யாவரையும் போரில் இழந்து, உற்ற துணையாகக் கூட்டிப் பெருக்கி வைத்

திருந்த மூலபலங்களும் அழிந்துபோ யொழிந்தபிறகு, வீடணன் மேலேவப்பெற்றதாயினும் இலக்குவன் மார்பிற்றாக்கி யூடுருவிப் போசச்செய்த வட்டவேலாகிய சக்தியு மழிந்துபோனபிறகு, தானே-தனியே போருக்கெழுந்தபோது, அவன் ஏறிய தேராகிய புஷ்பகம், எப்படி மேலே கிளம்பி யெழுந்தது என்பதை இந்தக்கவி குறித்துக்கொண்டிருக்கின்றது.

பொருள் :—"அந்த இராக்ஷத ராஜனாகிய இராவணன் போருக் கென்று ஆயத்தனாகி ஏறிக்கொண்ட தேரானது (புஷ்பக விமான மானது) மந்தர மலைபோலவும், (பிரம்மாஸ்திரத்தினால் கட்டுண்டு பூமியில் விழுந்தவர்களை யுயிர்ப்பிப்பதற்கென்று) மாருதி எடுத்து வந்த மருத்துமலையாகிய ஸஞ்சீவி மலையைப்போலவும், (வித்யுன் மாலி தாரகாக்ஷன் கமலாக்ஷன் என்னும்) மூன்று அசுரர்களாலும் ஆகாயத்திற் செலுத்தப்பெறும் முப்புரங்கள் போலவும், வானத் தில் கந்தர்வ நகரத்தைக் கண்டதுபோலவும் ஆகாயத்திற் கிளம் பிற்று" என்பதாம்.

இதனை யூகித்துணருங்காலையில், இதிற் குறித்திருக்கும் நான்கு உவமானங்களும் அந்தப் புஷ்பகம் பூமியிலிருந்து மேலே கிளம்பின செய்கைக்கு மாத்திரம் ஒரு படியாக உவமிக்கப்பெற் றிருக்கின்றன என்று கொள்ளுதற்கு இடமில்லையென்பது நன்கு புலனாகும். அப்படி வர்ணிப்பது கம்பரது வழக்குமன்று; அப்படி வர்ணிப்பதில் காவ்ய ரசனையும் தோன்றாது ; பின்னையோ, இந்த நான்கு உவமைகளையும், புஷ்பகம் பூமியிலிருந்து கிளம்பி ஆகாயத் தில் உலாவும் அளவும் பொருந்திய செயல்களைப் படிப்படி யாகத் தெரிவித்துக்கொண்டிருக்கும் முறையில் அமைக்கப் பெற் றிருக்கின்றன என்று கொள்ளலே தகுதியாக இருக்குமென்று கருதுகிறோம். எப்படி ?

முதலில் மந்தரக்கிரி யென :—

மந்தரக்கிரி = மந்தரமலை; அதாவது, தேவாஸுரர்கள் கடல் கடைந்தபோது, கடைவதற்கு மத்தாக இருந்து உதவிய அம்மலை,

டலிற் சுழன்றது போலப், "புஷ்பகமும், உயரக்கிளம்புதற்பொ நட்டு, ஸாமானிய ஆகாய விமானங்களின் செயலை யொத்து, முதலிற் பூமியில் சுழன்றது" என்பதனைக் காட்டிநிற்கின்றது ந்த உவமானம் என்பதாம்; ஏனெனில், புஷ்பகமும் பண்டைக் காலத்து ஆகாயவிமான மாகலின் என்க.

பின்னர், மருத்து மாருதி தந்த அப்பொருப் பென:—

"மாருதிதந்த அம்மருத்துப்பொருப்பென" என்பதாம்; அதாவது; லக்ஷ்மணனும் சுக்கிரீவன் முதலிய வானர வீரரும், போர்க்களத் தில் இந்திரஜித்தன் எய்த பிரம்மாஸ்திரத்தினுற் கட்டுண்டு ளைத்து வீழ்ந்தபோது, அவர்களது களைப்பை நீக்கும்பொருட்டுச் ாம்பவான் தனக்கு உணர்த்திய முறைப்படியே, மாருதி, வட மேருவிற்குச் சென்று, அந்த ஸஞ்சீவி மலையைப் பெயர்த்து டுத்தபோது, அது, பூமியிலிருந்து கிளம்பியது போலவே, புஷ்பக மும், மேலே கிளம்பியது என்பதாம்.

மருத்துப்பொருப்பு—மருந்துமலை = "ஸஞ்சீவி பர்வதம்"

எனவே, இவ்விரண்டு உவமைகளாலும், புஷ்பகம் சுழன்று கிளம்பியது என்பதுபெற்றும்.

இனி அந்தப் புஷ்பகம், ஆகாயத்தில் உலாவியது எப்படி யிருந்ததெனில்:—

மற்றும், புரங்கள்தாமென:—

"புரங்கள்—முப்புரங்கள் = அதாவது அம்மூன்று அஸுரர் களும் பெருந்தவஞ் செய்து சிவபிரானருளால் முப்புரங்களையும் (மூன்று ஸஞ்சரிக்கும் நகரங்களை) பெற்று, அவற்றிலேறி ஆகாயத் தில் ஸஞ்சரித்தார்கள் என்பது புராணக்கூற்று. அம்மூன்று புரங் களும் வானவெளியில் உலாவியபடியே, இந்தப் புஷ்பகமும் ஆகா யத்தில் கிளம்பி உலாவிற்று என்பதாம்.

ஒற்றைத்தேராகிய புஷ்பகத்துக்கு மூன்றுநகரங்களையெடுத்து உவமித்தல் ஒவ்வுமாறு யாங்ஙனம்? என்னில், "புஷ்பகம் மூன்று உலகத்தவரையும் சுலபத்தில் ஏற்றிக்கொள்ளும் அளவுடையது" என்று கம்பர் குறித்துளவாற்றாலென்க.

புஷ்பகத்தின் பிரவேசத்தில், அதனை வர்ணிக்க எடுத்துக் கொண்ட கம்பநாட்டாழ்வார்.

"வருக தேரென வந்தது வையமும் வானும்
உரக தேயமும் ஒருங்குடன் இவரினும் உச்சி
சொருகு பூவெனும் சுமையது தாகம்இன் றெனினும்
நிருதர் கோமகன் நினைவுழிச் செல்வதோர் நினைப்பில்".

என்று கூறியிருக்கிறார்.

—உயுத்தம்—இராவணன் தேரேறுபடலம்—**18**-ம் கவி.

பொருள்:—போரில் யாவரையும் இழந்து, இந்திரஜித்தனையும் மூலபலத்தையும் தோற்றபின்னர், நிருதர் கோமகனாகிய இராவணன், போருக்கெழுந்துணிந்து, "வருக தேர்" என்றான்; "புஷ்பகம் வந்தது; அது எப்படியிருந்ததெனில், மண் உலகமும் விண் உலகமும் பாதல உலகமும் எனப்படும் மூவுலகத்துயிர்களும் ஏறின போதிலும், உச்சியில் சொருகிய பூ எனும்படி அத்துணை அகற்சியுடையது; குதிரை பூட்டப்பெறாதிருந்தாலும் இராவணன் நினைத்த இடத்திற்கு அவன் நினைப்பளவிற் செல்லக்கூடியது" என்பதாம்.

மூவுலகத்துயிர்களும் ஏறிவீற்றிருக்கத்தகுந்த ஆகாயவிமானமாகலின், அதற்கு முப்புரங்களையுவமித்தார்போலும்.

எனவே, புஷ்பகம் சுழன்று கிளம்பி உலவிய படியை யுணர்ந்தாம்.

இனி, அவ்விமானத்தின்தோற்றம் ஆகாயவெளியில் எப்படியிருந்ததெனில், கவி கூறுகிறார்:—

மேலும், கந்தருப்பநகர் விசும்பில்கண்டென :

*கந்தருப்பநகர்—கந்தர்வநகரம் என்பதாம்; "கந்தர்வநகரத்தையாகாயத்தில் ஸஞ்சரிக்கக்கண்டதுபோல" என்கிறார்.*

கந்தர்வநகரமாவது :—

> *" சித்ரவர்ணம் சித்ரரூபம் ப்ராகார க்ரஹ கோபுரம்*
> *அலங்க்ருதம் அநேகாபை : வித்தாந த்வஜ தோரணை :—*
> *"கந்தர்வ நகரம்" தந்தி ந்ருவராஜி க்ஷய யுத்த க்ருத்*
> *த்ருச்யதே சேத் மஹாந்யுத்தம் அந்யோந்யம் நராணீ ப்ஜாம் "*

பொருள் :—*" பலவித வர்ணங்களுடனும் பலவித ரூபங்களுடனும் பிராகார கிருஹ கோபுரங்களுடனும் மொட்டும் கொடியும் தோரணங்களுமாகப் பல்வகையான அலங்காரங்களுடனும் கூடிய கந்தர்வநகரத் தோற்றம், ஆகாயத்திற் காணப்படுமானால், புவிமன்னர்கட்குள் அந்யோந்யமான போர் ஆரம்பிக்கப்பெற்று, மனிதர் குதிரை முதலிய பலவகையான சேதத்தையுண்டாக்கும்" என்பதாம்.*

*எனவே, இராவணன் தேராகிய* புஷ்பகம், சுழன்று *மேலே* கிளம்பி *வானவெளியில்* உலாவிப், போர்க்குறிப்பையும் சேதக் குறிப்பையும் காட்டி நின்றது *என்பது பெற்றாம்.*

*இங்ஙனம், கம்பர், குறித்திருக்கும் உவமையணிகளையெடுத்து ஆராய்ச்சி செய்வோமாயின், அவ்வாராய்ச்சியே பல பக்கங்களடங்கிய புஸ்தகமாகப் பெருகிவிடலாம்; ஆகையால்,* ஒரு சோற்றுப்பத *நியாயத்தில் இங்குக் குறித்து மற்றவற்றை நேயர்களுடைய ஆராய்ச்சிக்கே விடுத்துச் செல்கிறோம்.*

*கம்ப நாட்டாழ்வாரது குறிப்பிற் காணும் உவமைகளோ-* " தனியுவமைகளும், தொடருவமைகளும், கலப்புவமைகளும், அடுக்குவமைகளும், உள்ளுறையுவமைகளும், *எனப் பல விகற்ப உவமைகளாகப் பொலிவுபெற்றுக் கிடக்கின்றன.* இவற்றையெல்

லாம். எடுத்து விளக்கவேண்டுமாயின், "கம்பரலங்காரம் அல்லது கம்பருவமை எனும் பெயருடன் கூடியதொரு தனிப் பெரு நூலைப் பல பகுதிகளாக எழுதத் தொடங்கலே நலமாகும்; ஆதலின், அத்தகையதொரு காலத்தையும் கவிஞரையும் எதிர் நோக்கி விடுத்துச்செல்வோமாக.

இனிக், கம்பரில் காணும் பற்பல அற்புதங்களிற் சிற்சில வற்றைக் குறித்திடுவோம்.

ஏனைப் புலவர்களினும், கம்பராம் பெரும் புலவரிடத்தில், விசேஷித்த சாமர்த்தியங்களைக் காண்கின்றோம். கம்பர், ஒவ்வொரு கவியில், ஒரு எழுத்திலே - ஒரு சொல்லிலே-ஒரு சொற்றொடரிலே-ஏன்! ஒரு கவியிலே-தன்னாற்றலைாவல்லாமல் அதாவது வெளிப்படையில்லாமல் குறிப்பினிற் சதுரமானபொருளையும் அதற்கின மான பல பொருள்களையும் நயமாகவும் தொனியாகவும் தோன் றும்படியாக அமைத்திருக்கும் அற்புதங்களைக் காணலாம்.

இத்துறையில் விழுமவற்றைச் சொல்நயம் என்றோ தவறி யென்றோ குறித்திடல் கவியமரபாம் என்க. சில காண்பாம்:—

—அயோத்தியாகாண்டம் குகப்படலத்தில் குகபரதஸம்பாஷணையில்

"தழுவின புளினர் வேந்தன் தாமரைச் செங்கணானை
எழுவினும் உயர்ந்த தோளாய் எய்திய தென்னை யென்ன
முழுதுல களித்"த" மன்னன் முன்னையோர் முறையி னின்றும்
வழுவினன் அதனைநீக்கமன்னனைக்கொணர்வான்வந்தேன்."

இந்தக் கவியில், கம்பர், ராமபக்தியில் அக்ரேசர்களாகிய குக பரதர்களுடைய ஸம்பாஷணையை வினாவிடையாக வைத்துச் சமர்த்திக்திருத்தலை யுணர்க.

குகன், 'பரதனைநோக்கி, "நீ ஏன் வனத்தை நாடிவந்தனை?" என்று வினவப், பரதன் விடைபகர்ந்தான்' எனபதைக்குறித் திருக்கிறார் கவி; என்பது வெளிப்படையாகும்.

இதில், "எய்தியது-முழுதுலகளித்"த"-முறையினின்றும் - மன்னனே" என்னுமிவற்றை யூன்றி நோக்குங்கால், முறையே, "இருபொருள்குறிக்கும் ஒரு சொல்நயமும் - தொனிப்பொருள் குறித்த ஒரெழுத்துநயமும் - இருபொருள் குறித்த ஒருசொல் இருசொல் நயங்களும் - சாமானியப்பொருளும் விசேஷப் பொருளும் குறித்த ஒருசொல்நயமும்" காண்கின்றோம்.

எங்ஙனமெனின்:—

எய்தியது :—" இங்குவந்தது "; " அங்குநிகழ்ந்தது " - என்னும் இருபொருள்கள் நயமாகத் தொனிக்கக் காணலாம்; எப்படி?

1. " இங்குவந்தது " - " பெற்றவள் சூழ்ச்சியினால் பேர் அரசைப் பெற்றனையே, தாமரைக்கண்களையுடைய பரத! வனத்தை நாடிவந்தது என்னையோ !" என்னும் ஒருபொருளும்;

2. " அங்குநிகழ்ந்தது " - தூணினும் உயர்ந்த தோளுடையனாயிருந்தும், சிவந்த கண்ணுடைய பரத! அயோத்தியில் நிகழ்ந்த அவலம் என்னையோ!" என்னும் வேறு பொருளும் கிடைக்கின்றன.

முதற்பொருளாகிய ஒரு வினவால், பரதன் வனம்வந்ததைக் குறித்திடும் மங்கலச் செய்தியும்; இரண்டாம் பொருளாகிய வேறொரு வினவால், தசரதன் இறந்ததைக்குறித்திடும் அமங்கலச் செய்தியும் பொருள்களாகத் தொனிக்கின்றன காண்க.

முழுதுலகளித்"த":-"முழுது + உலகு + அளித்"த" - (மூன்று சொற்கள் சேர்ந்த ஒரு சொற்றொடர்).

"உலகம் முழுவதும் அளித்த" - என்பது பொருளாம்; அதாவது, "உலகம் முழுவதையும் ( ஸ்ரீராமபிரானுக்குக்) கொடுத்த மன்னன்" என்னும் ஒருபொருளாகிய மங்கல விடையும்:—(அளித்த - கொடுத்த).

"உலகம் முழுவதையும் காப்பாற்றின மன்னன்" - என்பது மற்றொருபொருளாம்; அதாவது, (அளித்த=காப்பாற்றின) என்று நிகழ்காலம் குறியாமல் இறந்தகாலத்தையே காட்டி நின்ற மற்றொருபொருளாகிய அமங்கல விடையும் - கிடைப்பதையூன்றிக் கவனிக்கவும்.

இரண்டாம் பொருளில் - "அமங்கலம் எப்படித் தொனிக்கின்றது" என்பதைக் கூறுவோம் :—

இச்சொற்றொடரில், அளிக்கும் - என்றாலே, செய்யுட்கு இசையும் அசையும் பொருந்துமாறிருக்கக், கவி, அங்ஙனம் கூறாமல் - அளித்த - என்று இறந்தகாலத்திற் கூறியிருக்கிறார்; ஏனெனில், "அளிக்கும்" - என்றால், அது நிகழ்காலப் பொருளை யுணர்த்தி, "மன்னன் உயிருடன் இருக்கிறான்" என்பதைக் குறித்திடும்; ஆயின், இது உண்மைக்கு மாறுபாடான பொருளாகும்; அளித்"த" - என்று "த்" என்னும் இறந்தகால இடைநிலையைக்கொடுத்தபடியால், "மன்னன் உயிரிழந்து மறைந்தொழிந்தான்" - என்னும் பொருளைத் தொனியால் குறித்து, உண்மையான பொருளையே உணர்த்தி நிற்றலைக் காண்கிறோம்.

முறையினின்றும் :—இத்தொடரை - "முறையில் + நின்றும்" - எனக்கொள்க; இது, ஒரு பொருளில், "முறையில் நின்றும்" - என்றதில் காணப்பெறும், "நின்றும்" என்னும் பதம், ஐந்தாம் வேற்றுமையுருபாக இருந்து, "முறையிலிருந்தும் வழுவினன்" - என்னும் கருத்தையும், மறுபொருளில், "முறையில் நின்றும் வழுவினன்" என்பதிற் காணப்பெறும், "நின்றும்" - என்னும் பதம் - "நின்று + உம் - என்றாகி, "நின்றான் ஆயினும்" என்னும் பொருளைத்தந்து, "முறையில் நின்றும் (முறையில்) வழுவினன்"- அதாவது, 'தசரதமன்னன், முன்னேயோரது, ஒரு முறையாகிய சத்தியத்தில் நின்றானாயினும், முன்னேயோரது, மற்றொரு முறையாகிய - "மூத்த குமாரனே முடிபெற்று அரசு கட்டிலில் ஏறல்

வேண்டும்'' - என்னும் (முறையில்) தருமத்தில் வழுவினன்'' என்னும் கருத்தையும் தந்து விளக்கி நிற்றலைத் தேர்ந்து தெளியலாம்.

மன்னனைக் கோணர்வான் "மன்னனை" - என்னும் சொல்லை நோக்குக - "மன்னனை"—"குலத்திற்குரிய" - "குலமுறைக்குரிய மன்னனாகிய ஸ்ரீ ராமபிரானை" யென்றும், "மன்னனை" எனக்கு முன்னவன் (மூத்தவன்) என்னும் உறவின்முறை நீங்கி, ஸாமானியப் பிரஜைபோன்றவனாகிய "எனக்குரியமன்னனாகிய ஸ்ரீ ராமபிரானை" யென்றும் பொருள் தந்து நிற்றலையுணர்கிறோம்.

இவற்றில்,முன் பொருளாகிய-"குலமுறைக்குரிய மன்னனை" என்பது சாமானியப் பொருளாய் நின்று, குலத்தில் முன்னர்ப் பிறந்தமையால், தந்தை யிறந்தொழிந்திடலால், "தரணி காக்கற்குரிய மன்னனாகிய ஸ்ரீராமபிரானை" - என்னும் விளக்கத்தையும் ;

பின் பொருளாகிய - "எனக்குரிய மன்னனை" - என்பது விசேஷப்பொருளாய் நின்று, "என் அன்னையாகிய கைகேயி, என் நிமித்தம், குலத்தின் முன்னவனாகி - முடிசூடும் முறைக்குரியவனாகி, ஸ்ரீராமபிரானுச்குச் செய்துள்ள வஞ்சனையொழியும்பொருட்டும், என் அன்னைமேல் தோன்றிய கோபத்தினால், "என்னை - (மன்னன், ஆவான் வரும் அப் பரதன் தன்னையும்) - மகன் என்று உன்னேன் - "அதாவது" மன்னன் ஆகக்கூடிய நிலையில் வரும் அந்த (க்கைகேயி மகன்) பரதனையும் நான் என் மகனாக நினைக்க மாட்டேன் என்ற தசரத சக்ரவர்த்தியின் சத்தியத்தைக் காத்தல்பொருட்டும், "நான் ஸ்ரீராமபிரானை யெனக்கு முன்னவன் என்னும் உறவின்முறையை நீக்கி, ஒரு சாமானியப் பிரஜையாகவே மதித்துக்கொண்ட பரதனாகிய என்னால், மன்னனாகவே மதிக்கப்பெற்ற ஸ்ரீராமபிரானை" என்னும் விளக்கத்தையும் தொனிக்க வைத்திருத்தல் காண்கின்றோம்.

எனவே, இவ்வெடுத்துக்காட்டினால் - இச்செய்யுளிற்கண்ட குறிப்பினால் - அதாவது இச்செய்யுளிற்கண்ட - அளித்த என்

னும் இறந்தகாலக் குறிப்பினால், "ஒரு எழுத்திலே நயம்" தோன்ற அமைத்திருத்தலை யறிந்து கொண்டோம். இவ்வகையில் இந்த எடுத்துக்காட்டு, ஒரு சோற்றுப்பத நியாயத்திற் கொள்ளப் பெற்றது.

இனி, "ஒரு சொல்லிற் காட்டியிருக்கும் நய" த்துக்கும் ஒரு உதாரண நியாயம் பற்றிக் காண்போமாக.

— பாலகாண்டம் — மிதிலைக்காட்சிப் படலம் — ௯அ-வது கவி :—

"மருங்கிலா நங்கையும் வசையில் ஐயனும்
ஒருங்கிய இரண்டுடற் குயிரொன் றாயினார்;
கருங்கடற் பள்ளியிற் கலவிநீங் கிப்போய்ப்
பிரிந்தவர் கூடினாற் பேசல் வேண்டுமோ !"

பொருள் :—"வெளிப் படாமையால், இடையில்லாதவள் என்று சொல்லற்குரிய நங்கையாகிய சீதாபிராட்டியும், எல்லாம் இசையே பொருந்தியபடியால், வசையில்லாதவன் என்று புகழ்தற்குரிய நம்பியாகிய ஸ்ரீ ராமபிரானும், ஒற்றுமைப் பட்ட இரண்டு உடல்கட்கு ஓருயிரொன்னும்படியானார்கள்; பெரிய பாற் கடற் பாம்பணையிலிருந்தும் - அவ்வணையில் காத்தற் கடவுளும் போக சக்தியுமாயிருந்தருளிய நிலையிலிருந்தும் - ஈருருவும் ஒரு யிருமான கலவியிலிருந்தும் நீங்கி, அந்தக் கடலாகிய ஜல பூதத்தி லிருந்தே போய்ப் பிரிந்தவர்களாகிய - பிரியாத் தன்மையையுடைய ரக்ஷகனும் ரக்ஷகியுமாகிய திருமாலும் இலக்குமியும் - உலகத்தை யெல்லாம் இராவண பயத்திலிருந்து காத்தளிப்பதன் பொருட்டுப் பிரிந்து, இந்நிலவுலகில் - அவ்வயோத்தியினில் இராமனும் சீதை யுமாகத் தோன்றி, மறுபடியும் இம்மிதிலைப் பெருநகரிற் கூடுவார் களாயின், அவ்வழியாச் சேர்க்கையின் பயனைப் பற்றிப் பேசலும் வேண்டுமோ! வேண்டாம் என்றபடியாம்" என்பதாம்.

இக்கவி, மிக விசேஷித்த பொருளுடைய தாயினும், இக் கவி முழுவதும் பொருள் கூற நாம் ஈண்டுப் புகவில்லை; அப்

பொருள் விரியும்; அது தோன்றிமிடத்திற் காணலாம்! ஆனால், இக்கவியில், ஈண்டு நாம் எடுத்துக்காட்ட வேண்டியதாகிய ஒரு சொல்லிற் காட்டிய நயத்துக்குரிய அரும்பதம் "போய்" என்பதாகும்; அச்சொல்லிற்றோன்றும் நயத்தையும், அந்நயம் தொனிக்கும் படியாக முன்னும் பின்னும் நிலைத்திருக்கும் பதங்களின் தொடர்புகளையும் ஏற்ற நியாயங்களையும் எடுத்து ஆராய்வோமாக:—

இக்கவியில், நமது "ஒருசொல்லிற்றோன்றும் நயம்" என்பதையாராய்வதற்கு, இதனது "மூன்றாமடியிற்காணப்படுவதாகிய,

"கருங்கடல் பள்ளியில் கலவிநீங்கிப்"போய்ப்"
பிரிந்தவர்" * * * * * "

என்னும் சொற்றொடரை, நன்கு ஊன்றிக் கவனித்தல்வேண்டும்.

இதன்பொருள் :—"பெரிய திருப்பாற்கடலிலே ஆதிசேஷசயனத்திலே, ஒருவரோடொருவர் இணைந்துகூடியிருந்த (ஈருருவும் ஒருருவாகக்கலந்திருந்த) கூட்டம் நீங்கி, அங்கிருந்தேதனித்தனியாகப்பிரிந்துபோய்," இராமனும்சீதையுமாக இங்குத்தோன்றிக் கூடினவர்களாகிய திருநெடுமாலும் செந்திருமகளும்"—என்பதாம்.

இத்தொடரில், "ஒன்றிய போகமும் யோகமும் ஒத்து" - "அகலகில்லேன் இறையும் என்று அலர்மேன்மங்கை யுறைமார்பன்" - என்று பெரியார் பணித்தபடியாக, "உன்னைச்சிறிதும் பிரிந்திடச்சகியேன் என்று செந்தாமரையாள் நித்தியவாஸம் செய்யும்மார்பையுடைய ஸ்ரீநிவாஸன்" என்னும்படித் தானும் திருமகளுமாக இணைபிரியாதிருந்தவர், உலகஸம்ரக்ஷணார்த்தம், இவ்விருள் தருமாஞாலத்து இராமனும் சீதையுமாகத் தோன்றற்காக, அப்பாற்கடற் பள்ளியை நீங்கிக் கலவியைப்பிரிந்தவர்கள்" - என்று குறித்தற்பொருட்டு, இரண்டு நீக்கங்களைக் கூறவந்தவர், அதற்கேற்ற இரண்டு இடங்களையும் குறித்திருத்தலைக் காண்க; என்னை?

"பெரியபாற்கடற் பள்ளியைநீங்கினார்கள்; ஈருருவும் ஒருருவாக இருந்த கலவியைப்பிரிந்தார்கள்" - என்று நீங்கல் பிரிதல்

களாகிய இரண்டு வினைகட்கு ஏற்ப, ப், "பள்ளியில்-கலவி" என்னும் இரண்டு இடங்களைமாத்திரங் குறித்திருக்கின்றார்; எனவே, இப்பொருளைப் பெறற்கு - "கருங்கடற் பள்ளியிற் கலவி நீங்கிப் பிரிந்தவர்" - என்னும்சொற்றொடரை யமைத்தலே சால்புடைத்தாமாயிருக்க, நீங்கி எனும் பதத்துக்கும் பிரிந்தவர் என்னும் பதத்துக்கும் இடையிற் போய் என்னும் ஒரு அரும் பதம் வீழ்ந்து கிடக்கின்றது; இப்பதம், இத்தொடரில், இப்பொருட்கு வேண்டாப் பதமாகவே தோன்றுகின்றதன்றோ! ஆகலின், இந்தப் "போய்"-என்னும் பதம், "பயனில் சொல்" லாகவோ, "வழூஉச் சொல்" லாகவோ, "மிகைபடு சொல்" லாகவோ வீழ்ந்திருத்தல் வேண்டுமோ? என்னில், அற்றன்று; நியாயம் கூறுதும் :—

செந்சொற் புலவர்களாகிய மகாகவிகள், தமது காவியங்களிலே—கவிகளிலே, "பயனில சொல்லார்; வழூஉச்சொல் புணர்த்தார்; மிகைபட மொழியார்" என்பது ஒருகலைபாம் என்க.

"செவ்விய மதுரஞ் சேர்ந்தநற் பொருளிற் சீரிய கூரிய தீஞ்சொல் வவ்விய கவிஞர்" * * *

என்றபடி, "மகா கவிகட்கு - உத்தம கவிகட்கு - விஸ்தார கவிகட்குத் தாம் குறித்துக்கொண்ட பொருளுக் கேற்ற வண்ணம், "செவ்வியும், மதுரமும், நற் பொருளிற் சீர்மையும், கூர்மையும் பொருந்திய சொற்கள் தாமே வந்து வவ்வும்" (பொருந்தும்) என்பது மகா கவிகளைப் பற்றி விழுமியோர் கொண்ட கருத்தாமாறு கருதுக.

எனவே, "நினைவிற் கொண்ட பொருளுக்கேற்ற சொற்கள் தாமே வந்து வீழும்" வாய்ப்புப் பெற்ற தவச் செல்வராகிய உத்தம கவிகள் வாக்கில், "பயனில்சொல்லும்வழூஉச்சொல்லும் மிகைபடு சொல்லும்" விழமாட்டா என்பது உணரலாம்.

கம்ப நாட்டாழ்வார், "கவி சக்ரவர்த்தி யென்றும் உத்தம கவி யென்றும், கல்வியிற் பெரியாரென்றும், பெரியோர்களால்

அழைக்கப்படுதல் உண்மையின், அப் பெரியாரது வாக்கில் - அவர் குறித்த இக்கவியில், மிகைபடும் பயனில்சொல் வீழ்ந் திருத்தல் இயல்பாக மாட்டாது. எனவே, இக்கவியில் விழுந் திருக்கும், "போய்" என்னும் இப்பதம், பொருந்திய - நற் பொருளைச்-சீர்மையில்-கூர்மையிற்-குறித்தற் கென்று வவ்விவந்த "தீஞ் சொல்" லாகவே இருத்தல் வேண்டுமென்பது உறுதியா கின்றது.

ஆயின், "போய்" என்னும் இப்பத வீழ்ச்சிக்கு "ஏற்ற பொருள்தான் என்னை?" என்பதை நன்கு ஆராய்வோமாக.

இஃது ஆராய்ச்சிக்குரிய தொரு தக்க விஷயமே யன்றோ! இந்தக் கவியிலுள்ள, "நீங்கிப் போய்ப் பிரிந்தவர்" என்பதை "நீங்கிப் பிரிந்து போனவர்" எனப் பிரித்துக் கூட்டிப் பொருள் கொள்ளல் சால்புடைத்து; அதாவது "திருமாலும் திருமகளும் இராமனும் சீதையுமாகத் தோன்றற் பொருட்டு, "பெரிய திருப் பாற்கடற் பாம்பணையிற் றமது கலவியை நீங்கித் தனித் தனிப் பிரிந்து போனார்கள்" எனக் கொள்வதாம்.

"பிரிந்து போனார்கள்" - என்றதால், "அந்தப் பாற்கடலா கிய ஜலபூதத்திலிருந்தே, காத்தற்கடவுளும் போகசக்தியுமாயிருந்த திருமாலும் இலக்குமியும் பிரிந்து போனார்கள்" - என்பது தொனித்துக்கொண்டிருத்தலையுணரலாம்.

எனவே, "நீங்கிப் பிரிந்துபோனார்கள்" - என்னும்போது, (1) "பாற்கடற் பள்ளியில் நீங்கினார்கள்" - என்பதும், (2) "கலவி பிரிந்தார்கள்" - என்பதும், பிறகு அவ்விடத்திலிருந்தே (3) தனித் தனியாகப் போனார்கள்" - என்பதும் நமக்குப் போதமாதலை யுணர்கிறோம்.

இதில், இப்பொருளில், அவ்விருவரும், பாற்கடற்பள்ளியி லிருந்து நீங்கினமையும், கலவியிலிருந்து பிரிந்தமையும் செய்யுளி லே, "கருங்கடற்பள்ளியிற் கலவி நீங்கிப்பிரிந்தவர்" என்று வெளிப்படையாகக் காட்டப்பட்டிருக்கின்றன: ஆனால், "தனித்

தனியாகப் போனார்கள்" - என்பது மாத்திரம் குறிப்பினால் உணர்ந்துகொள்ளவைக்கப்பெற்றிருக்கின்றது.

ஆகையால், "அவர்கள், பாற்கடலாகிய ஜலபூதத்திலிருந்து தனித்தனியே எங்கேபோனார்கள்?" என்பதை விளக்கமாக அறிய வேண்டியிருக்கின்றது; அது கவியின் குறிப்பாகக் கொள்ளற்குத் தக்க சான்று தேடவும் வேண்டியிருக்கின்றது.

கம்பர், இந்தச் செய்யுளில், "மிதிலைவந்து இராமனும் சீதையுமாகக்கூடினவர்களைப்" பாற்கடலில் அரவணையில் ஈருருவும் ஓருயிருமாகக் கலந்திருந்து உலகத்தைக் காத்தற்பொருட்டுப் பிரிந்தவர்களாகிய, காத்தற்கடவுளாகிய திருமாலும் போகசக்தியாகிய திருமகளுந்தான் என்று வெளிப்படையாகக் காட்டியிருக்கிறார் என்பது நன்கு விளங்குகின்றதல்லவா? இதிலிருந்து, அவர்கள் தனித்தனியாகப்பிரிந்துபோனதைப் பற்றியாராய்வோம்.

கம்பநாட்டாழ்வாரது கருத்துப்படி, திருமாலும் திருமகளும் யாரெனில், மும்மூர்த்திகளாகப் பேரறிஞர்களால் ஒப்புக்கொள்ளப்பெற்ற பிரமன் விஷ்ணு சிவபிரான் என்றுசொல்லப்படுகிற - பரப்பிரம்மவஸ்துவின் மூன்று அம்சங்களில் - நடுஅம்சமாகிய விஷ்ணுவும் அந்த அம்சத்தின் சக்தியாகிய இலக்குமியுந் தான் என்பது வெளியாகின்றது. எப்படியெனில், கம்பரது கருத்தை யவரது பாசுரங்களின் அடியொற்றியே ஆராய்வோம்.

பாலகாண்டத்தில், பாயிரப்படலத்தின், முதற்செய்யுளாகிய

"உலகம் யாவையும் தாமுள ஆக்கலும்
நிலைபெ றுத்தலும் நீக்கலும் நீங்கலா
அலகி லாவிளை யாட்டுடை யாரவர்
தலைவர் அன்னவர்க் கேசர ணங்களே"

என்றதால், "உலகினுக்குத்தலைமையான வஸ்துவாகிய பரப்பிரம்மத்துக்கு, உலகை ஆக்கலும் - காக்கலும் - நீக்கலுமென்னும் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களாகிய மூன்று கிருத்தியங்களும் உண்மை விளக்கப்பட்டிருக்கின்றது.

அந்த மூன்று கிருத்தியங்கட்கும் அதிகாரிகளாகிய பிரமன் விஷ்ணு சிவபிரான் என்னும் மூன்று மூர்த்திகளாக அந்தப்பரப் பிரம்மமே அம்சமெடுத்ததாகப் பேரறிஞர் கொண்டுள்ளார்கள் என்பது மூர்த்தித்தத்துவத்தின் முடிந்தபொருளாகும்.

அம்மும்மூர்த்தி முதல்வனே, இந்த ஸ்ரீராமபிரானென்று, கம்பநாட்டாழ்வார், தமது இராமாயணத்திற் பலப்பல இடங்களி லும் குறித்துப்போயிருக்கிறார்.

"முப்பரம் பொருளிற்குண் முதல்வன்"
"முப்பரம் பொருளிற்குள் முதலைமூலத்தை"
"மூன்று கவடாய் முளைத்தெழுந்த மூலமோ"
"முத்தேவரின் மூலமுதற் பொருளாம் அத்தேவர்"

எனும் இத்தொடக்கத்த பாசுரங்களால் அறியலாம்; அன்றியும், உயுத்தம் - மீட்சிப்படலத்தில், பிரமன் துதியில்,

"என்னுருக் கொடிவ் வுலகினை ஈனுதி யிடையே
உன்னுருக் கொடுபுகுந்து நின்றோம்புதி உமையோன்
தன்னுருக் கொடுதுடைத்தி"

என்னும் குறிப்பாலும், சுந்தரம் - பிணிவீடு - அநுமராவண ஸம்வாதத்தில்,

"மூலமும் நடுவும் ஈறும் இல்லதோர் மும்மைத் தாய
காலமும் கணக்கும் நீத்த காரணன் கைவில் லேந்திச்
சூலமும் திகிரி சங்கும் கரகமுந் துறந்து தொல்லை
ஆலமும் மலரும் வெள்ளிப் பொருப்பும்விட் டயோத்தி வந்தான்"

என்னுங் குறிப்பாலும், அம்முதல்வனே, ஸ்ரீராமனாக வந்து அவதரித்திருக்கின்றான் என்பது காட்டப்பட்டிருக்கின்றது.

அம்மூழு முதல்வனே ஸ்ரீராமபிரானாகத் தோன்றியிருத்தல் உண்மையானாலும், அம்முதல்வனுக்கு ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹா ரங்களாகிய முத்தொழில்களும் ஒப்புக்கொள்ளப் பெற்றமையின், இம்முத்தொழில்களில், இராமபிரானிடத்தில் எத்தொழில் மீசுர

மாக நிற்கின்றது? அதாவது, பரப்பிரம்மம் எந்தத்தொழிலை பிரதானமாகக் கொண்டு, ஸ்ரீ ராமனாகத் தோன்றியது? என்னும் வினாகட்குச் சான்றாகப் பாசுரங்கள் நமக்கு வேண்டியிருக்கின்றன.

சுந்தரகாண்டம் - பிணிவீட்டுபடலம், ஹனுமராவண ஸம்வாதத்தில், இராவணஸபையில், வீடணற்கு உணர்ச்சிதோன்றும் பொருட்டு, ஸ்ரீ ராமபரத்துவத்தைப்பற்றி இராவணற்கு அநுமான் கூறிவந்த பாசுரங்களில் ஒன்றாகி, நாம் முன்னங்குறித்துள,

"மூலமும் நடுவும் ஈறும் இல்லதோர் மும்மைத் தாய
காலமும் கணக்கும் நீத்த காரணன் கைவில் லேந்தி
சூலமும் திகிரி சங்கும் கரகமும் துறந்து தொல்லை
ஆலமும் மலரும் வெள்ளிப் பொருப்பும்விட் டயோத்தி
வந்தான"

என்னும் செய்யுளை நன்கு கவனிப்போமாக

இதன் பொருள் :—"மூலமும் - ஆதியும், நடுவும் - மத்தியும், ஈறும் - முடிவும், இல்லது - இல்லாத, ஓர் - ஒப்பற்ற, மும்மைத் தாய - மூன்றாகச்சொல்லப்பெற்ற, காலமும் - பூத பவிஷ்யத் வர்த்தமானம் என்னும் முக்காலங்களும், கணக்கும் - (பிரமேயத்தை யறிந்துகொள்ளற்கு உதவியான) பிரமாணங்களும், நீத்த - கடந்து நின்ற, காரணன் - நாம ரூபங்களற்ற உலககாரணனாகிய பரப்பிரம்மவஸ்து, (உலகத்தைக் காப்பதற்கென்று ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களென்னும் முத்தொழில்களை யேற்றுப் பிரமன் விஷ்ணு சிவன் என்னும் அம்சங்களில் மும்மூர்த்திகளாக இருந்த நிலையில் இருந்து, அந்த அம்சங்கட்கு உரிய கருவிகளாக இருந்த) சூலமும்—சூலாயுதத்தையும், திகிரி சங்கும்—சக்ராயுதத்தையும் சங்கையும், கரகமும் - கரகம் என்னும் ஆயுதத்தையும், துறந்து —நீக்கிவிட்டு, தொல்லை - பழமையான இருப்பிடங்களாகிய, ஆலமும் - வடதருவும், மலரும் - வெண்தாமரை மலரும், வெள்ளிப்பொருப்பும் - கைலைமலையும், விட்டு - நீக்கிவிட்டு, அயோத்தி வந்தான்—அயோத்தியில் அவதரித்தான்."

என்றபடியால், "காலமும் கணக்கும் நீத்த உலககாரணமான பரப்பிரம்மவஸ்துவே, சூலந்தாங்கிச் சிவனுருவில் சம்ஹாரசக்தியுடன் வெள்ளிப்பொருப்பில் இருந்ததென்பதையும், திகிரி சங்குகளைத்தாங்கி விஷ்ணு உருவில் ஸ்திதி சக்தியுடன் வடதருவில் இருந்த தென்பதையும், கரகந் தாங்கிப் பிரமனுருவில் ஸ்ருஷ்டி சக்தியுடன் வெண்டாமரைமலரில் இருந்த தென்பதையும், "அந்தப் பரப்பிரம்மமே, இன்று ராவணாதிராக்கதர்களை வென்று உலகத்தை ரக்ஷிக்கும் பொருட்டு, அம்மூன்றிடங்களையும் விட்டு, மூன்று ஆயுதங்களையுந்துறந்து, மூன்று உருவங்களையும் மறைத்துக்கொண்டு, ஸ்ரீ ராமனாகித் திருவயோத்தியில் அவதரித்தது" என்பதையும் விளங்கவுணர்ந்தோம்.

ஆயின், நாம ரூபமின்றி அதாவது அமூர்த்தமாகி, அகர்த்தாவாகி அதாவது தொழிலற்றதாகியிருக்கும், பரப்ரம்ம வஸ்து, மூர்த்தமும் தொழிலும் கொண்டதாகக் குறித்தமை யெவ்வாறெனில், "மனோவாக்குகட் கெட்டாத பரப்ரம்மமே இவ்வுலகம்" என்பது விவர்த்த பரிணாம வாதத்தினால் விவரிக்கப்படுதலால், நாம ரூபமற்ற நிலையில், அந்தப் பரப்ரம்மத்தைத் தியானிக்க முடியாத - கேவலம் பௌதிக கருவிகளாகிய ஞானேந்திரிய கர்மேந்திரிய உதவிகளைக் கொண்டே தியானிக்கும் பாமரர்கட்கும் கிட்டுதற் பொருளாகி, அந்தப் பரப்ரம்மம் - மூன்று பூதங்களிலும் மூன்று உருவங்கொண்டு, மூன்று குணம் மூன்று சக்தியுடைய மும்மூர்த்தியாகி - விளங்கியிருக்கின்ற தென்பது அறிஞர் கொள்கையாகும்.

அதாவது, பஞ்ச பூதங்களில், ஆகாயமும் வாயுவும், பௌதிக கோசரமாதல் சிரம சாத்தியமாகலின், சுலபத்தில் பௌதிக கோசரமாகும், மற்றை மூன்றுபூதங்களிலே அந்த மும்மூர்த்தி யம்சங்கள் காணப்படுகின்றனவென்பது வெளிப்படை; எப்படியெனில்,

அக்கினி பூதம்-செந்நிறமும் உஷ்ண (தாமஸ) குணமும் ஸம்ஹார சக்தியும் கொண்டது; அதில் தோன்றிய அம்சமாகிய ஸம்ஹாரக்கடவுள் சிவபிராற்கு, அக்குணமும், அந்நிறமும் அந்த சக்தியுமே கொண்டு நாம் போற்றுகிறோம்.

ஜலபூதம் — பசிய நிறமும் தண்ணிய (ஸத்துவ) குணமும் ஸ்திதி சக்தியும் கொண்டது; அதில் தோன்றிய அம்சமாகிய ஸ்திதிக்கடவுள் விஷ்ணு மூர்த்திக்கு, அக்குணமும் அந்நிறமும் அந்த சக்தியுமே கொண்டு நாம் போற்றுகிறோம்.

பிருதிவீ பூதம் — பொன்நிறமும் ராஜஸ குணமும் ஸ்ருஷ்டி சக்தியும் கொண்டது; அதில் தோன்றிய அம்சமாகிய ஸ்ருஷ்டிக் கடவுள் பிரமனுக்கு, அக்குணமும் அந்நிறமும் அந்த சக்தியுமே கொண்டு நாம் போற்றுகிறோம்.

இந்த விளக்கம், உயுத்தம் — மீட்சிப் படலம் — பிரமன் துதியாக நாம் முன்னர்க் குறித்த "என்னுருக்கொடு இவ்வுலகினை ஈனுதி" என்னும் பாசுரத்தால் விளங்கவுணர்கிறோம்!

எனவே, "விஷ்ணுவும் இலக்குமியும், ஸ்திதிக்கடவுளர்களாகிப் பாற்கடலாகிய ஜலபூதத்தில் தங்கியிருக்கிறார்கள்" என்பது தத்துவபோதம்.

"ஸ்திதிக்கடவுளாகிய விஷ்ணுவே ஸ்ரீராமனாகவும் - ஸ்திதி சக்தியாகிய இலக்குமியே சீதையாகவும் வந்தவதரித்துள்ளார்கள்" என்பது ராமாயண ஆசிரியர்களது கொள்கை.

இதனால், உலககாரணமாகிய பரப்பிரம்மவஸ்து, பௌதிக கருவியுடைய பாமரர்க்கும் போத்யமாம்படியாக - அக்கினி பூதத்தில் அதற்குரிய குணம் நிறம் சக்திகளை அவலம்பித்துச் சிவபிரானாகவும், ஜலபூதத்தில் அதற்குரிய குணம் நிறம் சக்திகளையவலம்பித்து விஷ்ணுமூர்த்தியாகவும், பிருதிவி பூதத்தில் அதற்குரிய குணம் நிறம் சக்திகளையவலம்பித்து பிரமனாகவும் - காட்சிகொடுக்கின்றார் என்பதும், அவற்றுள், ஜலபூதக்கடவுளாகிய விஷ்ணு அம்சத்திலிருந்தே, லோகஸம்ரக்ஷணார்த்தம் இராமனும் சீதையுமாகத் தோன்றினரென்பதும் — கம்பராமாயணரஹஸ்யமாகக் கொண்டோம். இக்குறிப்பினைப்,

பாலகாண்டம், திருவவதாரப் படலத்திலுள்ள ஸ்ரீராமாவதாரப்பாசுரமாகிய,

"ஒருபகல் உலகெலாம் உதரத்துட் பொதிந்து
அருமறைக் குணர்வரும் அவனை அஞ்சனக்
கருமுகிற் கொழுந்தெழில் காட்டும் சோதியைத்
திருவுறப் பயந்தனள் திறங்கொள் கோசலை"

என்னும் அருங்கவியில் விளங்கக்காண்கிறோம்.

பொருள்:—ஒருபகல் - உலகமொடுங்கி பெரும்பாழான தொருகாலத்திலே, உலகெலாம் - எல்லாப் பிரபஞ்சங்களையும், உதரத்துட் பொதிந்து - தனக்குள் ஒடுக்கிக்கொண்டு, அரு மறைக்கு=அறிவுத் தொகுதியாகிய வேதத்துக்கும், உணர்வு அரும்=தெரிந்து கொள்ளற்கு அரிதாயிருக்கும், அவனை - அந்தப் பரப்பிரம்மவஸ்துவை, மற்றும், அஞ்சனக் கருமுகிற்கொழுந்து - மைந்நிறத்துக்கரியதொரு மேகக்கொழுந்தினுடைய, எழில் காட்டும்-கரிய அழகைக் காட்டிய உருவுடன் விளங்கிக்கொண்டிருக்கும், சோதியை-விஷ்ணுமூர்த்தியை, திறங்கொள்கோஸலை - ஒரு குலத்தினை விளக்கும் சாமானியத் தாய்மார்கள் போலல்லாது ஒரு உலகத்தையே விளக்கும் உலகத்தாயாய் விளங்கும் திறங்கொண்டுள்ள கோஸலா தேவியானவள், திரு உற-தான் புகுந்த குடும்பம் புத்திரபாக்கியமாகிய திருவைப் பெறற்கோ; அன்றிச் சூரிய குலம் ஸந்தான விருத்தியாகிய திருவைப்பெறற்கோ; அன்றிப் பௌலஸ்தியனாகிய இராவணனால் இழந்திருக்கும் திருவை இந்தப்பிரபஞ்சமே பெறற்கோ; அன்றி, பரத்துவ நிலையிலுள்ள பரப்ரம்ம மாகப் பரந்த வஸ்துவையே - வியூஹ நிலையிலுள்ள நிலமேக சியாமள ரூபத்தில் விஷ்ணு மூர்த்தியாக விரிந்த வஸ்துவையே, - அதனது மூன்றாவது நிலையாகிய (திருஉற - திரு=விபவம்) விபவ நிலையைப்பெறச் செய்யற்கோ, பயந்தனள்=பெற்றாள்."

என்னும் குறிப்பால் உணர்கிறோம்.

பரப்ரம்ம நிலை ஐந்து:—அவை (1) பரத்வம் (2) வ்யூஹம் (3) விபவம் (4) அந்தர்யாமி (5) அர்ச்சை - என்பர் பெரியார்.

ஸ்ரீராமவதாரம் – விபவ நிலையின் பரம காஷ்டை.

எனவே, பரப்ரம்மவஸ்து, தனது மும்மூர்த்தியவஸாத்தி லும்வைத்து லோகஸம்ரக்ஷணம் என்னும் காரியத்துக்காக, ரக்ஷகக் கடவுளாகி, ஸ்திதி மூர்த்தியென்னும் விஷ்ணுவின் அம்சத்தி லிருந்தும், ஸ்ரீராமனுகத் தோன்றியதுஎன்னும் உண்மையைப் பெற்றோம்.

இந்த உண்மையில், விஷ்ணு ஜலபூதக் கடவுளாகையால் அம்மூர்த்தியும் அவரது சக்தியாகிய இலக்குமியும், ஜலபூதத்தி லிருந்தே தோன்றவேண்டியிருக்க-சக்தனுகிய விஷ்ணு இராமனுக யாகாக்கினியிலிருந்தும், சக்தியாகிய இலக்குமி சீதையாகப் பூமியிலிருந்தும் - அதாவது ஒருவரைவிட்டொருவர் பிரியாத சக் தனும் சக்தியுமாகிய ஜலபூதக்கடவுளர்கள் அக்கினி பூதத்திலிருந்தும் பிருதிவீபூதத்திலிருந்தும் எப்படித்தனித்தனியே தோன்றினுர்கள்?" என்னும் வினுவை விளக்குதற்கே,

கம்பநாட்டாழ்வார் — "மருங்கிலா நங்கையும்" என்னும் நமது அதிகாரச் செய்யுளில்,

"கருங்கடற் பள்ளியிற் கலவிநீங் கிப்போய்ப்
பிரிந்தவர் கூடினுல்"

என்று கூறிப், போய், என்னும் அரும்பதத்தால் உண்மையை விளக்கிச் சங்கையை யொழித்திருக்கின்ருர் போலும்.

எங்ஙனமெனில்— ஜலபூதக் கடவுளர்களாகிய விஷ்ணுவும் இலக்குமியும், அந்த ஜலபூதமாகிய பாற்கடலில், பாம்பணைப் பள்ளியை நீங்கினுர்கள்; ஈருருவும் ஒருயிருமாகிய கலவியைப் பிரிந்தார்கள்; என்னுமாற்ருல், அவரவர் தனித்தனியே வெவ்வேறு பூதங்களிலிருந்து பிறத்தற் கேதுவாகும் பொருட்டு அந்த ஜல பூதத்திலிருந்தே தனித் தனிப் பிரிந்து - ஒருவர் (சக்தர்) ஜல பூதத்தின் முன் பூதமாகிய அக்கினி பூதத்திலும், மற்ருெருவர் (சக்தி) ஜலபூதத்தின் பின் பூதமாகிய பிருதிவீபூதத்திலும் போனுர் கள் - என்று குறிப்பின் உணர்த்தற் பொருட்டு, "நீங்கிப் போய்ப் பிரிந்தவர்" என்று குறித்திருக்கின்ருர் என்க.

எனவே, இவ்வாராய்ச்சியால், ஒரு சொல்லிலே தொனித்

நேயர்காள்:— பொது ஆராய்ச்சியென்று நாம் வகுத்துக்கொண்ட இப்புதுத் துறையில் இதுவரையில் ஓர் எழுத்து நயத்தையும், ஓர் சொல் நயத்தையும் குறித்து ஆராய்ந்து அவ்வத் துறைக்கு ஒவ்வொரு உதாரணம் காட்டிவந்தோம். இனி "ஒரு சொற்றொடர் நயத்தையும் ஒரு தனிக்கவி நயத்தையும்" பற்றி ஆராய எடுத்துக்கொண்டு ஒவ்வொரு உதாரணம் காட்டிச் செல்வோமாக.

"ஒரு சொற்றொடரில் காட்டியிருக்கும் நயம்" காணற்கு ஒரு உதாரணச் செய்யுள் காண்போம்:— இதுவும் ஸ்தாலிபுலாக நியாயமாகும் — ஆரணியகாண்டம் — சடாயு உயிர்நீத்த படலம் — 15-வது கவி:—

"துஞ்சுவ தென்னைநீர் சொற்ற சொல்லையான்
அஞ்சினன் இருந்தனன் அவலந் தீர்ந்(துநீர்) தினி
இஞ்சிரும் அடியனேன் ஏகு கின்றனன்
வெஞ்சின விதியினை வெல்ல வல்லமோ"

(அஞ்சுவன் மறுக்கிலென்—என்பது பாடாந்தரம்)

பொருள்:— நீங்கள் ஏன் இறந்து படல்வேண்டும்? நீங்கள் சொன்ன சொல்லைக்கேட்டு நான் அச்சமுறுகின்றேன்; ஆகையினால் துக்கமொழிந்து தாங்கள் இங்கேதானே இருங்கள்; அடியனேன் இவ்விடம்விட்டுப் புறப்பட்டுப்போகின்றேன்; நம்மீது மிக்கக் கோபமுடைய விதியினையும் அதன் விளைவையும் நம்மால் வெல்லல் முடியுமோ! என்பதாம்.

இக்கவி, ஆரண்யகாண்டத்தில், மாரீசன் வதைப்படலத்துக்கு அடுத்துள்ள சடாயு உயிர்நீத்த படலத்தின் உத்தமாங்கமாகிய சீதாபஹரணச் செய்திக்குப் பூர்வாங்கமாகிய சீதாலக்ஷ்மண ஸம்வாதத்தின் நடுவில் அமைந்து கிடக்கின்றது. இந்த ஸம்வாதமானது ஸ்ரீ ராமபிரானுடைய நெட்டிலைச் சரத்தால் அடியுண்டு வீழும், மாய மானுருக்கொண்டு வந்த மாரீசன், சீதையினையும் இலக்குவனையும் மயக்கும்பொருட்டுத்தான் தரையில் வீழுங் காலத்தில் இராமனது குரல்கொண்டு,

“ஆ! சீதா!! ஆ! லக்ஷ்மணா!!” என்றழைத்து வீழ்ந்தபொழுது குரல்கேட்டுக் கலங்கிய சீதாபிராட்டிக்கும் அவர்க்குச் சமாதானங் கூறி நின்ற இலக்குவனுக்கும், “ஸ்ரீ ராமபிரானுடைய நிலைமை” குறித்து நடந்ததொன்றாகும்; அந்த ஸம்பாஷணையின் முடிவாகப், பிராட்டி மனம் சமாதானம் பொராமல் இலக்குவனையும் சந்தேகித்துத் தமது உயிரைக் காட்டுத்தீயில் வீழ்த்தி மாய்த்துக்கொள்ளத் துணிந்து ஓடியபோது, இலக்குவன் சீதையைத் தடுத்துக் கூறியதொரு கவியா கும் இது. இதனது நான்காமடியில் காணப்பெறும் “வெஞ்சினவிதி” என்னும் சொற்றொடர்தான் நமது இந்த ஆராய்ச்சிக்கு உரியதாகும்; அச் சொற்றொடரின் பொருள் விளங்கும் பொருட்டு, அவ்வடி முற்று மே எடுத்துக்கொண்டு நாம் ஆராய்தல் வேண்டியிருக்கின்றது.

“வெஞ்சின விதியினை வெல்ல வல்லமோ?”

பொருள் :— மிகக் கோபமுடைய விதியினையும் “அதன் வினை வையும்” எம்போலியர் வெல்ல மாட்டுவமோ? “என்பதாம்” “வல்லமோ” என்னும் இந்த உளப்பாட்டுப் பன்மையால், இந்த அடியையே வேற்றும் பொருள் வைப்பணியில் வைத்து, “உலக மக்கள் விதியை வெல்ல மாட்டாதவர்கள்” என்னும் உண்மையை வெளிப்படுத்தியபடியாகும். “கன்மத்தை ஞாலத்தவர் யாருளரே கடப்பார்” என்று இக் கவியே பின்னும் ஓரிடத்திலும் மற்றும் பல இடங்களிலும் குறித்திருக்கும் உண்மைகளாலும், மற்றும் பல புலவர்கள் தங்கள் தங்களது நூல்களில் கூறிச் சென்றிருக்கும் உண் மைகளாலும் இக்கருத்தை யுணரலாம்.

அன்றியும், சரித்திரத்துக் குறிப்பை யநுசரித்து, “வல்லமோ” என்னும் இந்த உளப்பாட்டுப் பன்மையானது, தன்னையும் கதாநாயக நாயகிகளாகிய சீதாராமர்களையும் சேர்த்துக் கூறியபடியும் ஆகலாம் என்பதும் உணரத்தக்கது. மற்றும், தற்போது காட்சியில் தனக்கும் சீதாபிராட்டிக்கும் நேரவிருக்கும் போபத்தைக் கருதியே முன்னர் கூட்டிப் பிராட்டிக்கு ஒருவாறு உணர்த்தியபடியுமாகலாம். இறுதி யிற் கூறியிருக்கும் இந்தக் குறிப்பானது, அடுத்து வருங் கவியினால், இலக்குவனது வாக்காகக் கவி குறித்திருப்பதனால் உணரலாகும்.

" இருப்பனேல் எரியிடை இறப்பராலிவர்
பொருப்பனை யானிடை போவனேயெனில்
அருப்பமில் கேடு வந்துறும் ஆருயிர்
விருப்பனேற் கென்செய் வதென்று விம்மினன் "

பொருள் :— " நான் இங்கேயே தங்கியிருப்பனேயானால், இந்த அம்மை காட்டுத்தீயிற் குதித்துத் தம்மை மாய்த்துக்கொள்வார்கள்; அன்றியில், சிறிதும் கலங்கா மனதுடைய ஸ்ரீ ராமபிரானிடத்திலே விரைந்து செல்வனேயானால், குறைவில்லாத பெருங் கேடுகள் வந்து சேருமென்று நன்கு விளங்குகின்றது; " அடிமைத் தனத்துக்கே பொருந்தியுள்ள இந்த அருமையான உயிரைப் போக்கடித்துக்கொள் ளச் சுதந்திரம் விரும்பாத எனக்கு இனி என்செய்வதுள்ள "தென்று பொருமினன் " இந்தக் கவியில், நேரும் பிரிவினால், இவ்விருவர்க்கும் உண்டாகவிருக்கும் போபத்துகளை விளங்க வைத்ததுடன், ஸ்ரீ ராம பிரார்க்கும் பின் விளையவிருக்கும் துயரமும் ஊஹித் துணரவைக்கப் பெற்றிருத்தலைக் காணலாம்.

பிராட்டி, தீயில் வீழ்ந்திறத்தல் இலக்குவனுக்கு நேரும் ஆபத்தா கவும், பிராட்டியை அன்னியன் அபஹரித்துச் செல்லுதல் (அருப்ப மில்கேடு) பிராட்டிக்கு நேரும் ஆபத்தாகவும் கொண்டு பொருளுரைக் கப்பட்டது.

" அதிசயம் ஒருவரால் அமைக்கல் ஆகுமோ
துதிபெறு பிறவியின் இன்ப துன்பந்தான்
விதிவலி யென்பதை மேற்கொள் ளாவிடில்
மதிவலி யால் விதிவெல்ல வல்லமோ "

(சடாயு உயிர் நீத்த படலம்—கவி 193)

என்பதில் உள்ள " விதி வெல்ல வல்லமோ " என்னும் சடாயு வாக்கியத்தையும் இவ்விடத்திற் பொருத்திப் பொருள் கொள்ளுக.

இனி, நமது ஆராய்ச்சிக் குறிப்பாகிய " வெஞ்சின விதி " யென் பதை யெடுத்துக்கொண்டு ஆராய்வோமாக.

"வெஞ்சினவிதி"

இச் சொற்றொடரின் நயத்தினை யாராய வெடுத்துக்கொள்ளும் நமக்கு, இதிற் பிரயோகிக்கப் பெற்றிருக்கும் அரும் பதமாகிய "சின(ம்)" என்னும் பதம் நமது உணர்ச்சியைத் தீட்டி நிற்கின்றது. ஏனெனில், "விதி" யென்பதைக் குறிக்க வரும் புலவர்களெல்லோரும், விதியின் தடுக்கப்படாத—மறுக்கப்படாத—கொடுக்கப்படாத—அழிக்கப்படாத விளைவை—நிச்சயமான விளைவைக் குறித்தற்காக எடுத்துக் காட்டற்குறிய பதங்கள்—வெம்மை கொடுமை தீமை என்பவையும் இவைபோன்றவையும் ஆகலாம்; அதனால், அப் புலவர்கள் வெவ்விதி கொடுவிதி தீவிதி என்று பிரயோகித்தல்தான் வழக்கமாகக் கண்டிருக்கின்றோம்; கேட்டிருக்கின்றோம். இப் புலவர் — இந்த இடத்தில் "வெஞ் சின விதி"யென்று பிரயோகித்திருக்கின்றார்; ஆகையினால், இந்தச் சொற்றொடர் ஆராய்ச்சிக்குறிய தொன்றாக எடுத்துக்கொள்ளப்பெற்றது.

"சினவிதி" (நம்பால்) என்பால் கோபமுடைய விதியென்பதாம். நம்பால் சினம் கொண்டிருக்கும் ஒருவன் பொருட்டு, அச்சினம் உதித்தற்குக் காரணமாக, நம்மால் தெரிந்தோ தெரியாமலோ யாதாம் ஒரு செயல் முன்னர் நிகழ்ந்திருத்தல் வேண்டுமென்பது ஊஹிக்கப்படுகின்றது. இஃது உலக இயற்கையில் காணப்பெறும் உண்மையாகும். எனவே, இங்குக் குறிக்கப் பெற்றிருக்கும் "சினவிதி" என்னும் இச் சொற்றொடரையும் இம்முறைகொண்டு ஆராய்வோமாயின், விதி, இலக்குவன்மேல் சினங்கொண்டிருத்தலுக்கு, இதற்கு முன்னர் இலக்குவனால் அவ்விதியின் பொருட்டு, அறிந்தோ, அறியாமலோ—உள்ளத்தாலோ உரையாலோ செயலாலோ அல்லது அம்முத்திறத்தாலோ ஏதேனும் செய்திருத்தல் அல்லது நிகழ்ந்திருத்தல் கூடுமென்பதை ஊஹித்துணர்ந்து கொள்ளும் பொருட்டே, கவி, இச் சொற்றொடரை—ஏன்! இவ்வடியை இலக்குவன் வாக்கில் வைத்து ஓதியிருக்கின்றார் என்பது தெளிவாகின்றது.

ஆதலின், அவ்விதியின் பொருட்டு இலக்குவனால் சினத்தின் காரணமாக இதன் முன்னர், "என்ன நிகழ்ந்திருத்தல் கூடும்? எப்போது நிகழ்ந்திருத்தல் கூடு?" மென்பதை நன்கு ஆராய்வோமாக.

இவ்வாராய்ச்சிக்குப் பொருந்தியதாக, அயோத்தியாகாண்டம்—நகர்நீங்குபடலத்தில்-134-ம் கவி காணப்படுகின்றது. அது பின்வரும்:-

"உதிக்கும் உலையுள்ளுறு தீயென ஊதை பொங்கக்
கொதிக்கும் மனம் எங்ஙனம் ஆற்று கேன் கோளிழைத்தாள்
மதிக்கும் மதியாய் முதல்வானவர்க்கும் வலிதாம்
விதிக்கும் விதியாகும் என் விற்றொழில் காண்டியென்றான்"

பொருள் :— "அண்ணால்! கொல்லன் உலையினின்றும் உதித்துக் கொண்டிருக்கும் அதன் உள்ளுறுதீயைப்போல், என்னுள்ளிருந்து உதித்துக்கொண்டிருக்கும் புகைக்காற்று பொங்கிவருதலால் கொதித்துக்கொண்டிருக்கும் எனது மனத்தை நான் எப்படியாற்றிக்கொள்ளல் கூடும்? அது கூடாதகாரியமாகின்றது. ஆகையினால், இந்தக் கோள் நம்மை வந்து தொடரும் பொருட்டுச் சூழ்ந்து வினையிழைத்தவளாகிய கைகேயி யென்னும் மாற்றாந்தாயின் அற்பமதிக்குத் தாய் மதியாகியும், தலைவர்களாகிய வானவர்க்கும் கடத்தற்கு அரியதாகியும் உள்ள விதியென்னும் பெயருடன், தோன்றாமலே ஒளித்துக்கொண்டு திரியும் அந்தத்திய கடவுளுக்கும் கடத்தற்கருமையாயிருக்கும்படி நிகழப் போகும் இந்த எனது வில்லின் தொழில் திறத்தை நன்கு காண்பாயாக என்றான்" என்பதாம்.

இதனால், "விதியையும் விதியின் விளைவாக அச்சூழ்ச்சியை நிகழ்ச்சியிற் செய்தற்கு முற்பட்டு நிற்கும் தசரதமன்னனையும் கைகேயி ராணியையும் இதோ என்ன செய்கிறேன்; பார்" என்று இலக்குவன் முன்னரே கோபித்துக் கொண்டிருக்கின்றான் என்பது வெளியாகின்றது.

கம்பநாட்டாழ்வார், எடுத்ததொன்றை நிறுத்திக் காட்டும், இயல்புடைய கவியாகலின், அயோத்தியா காண்டத்தில் (இந்தக் கவியில்) எடுத்திருக்கும், இலக்குவனது வசைச்சொல்லைக் காரணமாக வைத்துக் கொண்டு, "விதி தன்பால் சினங்கொண்டிருக்கின்ற" தென்பதை இலக்குவன் அறிந்து கூறியிருக்கின்றான் என்பதைக் கவி, இந்த வியாஸத்துக்கு எடுப்புக் கவியாகிய—முன்னர்க் காட்டியுள்ள—"துஞ்

சவுதென்னை " யென்னும் ஆரண்யகாண்டக் கவியில் உள்ள—நான்காம்டியாகிய "வெஞ் சினவிதி யினை வெல்லவல்லமோ" என்பதில் "சினவிதி" என்னும் சொற்றொடரால் ஊஹித்துணர்ந்து கொள்ளும்படியாக நிறுத்திவைத்திருக்கின்றார் என்பதை யுணர்வோமாக.

இங்ஙனம் "தன்பால் சினங்கொண்டுள்ள விதியினால்தான் முற்றும் வெல்லப்பட்டு விட்டதாக இலக்குவன் உணர்ந்துகொண்டான்" என்பதை வற்புறுத்தல் பொருட்டு, இலக்குவனது வாக்காகவே, கவி இதன் பின்வரும் கவியை யிணைத்திருத்தலையும் உணர்ந்து கொள்ளுகிறோம்.

அக்கவி பின்வரும்:—

"இருப்பனேல் எரியிடை யிறப்பரால் இவர்
பொருப்பனை யானிடம் போவனே யெனில்
அருப்பமில் கேடுவந் துறும் அருயிர்
விருப்பனைத்த என் செய்வதென்று விம்மினன்"

என்பதாம்.

இதன் பொருள் இதே குறிப்பில் முன்னர்க் குறிக்கப் பெற்றிருக்கின்றது; அதனைக்கொண்டு நன்கு தெளிந்திடுக. தன்னையிங்கிருத்தலும் கூடாமல் வெளியேகுதலும் கூடாமல் இரண்டுங்கெட்ட தன்மையில் விதிபிணைத்துவிட்டதாக இலக்குவன் உணர்ந்து கொண்டான் என்பது வெளியாகின்றது.

இங்கேயே யிருத்தல் :— நாயகனாகிய ஸ்ரீ ராமபிரானுடைய கட்டளையாகும்; அதனை மறுத்துப் பிரிந்து செல்லுதல், நாயகன் கட்டளையை மறுத்தபடியாகும்; அம்மறுத்தலுக்குப் பயனாகப் பின்னர் வசையும் வெறுப்பும் நிகழக்கூடும்.

பொருப்பனை யானிடம் போதல்:— நாயகியாகிய சீதாபிராட்டியின் கட்டளையாகும்; அதனைமறுத்துத் தங்கியிருத்தல் நாயகியின் கட்டளையை மறுத்தபடியும்; அம்மறுத்தலுக்குப்பயனாக முன்னரும் பின்னரும் வசைகளும் வெறுப்புறைகளும் தோன்றியிருத்தல் வெளிப்படை.

நாயகனது நல்லுரையை மறுத்து (வெறுத்து) நாயகி சொன்ன வார்த்தையை நம்பிப் பிரிந்து போனபடியினால், "சீதையை இராவணன் அபஹரித்துச் சென்றமைக்குக் காரணமும், ஸ்ரீ ராமபிரானது வெறுப் புரையும் சீதையினுடைய வசைமொழியும் தோன்றியிருத்தலைச் சரித் திரத்தின் உண்மையாக உணர்கின்றோம். என்னை! ஆரண்யகாண்டம்—சடாயு உயிர்நீத்த படலம்—20-ம் கவியாகிய பின்வரும் கவியை நோக்குக.—

" இளையவன் ஏகலும் இறவு பார்க்கின்ற
வளையெயிற் றரக்கனும் வஞ்சம் முற்றுவான் "

என்னும் தொடக்கத்தை இக்கவியின் இவ்விரண்டு அடிகளையும் சொன் னயம் கொண்டு பொருள் அறிந்துகொள்க. —" இளையவன் " = இலக் குவன், அன்றி தனது அடிமைக்காரியத்தில் இளைத்து ஏமாற்றம் அடைந்தவனுமாம் என்க " இறவு " அற்றம் அதாவது தான் எண்ணி வந்த காரியம் நிறைவேறலின் பொருட்டுத்தானிழைத்துள்ள சூழ்ச்சி க்காரணமாகக் கிடைத்த — காவலில்லாத சமயம் என்பதாம். " வளை யெயிற்றரக்கன் "—வளைந்த பற்களையுடைய இராக்கதன்; அதாவது இத்தகைய தீச் செயல்களைச் செய்தற்குக் காரணமாக ஆகாரக் கேடும் ஒழுக்கக்கேடும் வாய்க்கப்பெற்றவன் என்பதாம்.

" நாயகனது நல்லுரையில் உறுதி கொண்டு ஊன்றி நின்றுவிடா மல், நாயகியின் ஸாஹஸச் செயலால் அச்சுற்று மறுத்துப் பிரிந்ததால் வந்த நாயகனது வெறுப்புரையை, இதே படலத்தில் (150-ம்) கவி யின் வரும் கவியை நோக்குக.

" வந்தாய் திறத்தின் உளதன்று தூற்றம்
மடவாள் மறுக்க முறுவாள்
சிந்தாகுலத்தின் உரை செய்த செய்கை யது
தீரு மென்று தெளிவாய் "—

என்னும் இத்தொடக்கக் கவியின் இவ்விரண்டடிகளாலும் அறியலாம். இஃது இராமபிரானது வாக்கு.

பொருள்:— "நீ திரும்பிவிட்டாய்; இஃது அறிவின் திறத்தினல் விளைந்த தொன்றன்று; குற்றமுடைய செயலேயாகும்; அவளோ, மடமை பொருந்திய பெண்; அன்றியும் மனமறுக்க முற்றவள்; ஆதலால், அவள் செய்த செய்கையும் உறைத்த உரையும் அவளது சிந்தாகுலத்தின் விளைந்த விளைவாகும்: அது பின்னர்த் தீருமென்பதைத் தெளியலாகும்" என்பதாம். அன்றியும், இதே குறிப்பில், அதாவது பிரிந்த பிரிவு குற்றந்தான் என்னும் குறிப்பில், சீதையும் கூறியிருக்கின்றுளென்பதைக், கம்பர், சுந்திரகாண்டம்—சூளாமணிப்படலம்—31-வது கவியாகிய பின்வரும்:—

"எத்தும் வென்றி யிளையவற் கிதொரு
வார்த்தை கூறுதி மன்னநு ளாலெனைக்
காத்திருந் தவம் கேகடன் என்றிடை
கோத்த லெஞ்சிறை வீடென்று கூறுவாய்"

என்பதாம்.

பொருள்:— ஏ! அநும!! தன்புகழையே யேத்திக்கொண்டு நிற்கும், இலக்குவனுக்கு இந்த ஒரு வார்த்தையைச் சொல்லுவாய்; அதாவது, நாயகனது கட்டளையால் என்னைக் காவல் செய்துகொண்டிருந்த தனக்கே—அந்தக் காவல் தவறியதால் இடைக்காலத்தில் நேர்ந்துள்ளதொரு காரியமாகிய இந்தச் சிறைப்பாட்டின் விடுதலைக்குரிய முயற்சி கடமையாகும் என்று கூறுவாய் என்பதாம்.

இக்கவியிலும், "இளையவன்" என்னும் பதம் சமயமும் இடமும் நோக்கியமைக்கப் பெற்றிருத்தலை நன்கு உணர்க.

நாயகனது கட்டளையில் உறுதிகொண்டு, நாயகியின் வாதவுரைகளில் அச்சங் கொள்ளாமல் ஊன்றி நின்றிருந்தபோது, நிகழ்ந்த நாயகியின் வசைமொழியை, ஆரண்யகாண்டம்,—சடாயு உயிர்நீத்த படலம்—வது கவியும், அடுத்த கவியுமாகிய,

"என்றவன் இயம்பலும் எடுத்த சீற்றத்தள்
கொன்றன இன்னலள் கொதிக்கும் உள்ளத்தள்
நின்றநின் னிலையிது நெறியிற் றன்றென
வன்றறு கண்ணினள் வயிர்த்துக் கூறுவாள்"

சொல்லின் மிகுதியாகிய சாஸ்திரங்களை மிகவும் அறிந்த அகத்திய முனிவரால் உண்ணப் பெற்று நீர்வற்றி யொளி பொருந்திய ரத்நவகைகளாற் பிரகாசித்துக்கொண்டிருக்கும் கடலையும், இருட்டுடன் கலந்து நெருங்கி விளங்கும் பல நக்ஷத்திரங்கள் தோன்றிப் பிரகாசித்துக்கொண்டிருக்கும் ஆகாயத்தையும் போல, அந்நகரில் வில்லுக்கும் அலைத்தலைத்தந்து வெற்றி பெற்ற நெற்றியையுடைய பெண்களும் அவரவர்க்குரிய ஆடவர்களும் ஊடல் கூடல்களில் வெறுத்து வேண்டாமென்றெறிந்து நீக்கிய பொன்னணிகளாற் பிரகாசித்துக் கிடக்கும் மாடங்களையுடைய நீண்ட தெருக்களில் அம்மூவரும் நடந்து சென்றார்கள்.

தம்மைக் குத்தும் தாற்றுக்கோல்களாகிய அங்குசங்களும் அழிந்து போகும்படியான அஞ்சாத் தன்மையையுடைய மலைபோலுமுயர்ந்து வலியபெரிய யானைகள், விசாலமான மதப்பெருக்கைக் கொட்டுதலால் ஆறு போலாகியும், சேணம் பூட்டிய குதிரைகளின் வாய்நுரைகள் வழிந்து பெருகி யோர் மார்க்கமாகச் சேறாகியும்; அவ்வழியிற் பின்னை தேர் உருளைகள் ஓட ஓட அச்சேறுகள் இறுகிப் புலர்ந்து துகளாகியும், இங்ஙனம் ஒன்றோடொன்று எப்போதும் வேறு வேறாக நின்று, வாளாக்கிடத்தலில்லாத அந்நகரின் குறுந் தெருக்களிலும் அம்மூவரும் நடந்து சென்றார்கள்.

நீக்கமில்லாமலே பொருந்தி நின்று, ஒருவர்க்கொருவர் மேம்பட்ட அன்பின் மிகுதியால் இன்பம் நுகர்ந்தபின்பு, புணர்ச்சிப்போரில் இளைத்துத் துவண்டிருக்கும் மெல்லிய பெண்களைப்போல, கீத இனிமையைத்தரக்கூடிய சொற்களுடைய அப்பெண்களினுடைய புணர்ச்சிப்போரில் அற்று வீழ்ந்த மலர்மாலைகள் வண்டுகளுடனிருந்து தேன்சொரிந்து கொண்டிருக்கும் ரத்நமயமான நீண்ட தெருக்களில் சென்

அரு ஏழுதிருத்தற் பொருட்டு நெய் பூசப்பெற்றுத் திரண்டுள்ள தந்திக்கம்பிகளிலிருந்தெழும் இசைபோன்ற தமது தமது மழலைச்சொற்களால் நிறைந்த பண்முற்றிய பாடல்களைப்பாடும், அவ்வப்பெண்களால் கைவிரல் கொண்டு தடவப்பெறுகின்ற மகர உருப்பொருந்திய வீணைகள் மத்தளவொலிகளுடனிசைந்து ஒலிக்கவும், அவ்வீணை நரம்புகளைத்தடவும் கைபோகும்வழியே அவ்வவர் கண்கள் சென்று பரவவும், அக்கண்களின்வழியே அவ்வவர் மனமும் சென்று திரும்பவுமாக, அழகிய கண்ணிய இடையையுடைய நடன மாதர்கள் ஆடிக்கொண்டிருக்கும் நாடகசாலைகளையும் கண்டார்கள்.

மாதர்களின் இடைகள் மெலிந்து தேயுமே என்பதற்கிரங்கி, இவர்கள் கூந்தலினின்றும் ஆரவாரத்துடன் எழுந்த வண்டுகள், பொங்கி நிறைந்திருக்கும், குற்றமற்ற பவளம் போலுஞ் சிவந்த காய்களையுடைய, மரகதம் போன்ற சுத்த கமுக மரங்களில், குற்றமுற்ற பிறவியைப்போல வருவதும் போவதுமாகி அலையும்படியாகக் கட்டப்பட்டிருக்கும் ஊசலிலுள்ள மாதர்கள், தங்களைக் காதலித்து நிற்கும் வீரர்களின் மனங்களுடன் அவ்வூசல்களில் ஆடிக்கொண்டிருக்கவும் பார்த்தார்கள்.

நீர்க்குரம்பாகிய அணையைக் கட்டி நிறைக்குந் தொழிலுடைய உழவர்கள், அக்குரம்புக்காக வாரிக்குவித்திட, அவ்விடத்திலுற்ற கரைகளிலெல்லாம் எல்லையற்ற ரத்நங்களும் பொன்னுஞ் சந்தன மரங்களும் கவரிமான் வாலும் பாலைவனத்துற்ற அகில்களும் பரந்து கிடக்கும் காவிரியாற்றைப் போன்று பரந்த கடைத் தெருக்கள் பலவற்றையும் பார்த்தார்கள்.

வட்ட வடிவுடைய நகங்களைப்பெற்ற துளிர்போன்ற கரங்கள் கோணம்பமாக வீணை நரம்புகளைப் பிடித்து

பெருகும் கள்ளைப்போன்ற வீணை நரம்புகளை இறுகத்திருகி, அந்நரம்புகளைத்தடவும் விரல்களையுடைய கைபோனவழியே தம் மனத்தையும் சேர்த்து, வெண்முறுவல் தோன்றும்படியிருக்க, தமக்கிடும் நல்லவிருந்தைப்போல, அந்நகரப்பெண்கள் கொடுத்த தெளிந்த ஓசையையுடைய கீதமாகிய தித்தித்த தேனைத்தங்கள் செவிகளில் வாங்கி நிரப்பிக்கொண்டு அம்மூவரும் அந்நகர வீதிகளில் இனிமையாகச் சென்றார்கள்.

சுழற்சியையுடைய, சேணம் பூட்டிப்பாய்ந்து செல்லும் குதிரைகள், குயவன் விரைவாகத்திரித்து முடுக்கிவிட்ட மண்பாத்திரக்கருவியாகிய சக்கரத்தைப்போலச்சுழன்றும் வாளியைப்போல பாகன் செலுத்திவிட்ட வேகத்தோடும் வருவனவாகியும், பெரியோரது நேசம்போல இடைவிடுதலில்லாமல் மேல் மேல் வந்துகொண்டும் பல்வகை அறிஞர்களின் உணர்வு பற்றிய ஒரு லக்ஷ்யத்தைப்போன்று ஒரே லக்ஷ்யத்தைநாடி யொரேதன்மைத்தாகியும், கண்களில் இன்னவைதாம் என்று தெளிந்துணரக்கூடாதனவாகியும் திரிந்துகொண்டிருக்கக் கண்டார்கள்.

அறுக்கும் கருவியாகிய வாள்போலும் நீண்டுள்ள அரத்தையும் தோல்விக்கும் வேல்போன்ற கண்களையும் மன்மதக் கடவுளின் வில்லைப்போன்ற புருவங்களையும், வண்டுக்கூட்டத் தொடு பொருந்தியது போன்ற நீல நிறம்பொருந்திய கூந்தல்களையும் முறுக்கம்பூப்போன்ற இதழ்களையும் பெற்று, நீண்ட பெரிய களங்கத்தை நீக்கிக்கொண்டு வரிசை பெற்ற ரத்நமயமான அந்நகர மாடங்களின் நெற்றிப் பிரதேசங்களிலுள்ள பலகணிகள் தோறும் காணப்பெறும் பூரணசந்திரோதயம் போன்ற பெண்களின்முகங்களையும் பார்த்தார்கள். கண்ணாடிக் கிண்ணங்களில் வார்த்து நிறைந்த குளிர்ந்த மணம் பொருந்திய மதுத்தெளிவைக் குடித்து மயங்கியதனால் வெளித் தோன்றிய சிரிப்பையுடையனவாகித் தாமுண்ட மதுவின் மணத்தைத் தெரிவிக்கின்றனவாய்,

ஒளித்தாலும் ஒளிக்கமுடியாத புலவியைத்தெரிக்கப் பட்டன போன்று; தம் உள்ளக்களிப்பினையுணர்த்திக் கொண்டிருக்கும் அழகுடைய தாமரை மலர்கள் போன்ற மாதர் முகங்கள் பலவற்றையும் பார்த்தார்கள்.

ஊடலால் கிடைக்கும் இன்பத்தை தம்மை நாடிவந்த ஆடவருடன் கலந்திருந்து தாமும் நுகர்ந்தபின்பு, அதற்காக அவ்வாடவரிடத்து விலையும் பெற்றுக்கொள்ளுகிற, பாம்பின் படத்தைப்போன்ற அல்குல் பிரதேசத்தையுடைய வேசை களின் மனத்தையும் கண்ணாடியையும்போல, ஓரிடத்திலும் நிலைபெறாமல் திரிந்தாடியும், ஆடும் மாதர்களின் கரிய செவ் வரிபரந்த நீண்டகண்களின் பார்வை படும்போது கருநிறம் பெற்றும் அப்பெண்களின் கைகளிற் பொருந்தும்போது செந்நிறம் பெற்றும் பல நிறங்காட்டும் பந்துகள் பலவற்றை யும் பார்த்தார்கள்.

கங்கணங்களையும் காதணிகளையும் மற்றும் நகைகளையும் மாலைகளையும் கலிங்கதேயத்து நுண்ணிய நூலால் செய்யப் பெற்றுள்ளவாகிய வடங்களையும் வீணைகளையும் பந்தயப் பொருள்களாக வைத்துக்கொடுத்து, தாங்களணிந்திருக்கும் மணம்பொருந்திய மலர்மாலைகளும் கூந்தலில் முடிந்துள்ள அழகிய மலர்க்கண்ணிகளும் சேர்ந்து விழும்படியாக வாள் போலும் நீண்ட கண்களுடைய பெண்கள் பளிங்கினாலே நாய் வடிவாகச் செய்யப்பெற்ற சூதாடுகருவிகள் சிவந்து காட்டும்படியாகத் தம் கைகளால் தொட்டு ஆடிக்கொண் டிருக்கும் விளையாட்டிடங்கள் பலவற்றையும் கண்டார்கள்,

தாமரை மலர்களும் குவளைப்பூக்களும் ஆம்பல்களும் படர்ந்திருக்கும் வள்ளைக்கொடிகளும் நீலோத்பலங்களும் செவ்விய முறுக்கம்மலர்களும் அலைகளும் நண்டுகளும் சூல் முதிர்ந்த வரால்மீன்களும் ஆமைகளுமாகிய நீர் வாழ் பொருள்களெல்லாம் தோற்றுப்போய் வாடித்தேம்பியிருக்க,

வேறு உவமானப்பொருள்களை கிடைக்கப்பெறாத தங்கள் அவயவங்களைத் தழுவியதனால் பெருமை பொருந்திய இளம் பருவப் பெண்கள் விரும்பி நீர் விளையாடக்கூடிய குளங்கள் பலவற்றையும் கண்டார்கள்.

தங்கள் தங்கள் புஜங்களில் அணிந்துள்ள கலவைச் சாந்தும் அச்சாந்துகளில் தங்களது மனைவியரால் தழுவப் பட்டபோது தோய்ந்துள்ள இருகொங் கைகளின் அடையா ளங்களும் நீங்கப்பெறாமலே வந்திருக்கும் அழகு விளங்கி யிருக்கும் வாலிப ஆடவர்கள், சலிக்குந் தன்மையுடைய இந் திரியங்கள் அங்குமிங்குமாக அறுத்துக்கொண்டுபோக அவற்றுடன் சென்று மயக்கத்துடன் அலைந்து நின்று கலக் கத்தையடைந்திருக்கிற அறிவு இதுதான் என்னும்படியாக வாள்கள் ஆடிக்கொண்டிருக்கும் ஆயுதப்பயிற்சிச்சாலை பலவற்றையும் கண்டார்கள்.

உஷ்ணங்கொண்ட சுடர் உருவெடுத்துவந்தது போன்ற சரீரம் பெற்றவரும், வேண்டியார் வேண்டியாங்கு அளிக்கும் பரந்த நெஞ்சு பெற்றவரும் பரமசிவனது நெற்றிக்கண் நெருப்புப்படாமல் உருவுடன் கூடிய மன்மதன்போன்றவரும் செம்மையான வில்களைக் கைகளில் கொண்டவரும், இரவில் தமது மனைவியரின் ஊடலுணர்த்தும்போது அவர்களது செம்பஞ் சூட்டிய கால்களாலுதைப்பட்டுச் சிவப்பேறிய தலைமயிர் உடையவருமாகிய ஆடவர் பலர் கூடி நின்ற கூட் டம் பலவுங் கண்டார்கள்.

வேறு

தேன் பாகுக்கு ஒப்பாகும் சொற்கள் பலவற்றைப் பசுங்கிளிகளுடன் பேசிக்கொண்டு, ஆகாயத்துற்ற பொன் னுலகப்பெண்களும் நாணும்படியாக மலர் கொய்துகொண் டிருக்கும் தோகையுடைய கொம்பு போன்ற பெண்கட்கு, அன்னப்பறவைகள் நடையில் தோற்றுப்போவதைப்பார்த்

துக்கொண்டே, வண்டுக்கூட்டங்கள் ரீங்காரம் செய்து கொண்டிருக்கும் மலர்ச்சோலைகள் பலவற்றையும் கண்டார்கள்.

தேவர்கள் வசிப்பதற்குத் தகுந்தனவாகிய மாளிகை வரிசைகளின் நிழல்கள் பாய்வதனுல் இவ்வுலகில் தோன்றும் சுவர்க்க பூமியின் அழகினைக்காட்டிக்கொண்டு, படைக ளுடைய ஜனகராஜனது அழகிய பொன்மயமான அரண் மனையினுடைய பொன்னுலாக்கிய மதிலைச் சுற்றிக்கொண் டிருக்கும். பரந்து பொங்கியிருக்கும் கங்கையைக்காட்டி லும் ஆழமுடைய அகழ்கள் பலவும் கண்டார்கள்.

பொன்னைப்போலும் சோதியுருவத்தையும் தாமரை மலரினியற்கை மணத்தையும் வண்டுகள் உண்ணும் மதுவைப்போலும் தித்தித்துச் சுவைபெறும் குரலையும் செவ்விய சொற்களாலாக்கப் பெற்ற கவியின்பம் போன்ற உரையையும் உடைய பெண்தெய்வத்தைக் கன்னிமாடத் தின்மேலே, ஆடும் தன்பெடையுடன் ஆணன்னமாடிக் கொண்டிருக்கும் துறைக்கு அயலேகண்டு அதற்கு அயலில் நின்றுர்கள்.

பிரமன்முதலாகிய நூல் செய்யும் கவிகள் எல்லோரும், தாம் தமது நூலைச்சொல்லிவரும்போது, தமது நூலின் கதா நாயகியாகிய எப்பெண்பாலுக்கும் உவமானமாக உவமிப் போர் ஏற்றுக்கொண்டு உவமிக்கத்தகுதியுடையவரான அந்த இலக்குமியே இங்கு இக்கதாநாயகியாக வாய்த்திருக் கும்போது, இவட்கு அயலாக வேறொரு உவமை எங்கி ருந்து கொண்டு யாவரை நாடி உரை செய்ய முடியும்?

தனது மிருதுவான கால்களில் பொன்னுலாகிய கிங் கிணிமணிகள் தொங்கவிடப்பெற்றிருக்கும் பாதசலங்கை களும் முத்துக்கள் புனைந்தியற்றிய மாலையும் அல்குற்பட்டத் தைச் சேர்த்துள்ள மேகலாபரணத்தையும் தாங்கிக் கொண்டு. கொடிபோன்ற ஏனையபெண்கள் கந்தனைச் சேர்ந்

துள்ள வடிவின் இனிய அழகைக் கண்டுகொண்டிருக்க, நூறுகோடி மின்னல் சூழ்ந்திருக்க, இடையில் ஒரு மின்ன லரசு என்னலாம்படி நின்றாள்

உமையவள் போன்ற பொறுமையிற் சிறந்த பெண் ணரசிகளும் தமது உச்சியிற் கைவைத்துபசரிக்கத் தகுந்த பொறுமையுடையவளாகிய இப்பெண்ணரசியின் திருமேனி யைப் பார்த்தவர்கள், அக்காட்சியின்பத்துக்கு ஒரு எல்லை காணாதவராகி, நாம் "இமையாத கண்களைப் பெற்றி லோமே என்று வருந்தினர். ஆனால் சுவர்க்கவாசிகளெல் லோரும் இமையா நாட்டம் பெற்றவராயிருப்பினும், இக் காட்சியைக் காண்டல் இரண்டு கண்களால் அமையா தென்று வருந்தினர்கள்.

வெருண்ட பார்வைக்குப் புலவர் உவமானப் பொரு ளாகக் கூறும் அந்த மானையும் வென்று பலர்புனைந்த கூரிய வேலும் கொலைத் தொழிலிற் சிறந்த வாளும் தோற்றுப் பின்னிற்கவும், அம்மானின் கண்போல் பெயர்கின்ற மீனும் அஞ்சி நீங்கும்படியாகவும் பிறழ்கின்ற கண்களையுடைய அந் தப் பெண்ணானவள், மந்தரமலையைத் திரித்த அந்த திரு மாலுக்காக அளித்த கடல் அமிர்தமல்லாது, அன்று அந்த மிதிலை மாடத்தின் உச்சியளித்த அமுதம் போன்றவ ளானாள்.

பெரிய தேர்த்தட்டைப் போன்ற அல்குற் பிரதேசத்தை யுடைய இப்பெண்ணரசி போன்ற தொரு பெண்ணைப் படைக்கு மாற்றலுடையான் பிரமதேவனென்றால் இன்னும் தந்திருக்கலாமே; அளித்த அமுதத்தைக் குடித்துவந்த தேவர்கள் யாசித்து வேண்டினால், ரத்நாகரமாகிய சமுத் திரமானது அமுதமென்னும் அம்மருந்தேயல்லாமல் வேறு எதனையளிக்கவல்லது? இவளைப்போன்றதொரு பெண்ணைத் தர வல்லதோ? அன்றென்றபடியாம்.

அண்டத்தையாளும் அரசனுகிய இந்திரனல் விரும்பப் பெறும் மேனகை முதலிய ஒளியுடைய வேல்போலும் கண்களையுடைய இளைய பெண்கள், இந்தப்பெண்ணரசி யின் திருமேனியைக் கண்டபின்னர்த் தம்முள்ளத்து என் றும் துன்பங்கொண்டவர்களாகவே ஆய்விட்டனர்; அந்த மேனகை முதலிய பெண்களினுடைய முகங்களாகிய— குளிர்ச்சி பொருந்திய உயர்ந்த சந்திரர்கட்கு இனி என் றும் பகற்காலமே தான் போலும்; எனவே, அந்த சந்திரர்கள் என்றும் ஒளியிழந்தவரே யென்பது கருத்து.

இங்ஙனம் சீதையாக வந்திருக்கும் இலக்குமியானவள் தனது வாசஸ்தலமாகிய தெய்வத்தாமரையினின்றும் நீங்கி இப்புவியிடை வந்துதித்தற்குரிய தவத்தைப் பலகாலங் களும் தமது சரீரம் வாட்டமடையும்படி நோற்றவர்கள்யார்? அளவற்ற அறவோர்களா? நல்ல தர்மந்தானு? இப் பூவுலகமா? அவ்வானுலகமா? தேவர்கள் தாமா? யாரோ? இதனை யாமுணரோம்.

தமக்கு வேறு ஒப்புச் சொல்லமுடியாத அத்தனை யழகுடைய பெண்களும் "அழகிய தளிர்போன்ற கைகளை யுடைய மான் போன்றவளே! தாயே!! தேனே!!! அரிய அமுதமே!" என்று சொல்லிக்கொண்டு பாதங்களை வணங்கி, எதிரே எதிரே நெருங்கிய மலர்களைத்தூவி முறையே வந்துகொண்டிருக்கப், பொன்சூழ்ந்த பூவைப் போலொதுங்கி நின்று விளங்குகின்றுள்.

கொலைத் தொழிலைச் செய்யும் வேலாயுதமும் உடலையும் உயிரையும் பிரிக்கின்ற எமனும் என்று கண்ணுக்கு உவமான மாகச் சொல்லப்படும் பொருள்களையெல்லாம், "வெல்லும் வெல்லும்" என்று சொல்லும்படியாக மதர்த்திருக்கும் விழிகளைக்கொண்டு சீதாப்பிராட்டியினது அழகு குணம் முதலியவை ஒருவரால் எடுத்துச் சொல்லும் தன்மையு

டையனவல்ல ; அத்தகைய குணம் சௌந்தர்யங்கள் வாய்ந்த பெண்மணியாகிய சீதாப்பிராட்டி, மலையும் சுவ ரும் திண்ணிய கல்லும் புல்லும் ஆகிய இவை கண்ட வுடன் உருகும்படியாக அந்தக் கன்னிமாடத்தின் மேன் மண்டபத்தில் வந்து நின்றாள்.

வேறு.

விரும்புகின்ற ஆனந்தத்துக்கு ஒப்பற்ற இன்பந்தரும் பொருளாகிய அத்தகையோர் கண்களாற் கண்ட மாத்திரத்திலே ஆனந்தத்தைக் கொடுத்தலால் அந்த மங்கையர்க்கு இனியதாகிய ஒரு மருந்துமாகியிருப்பவளா கிய எமது கதாநாயகி சீதையானவள், எங்கள் தலைவனாகிய கதாநாயகன் ஸ்ரீராமபிரானுக்கு இனியாதாவாள்? நாயகி யாவாள் என்றபடி.

இழைகளும் காதணிகளும் என்று சொல்லப்பெறும் நகைகளாகியவை, வெகுகாலமாகவே மழைக்கு ஒப்பாகிய இருகண்களையுமுடைய பெண்களுடன் பழகியுள்ளன என் றாலும், பாவை போன்ற இந்த சீதை தோன்றினபிற்பாடு, மற்றைப் பெண்கட்கு அழகைத் தருதற்குக் காரணமா யிருந்த அவ்வணிகளும் இவளைச் சேர்ந்து அழகைப் பெற்று விளங்கின.

நினைத்தற்கும் அருமையான அழகையுடைய சீதை, இவ்விதமாக வந்து நின்ற காலத்தில், ஸ்ரீராமபிரானும் சீதையுமாகிய இவர்களில் ஒருவர்கண்கள் மற்வரது கண் களைக் கவ்வி, ஒன்றையொன்று விழுங்கவும், அவ்வளவோடு அமைந்து நில்லாமல், ஒவ்வொருவர் உணர்வும் ஒன்றுட னொன்று பொருந்தும்படியாக, அண்ணலாகிய ஸ்ரீராமபிரா னும் சீதையைப்பார்த்தார் ; சீதையும் ஸ்ரீராமனைப் பார்த்தாள்.

பார்த்த பார்வையென்று சொல்லப் பெறுகிற சீதையின் கண்களென்னும் கூர்மை பொருந்திய இரண்டு வேலாயுதங்களும், வலிவே உருவாக அமைந்துள்ளவனாகிய ஸ்ரீராமபிரானது தோள்களிற் சென்று ஆழ்ந்து தைத்தன; கட்டப்பட்டுள்ள-ஒலிக்கும் வீரக்கழல் புனைந்த வீரனாகிய ஸ்ரீராமபிரானது அழகிய கண்களும், இலக்குமியானவளாகிய சீதையினது தனபாரங்களிற் சென்று பாய்ந்து தைத்தன.

அருந்தும் பார்வையெனும் கயிற்றினாற் கட்டிச் சீதையும் இராமனும் ஒருவரை மற்றவர் தமது உள்ளத்தில் இழுத்துக்கொண்டு சேர்த்தலால், கட்டுடைய வில்லைப் பெற்ற ஸ்ரீராமபிரானும் வாள்போன்ற கண்களுடைய சீதாப்பிராட்டியும் ஆகிய இருபேரு மிடமாறி ஒருவர் இருதயத்தில் மற்றவர் புகுந்தவரானார்கள்.

இடையிலாத பெண்ணாகிய சீதையும் நிந்தையில்லாத பெரியோனாகிய ஸ்ரீராமபிரானும் ஒருங்குபெற்ற அவ்விரண்டு உடலுக்கும் ஓர் உயிராக ஆய்விட்டார்கள்; பெரிய பாற்கடற் படுக்கையில் இருவரும் ஓருருவான சேர்க்கை நீங்கி அவ்விடத்திலேயே விலகிப் பிரிந்தவராகியும், லக்ஷ்மியும் நாராயணனுமாகிய இவர்கள், பின்னரும் இச்சமயம் கூடிக்கொண்டனராயின், அவ்விருவோரது சேர்க்கையைப் பற்றிப் பேசவும் வேண்டுமோ?

முடிவில்லாத அழகுடைய ஸ்ரீராமபிரானைக் கட்டிச் சேரமுடியாது போயினபடியால், பசிய வளையல் முதலிய ஆபரணங்கள் அணிந்துள்ள சீதையானவள், சித்திரப் பதுமைபோல் பிரமித்து நின்று விட்டனள்; ஏனெனில், பதுமைக்கும் பெண்ணுக்கும் வேறுபாடு காட்டுவனவாகிச் சீதையினிடமிருந்த மனமும் தற்காவற்குணமும் தேகப் பொலிவும் ஸ்ரீராமபிரானைப் பின்தொடர்ந்து சென்றுவிட ஸ்ரீராமபிரானும் விசுவாமித்திர முனிவருடனும் கூடி, சீதையுடைய கண்கட்கு மறையச் சென்று விட்டனர்.

சந்திரப்பிறைபோன்ற நெற்றியையுடைய சீதாபிராட்டியினது பெண்தன்மை என்ன செய்ய முடியும்? மணங்கமழும் மாலையுடைய ஸ்ரீராமபிரான் தனது கண்கட்கு விஷயமாதலினின்றும் நீங்கி மறைந்துவிடவே, சீதையினுடைய மனமென்று சொல்லப்பெறும் மதங்கொண்ட யானையை யடக்கியாளும் தற்காப்பாகிய நிறையென்று சொல்லப்பெறும் அங்குசமானது தனது வளைவு நீங்கி நிமிர்ந்துபோய்விட்டது.

மயக்கம் மிகவருதலும் தன் மனமும் உடலும் தனது இழைபோன்ற இடையைப்போலவே சுருங்கிடத் தளர்பவளாகிய சீதையினுடைய - வாய்க்காலாகப் பொருந்திய கண்களின் வழியாக உள்ளே நுழைந்த ஆசை என்னும் நோயானது, நிறைந்த பாலினைச் சேர்ந்த தயிர்த்துளியைப்போல் உடலெங்கும் பரந்துவிட்டது.

நோவாள்: உற்ற நோயின் தன்மையை யாருக்கேனும் சொல்வாளில்லை; ஊமனைப்போலவே, தனது மனத்திலேயே அந்த நோயை நினைத்து நினைத்துப் பொருமிக்கொண்டிருப்பாள்; இந்த சமயத்தில், வேகின்ற தீயினுக்கு பேயும் விறகிட்டதுபோல, மன்மதனும் தனது ஒப்பற்ற பாணத்தைக் கருத்தினிடமாக எய்திட்டான்.

நிழலைத்தருகின்ற காதணியிலே நெய்யிடாமல் தீயிடாமல் ஒளிரும்படியாகச் செய்யும் கூர்மை பொருந்திய கண்ணுடையவளாகிய சீதை, சுழித்து முடித்த கூந்தலும் உடுத்துள்ள வஸ்திரமுஞ் சோர்ந்திட, தீயிலிட்ட கொடியைப்போல வருந்தினாள்.

ஒலிக்கின்ற மேகலாபரணமும் தனது தற்காப்பும் சங்குவளையல்களும் சுருங்கியஉள்ளமும் உணர்வும் தேக நிறமும் ஆகிய இவற்றையிழந்தவளாகிய சீதை, தேவர்கள் கடைந்தபோது தனது, பொருள் எல்லாவற்றையும் கொடுத்திட்டலை கடப்போல வறுமையுடையவளாகிவிட்டாள்.

உடல் குழைதலினால் ஆபரணங்கள் கழன்று கீழேவிழவும், நீண்ட நாள் இயற்கையிற் பொருந்திய நாணமென்னும் குணமும் நீங்கிப்போகவும், ஸ்தனபாரங்கள் அழகுகுறைந்து போகவும், முகத்தில் பாணந்தைத்து வருந்தும் மானைப்போல உயிர் வருந்திச் சோர்ந்து கொண்டிருக்கும் பொன்னாபரணம் புனைந்த மயில் போன்ற சீதையை யேந்திக்கொண்டு தோழிகள் சிரமத்துடன் போனார்கள்.

காதுவரையில் கடைப்பாகம் பொருந்து எட்டியிருக்கின்ற மீன்போன்ற கண்களையுடைய சீதையினுடைய பாதங்களையும் கைகளையும் போன்றிருக்கும் பல்லவத்தாள்களோடு இலைகளும் சேர்ந்துள குளிர்ந்த பனிநீர்த்துளி பொருந்திய மலர்ப்படுக்கையிற் கொண்டு போய்ச்சேர்த்தார்கள்.

நாளும் நீங்காத நறுமணம் பொருந்திய பூப்படுக்கையிற் போய்ச்சேர்ந்த சீதையானவள், பூளைப்பூப்போன்ற பனியைப்பெய்யும் மேகத்துக்குத்தேம்பி வாடியிருக்கும் தாளுடைத்தாமரைப்பூக்கள் நிறைந்த பொய்கையைப்போலவும், வாள் போன்ற ராகுவென்னும் பாம்பினால் பிடிக்கப்பெற்ற சந்திரனைப்போலவும், ஒளி குறைந்து வருந்தினாள்.

மலையின் மேலிடத்திலே சிதறிவிழும் மழைத்துளிகளைப்போல நீண்டகண்ணீர், கொங்கைகளின் உச்சியில் உதிர்ந்து நின்றன ; வில்லைப்போன்ற நெற்றியின் கடைப்பிரதேசத்தில் துளியாகிநெருங்கியுள்ள வேர்வு, கொல்லனுலை முகத்தில் தோன்றும் புகையைப்போன்ற சீதையினுடைய மூச்சுக்காற்றினால் அழிந்துபோயின.

நடுக்கங் கொள்ளாத அஞ்சாத நெஞ்சு படைத்த வனவேடனது கையினால் எறியப்பெற்ற பாணத்தொடும் தளர்ந்து வீழும் மயிலைப்போன்றவளாகிய சீதை,

வெப்பத்தையடைந்த மனத்தின் தீ வெதுப்பலால் மெல்லிய பூங்கொம்புபோல் படுக்கையில் குழைந்து வருந்தினாள்.

மேனியில் தோன்றிய காம தாபத்தினால் படுக்கைக்காகக்கொணர்ந்து கொட்டப்பெற்ற மணம் பொருந்திய மலர்கள் சூடுண்டு தீந்து சுருண்டு தேகத்தில் தைத்தன; மேனி வெப்பத்தால் பொரிந்துபோன கலவைச்சாந்துகள் பொறிகள்போலச் சிதறி வீழ்ந்தன; தேகத்தில் எரிந்துள்ள கொடிய கனல் சுடலால் ஆபரணங்களில் கோர்த்த நூல்கள் அற்றுப்போயின; படுக்கையிற் போட்டிருக்கும் தழை குழைகள் கரிந்துபோயின.

ஏவற் பெண்களும் ஐவகைத்தாய்மார்களும் தமக்கைமார்களும், "இது என்ன நோயோ? என" எண்ணித் தெளியாதவர்களாகி மிக்க துயரையடைந்து வருந்தி மயங்கினார்கள்; மலரும் சோறும்சேர்ந்த ஆலத்திநீர் சுற்றிக் கடவுளைப்போற்றி நின்றார்கள்.

சமீபத்தில் நின்றுகொண்டு வீசப்பெறுகின்ற விசிறிக்காற்றானது காமத்தீயை அதிகப்படுத்தியதால், ஆபரணங்களும் மாலைகளும் கரிந்து போனவையாகவும் தீந்துபோனவையாகவும் கனன்று காட்டியபடியால், சீதையானவள், தீயில் உருகும் பொற்பாவைபோலக் காணப்பட்டாள்

மாலையணிந்த காடுபோன்ற அடர்ந்த அவர் குஞ்சி இருளைக்கொண்டு வகுத்ததோ என்பாள்; இரண்டு தோள்களும் வலியதூண்களாயிருத்தல்வேண்டும் அல்லது மரகதப் பெருமலைகளாக இருத்தல் வேண்டும் என்பாள்; கண்கள் தாமரைகளே என்பாள்; அந்த உருவம் வில்லோடு கிழிறங்கிய தொரு மேகந்தானென்பாள்.

என்னைக்கிட்டி, யென்னுள்ளத்திற் புகுந்து எனது அரிய நிறையையும் பெண்தன்மையையும் உருகச்செய்து, என்

உயிருடன் கலந்து சென்றவனது மலைக்குச் சமானமாகிய தோள்களைச் சேர்தற்குரிய புண்ணியத்தைச் செய்தது கரும்பு வில்லன்று; ஏனெனில், அவன் காமனல்லவாகலான்,

எனது பெண்ணியற்கைக்குரியதாகிய அழகும் அதனுடன் பிறந்த நாணமும் உள்ளத்துற்ற அறிவும் ஆகிய இவை என்னிடம் எங்கும் காண்கிலேனே; ஆதலான், பூமியின் வழியே நடந்துசென்று தன்பாதங்கள் வருந்தப்போனவன், கண்வழியே உடலில் நுழைந்து அபஹரித்துச்செல்லும் ஒப்பற்ற கள்வனேபோலும்.

ஓர் பேராண்மகற்குரிய, இந்திர நீலக்கற்களின் ஜோதிபோலும் நீலவொளியுடைய இருண்ட கேசங்களும் சந்திரன்போன்று கருணை மிகுந்த முகமும் செல்வச்சீரினைக்குறிக்கும்-முழந்தாள்வரையில் தாழ்ந்திருக்கும் கைகளும் அழகான மணிமலைகளைக் கடைந்தெடுத்து வைத்துளதுபோன்ற தோள்களும் அவற்கிருந்தவையாயினும், இவற்றைக்கண்டு நான் மயங்கினேனில்லை; ஆயின், இவற்றுக்கு முந்தி, என்னுயிரை, அவரது புன்முறுவலே கவர்ந்து கொண்டு சென்றது.

விரிந்து ஒளிபரந்து என் உயிரைப்பருகும் மார்பமும், பொய்கையில் தோன்றும் தாமரைகள் போன்றிருக்கும் இரண்டு கண்களுமேயல்லாமல், மதம்பாயுந் துளையிலிருந்து எப்போதும் மதநீரைக் கொண்டிருக்கும் களித்த நல்ல யானையைப்போல் நடந்து சென்ற நடையானது என் மனதிற் புகுந்து கிடந்திருக்கிறது.

மணம் நெருங்கிய தாமரை போன்ற இருவிழிகளும் இமைத்துக்கொண்டிருக்கும் உண்மையுடன் மேற்கூறிய குறிகளையும் சேர்த்து விசாரித்துரைக்குங்கால், அங்ஙனம் நடந்து சென்றவர் தேவலோகவாஸியல்லராகும்; மற்றும், கட்டுடைய வில்லைக்கையிற்றரித்திருந்தவராகலானும் மார்பில் பூணூல் தரித்திருந்தவராகலானும், ஓர் அரசிளங் குமாரராகவே இருத்தல் வேண்டும்.

என்னுடன் பிறந்து என் உடைமையாயுள்ள அழகும் நிறையும் சேர்ந்து கட்டியிருக்கும் என்னுள்ளமாம் இயந்திரம் சுழன்று திரிந்துகொண்டிருக்கும் எனது கன்னித்தன்மையாகிய பெரிய மதிலை அழித்து என்னுள் நுழைந்த அவ்வரசிளங்குமரனை யின்னும் கண்களாற் கண்டுணர்ந்து தேறிப் பின்னரேனும் உயிரிழக்கவும் ஆகுமோ? தெரியவில்லையே.

என்று இத்தகைய பொருள்களை உள்ளத்திலே எண்ணுவாள்; இதோ என்னிடம் வந்து நிற்கிறார் என்பாள்; ஓஹோ, அதோ நீங்கிவிட்டார் என்பாள்; இப்படியாகக் கொதித்துள காமதாபத்தால் ஒன்றல்ல பல பல எண்ணி எண்ணி வருந்திக்கொண்டிருக்கும்போது,

அன்னம் போன்ற மேன்மையான நடையுடைய சீதைக்குப் பொருந்திய காமத்தீயானது தன்னையுஞ் சுட்டுவிட, அது தரிக்கிலாதான் போல, பழைமையான உஷ்ண கிரணங்களையுடைய சூரியதேவன், நல்ல நீண்ட தனது ஆயிரங் கிரணங்களையும் அசைத்துக்கொண்டு ஓடிப்போய்ச் குளிர்ச்சிபொருந்திய கடலில் மூழ்கிவிட்டான். சூரியாஸ்தமனமாயிற்று என்றவாறு.

விரிந்த புஷ்பங்களில் தோய்ந்துவரும் தென்றற் காற்றும் வீசக்கூடிய கயிறும் தீப்போல் நிறமுடைய செக்கர் வானமும் இருளும் காட்டிவரலால், அரிய குண முடைய சீதைக்கு நெருப்பைக் கக்குகின்ற அந்திமாலையென்கிற கரிய நிறமும் செம்மயிருமுடைய எமன் தோன்றியதுபோலாயிற்று

மேலே ஒலித்துக்கொண்டிருக்கிற பறவைகளாகிய பறையோசையும், கீழேகிடந்து ஒலித்துக்கொண்டிருக்கிற கடல் நீராகிய சிலம்போசையும், செக்கர் வானமாகிய உதிர

றும், பாதக உருவினதாம் இருளாகச் செய்யப்பெற்ற மேற்சட்டையும் கொண்டுவந்திருத்தலால், அவ்வந்திமாலைக்காலமானது, ஓர் பூதம் போன்ற தன்மையை யுடையதாக விருந்தது.

வேறு.

குளங்களாம் கொல்லுலையிலிருக்கும் நீராகிய தழலிற் றோய்ந்து, பிறந்த மணம் பொருந்திய அன்றலர்ந்த பூக்களின் தேன்களாகிய விடம் பூசிக்கொண்டு அசைந்துவருகிற தென்றற்காற்றாகிய கோல், மன்மதவேடன் எய்ததனா லுண்டான புண்களில் நுழைந்து வருத்த, வருந்துகின்ற அறிவும் நல்ல அழகும் உருகித்தளர்பவளாகிய சீதை, தன்னுயிரை யுண்ணுதற்கு வழங்கிவருகிற அந்திமாலை வருதலைப் பார்த்து, "இதுதான் எமனுருவமோ?" என்றாள்.

கடலோ, மழையோ, முழுத்த நீலமலையோ, காயாவின் மணமுள்ள மலர்களோ, படர்ந்து அழகிய குவளையின் அன்றலர்ந்த மலரோ, நீலோத்பலமோ, கருநெய்தற் பூதானோ, இவற்றில் துன்பம் பொருந்திய பெண்களின் உயிரையுண்பது யாதோ என்று சொல்லித்தளர்பவளாகிய சீதைக்கு, ஓரே மடல் பொருந்திய மாலையைப் பெற்ற இராமன்போலும் நிறமுடைய அந்திமாலை வந்து சேர்ந்தது

மேகமாகிய கருநிறத்தையும் மின்னலாகிய பற்களையும் தென்றலாகிய மூச்சுக்காற்றையும் வளர்ந்துவரும் செவ்வானமாகிய படமும் வாய்ந்துள்ள அந்திமாலையாகிய படமுடைப்பாம்பே! துன்பம் விளைத்து என்னைப் பகைக்கின்றாய்; என்மேல் பாணங்களை யெய்துகொண்டிருக்கும் ஒருவனாகிய மன்மதனோ கையோயாதவனாக இருக்கின்றான்; எனக்குள்ள உயிரும் ஒன்றேதான்; வேறு இல்லை; நான் பிழைத்துப்போக எண்ணியிருக்க என்னைக் கொன்று இப்பழியினை நீ பூண்பதற்கு உன்னோடு எனக்கு எதேனும் பகைமையுண்டோ? சொல்வாய்.

பிராட்டி இருளைக் குறித்து இரங்கிக் கூறுகின்றாள் :—

தனிப்பட்டவர்கட்குத் துன்பத்தை வளர்க்கின்ற இருளாக உருவெடுத்து விருத்தியடைந்திருக்கும், இந்த, கருகிப் பெருகிய தோற்றமானது, "ஹாலாஹல விஷம் உலகமுழுவதிலும் பரவியதுதானோ! கரிய கடலானது மேலே பொங்கி வளர்ந்து பரந்திருக்கின்றதோ! அல்லது எனக்குக் காட்சி கொடுத்தருளி மறைந்த அந்த புருஷோத்தமனது திருமேனியின் நீல நிறத்தை உலகத்தில் யாவரும் நினைத்தலால், எங்கும் அந்நிறமேயாகி வியாபித்திருக்கின்றதோ! யமனுடைய கரிய நிறத்தை மையோடு கலந்து குழைத்து, அச்சேற்றைக்கொண்டு; ஆகாயத்தின்மேலும் பூமியின்மீதும் எங்கும் பூசியதுதானோ!" என்று இரங்கி வருந்தினாள்.

பின்னும், பிராட்டி அன்றிற்பறவையைப்பார்த்து வருந்திக்கூறுவது:-

"ஏ! அன்றிற் பறவையே! எனது கண்களின் முன்னே மின்னல்போல் சிறுபோது வெளிப்பட்டுத் தோன்றிய எனது தலைவரோ தற்போது மறைந்து சென்றார்; அங்ஙனம் போகவொட்டாமல், என்பொருட்டு அவரைத் தடுத்து நிறுத்துதற்கு ஒருவரையும் நான் காண்கிலேன்; இங்ஙனம் துணையில்லாத எளிமை பொருந்திய என்னை, ஒரு பெண் என்று நினைத்து, என்பொருட்டுச் சிறிதும் இரக்கங்காட்டாமலே, இந்த ராத்திரி காலத்தில் இருளின் இடையிலே மறைந்து நின்று, ஒளி பொருந்திய அம்புகளை யென்மீது பொழிந்து கொண்டிருக்கின்ற, மன்மதக் கடவுள் உனக்கு இந்தக் கொடிய வஞ்சனையை உபதேசித்தனரோ! அல்லது ஏழையாகிய யான் முற்பிறப்பிற் செய்துவைத்துள்ள தீவினையே நீதானோ! இந்த அன்றில் உருக்கொண்டு இப்பிறப்பில் வந்தனையோ?" என்று வருந்திக்கூறினாள்.

பிராட்டிக்குத் தோழிமார் செய்த உபசாரம் :—

அவ்விடத்திலே பிராட்டி, மேற்கூறியபடி, எண்ணி யெண்ணி வருந்தும்போது, தோழிமார்கள், நெடுந் தூரத்தி லுள்ள ஆகாயத்தையும் தொடும்படியாக உயர்ந்துள்ள சிறந்த பெரிய அக்கன்னியாமாடத்திலே, குளிர்ந்த சந்திர காந்தக் கல்லினுற் செய்யப்பட்டுள்ள மேடையில், மிக்க ஒளியுடைய—நெய் பெய்து ஏற்றப்பட்டிருக்கிற விளக்குகளை, வெப்பம் உண்டாக்குகின்றனவென்று நினைத்து அவ்விடத்தி னின்றும் நீக்கிவிட்டுத் தூண்டுதல் செய்ய வேண்டாத மணி விளக்குகளின் காந்தியினுல், அங்குத் திரண்டிருந்த இருளை யோட்டி யொளியைப் பரப்பினுர்கள்.

சந்திரன் உதிக்கிருன் ; கவி வர்ணிக்கிருர் :—

சிறந்த வலிய நீண்டுயர்ந்த பெரிய மந்தர மென்னும் மலையை மத்தாக நாட்டி, அதிற் கட்டப் பெற்ற வாசுகியென் னும் பாம்பாகிய முறுக்கேறிய கடைகயிற்றுல், வெளியிலே தெறித்துப் பரவிய நீர்த்துளிகளும் சிதறிய மணிகளும் ஆகா யத்திற் காணப்பெறும் நக்ஷத்திரங்களைக் காட்டிலும் அதிக மாய் விளங்கும்படியாகத், தேவர்கள், தாங்கள் அருந்துவதற் காகத் திருப்பாற் கடலைக் கடைந்திட்ட காலத்தில், அக்கட லிலிருந்ததாகிய அமுதம் நிறைந்த பொன்மயமான கலச மானது அக்கடலினிடையிலே எழுந்து தோன்றியதுபோல், வெண்ணிறம் பொருந்திய சந்திர மண்டலம் கருங்கடலி னின்றும் உதித்து எழுந்து மேல்வந்தது.

இனியும் வேருெரு வகை வர்ணனை :—

பிரமதேவனுனவன் ஒரு வண்டைப்போல மேலேறி வீற்றிருந்து நான்கு வேதங்களையும் பாடும்படியாக, ஒரு செந் தாமரை மலரானது, முன்னெருகாலத்திலே பிரளயப் பெருங்

கடலில் ஆலிலையின் மேலே பள்ளிகொண்டு, மிக்கப் பசித்தவன் போல், உலகங்களையும் கடல்களையும் அடங்கிய எல்லாவற்றையும் உட்கொண்டருளின விஷ்ணுவினுடைய திருநாபிக்கடலிலிருந்து மலர்ந்து தோன்றியது; அந்த நிகழ்ச்சியை நோக்கிக்கொண்டிருந்த அலைகளையுடைய கடலும், வேறொரு வெண்தாமரையைத் தானும் பூத்து நின்றதோ என்று எண்ணும்படியாக, கடலிலிருந்து மேலெழுந்து தோன்றிய சந்திரமண்டலமானது இருந்தது.

சந்திரமண்டலத்தின் நிலா எழுந்துபரந்தது எப்படியிருந்ததெனில்:—

புள்ளிகளை அடையாளமாக இட்டாற்போல, பிரகாசமான நக்ஷத்திரங்கள் விளங்கப்பெற்று, ஆகாயத்திலே பொலிந்திருக்கிற இரவின் நடுப்பொழுதிலே மிகுந்திருக்கிற இருட்கூட்டத்தை விழுங்கிச் சிறந்திருக்கிற சந்திர வொளியின் தொகுதியானது, கிழக்குத் திசையின் மேலே வைக்கப் பெற்றிருக்கும் வெள்ளிமயமான பூர்ண கும்பத்தின் பக்கத்திலேயுள்ள இளமையான பாக்குமரத்தின் வெண்ணிறப்பாளையைப் போல விரிந்து பரந்திருந்தது; இந்த நிலவின் பரப்பானது, தன்னுள்ளம் புகுந்த தலைவனைப் பிரிந்து தனித்திருக்கிற, கிளிமொழி போலும் கிளர் மொழிகளையுடைய பிராட்டிக்கு, எத்துணைத் துன்பத்தினை விளைத்திடுமோ என்று கவி வருந்துகிறார் என்பதுமாம்.

இங்ஙனம் சந்திரன் உதித்தெழுந்தபோது, தாமரை மலர்கள் குவிந்து போயின; செவ்வாம்பல் மலர்கள் விரிந்து விளங்கின;

இந்நிகழ்ச்சி எப்படியிருந்ததெனில்:—

வாசனையை வீசுகின்ற பூவிற் சிறந்த தாமரை மலர், தன்னை விரும்பிப் புகுந்திருக்கின்ற திருமாமகளுடனே, தன்னிலிருந்து ஒலிசெய்துகொண்டிருக்கும் வண்டுகளின் கூட்

டம் தன்னைவிட்டு நீங்கிப்போகும்படியாக, இதழ்களைக் குவித்துக்கொண்டு வாடி மூடிக்கொண்டுவிட்டது; அப்போது செவ்வாம்பல் மலரானது, புலவர்கள் புகழ்ந்து சொல்லும் ஆஜ்ஞா சக்கரத்தை எங்குந்தடையில்லாது உருளச்செய்து ஒப்பற்ற செங்கோலைச் செலுத்தி உலகமுற்றும் அரசாண்டிருந்த ஒரு சக்கரவர்த்தி, காலவலைக்குட்பட்டு ஒழிந்த மாத்திரத்தில், தலையெடுத்தாடும் ஒரு குறுநில மன்னனைப் போலத் தலையெடுத்து மலர்ந்துளது.

இருளை விழுங்கி எங்கும் விரிந்த நிலாத் தோற்றம் எப்படி யிருந்தது! கவி தமது ஆப்தரைப் புகழ்கிறார்.

செந்நிறம் பொருந்திய மாலைப்பொழுதாகிய தனது செங்கையை விரித்து நீட்டி உலகை வளைந்து சூழ்ந்திருந்த இருள் முழுவதையும் வாரிப்புசித்து உட்கொள்ளக்கருதி, குளிர்ந்த சந்திரனது உதயத்திலே வெளித்தோன்றிய நிலாவின் கூட்டமானது, விண்ணுலகத்தையும் மண்ணுலகத்தையும் திக்குகளுடன் உலக முழுவதையும் தன்னுடையதாக்கி விழுங்கிக்கொண்ட, பரந்த நன்னீர் வளத்தையுடைய கழனிகளைப் பெற்ற திருவெண்ணெய்நல்லூர்ச் சடையப்ப வள்ளலாரது கீர்த்தியைப்போல எவ்விடத்தும் பரவிச் சூழ்ந்தது. இது உபகார ஸ்மிருதியாகும்.

நிலாக்கற்றை விரிந்ததினல், வானமெங்கும் வெண்மை பரந்தது.

கடல் வெள்ளத்திலே உதித்து மேலெழுந்த நீண்ட வெண்ணிறம் பொருந்திய சந்திரச் சிற்பியானவன், கிரணங்களென்கிற கைகளை மேலே பரவச் செய்து, மிகவும் வெள்ளிய நிலாவாகிய வெண்ணிறச் சுண்ணச் சாந்தினல் காத்தல் தொழிலையுடைய மகாவிஷ்ணுவினது அழகிய நாபிக்கமலத் தண்டிலிருந்து வெகுகாலத்தின் முன்னர்த் தோன்றிய

அண்டகோளமானது தற்போது பழையதாகிவிட்டதெனக் கருதி, அவ்வண்டகோளத்தைப் புதுப்பித்த செயல்போலும், நிலாக் கற்றை எங்கும் பரவியது.

பிராட்டி விரகநோய் தாங்கமாட்டாமல், விரிந்தெழுந்த சந்திரனைப் பார்த்து நிந்திக்கிறாள்.

ஓங்கி வருகின்ற இருளின் வடிவமாய், உலக முழுவதை யுங் கவர்ந்துகொண்டு, மேலும் விருத்தியடைந்திருக்கிற கருநிறம் பொருந்திய இரவாகிய தீயினிடத்தே தோன்றிக் காணப்படுகின்ற சந்திரன் என்று பெயர் கொண்ட வெண்ணிறத் தீயே! நீங்காத மாயையுடையவராகிய அந்த புருஷோத்தமனுருக்கு நிறத்தினால் தோல்வியடைந்து, உலகத்தின் வெளியே ஓடிப்போய்ப் புலம்பிக் கொண்டிருக்கிற அலைவீசு கடலுக்கும், அந்தத்தலைவரைப் பிரிந்து வேதனையால் வருந்திக்கொண்டிருக்கும் எனக்கும் கொடியவனாக இருக்கின்றனையே என்றாள்.

## வேறு.

இதுவும் சந்திரனைப் பார்த்துக் கூறியதாம்:—

குளிர்ந்த கடலில் உதித்த சந்திரனே! நீ இயற்கையில் கொடுந்தன்மை யுடையாயல்லை; ஏன் என்றால், உலகத்தி லுள்ள எல்லாரையும் கொல்லுகிறாயில்லையாகையால்; அல்லாமலும் நீ, பாற்கடலினின்று முதித்து இனிமை பொருந்திய அமுதத்துடனும், பெண் யானையின் நடை போன்ற நடையையுடைய திருமகளுடனும் பிறந்திருக்கின்றாய் அல்லவா! அப்படியிருக்க, ஒரு பெண்ணாகிய என்னைச் சுடுவாயோ!! என்றாள்.

பிராட்டி விரகதாபம் :—

ஆகாயத்தில் நெருங்கி யெழுந்திருக்கிற வெள்ளிய சந்தி ரனது கிரணமாகிய — அடிக்குந்தன்மை கொண்ட சம்மட்டி யானது, மெதுத் தன்மையுடைய தனது மார்பகத் தங்கங் களிற் படுதலால், பிராட்டி பெண்ணன்னத்தின்மேல் வெப்பம் பட்டதுபோல, மலர் நெருங்கிய படுக்கையிற் புரண்டனள்.

நீக்கமில்லாமல் எங்கும் பரவிய நிலாக்கற்றை, தன்மீது மோதும்போதெல்லாம், பிராட்டி, உடல் வெதும்பி மனந் தளர்ந்து சரிந்து வீழ்ந்தாள்; அங்ஙனம் துன்பப்படும் பிராட்டிக்கு, மெத்தையாக விரிக்கப்பெற்றுள்ள செந்தா மரை மலரின் இதழ்களும் அவளது மேனியின் வெப்பத் தினுல் தீந்தன; கிளிபோலும் இன்சொல்லுடைப் பிராட்டி யும் வருந்தினுள்.

மணம் பொருந்திய மிருதுவான கலவைச் சந்தனக் குழம்பை அள்ளியெடுத்துத், தோழியர்கள் தனது திருமே னியிற் பூசுந்தோறும், பிராட்டி, உடல் வெதும்பித் தவித் தாள்; ஆலவட்டம் முதலிய கொண்டு வீசும்போதெல்லாம் மெல்லிய தனங்களில் வெப்பங் கொண்டாள்; அதனுல் காமநோயைத் தீர்க்குமொரு மருந்தில்லை யென்னும்படி வருந்தினுள்.

இதுவும் தோழிமார் செய்த உபசாரங்களைப் பற்றியது :—

பிராட்டியினுடைய திருமேனியிலே கொதித்தெழுகின்ற காமத்தீயால், மகரந்தம் சிந்தும் மலர்களாலும் சிவந்த தளிர் களாலும் அமைக்கப்பெற்றிருந்த மெதுவான படுக்கை மெத் தைகள் வாடிக்கருகும்போதெல்லாம், பிராட்டியின் பாங்கி மார்கள், தங்கள் குழந்தைகளிடம் தாய்மார் காட்டும் அன் பைக்காட்டிலும் அதிக அன்பினைக்காட்டி, இரண்டாயிரம்

படுக்கைகளை யொன்றன்பின்னொன்றாகக்கோணர்ந்து, மேலும் மேலும் அடுக்கி அமைத்துத்தந்தார்கள்.

கவி கூறுகிறார் :—

அழகிய கன்னிமாடத்திலே, மணம் வீசும் மலர்ப்படுக்கையிலே, அன்னப்பேடு போன்ற சீதாப்பிராட்டி, இங்ஙனம் விரகதாபமடைபவளாயினள்; இது நிற்க, அந்த சீதாப்பிராட்டியினது, மின்னலைப்போல விளங்கும் திருமேனியைப் பார்த்தவராகப் முன்னர் நம்மாற் சொல்லப்பெற்ற, சரித்திர நாயகராகிய இராமபிரானுக்கு நேர்ந்துள்ள செய்தியையும் கூறத்தொடங்குகிறோம்; மேலே காண்க.

இராமபிரான் முதலிய மூவரும் அரண்மனை சென்று ஜனக மன்னனைக்கண்டனர்; அவ்வரசரும் மகிழ்வுடன் எதிர் வந்துபசரித்து, இனிமையாக அழைத்துச்சென்று, நல்வினைப் பயனுமின்பத்தை யனுபவிக்கும் பதவிகளிற் சிறந்த, அமராவதியைப் போன்றதொரு சிறந்த மாளிகையிலே, தங்கும்படியாகச் செய்வித்தார்.

அம்மூவருந்தங்கிய அத்திருமாளிகையில், உலகிற்சிறந்த தவங்கள் முழுவதும் ஒரு மனிதவுருக்கொண்டு நடந்துவந்த தென்னும்படியான தவக்கோலத்துடன், குற்றமற்ற வன்மையிற்சிறந்த வீரரான ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்தியின் அழகிய செந்தாமரைப் பாதத் துகள்களால் தன் கல்லுரு நீங்கி நல் லுருப்பெற்ற, அஹல்யா தேவியின் அருட்குமாரராகிய சதானந்தர் வந்தருளினார்.

அங்ஙனம் வந்து தோன்றிய அம்முனிவரை, வள்ளலாகிய ஸ்ரீராமபிரானும், மனமகிழ்ச்சியுடன் வணங்கினர்; எல்லையற்ற நற்குணங்கள் வாய்க்கப்பெற்ற சதானந்த முனிவரும், நீண்ட ஆசீர் வசனங்கள் அருளிக் கௌசிக முனிவருடைய

அருகே சென்றனர்; அவ்வளவில், கோதமர் பெற்ற குமாரராகிய சதானந்தர், தவத்திற் சிறந்த கௌசிகமுனிவர் திருமுகம்பார்த்து, "இப்போது, தாங்கள் இவ்விடம் விஜயஞ்செய்தருளும்படியாக, இந்த மிதிலா நகரமானது, செய்துவைத்திருந்த பெருந்தவம் யாதோ!" என்றுபசரித்தார்.

இவ்வாறு உபசார வசனம் கூறிய குளிர்ந்த தாமரையாதனத்தையுடைய பரிசுத்தராகிய பிரமனுக்குச் சமானமாகிய - ஜீவகருணையிற் சிறந்த சதானந்தரென்னும், நற்குணமெல்லாம் வாய்ந்த மாமுனிவருடைய மாமுகம்நோக்கி, சாஸ்திரங்களில் மூழ்கிய மனத்தையுடைய விசுவாமித்திரமுனிவர் ஒரு வார்த்தை சொல்லலானார்.

"தெளிந்த-பெருந்தவத்தைச் செய்துள்ள சதானந்த முனிவரே! கேளும்; வரையாதருளும் வள்ளன்மை வாய்ந்த இந்த ஸ்ரீராம பிரான், 'இடிபோலும் பயங்கரக் குரல் படைத்திருந்த தாடகையினது தேகத்தையும், எனது யாகத்தையும், உமது தாயார் அஹல்யா தேவியின் சாபத்தையும் ஒன்றன்பின் ஒன்றாக முடிவுசெய்து, அம்மூன்றின் பொருட்டு என்னுள்ளம் குடிகொண்டிருந்த துயரத்தையும் முடித்தான்;' அதனால், என்னுள்ளத்திற் பதிந்திருந்த தேசத்துயரமும் நேசத்துயரமும் பாசத்துயரமும் ஒழிந்தன" என்றார்.

என்று இவ்வாறு, விசுவாமித்திரமுனிவர் சொல்லலும், எல்லையற்ற தவமுடைய சதானந்தர், விசுவாமித்திரரைப் பார்த்து. "மிக்க தவமுடையவரே! உமது கருணை இளம்பிராயமுடைய இக்குமாரர்கட்கு இருப்பதாயின், வெற்றி பொருந்திய இவ்வீரர்கட்கு அரிய காரியம் என்ன இருக்கப்போகின்றது!" என்றுஞ் சொல்லி, மேலும், இராமபிரானை நோக்கிச் சொல்வாராயினர்.

## மாந்தசுரக் குடிநீர்

சீந்தில் தண்டு கடுக்காயும்
சிவனார் வேம்பு களிப்பாக்குக்
காந்துங் கடுகு ரோகணியுங்
காயும் நீரில் கலந்திட்டு
யேந்து முலையாள் முலைப்பாலி
லெட்டொன் றாக்கிக் கொடுப்பீரால்
மாந்த சுரமும் தீர்ந்துவிடும்
வயிறு கழியுங் கண்டீரே.

## இதற்குத்துவாலை

பொக்கணம் பிக்கிமூலம் போதவே துவைத்த சாறு
தக்கவே கொண்டு நெய்யில் தான் மிகக் குழைத்தருந்தில்
துக்கமே யெழுப்பி மெய்யில் துயரறு மரோக மானால்
மிக்கது கைக்கு மாகில் மிகுந்தவஞ் சினையு மாமே.

## பயித்தியத்திற்கு குடிநீர்

நெற் பொரியுஞ் சிறுபயறு வில்லை முன்னை
நேரிய சீரக மேலஞ் சுக்கு நெல்லி
சர்க்கரையோ டதிமதுரம் சிறுகாஞ்சோறி
தக்க முசு முசுக்கை கொத்த மல்லியிஞ்சி
யிற்புகவே வணக்குமிரு கழஞ்சு தண்ணீ
ரிருநாழி விட்டதனை யெட்டொன்றானால்
மற்பொருமல் குருகுருப்பு வாய்நீரூறல்
வயிறெரிவு வாந்தி சுர மற்றும் போமே.

## வயிற்றுக்கடுப்புக்கு

சுருள்ளியோர் பலங்கொண்டெய் தகத்தியின் கொழுந்து
சீருள்ளதோர் பிடிதான் சேர்த்தருந்து—ஏருள்ள
பால்நாழி பாங்காக விட்டருந்தக்
கால் நாடா துந்திக் கடுப்பு

## தசமூலக் குடிநீர்

முன்னை வில்லை பாதிரி நெருஞ்சியு
முத்தக் காசொடு சிற்றா முட்டியுஞ்
சின்ன வழுதலை பேரா முட்டியுஞ்
சிறக்குங் கண்டங் கத்திரி வேரொடு

"அப்போது, வசிஷ்டர், கௌசிகரைப் பார்த்து, அரசே! அறுவகைச் சுவையுடனும் பொருந்திய இவ்வுணவுகளை உமது சேனையிலுள்ள ஜனங்களுடன் விரும்பிப் பெற்று உண்ணுவீராக" என்று சொல்லி எல்லாம் வருவித்துக் கொடுத்து உபசரித்தபோது, கௌசிகர் தன் சேனையுந் தானும் விருந்துண்ட பிறகு, நறுமலர் மாலைகளையும் பரிமளமிகுந்த கலவைச் சாந்துகளையும், வசிஷ்டரால் அளிக்கப் பெற்று, இவ்வரசன், உற்றிந்த வருத்தம்நீங்கி, ஆலோசித்தறிந்து, வசிஷ்டரைப் பார்த்து, ஒரு வார்த்தை சொல்லத் தொடங்கினர்."

"பெருந்தவமுடைய வசிஷ்ட முனிவரே! நீங்கள் இருந்த விடத்தைவிட்டெழுந்திருக்கவில்லையே; இந்தத் தெய்வப் பசுவானது குற்றமற்ற அமுதம் போலும் நல்லுணவுகளை ற்வெறி பொருந்திய எனது சேனைக்கெல்லாம் இன்பந் தோன்றத் தந்தருளி உபசரித்த சிறப்புடைமையால், இதனை நான் விரும்புகிறேன். குற்றமற்ற வேத சாஸ்திரங்களை யுணர்ந்த பெரியார்கள், 'மேன்மை பொருந்திய அதிசயங்களெல்லாம் அரசர்க்கே யுரிமையுடையன' என்று சொல்லியிருக்கிறார்கள்; ஆகையால், தேவைகளையெல்லாம் வெறுத்துத் தவத்திற் சிறந்த முனிவராகிய உமக்கு 'இவ்வுடைமை தகுதியாகாது; இச் சிறப்பு மிகுந்த காமதேனுவை, விருந்துபசரிக்கும் விரதம் பொருந்திய அரசனாகிய எனக்குத் தந்தருளுவீராக' என்று சொன்னமாத்திரத்தில், வசிஷ்டர் சிறிது நேரம் ஒன்றும் சொல்லமாட்டாதவராயிருந்து, பின்பு, 'அச்சந்தரும் வேலுடைய வலிய அரசரே! மரவுரியை யாடையாகக் கொண்ட முனிவனாகிய யான் இத் தெய்வப் பசுவை யொருவர்க்குக் கொடுக்கக் கூடிய உரிமையுடையேனல்லேன்; அஃது உம்மிடம் வருவது கூடுமாகில், நீரே அழைத்துக்கொண்டு போகலாம்' என்று சொல்லவே,"

அதனைக் கேட்டிருந்த இந்த அரசன், முனிவர் சொன்னபடியே செய்வேனென்று, எழுந்து, மிகுந்த ஊக்கத்துடன்

அந்தக் காமதேனுவைக் கட்டிக்கொண்டு புறப்படும்போது, அந்தப் பசு அக்கட்டை யறுத்துக்கொண்டு வசிஷ்ட முனிவரிடம்வந்து பணிந்து, "வேதமெல்லாம் ஆராய்ந்தறிந்த எம் தலைவராகிய வசிஷ்டரே! இந்த அழகிய தோளுடையரசர்க்கு என்னைக் கொடுத்திட்டீர்களோ?" என்று கேட்டது; அப்போதுவசிஷ்டர் சாஸ்திர மரியாதையறிந்துசொல்வராயினார்.

"உன்னை யவருக்கு நான் கொடுத்திடவில்லை; வெற்றியுற்ற குடையையுடைய மன்னவன், உன்னைப் பலாத்காரச் செயலாற் பிணித்துக்கொண்டு போவதாகும் இந்நிகழ்ச்சி" என்று விடையளிக்கவே, பசு கடுங்கோபங் கொண்டு, "இடியையொத்து ஒலித்துக் கொண்டிருக்கும் இந்த அரசனுடைய சேனையை இப்போதே அழித்து விடுகிறேன்" என்று வசிஷ்டரிடம் சொல்லிவிட்டுச் சபதஞ் செய்துகொண்டு, தனது மயிர் நெருங்கிய மேனியைச் சிலிர்த்தது.

அப்போது, அப்பசுவின் திருமேனியிலிருந்து, பர்ப்பரர்களும் வேடர்களும் சீனர்களும் சோனகர்களும் முதலான பல வீரர்கள், கைகளிற்றுங்கிய ஆயுதங்களுடனே தோன்றி, அரசனுடைய வலிமை பொருந்திய சேனைகளெல்லாம் அழியும்படியாக வெட்டித் தள்ளினபோது, கோபம் மிகுந்த கௌசிகர் குமாரர்கள், வெகுண்டு போருக்கெழுந்தார்கள்.

எழுந்த அப்புதல்வர்கள், "இது பசுவின் சக்தியன்று; மறைநூலுணர்ந்த மாமுனி வசிஷ்டன் செய்த மாயையாகத் தான் இருத்தல் வேண்டும்; அம்முனிவனது சிரத்தை யிப்போதே அறுத்திடுவோ"மென்று வீரவாதங்கூறிப் பொங்கியெழுந்து போருக்காரம்பித்தார்கள். அப்போது, வசிஷ்டர், கோபங்கொண்டு விழித்துப் பார்த்தார்; குமரர் யாவரும் மரித்து வீழ்ந்தார்கள்.

இந்தக்கௌசிகராஜன், தனது புத்திரர்கள் நூறுபேரும் இறந்தொழிந்தமையைக் கண்டு, நெய் நிறைய வார்க்கப்

பெற்ற நெருப்புப்போலப் பொங்கியெழுந்து, உயர்ந்த கொடியையுடைய தனது ரதத்தைச் செலுத்திக்கொண்டு, முனிவர் அருகில்வந்து, வில்லைவளைத்து வாளியைத் தொடுத்து, வசிஷ்டரைக் கொன்றிட முயன்றார். வசிஷ்டரோ தமது கையிலிருந்த பிரம தண்டத்தை நோக்கி, “நீ அந்த அம்புகளையெல்லாம் விழுங்கிடுவாய்” என்று சொல்லி எதிரில் நிறுத்தினார்.

சாமானிய அஸ்த்ரம் முதல் தெய்வாஸ்த்ரம் முடிவாகவுள்ள எல்லாவற்றையும் கௌசிகன் விட விட தண்டம் விழுங்கிவிட்டு மேலும் மேலும் விளங்கிக்கொண்டிருத்தலைக் கண்டு, கௌசிகர், மேரு மலையைச் சிலையெனக்கொண்ட சிவபிரானை வணங்கிட, அவர் அடலுடை யஸ்த்ரமொன்றை யளித்திட்டகன்றார். அந்த ருத்ராஸ்த்ரத்தை அரசர் முனிவர் மீது பிரயோகித்தார். தேவர்களும் நடுங்கி, “மன்னன் உலகையெல்லாம் சுட்டுவிட்டான்” என்று பயந்து நடுங்கினர்கள். ஆயினும், வசிஷ்டர், அஞ்சாமல் எதிர்நின்று, தமது யோக மகிமையால் விழுங்கிவிட்டு, அதனால் தேஜஸும் கோபமுங்கொண்டு, மேனியிலிருந்து நெருப்புப்பொறிகள் கிளம்பவிருந்தார். உலகை யழிக்கும் உருத்திராஸ்திரம் முனிவர் விஷயத்தில் முரணடங்கி முடிந்துபோனது.

அந்நிகழ்ச்சியைக் கௌசிக மன்னவர் கண்டு, “அதிக பலமும் தேஜஸும், வேதசாஸ்த்ர மறிந்த முனிவர்க்கல்லாமல், பிறர்க்கு உண்டென்று சொல்லுதல் அழகுடையதா? பூலோகத்தையாளுகின்ற வலிமை ஒரு வலியாகுமா?” என்று நிச்சயித்துக்கொண்டு, “நானும் மேலான தவங்களைப்புரிந்து, இந்தத்தேஜஸும் பலமும் பெறுவேன்” என்றுநினைத்து, ஒளியுள்ள இந்திரனது திசையாகிய கீழ்த்திசையை யடைந்தார்.

இவ்வாறு, கௌசிக சக்ரவர்த்தியானவர், மாட்சிமையுற்ற நற்பெருந் தவத்தையுடைய வசிஷ்ட முனிவர் செய்த வெற்றிச் செயல்களையே இடைவிடாது மனத்தி லெண்ணித்

தாமும் தவத்தொழிலை மேற்கொண்டவராகி. மேலும்மேலும் விளங்கித் தேஜஸுடன் ஜ்வலித்துக் கொண்டிருக்கும் தன்மையைப் பார்த்தவளவிலே, இந்திரன், மனத்தில் அச்சங் கொண்டவனாகி, அரம்பைமார்களுள் அழகிலும் புகழிலும் மேம்பட்ட திலோத்தமையென்னும் பெண்ணரசை யனுப்பிக் கௌசிக முனிவருடைய தவத்தைக் கெடுத்து வரும்படியாகக் கட்டளை யிட்டான்.

அங்ஙனம் இந்திரனுடைய ஏவலால் வந்து, தன் எதிரே ஆடல் பாடல்களைச் செய்துகொண்டிருக்கும் அப்பெண்ணைக் கௌசிக முனிவர் கண்டு, மன்மத பாணங்களால் மயங்கி நொந்து, தமது நல்லறிவை யிழந்தவராகி, அவளைத் தமக்கு இசைவித்துக்கொண்டு, காமக்கடலிலே மூழ்கிக் கரையேற மாட்டாதவராய் நீண்ட காலங்களை வறளா கழித்துவிட்டுப், பின்னர்த் தெளிவுற்றுப் புத்திமான்கள் நன்னூல்களிற் கூறியிருக்கும் உண்மைகளை யெல்லாம் சிந்தித்து, அவ்வின்பத்தையும் பெண்மணியையும் விஷத்தைப்போல வெறுத்துத் தள்ளி விலகியிருந்தார்.

பின்னர், உண்மை தெரியவே, இந்திரன் செய்துவைத்த தந்திர மிதுவெனக் கோவித்துத் திலோத்தமையை மானுடப்பெண்ணாகி வாழும்படியாகச் சபித்துவிட்டுத், தமது கண்கள் சிவந்தவராகிக் கோபம் கொண்டு, அவ்விடத்தைவிட்டு விரைவிற் சென்று வெகு தூரம் நடந்து, எட்டுத் திக்குக் காவலருட் சிறந்த எமனது தென்றிசையைச் சேர்ந்தார்.

இங்ஙனம் இந்தக் கௌசிகர், தென்றிசையை யடைந்து, செய்தற்கரிய பெருந் தவத்தைச் செய்துகொண்டிருக்கும் போது, வலிமை பெற்ற அயோத்தி மன்னரில் திரிசங்கு என்பவன், ஒரு நாள், தனக்குத் துணைவராகவும் தங்கள் குலத்துக்குக் காப்புக் கடவுளாகவும் இருக்கும் வசிஷ்டரை வணங்கி, "இச்சரீரத்துடன் சுவர்க்கம்புகும்படியாக எனக்கு உபாயம் தால்" வேண்டுமென்று பிரார்த்திக்குமளவில்,

வசிஷ்டர், "இந்தப் பூதவுடம்புடன் அந்தத் திவ்ய லோகம் போதல் இயலாத காரியம்; இது அழிந்தவுடன் அங்குப் போகலாம்" என்று திரிசங்கு மன்னனுக்குத் தெரிவித்தருளினார்.

அதனைக் கேட்டவுடன், அந்தத் திரிசங்கு மன்னன், குலகுருவாகிய வசிஷ்டரைப் பார்த்து, "ஆசிரியரே! என்னை இவ்வுடலுடன் சுவர்க்கமேற்றும் அற்புதச்செய்கை, உம்மால் ஆகாதாயின், இந்தப் பெரிய பூவுலகத்திலே, என் மனத்துக்கு இனிமையுடையாரை நாடிக்கண்டு, என் விருப்பத்தைக் கொடுக்கும் யாகத்தைச் செய்வே" னென்று சொல்லவே, வசிஷ்ட முனிவர் மிகக் கோபங்கொண்டு, திரிசங்குவை நோக்கிச் "சினக் கொடுந்திறலோய்! பழையஆசாரியரை யவமதிப்புச் செய்து மற்றை யாசிரியரை யுன்னிஷ்டப்படியே தேடிக்கொண்டு விட்டபடியால், நீசனாய் விடுவாய்" என்று சபித்தார்.

சக்ரவர்த்தி திருமகனே! ஸ்ரீராம!! நான்முகப் பிரமனுக்கு மானச புத்திரரான வசிஷ்டர், தனக்கிட்ட சாபத்தினால் திரிசங்கு மகாராஜனுடைய — சூரியனும் நாணும்படியான ஒளியுடைய அரச வடிவம் நீங்கிப்போய் - சூரியவொளியினால் மலர்ந்து விளங்கும் தாமரை மலர்போன்ற திருமுகம் வாட்டமடைந்து, பூமியிலுள்ளவர் யாவரும் இகழ்தற்கொத்த சண்டாள வடிவம், அப்போதே வந்து பொருந்தியது.

இரத்தின மாலைகளும் கிரீடமும் மற்றையாபரணங்களும் இரும்பைப்போலக் கருநிறமடைந்து, உடுத்த உடையும் தரித்த முப்புரி நூலும் தோலினாகிய தோற்றமடைந்து, உடம்பு கருகி அழுக்குடனே அழகு கெட்டுப்போய் ஊர் வந்து சேர்ந்தான் திரிசங்கு மன்னன். அயோத்தியிலும் தன்னை யாரும் சீசீ யென்று இகழ்ந்து கூறும் தன்மையை யறிந்து, கௌரவங் குறைந்து நாணம் மேலிடலால், ஊரிலிருப்பதற்கு மனம் ஒருப்படாமல் காட்டையடைந்தான்.

அக்காட்டிலேயே சில நாட்கள் தங்கிப் பின்னர், ஒரு தினத்தில், கௌசிக முனியென்னும் பெயருடனே இவ்வரசன், விசுவாமித்திரர், இனிமையாகத் தவஞ்செய்துகொண்டு வசிக்கிற சோலையைக்குறுகி நின்றனன்; இந்தக் கௌசிகரிஷி, அப் புலையுருவத்தைப் பார்த்து, "நீ யார்;? இந்த இடத்தில் என்னைக்கிட்டி நிற்கும் காரணமென்ன?" என்று வினவவே, திரிசங்கு இம்முனிவரை நமஸ்கரித்து, நடந்த செய்திக

அதனை முற்றும், பொறுமையுடன் கேட்டுக்கொண்டிருந்தவரான, இந்தக் கௌசிக முனிவர், "இவ்வளவு தானே" என்று அலக்ஷியமாகக்கூறிச் சிரித்து, "யான் பெரியதொரு யாகத்தைச் செய்துமுடித்து, உனக்குத் தேவலோகம் அளிக்கின்றேன்" என்று சபதங்கூறி மிக்க தவப் பெருமையையுடைய நண்பர்களான சில முனிவர்களை யுடன் துணையாக வரும்படி யழைக்கவே, அவர்களும் வந்து கூடினார்கள். அப்போது, வசிஷ்ட முனிவரது குமாரர்கள், "ஒரு க்ஷத்திரிய முனிவன், ஒரு சண்டாள அரசனுக்கு சுவர்க்கம் அளிப்பதன் பொருட்டு யாகம் செய்யப்போகிறானும்; உயர்ந்த முனிவர் வம்சத்திற் பிறந்த நாம், அதற்குத்துணை செய்ய வேண்டுமாம்; இது வெகுஅழகு" என்று எள்ளி நகையாடி, "இது எந்த நூலிலுமில்லை; யாம் இதற்குச் சம்மதப்படோம்" என்று மறுத்துக்கூறி, "நாங்கள் இந்தக் காரியத்துக்கு உடன்பட்டு வரமாட்டோம்" என்று சொன்னார்கள்; வசிஷ்ட புத்திரர்கள் இப்படிச் சொன்னார்கள் என்றதனைக் கேட்டறிந்த கௌசிக முனிவர், அவர்களைக் குறித்துப் பொங்கிக் கோபித்தவராகி, "அவர்கள், யாவர்களாலும் ஒதுக்கித் தள்ளப்படும் இழிவான தொழிலுடைய வேடர்களாகக் கடவர்கள்" என்று சாபவார்த்தை கூறினவளவிலே, அவ்வுயர்ந்த வசிஷ்ட புத்திரர்கள், வேடர்களாகிக் காடுகள் தோறும்

போய்விட்டார்கள். விசுவாமித்திர முனிவர், தாம் தொடங்கிய காரியத்திற் சிறிதுஞ் சலியாதவராகி, நிலைநின்று, யாகத்தையுஞ் செய்துமுடித்து, "ஆகுதி பெற்று உண்ணுதற்காகத் தேவர்கள் வரக்கடவர்" என்று தேவர்களை யழைத்திட்டார்.

தேவர்கள், "என்ன இது! இந்தக் கௌசிக ராஜன், இந்தச் சண்டாளன் பொருட்டாக, ஆரம்பித்த யாகத்தை நிறைவேற்றத் தொடங்கி, எம்மை, விரைவில் வரச்சொல்லுகிறான்! இது என்ன விபரீதம்? இச்செயல் சிறப்புடையது அன்று" என்று இகழ்ந்துகூறிப் பரிஹாஸம் செய்தார்கள்; ஆயினும், கௌசிக முனிவரோ விடாமல், பெரிய யானைப் படைக்கு அதிபனாக இருந்த அந்தத் திரிசங்கு மன்னனை நோக்கி, "நீ சுவர்க்கத்திற் சென்று சேர்ந்திடுவாயாக; மற்றும், யாருடைய உதவியையும் வேண்டாமலே, யானே, எனது தவத்தின் பெருமையால், உனக்குக் கட்டளையிடுகிறேன்" என்று சொல்லவே, திரிசங்கு மன்னன், அவ்வாறே, கௌசிகரது தவப்பெருமையினாற் கிடைத்ததொரு விமானத்தின் மேலேறி உயரச்சென்றான்.

அவ்வாறு, அந்த மன்னன், சுவர்க்க லோகத்தைப் போய்ச்சேர, அது கண்டு, தேவர்கள் கோபங் கொண்டு, "சண்டாளன் அந்தப் பூதவுடம்புடன் இந்தத் திவ்ய லோகத்துக்கு வருவது என்ன அநீதியாயிருக்கிறது? இது தகாது; யாங்கள் ஏற்றுக்கொள்ளமாட்டோம்; இவன் பூவுலகத்திலேயே போய்ச் சேர்ந்திடுவானாகட்டும்" என்று கூறி அவனை யேற்றுக்கொள்ளாமல் தள்ளிவிட்டார்கள்; தன்னைத் தாங்குவதற்கொரு ஆதாரமுமில்லாமல், தலைகவிழ விழுபவனாகிய அந்தத் திரிசங்கு மன்னன், கௌசிக முனிவரைப் பார்த்து, "முனிவரே! நீரே எனக்கு புகலிடம்" என்று கூவியழைத்திடலும், கௌசிகர், "அவ்விடத்தே நில் நில்" என்று உரத்துச் சொன்னார்; சொல்லி நகைத்தார்.

"எனது வார்த்தையை மதிக்காமல், என்னையும் திரிசங்கு மன்னனையும் அவமதித்த இந்திராதி தேவர்களுடைய, பெரிய பதவி முதலாக விண்ணுலகம் முழுவதையும் வேறாக இப்போதே படைத்திடுவேன்;" என்று சொல்லி, "செழுங் கதிருடைய சூரியனும், சந்திரனும், கிரகங்களும், நக்ஷத்திரங்களும் மாட்சிமையான ஒளி மழுங்காமல் எப்போதும் மிக்க ஒளியுடன் தெற்கில் உதயமும் வடக்கில் அஸ்தமனமுமாக வரட்டும்; அதாவது தெற்கு வடக்காக ஸஞ்சரிக்கட்டும்" என்று கட்டளையிட்டு, "நிலையியற் பொருள்களுடனே இயங்கியற் பொருள்களும் முதலிய எல்லாம் இப்போதே படைத்திடுவேன்" என்று சிருஷ்டித் தொழிலுக்குத் தொடங்கும்போது,

மணமுடைய கற்பகச்சோலைக்கு அதிபனாகிய இந்திரனும், நான்முகக்கடவுளும், விஷம் பொருந்திய கழுத்தையுடைய சிவபிரானும், மற்றும் தேவர்கள் பிறரும், ஒருங்கு கூடிவந்து, கௌசிகரை நோக்கி, "ராஜரிஷியே! தேவர்கள் செய்த அவமதிப்பைப் பொறுத்து மன்னித்திடல் வேண்டும்; உம்மைச் சரண மடைந்தவனைக் கைவிடாமல் காப்பாற்றியருளுகின்ற இந்தத் தருமச் செயலை யாங்கள் மெச்சுகிறோம்; அந்தத் திரிசங்கு, நக்ஷத்திரக் கூட்டத்துள் ஒருவனாக, இன்று முதல் பொருந்தியிருக்கட்டும்; மற்றும்,

தாம் இன்றுமுதல் ராஜரிஷியாகக் கடவீர்; வடக்கிலுள்ள இருபத்தேழு நக்ஷத்திரங்களுள், ஐந்து நக்ஷத்திரங்கள் தெற்கில் வந்து உமது மகிமையை யுலகத்தாருக்குத் தெரிவித்துக் கொண்டிருக்கட்டும்" என்று வாக்குறுதியளித்து, அவரைச் சமாதானப்படுத்திப் போய்விட்டார்கள். தேவர்கள் புறப்பட்டுப் போனபிறகு, ஒழுங்காகிய தவத்தையுடைய கௌசிக முனிவர், விரைந்து, கடலுக்கிறைவனான வருண பகவான் திக்குப் பாலகனாக இருந்து அரசு நிகழ்த்து

கிற மேற்குத் திசையை யடைந்து மிக்க தவத்தைச் செய்து கொண்டிருந்தார்; அப்போது,

குதைபெற்றுக் கட்டமைந்த விற்களையும் வாட்களையுமுடைய சேனைகளைப் பெற்ற ராஜ குமாரனும், தேவாமிர்தம் போன்ற இன் சொற்களையுடையவனும், உலகத்து உயிர்வர்க்கங்களுக்கெல்லாம் உயிர் போன்ற அன்பிற் சிறந்த வனுமாகிய அம்பரீஷன் என்னும் அரசர் பெருமான், ஒரு மனிதனைக்கொன்று ஓமம் செய்வதாகிய புருஷமேதத்தைச் செய்வதற்காக, ஒரு சிறுவனை விலைக்கு வாங்குதற் பொருட்டுச், சிதைவில்லாத முயற்சியுள்ளவனாகிப், பொற்றேரில் பொன்னை நிறைத்துக் கொண்டு காடுகள் தோறும் தேடிச் சென்றான்.

அங்ஙனம் சென்ற அம்பரீஷ மன்னவன், சிறந்த தவவொழுக்கத்திற் சிறந்த ரிசீகர் என்னும் முனிவர் வசித்துக் கொண்டிருக்கின்ற பூஞ்சோலையை யடைந்து, தான் வந்த காரியத்தைச் சொல்லி, அம்முனிவருடைய குமாரர்களில் ஒருவனை விலைக்குக் கேட்ட வளவில், "தங்களுடைய குமாரர்கள் மூவரில், இளையவன் எனக்குரியவன் ஆதலால் அவனை நான் பிரித்துக்கொடுக்க மாட்டேன்" என்றாள் பெற்ற தாயார்; "மூத்தமகன் எனக்குரிமை யுடையவனாகையால் மூத்தவனை நான் கொடுக்கமாட்டேன்" என்று சொன்னார் தந்தையானவர்; மிகுந்து நின்ற நடுக்குமாரனாகிய சுனச்சேபனென்பவன், "தாய்தந்தையரிருவரும் தாம் பெற்று வளர்த்த தன்னைக் கொலை செய்யும் பொருட்டு விலை செய்வதற்குச் சம்மதித் திருத்தலை" நோக்கிச் சிரித்து, அம்பரீஷ மன்னனைப்பார்த்து,

" மன்னர்பிரானே! என்னை யெடுத்து வளர்த்த தந்தையாகிய ரிசீகருக்கு அவரது வறுமை நோய் நீங்கும்படியான பொன்னைக்கொடுத்து அருள்வீராக" என்று சொல்லித் தந்

தையைப்பார்த்து, "தந்தையே! நமஸ்கரிக்கின்றேன்" என்று வணங்கிப் பின், வேந்தனுடைய தடப்பருந்தேர் மேலேறிக் கொண்டு, தன்னால் ஒரு சிறிதும் தடையுண்டாகாத படியாகச் செல்லுமளவில், ஒளி பொருந்திய கிரணங்களை யுடைய சூரிய தேவன் வானத்து உச்சிக்கு வந்து சேர்ந்தான்.

அப்போது அம்பரீஷ மன்னன், கௌசிக முனிவர் தவஞ் செய்து கொண்டிருந்த, அந்த இடத்திலே தேரை நிறுத்திக் கீழே இறங்கிச் செய்தற்குரிய காலக்கடமைகளைச் செய்து கொண்டிருந்தான்; அப்போது, அவ்விடத்திலே, சுனச் சேபன், பொறாமை முதலிய துர்க்குணங்களை யெல்லாம் ஒழித்து மனவடக்கத்துடன் தவஞ் செய்து கொண்டிருந்த கௌசிகரென்னும் இந்த ராஜரிஷியைக் கண்டு, துன்பத் தோற்றத்துடன் அவரெதிர் சென்று, அவரது பாதகமலங் களில் வணங்கி நின்றான்.

அச்சத்துடன் தம்மை வணங்கி நின்ற அந்த ரிஷி குமாரனைச் சிறந்த குணங்களையுடைய கௌசிக முனிவர் பார்த்து, "குழந்தாய்! நீ கலங்கி நிற்றலுக்கு என்ன காரணம்? சொல் வாயாக" என்று கேட்க, அவரைச் சரண் புகுந்த சுனச் சேபன், "தர்ம சாஸ்திரங்களின் தத்துவ முணர்ந்த தபோதனரே! உமது தமக்கையாகிய எனது தாய் மிக்க செல்வத்தை விலையாகப் பெற்றுக்கொண்டு, இந்த அம்பரீஷ மன்னன் செய்யப்போகும் யாகத்தின் பொருட்டு யாகபசுவாக என்னை விலைக்குக் கொடுத்திட்டாள்" என்று நடந்த செய்தியை நவின்றுரைத்தான்.

தமது முன்னவளாகிய சத்தியவதியும் அவளது கணவராகிய ரிசிகரும் செய்து வைத்துள்ள தன்மையைக் கேட்டுத் தகுதியையுடைய கௌசிக முனிவர், மருமகனாகிய சுனச் சேபனை நோக்கி, "நீ துன்பத்தை யொழிப்பாயாக; நானே

உனது உயிரை யுடலைவிட்டுப் போக வொண்ணுதபடி தடுப்பேன்," என்று கூறி, மகரிஷி வஸிஷ்டருடைய சாபத்தினல் மடிந்தழியாமல் மிருந்து தன் உடனிருந்த புத்திரர்கள் நால்வரையும் பார்த்து, "அம்பரீஷ மன்னனெடும் உங்களில் ஒருவன் போகவேண்டும்; அவனுடைய யாகத்துக்கு நரபசுவாகவேண்டும்" என்று சொல்லவே, அவர்கள் எல்லோரும் தந்தையினுடைய கட்டளையை மறுத்துப் பின் வாங்கிப் போவதைக்கண்டு,

உதிக்கின்ற சூரியனும் நாணும்படியாகக் கண்கள் சிவந்து, நெஞ்சம் புழுங்கி, வடவா முகாக்கினியும் தீந்துபோம்படியாகத் தமது உடம்பிலுள்ள ரோமத் துவாரங்கள் எல்லாம் அனற் பொறிகள் மிகும்படியாகக் கோபித்துப், புதல்வரைப் பார்த்து, "இரக்கமில்லாத — தந்தையின் சொல்லுக்கு இரங்காத மனமுடையவர்களாகிய நீங்கள், நாகரிகம் பழகாத வேடர்கள்போற் காடுகளிற் சென்று திரியக்கடவீர்கள்; என்னுடன் வாழுமியற்கையை நீத்திடுவீர்கள்" என்று கடுஞ்சாபம் கொடுத்தார்.

சிறந்த தவமுடைய வஸிஷ்ட முனிவருடைய கோபத்தினல் இறந்திடாமல் ஒதுங்கிப் பிழைத்திருந்த தமது புத்திரர்கள் நால்வர்களையும் இழிந்த வேடர்களாகத் திரியும்படி சாபம் கொடுத்திட்டு, விசுவாமித்திர மகரிஷி, தமது எதிரில் நிற்கும் உத்தம குணம்பொருந்திய — தந்தை தாயருடைய வறுமையை நீக்குதற் பொருட்டும், உலக காவலனுகிய அம்பரீஷ மன்னனுடைய ஆன்ம திருப்தியின் பொருட்டும், பிதுர்வாக்ய பரிபாலனமும் ராஜ பக்தியும் கொண்டுள்ள — தமது சிறந்த மருமகனுகிய சுனச்சேபனைப் பார்த்து, "அப்பா! தத்துறலை யொழித்துக்கொள்; இப்போதே என்னிடமிருந்து இரண்டு மந்திரங்களை யுபதேசமாகப் பெற்றுக்

கொள்வாயாக; இவை உனக்கு ஜீவன் கொடுக்கும்" என்று அந்த இரண்டு வித்தைகளையும் சொல்லிக் கொடுத்துப், பின்னரும், அந்த மந்திரங்கள் பலிக்கக்கூடிய தந்திரங்களையும் சொல்வாராயினர்.

"இந்தப் பூமாலையுடன் நீ ஏகி, அம்பரீஷ மன்னனைத் தொடர்ந்து போய், யாக காரியத்தை நிறைவேற்றும் பொருட்டு, உன்னை யவர்கள், யூபத் தம்பத்தில் கட்டி உன்னைப் பலியிட வரும்போது, நான் இப்போது சொல்லிக் கொடுத்த இரண்டு மந்திரங்களையும் ஜபித்துக் கொண்டிருப்பாயாக; அப்போது தேவர்களும் பிரமனும் சிவபிரானும் அந்த யாகசாலைக்கண் வந்து சேர்வார்கள். அவர்கள் வந்து சேர்ந்தவுடன், அத்தேவர்களுடன் மும்மூர்த்திகளும், யாக மூலமாக மன்னன் கொடுத்தருளும் அவிர்ப்பாகத்தை நேரிலேயே பெற்றுக்கொண்டு திருப்தியை யடைந்து, யாக பூர்த்தியைத் தந்து திரும்பிவிடுவார்கள்; உன்னுடைய உயிருக்கு ஏதும் அபாய முண்டாக மாட்டாது;" என்று சொன்னார். அந்த மைந்தனாகிய சுனச்சேபனும், மாமனை வணங்கி மகிழ்வுடன் மன்னனைத் தொடர்ந்து சென்றான்.

வேதமந்திரங்களை யுருப்போடுதல் மாத்திரமல்லாமல், அவற்றின் சக்திகளைச் செயலளவிலும் ஆற்றவல்ல அறிவுடைய கௌசிக முனிவர் சொல்லிக் கொடுத்திருந்த படியே, சுனச்சேபன், யாகத்தினிடையில், அவ்விரண்டு மந்திரங்களையும் ஜபித்துக் கொண்டிருந்தான். அப்போது, இறகுவளம் பொருந்திய கருடனும் ஹம்ஸமும் ரிஷபமும் முதலிய மற்றைய வாஹனங்களையும் ஏற்றுச் செலுத்தும் இறைவர்களாகிய திருமால் பிரமன் சிவபிரான் முதலிய தலைமைத் தேவர்களுடன் மற்றைய கரும தேவர்களும் அந்த வேள்விச் சாலையில் வந்து சேர்ந்து, தந்தை சொல்லையும் தரணி மன்னவன் சொல்லையும் காத்தற் கென்று மனப்பூர்த்தியுடன் துணி

வுடன் வந்த அந்த மைந்தன் சுனச்சேபனுடைய உயிரையும், உலகு, கோரிய நன்மையைப் பெற்றுத் தீங்கு விலகும் பொருட்டாக, நரபசு யாகம் செய்யத் துணிந்த அம்பரீஷ மன்னனுடைய — வைதிக விதிப்படியே நிறைவேற்றப் பெற்றிருக்கிற — அந்த யாகத்தையும், காப்பாற்றித் தந்தருளினார்கள். எடுத்த காரியத்தில், நினைத்தபடியே வெற்றியடைந்துள்ள கௌசிக முனிவரும், மிகவும் களிப்படைந்து, தவத்தின் மேன்மையில் மிக நம்பிக்கை கொண்டவராகி, அந்த மேற்குத் திக்கினின்றும் வடக்கு திக்கை நோக்கிப் போனார்.

வடக்குத் திக்கையடைந்த கௌசிக முனிவர், மலர் போன்ற தமதுகரத்தின் விரல்களை விதிப்படி நாசியில் வைத்து, இடை பிங்கலை யெனும் நாடிகள் நையும்படியாகப் பிராணாயாமஞ் செய்து, இந்திரியங்களை யடக்கி ஏகாக்ஷரமாகிய பிரணவமகா மந்திரத்தையே தாரணை செய்துத் தியானத்தை விடாமல்-ஸமாதியில் கலையாமல்-பல பருவங்கள் இருந்தபோது, மூலாக்கினியாலே கபாலத்திலுள்ள பிரமரந்திரம் திறந்து, இருட்கூட்டம் போன்ற புகைத்திரள் தடுக்கப்படாத வேகத்துடன் மேலெழுந்து எங்கும் மறைக்கத் தொடங்கியது; அதனால், உலகமெல்லாம் நடுங்கத் தொடங்கியது.

## வேறு.

திரிபுரத்தை யெரித்த சிவபிரான், கஜாஸுரனாகிய யானையைத் தோலுரித்த காலத்தில், அத்தோலைப் பழக்கிப் பதப்படுத்தி அதனைப் போர்த்துக்கொண்ட தன்மையைப் போலவும், கருமேகங்கள் எங்கும் பரந்து விரிந்து எழுந்தாற் போலவும், பூமியின் இடமெல்லாம் நெருங்கி மூடும்படியாகக், கௌசிக முனிவருடைய யோக ஸமாதியால் விளைந்த மூலாக்கினியாலுண்டான புகையானது, எங்கும் மேலெழுந்து

விம்மவே, இருள் திரண்டு ஒருங்குகூடி எழுந்து எல்லா வுலகங்களிலும் சென்று பரவியது. வெப்பம் மிகுந்த சூரியனது கிரணங்களின் தொகுதியும் மறைபட்டொழிய, மேலுலகத்திலே நிறைந்துள்ள திக்குப் பாலகர்களது கண்களுடனே, கீழேயிருந்து பூமியைத் தாங்குகிற திக்கு யானைகளின் கண்களும் ஒளிமழுங்கினவாம்.

உலகமும் உலகத்துயிர்களும் வாழ்வதற்குத் துணைக் காரணமான மேகங்கள் நிறைந்துள்ள ஆகாயம் முழுவதிலும் புகை சென்று நிரம்பியதனால், உலகில் ஸஞ்சரிப்பனவாகிய ஜங்கமப் பொருள்களும் நிற்பனவாகிய தாவரப் பொருள்களும் அச்சங்கொண்டன. உஷ்ணமான சூரிய கிரணங்களும் பரவமாட்டாமல் திரும்பி விட்டன. தேவர்களும் நடுக்க மடைந்தார்கள். கலைகுறைந்த பிறைச்சந்திரனை முடியிலணிந்துள்ள சிவபிரானும், பசுந்துழாய் மாலையையணிந்துள்ள சோதிவடிவான திருமாலும், பரிசுத்த மலரில் வீற்றிருக்கும் பிரமனுமாகிய மும்மூர்த்திகளும் வந்தடைந்து, அம்முனிவரார்க்குப் பிரத்தியக்ஷராகி, அவரைப் பார்த்து, சிறந்த தவத்தையே செல்வமாகவுடைய முனிவரே! வேத மந்திரங்களினது தொகுதியின் கரையைக் கண்டவர் நீரல்லாமல் உலகில் வேறு யாருமிலர் என்று உபசாரம் கூறினார்கள்.

அந்த உபசார வார்த்தைகளைச் செவியேற்று, அதன் பொருளை உணர்ந்து கொண்ட அந்தணராகிய கௌசிக முனிவர், தமது தலையை வணக்கி மும்மூர்த்திகளையும் நமஸ்கரித்துத், தமது மலர் போன்ற கைகளைக் கூப்பி, "யாராலும் கருதப்படும் நல்ல நல்ல புண்ணியப் பயன்கள் எனக்கு இப்போதே வந்து பொருந்தின" என்று கூறிப் பூரிப்படைந்து நின்றார். நெருங்கிவந்த அத்தேவர்கள் யாரும் தத்தமது இருப்பிடம் சென்றார்கள்"

"ஏ! தசரத குமாரர்களே! இது முன்னம் நடந்த கௌசிக முனிவருடைய வரலாறுகும். இந்தக் கௌசிகருக்கு ஒப்பாக, மாதவத்திற் சிறந்த மகிமையுடையார் இல்லை. மெய்யுணர்வில் மிக்கவரான, இந்த முனிவருடைய அருளுக்கு நீங்கள் பாத்திரராயிருக்கின்றீர்கள்; ஆகையினால் உங்கட்கு அருமையான காரியம் உலகில் யாதிருக்கின்றது?" என்று சதாநந்த முனிவர் சொல்லி முடித்தார். (சதானந்தன் – முடிவில்லாத ஆனந்த முடையவர்.)

இவ்வாறு, கௌதம முனிவருடைய குமாரராகிய சதானந்தர் சொல்லவும், வெற்றி பொருந்திய வீரர்களாகிய இராம லக்ஷ்மணர்கள், அதிசயத்துடன் களிப்புற்றெழுந்து, மாதவம் பொருந்திய அந்த சதானந்த முனிவரது பாத தாமரைகளில் வணங்கி யிருந்தனர். சதானந்த முனிவர், அவ்விரு குமாரர்களையும் வாழ்த்தித் தமதிருப்பிடம் சென்று சேர்ந்தார்.

விசுவாமித்திர முனிவரும் தம்பி இலக்குமணனும் பொருந்திய முறையில் தந்தமக்கு இனிமையாகப் படைத்துள்ள படுக்கையிடங்களை யடைந்த பின்பு, இருளின் பழத்தை யொப்பவராகிய ஸ்ரீ ராமபிரான், "இராத்திரியும் சந்திரனும் தமது தனிமைப்பாடும் தாமும் தமது அந்தரங்கத்தில் அமைந்து கிடக்கும் அச்சீதா பிராட்டியு" மாகத் தனியே தங்கியிருந்தார்.

## ஸ்ரீராமபிரான் சீதையை நினைந்திருத்தல்.

"மேகத்தினின்றும் நீங்கிய மின்னலின் வடிவமானது இந்த விதமாகப் பெண்ணின் நன்னலவுருக்கொண்டு வந்ததோ! ஆராய்ந்து இதுதானென்றும் இதல்லவென்றும் தெளிந்து தெரிந்து கொள்ள முடியாதிருக்கிறேன். ஆனால்,

அந்தப் பெண்ணின் உருவத்தையே என்னிரு கண்ணி னுள்ளும் எந்தன் கருத்துள்ளும் எப்போதும் கண்டு கொண் டிருக்கிறேன். மண்டலமிட்டுப் படுக்கும் ஸர்ப்ப ராஜனையே படுக்கையாக வுடைய – கரிய திருமால் பள்ளிகொண்டரு ளும் வெள்ளப் பாற்கடல் போல் ஒளிர்கின்ற கண்களையுடைய இந்த நங்கை, எனது மனமாகிய தாமரையில் வந்து குடி கொண்டு விட்டபடியினால், இவள், அந்த செந்தாமரையில் வீற்றிருக்கும் திருமகள் தானோ வென்று எண்ணுகிறேன்.''

''அவள் என்பால் கருணை யில்லாத வளாயினும், எனது மனத்திலுதித்திருக்கும் அந்நங்கையின்பா லுண் டான காதலினாலும், யாவராலும் அஞ்சப்படுகின்ற காம நோயைத் தரும் விடம்போன்ற – தன்னிரு கண்களாலும் அந்த நங்கை என்னை உட்கொண்டுவிட்ட படியாலும், தெளி வில்லாத இவ்வுலகில் வாழக்கூடிய சராசர மாகிய எல்லாப் பொருள்களும், எனக்கு, அவள் பொன்னுருவாகவே தோன் றிக் கொண்டிருக்கின்றன.''

''ஆரம் முதலிய இரத்தினாபரணங்கள் அசைந்தாடு தற்கு இடமாயுள்ள அவளது மார்பகத்துற்ற பொற்கலசங் கள், எனது மார்பகத்திலே குங்குமச் சேற்றை யெழுதாமற் போனாலும், ஒளி பெற்ற சந்திர காந்தி போன்ற வள முடைய புன்னகையையும் கொவ்வைக் கனிபோன்ற அதரத்தையு முடைய அவளது முக சந்திரனை மீண்டும் பார்க்கலாகும் படியானதொரு காலமாவது உண்டாகுமோ!''

''அழகிய மேகலாபரணத்தை யணிந்த அவளது தேர்த் தட்டும், வாளாயுதம் போன்ற நீண்ட கண்களிரண்டும், கதி தரும் தனங்களிரண்டும்; உள்ளடங்கிச்சிறந்ததொரு புன்னகை யும் என்னும் இவைபலவும், அவளிடம் உள்ளன; வென்றால், யாவராலும் பயங்கரனாக மதிக்கப்படுகின்ற எமனென்னும்

கொலையாளிக்கு இத்தனை வேண்டாம் போலிருக்கின்றதே ! இத்தனை கருவிகளையும் கொண்டு அவள் என்னை யென்ன செய்யப் போகின்றாளோ !!"

"இனிய ரஸம் பொருந்திய மெல்லிய கரும்பை வில்லாக வுடைய மன்மதன், மணம் பொருந்திய இத் திருமகளைக் குறித்து என்மீது பிரயோகிக்கும் பூங்கணை மாரி பெய்து என்னைத் தொலைப்பானானால், இனி, வலிமையென்று சொல்லப்பெறுதற் குரிய குணமானது யாரிடத்தில் தங்கியிருக்கப் போகின்றதோ ? என்னிடத்திலன்று ; அந்த மன்மதனிடத்தில் தான்போலும்"

"உலக முழுவதையும் கொள்ளை கொள்ளுவதற்காகப் பொங்கி யெழுகின்ற திருப்பாற் கடலினது வெள்ளம் போன்று, பரவியுள்ள இந்த சந்திர காந்தியானது, நினைக்குந்தோறும் என் உயிரைத் தொலைத்துக் கொண்டிருத்தலினால் வெண்ணிறமுடைய விஷமும் உலகத்திலுண்டோ வென்று எண்ண வேண்டியிருக்கின்றது."

"நல்வழியிலேயே சென்று கொண்டிருக்கும் என்னுடைய மனம், இன்று சென்று கொண்டிருக்கும் வழியானது அல்வழியாயிருக்குமோ ? என்னில், ஆகாது; அங்ஙன மிருக்கச் செய்தேயும், என் மனம் இம்மங்கைபால் சென்றிருத்தற்குக் காரணம், வேறொன்று மிருக்க மாட்டாது ; பாகு போன்ற சொற்களையும் பசிய பொன் வளையல்களையுமுடைய இந்த அரச நங்கை யானவள், கல்யாண மாகாதவளேயாகும் என்பது தான் என்று எண்ணுகிறேன்; இம்முடிவுக்கு வேறாகச் சந்தேகப்படவேண்டுவ தொன்று மில்லை"

காலங் கழிந்து சென்றுபோன இராத்திரி காலமாகிய அரசனது ஒளி பொருந்திய ஒற்றைவெண் கொற்றக்குடை விழுந்தது போலவும், மேற்குத் திக்காகிய பெண்ணினது

இளமையும் ஒளியும் பொருந்திய நெற்றியில் அணியப் பெற்றிருந்த குற்றமற்ற சுட்டிமுக வட்டமென்னும் ஆபரணம் அழிந்து போயொழிந்து போனது போலவும், சந்திர மண்டலம் மேக மண்டலத்துக்குள் மூழ்கி மறைந்து போயது.

தமக்குக் கணவனாகிய சந்திரன் தம்மைப் பிரிந்து போயின அளவிலே, திக்குகளாகிய அவனுடைய மனைவிகள், தந்தம் மேனியில், அந்தக் கொழுநனால் பூசப் பெற்றுள்ள கலவை வெண் சந்தனத்தை, யவனைப் பிரிந்த சோகத்தினால் அழித்து விட்டார்கள் என்னும் படியாக, சந்திரன் ஒளி பெற்றிருந்தபோது, எத்திக்கிலும் பரவியிருந்த நிலா; ஒழிந்துபோயது.

## வேறு.

நெருங்கிய பூமாலையையுடைய புருஷோத்தமனாகிய ஸ்ரீராமபிரான், இந்த விதமாக மயலுழந்து தளரும் போது, சூரிய பகவான், சிதைந்த மனத்தையுடைய இராமனது துன்பங்களாகிய இருள் உடைந்து போம்படி யாகவும், தாமரை போன்ற அவரது முகம் மலரும்படியாகவும், நக்ஷத்திரங்களை யுடைய இருண்ட ஆகாய மென்கின்ற யானையினது தோற் போர்வையைப் போர்த்துக் கொண்டுள்ள உதயமலை யென்னும் பரமசிவனது நெற்றியைப் பிளந்து கொண்டு வெளிவரும் நெருப்புக் கண்போல, கீழ்த்திசையில் உதித்தான்.

வேகத்தையும் வலிமையையு முடைய, சூரியனுடைய பச்சைநிறக் குதிரைகளின் குளம்புகள் மிதிப்பதனால், உதய பர்வதத்திலேயே, மேலெழுந்து பரவிய செந்துகள்கள், ஈரமாக நனையும்படி, காலைக்கடமையைக் கழிக்கின்ற அந்தணர்களினது கைகளால் எடுத்து இடப்பெறுகிற தேன் நிறைந்த மலர்களும் கைந் நிறைந்த நீர்களும் பரவிப் பாய்ந்திடவே —

ஈரமாய் நனைந்துள்ள அந்த செந்துகள்களைக் கொண்டு — சூரியன், தனக்குரிய கிழக்குத்திசையை யாண்டு கொண்டிருக்கிற மதயானைக்குச் சிந்துரம் அப்பியது போல் — சலித்தலில்லாத அந்த உதய கிரியின் சிகரங்களிலெல்லாம், இளமையான சூரிய கிரணங்கள் படிந்து செந் நிறத்துடன் விளங்கியிருந்தன.

தமது தலைவியரைப் பிரிந்து புறப்படும்போது, தாம் மீண்டு வருங் காலத்தி னெல்லையைப் பகர்ந்து, பகைவர்மீது போர் குறித்த காரணமாகவேனும் பொருளீட்டுதல் காரணமாகவேனும் பிரிந்து சென்ற, வண்டு தொடரும் மணமாலை பெற்ற உயிரனைய தமது தலைவர்கள், அழகிய தேரின் மீது இவர்ந்து வருதலைப் பார்த்து, மனத்திற் களிப்பு மிகுந்து ஒளி சிறந்து தளர்ச்சி நீங்கியிருக்கும் தலைவிகளாகிய கற்பின் மங்கையர் போல், கொழுநனாகிய சூரியனுடைய உதயத்தைக் கண்டு தாமரைகளாகிய முகம், மலர்ந்து பொலியும்படியாகப் பூம் பொய்கைகள் பொலிந்து விளங்கின.

அளவிடற் கரிய வேதங்களுடனே கின்னரர்கள் கானம் பாடவும், உலகத்துயர்ந்தோர் துதிக்கவும், தேவர்களும் முனிவர்களும் தவத்தினுயர்ந்த இருடிகளும் அந்தணர்களும் கைகூப்பி வணங்கவும், மார்ச்சனை யமைந்த கடலாகிய மத்தளம் ஒலிக்கவும், ஆகாயமாகிய நடன ஸபையிலே நிருத்தம் செய்து கொண்டிருக்கிற சூரியனாகிய நெற்றிக் கண்ணனுடைய பொன்னிறச் சடைகள் பரந்து விரிந்து விளங்கினாற் போல, சூரியனுடைய செந்நிறக் கிரணங்கள் பரந்து விரிந்தன.

ஆயிரம் தலைகளிலும் மாணிக்கங்களாகிய தீபங்கள் சொலிக்கப் பெற்ற ஆதிசேஷனாகிய படுக்கையிலே — திருப்பாற் கடலிலே பள்ளி கொண்டருளாமல், அக்கடற் சயன

த்தை விட்டொழித்து, இவ்விருள்தரும் மானுலத்து இராம ஞகத் தோன்றித் திருமகள் வந்து கூடாமையாகிய துன்பங் கடலிலே மயங்கிக் கிடக்கின்றவரும், அத்திருப்பாற் கடலிலே, கொடியாரைக் கொல்லும் ஆற்றலுடைய சக்ராயுதத்தை நீக்கிவிட்டு, வளைந்த தொரு வயிரவில்லைத் திருக்கரத்திற் கொண்டு கோதண்ட பாணியாக எழுந்தருளியவருமான மேகம் போன்ற சக்ரவர்த்தி திருமகனர், ஒளி பொருந்திய ஒற்றைச் சக்கரத்தினையுடைய தேரில் ஏறிவரும் சூரியன், தனது இளமையான கிரணங்களாகிற கைகளினல் அடிவருடி நித்திரையை யொழிக்கவே, இராத்திரியாகிய கடலின் எல்லையைக் கண்டார்.

ஒரு கற்பகாலங்கழித்தாற்போல, அவ்விரவானது ஒருவாறு கழிந்து போகவே, உறக்கம் நீத்தெழுந்த சூழி யானையைப் போன்ற ஸ்ரீராமபிரான், எழுந்து, நித்திய கர்மா நுஷ்டானங்களை நிறைவேற்றி, வேத வடிவம் போன்ற கௌசிக முனிவரை வணங்கி, அப்பெரியவரோடும், மனதிற்கினிய தம்பியோடும், மணம் பொருந்திய மாலையும் இரத்தின கிரீடமும் பொருந்திய ஜனக மகாராஜனுடைய யாக சாலையைப் போய்ச் சேர்ந்தார்.

கிரீடம் பொருந்திய ஜனகராஜனும், வேத விதிப்படியே வேத மந்திரங்கட்குரிய யாக காரியத்தை நிறைவேற்றி விட்டுப், பக்கமெல்லாம் பதினெட்டு வாத்தியங்களும் முழங்கிக்கொண்டிருக்க, சந்திர மண்டலம் போன்றதொரு கோயிலில் இந்திரனைப் போலப் போய்ச் சேர்ந்து, அங்விடத்தில் உயர்ந்தெடுத்திருக்கும் நவரத்தின மயமான மண்டபத்திலே, மதித் தெண்ணப்படும் நல்ல தவத்தையுடைய ஸ்ரீராமபிரானும் அவனது விநயம் மிகுந்த தம்பியாகிய லக்ஷ்மணனும் தமது அருகில் வீற்றிருக்க - (ஜனகன்) வீற்றிருந்தான்.

அவ்விடத்து ஜனக மன்னன், தனதருகில் விநயத்துடன் வீற்றிருந்த உயர் குலத்துதித்த சக்ரவர்த்தி திருக்குமாரர்களை, அவர்களது இனிய முகத்தினழகைப் பருகுதல்போல், தன்னிரு கண்களாலும் நோக்கி, இவ்வழகிய திருக்குமாரர்களிருவரையும் தமக்குச் சீடராக்கித் தம்மைத் தொடர்ந்து வரும்படியான அருந்தவத்தையுடையவராகிய விசுவாமித்திர முனிவரை வணங்கித் தண்டனிட்டு, "சுவாமிகளே! இக்குமாரர்கள் யாருடைய புத்திரர்கள்? இவர்களை யித்தன்மைய ரென்று விரித்தெடுத்துச் சொல்லுவீராக" என்று கூறலும், கௌசிக முனிவர், "ஜனகராஜனே! இக்குமாரர்கள், இங்கு விருந்தினராக வந்திருக்கிறார்கள்; நீ செய்யும் யாகத்தைப் பார்க்கும் பொருட்டு வந்திருக்கிறார்கள்; உன்னிடம் சேமமாக வைக்கப்பட்டிருக்கும் சிவதனுசைப் பார்க்கவேண்டுமாறும் பார்க்கக்கடவர்கள். கம்பீரமான சிறந்த குணங்களுடைய தசரத சக்ரவர்த்தியின் திருக் குமாரர்கள் என்று கூறி, அக்குமாரர்களின் மகிமைகளைப் பேச ஆரம்பித்தார்.

## குலமுறை கிளத்து படலம்.

கௌசிக முனிவர் ஜனக மகாராஜனுக்கு, ஸ்ரீராமபிரானுடைய முன்னோர்க ளாகிய சூரிய வமிசத் தரசர்களி னுடைய முறைகளையும் மகிமைகளையும் கூறுகின்ற பாகம்.

---

சூரிய வமிசத்தில் தோன்றிய முதற் குமாரரான மனுச் சக்ரவர்த்தியை அறியாதவர் உலகத்தில் யாருமேயில்லை; பலவகைப்பட்ட உயிர்வர்க்கங்களை யெல்லாம், அவை பெரும் பசிக் கொடுமையினால் வருத்தப் படாதிருக்கும்படியாக, ஒளி பொருந்திய தனது கட்டுடைய வில்லினால், பூமிதேவி பால் சுரந்தளிக்கும்படி அரிய பெரிய காரியத்தைச் சாதித்து

முடித்த பெருந்தகையான பிருது என்னும் பெயருடைய சக்ரவர்த்தியும், இந்த இரண்டு ராஜகுமாரர்களினுடைய வம்சத்தில் தோன்றிச் சிறப்புற்றிருந்த அரசனென்று அறிவாய். இந்தப் பிருது சக்ரவர்த்தியே, தனது வில்லாற்றலினால், மலைகளை யொதுக்கிப் பூமண்டலத்தைச் சமமாகச் செய்து, பூமியினிடமிருந்து பலவிதமான ஓஷதி வகைகளையும் உண்டாக்கிப் பிரஜைகட்குத் துன்பத்தை நீக்கி இன்பம் விளைவித்தான். அதனாலேயே, அதுமுதற் கொண்டு, அவன் பெயரால் பூமிக்குப் பிருதிவி யென்னும் பெயருண்டாயிற்று.

நவரத்தினங்களும் பரவிக்கிடக்கும் முடியுடைய ஜனக மகாராஜனே! உயிர்கட்கு நோய் பரவும்படிச் செய்யும் ஊழ்வினைகள் ஒழிந்து போகும் வண்ணம், தான் அளப்பருங் காலங்கள் தவத்தைச் செய்து, தாமரை மலர் வாஸியாகிய பிரமதேவனை வணங்கி பூசித்து, அவர் அருளினால், ஆதிசேஷனைப் படுக்கையாகக் கொண்டருளும் பரஞ்சோதியாகிய நம் பெருமானை, நாமும் மற்றவரும் இன்னும் காணும்படியாக, அழகிய ஸ்ரீரங்க விமானத்துடனே, சத்தியலோகத்திலிருந்து இப்பூலோகத்துக் கொண்டு வந்து தந்த இக்ஷுவாகு என்னும் பெயருடைய, இந்த சூரிய வம்ச சக்ரவர்த்தியை யறியாதவர்கள் ஏதும் அறியாதவர்களே யன்றோ!

தேவேந்திரன், "என்னால் வெல்லமுடியாத அஸுரர்களைக் கொன்று, அவர்களால் அபஹரிக்கப் பெற்ற எனது தேவலோகத்தை எனக்கு மீட்டுக் கொடுக்க வேண்டும்" என்று தன் குறையைச் சொல்லி வேண்டிக் கொள்ளவே, அவ்வண்ணமே செய்வதாக அவனுக்கு வாக்குத்தத்தம் செய்து, உடனே, அச்செய்கையை மேற்கொண்டு, கையிற் பிடித்த வில்லையுடையவனாகிச் சென்று, அந்த அஸுரர்களுடன் போர் புரிந்து மீட்டுக் கொடுத்தவனாகிய புரஞ்சயனென்னும் அரசனை இந்திரன், அக்காலத்தில் எருத்தின்

வடி வெடுத்துக்கொண்டு பிடரிற் சுமந்தான் என்பதையும், அதனால் அம்மன்னனுக்குக் ககுஸ்து என்னும் பேர்வந்த தென்பதையும், அதுமுதற் கொண்டு சூரியகுல மன்னவர்க்குக் காகுஸ்தர் என்னும் பெயர் அமைந்த தென்பதையும் உலகம் அறியுமல்லவா!

அந்தக் ககுத்த மகாராஜனது குலமாகிய இந்தச் சூரிய குலத்தில், பின்தோன்றிய அரசர்களையும் அவர்கள் பெருமையையும் என்றும், இத்தன்மையரென்று அளவிட்டுச் சொல்லுதல் முடியாது; மயிர் வெளுத்தலும், உடம்பு சுருங்குதலும், இவற்றுக்குக் காரணமான கிழத்தனமும் ஒழிந்திடும்படியாகத் தேவேந்திரனுக்கும் மற்றைத் தேவர்களுக்கும், மரணமடையாதபடி, ஒலித்தெழுகின்ற திருப்பாற் கடலைப் பெரிய மந்தரமலையைக்கொண்டு கடைந்து அதிலிருந்து அமிர்தத்தை யெடுத்துத் தேவர்க்குக் கொடுத்தருளினவனும், அப்பெருஞ்செயலால், சொற்கள் குறையும் படியாக கீர்த்தியையுடையவனுமாகிய நிமி யென்னும் சக்ரவர்த்தியும் இவர்கள் குலத்துதித்த தொரு மன்னவனென்பதை யறிந்துகொள்.

போர்த்துறைக்குப் பொருந்திய வேலாயுதத்தை யுடையவனே! ஒளி பெற்ற ஆக்கினைச் சக்கரம் எங்குந் தடையில்லாமற் செல்லும்படி ஏழுலகத்தை முழுவதையும் பரிபாலித்தவர்களும், நினைத்தற்கும் இயலாத சிறந்த குணங்களை யுடையவர்களுமாகிய இவர்களது சூரிய வமிசத்திலுதித்த முன்னரசர்கள், அளவற்றவராவார்கள். இயற்கையிலேயே பகைமை கொண்டவைகளாகிய ஆண்புலிகளும் மான்களும் பகையில்லாமல் ஒரு நீர்த்துறையிலேயே வந்திறங்கி நீர் பருகும்படியான தர்ம சிந்தையுடன் அரசாண்ட மாந்தாதா என்று ஒப்பற்ற புகழ் பெற்றவனாகிய ஒருவனும், இவர் குலத்தே உதித் துள்ளவர்களுள் ஒருவனாவான்.

வெற்றியையுடைய அரசர்கள் பலரும்வணங்கும் பாதங்களுடையவனே! பொறுமை மிகுந்த தேவர்களும் பொறுமையற்ற அஸுரர்களும், ஒருவர்க்கொருவர் போர் செய்து கொண்டிருந்த ஒரு காலத்தில், இவர்களது குலத்திலுதித்தவனுகி, வேத விதிப்படி அபிஷேகஞ் செய்யப்பெற்றுத் தரித்துக்கொண்ட நவரத்ன கசிதமான கிரீடமும் ஹாரங்களும் ஒளியினுல் விளங்கும்படியாகக் கையில் வில்லைப்பிடித்த தரும தேவதையைப்போல் தானொருவனுகவே அமராவதி சென்று, அப்போர் முகத்தில் திரிந்து, அஸுரரை வென்று அந்நகரத்தைக் காத்தவனுகிய முசுகுந்த சக்ரவர்த்தியும் இவர் குலத்துதித்தவன் தான்.

மின்னல் போலும் ஒளியுண்டாவதற்கிடமான வேலாயுதத்தை யுடையவனே! ஜனக!! பொன்னழகை விளக்குகின்ற வீரக்கழல்புனைந்த அச்சூரியகுலத் தரசர்களை, உலகிலுள்ள இனிய உயிர்கட்கெல்லாம் இனிய உயிராகத் தாமிருந்து இப்பெரு நிலத்தைக் காத்தருளினுர்களென்று புகழவல்லவர்கள் நாமே போலும்; நாம் புகலுதற்கு அடங்கினதல்ல அவர்களது புகழ்; இவர்கள் குலத்தில் முன் பிறந்தவனுன சிபிசக்ரவர்த்தி, முன் ஒருகாலத்தில், வல்லூறுக்குப் பயந்து தன்னை வந்து அடைக்கலம் புகுந்ததாகிய ஒரு புறுவின் பொருட்டுத் தன் உயிரைப் பங்கிக்கொடுத்தான்.

பகையரசர்களினுடைய உடம்பைத் தொளைத்த கொடிய வேலாயுதத்தையுடைய ஜனக மன்னனே! இக்குமாரர்களது வம்சத்திலுதித்த முன்னைய அரசர்கள், பிரஜைகள் நடக்கும்போது இடறத்தக்கவைகளை யொதுக்கும்பொருட்டு இனமாகக் கிடந்த கொடிய மலைகளையும் அப்புறத்தில் உருட்டித் தள்ளி, இவ்வுலகமானது தோண்டியெடுத்த மேடான இடமெனும்படியாகப் பிரஜைகளிடம் இரக்கங் காட்டி, உவர்நீர்க் கடலும் உள்ளே நுழையும்படியாகத் தோண்டினுர்கள் என்

ருல், இக்குலத்தினர் பெருமையைத் தெரிவிப்பதற்கு வேறு உறுதிமொழியும் எடுத்துச் சொல்லவேண்டுமோ! இங்ஙனம் கடலையும் பூமிக்குள் கொணர்ந்தவர்கள் சகர குமாரர்கள் அன்றோ!

பகைவரது உடல்தசை பொருந்தி ஒளிபெற்ற வேலாயுதம் உடையவனே! ஜனக மன்ன!! இரண்டாயிரம் நாவுடையவனென்று புகழத்தகும் ஆதிசேஷனும், அக்குலத்தரசர்களினுடைய சிறப்பைச் சொல்ல வல்லவன் அல்லனென்றால், நான் தளர்ச்சியின்றி புகழ்ந்துரைத்தற்கு எளிமையாகுமோ! இதழ் விரிந்த கொன்றைப்பூக்கள் நிலைத்து விளங்கும் ஜடாமகுடமுடைய சிவபிரானது ஜடையிலும் வந்து புகுந்து அலைந்த புண்ணிய தீர்த்தத்தையுடைய கங்காநதியைத் தேவலோகத்திலிருந்து பூமிக்குக் கொணர்ந்தவனென்று புகழப் பெறுகிற பகீரத சக்ரவர்த்தியும், இவர்களது சூரிய வம்சத் துதித்த ஒரு மன்னவன்தானென்பதை யறிவாயாக.

மூயவுருவம்போன்ற களங்கமற்ற சந்திரவட்டக் குடையையுடைய ஜனக சக்ரவர்த்தியே! இந்தக்குமாரர்களினுடைய குலத்திலே உதித்த நகுஷன் என்னும் பெயரையுடைய சக்ரவர்த்தி யொருவன், மீன்களையுடைய கடலாற் சூழப்பட்ட நிலவுலக முழுவதையும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் எளிதில் தன் வசப்படுத்திக்கொண்டு, தேவேந்திரனுக்கும் இயற்கை முறையாலேயே இடரியற்றி, அதன் காரணமாகிய பிறராற் செய்வதற்கு அருமையான பெரிய ஒப்பற்ற நூறு அச்வமேத யாகங்களையும் சாஸ்த்ர முறைப்படியே செய்தலமைத்தான்.

சந்திரனை வென்று தேவகுருவுக்கு அபயம் அளித்தவனாகிய திலீபசக்ரவர்த்தியும், ருத்திரனை வென்றவனாகிய பகீரத சக்ரவர்த்தியும், பகைவரை எரிக்கவல்ல பாணத்தினால்

துந்துவென்னும் அசுரனைக் கொன்று உதங்க முனிவர்க்கு அருள் புரிந்தவனாகிய குவலயாசுவன் என்னும் அரசனும் வந்து தோன்றுவதற்கிடமாக இருந்த இந்த சூரியகுலத்திடைப் பிறந்த ரகு என்னும் மன்னர் பெருமான், கட்டமைந்த தன்னுடைய வில்லின் வலியால் தேவேந்திரனையும் வென்று எட்டுத் திசைகளிலுள்ளாரையும் போரில் வெற்றிகொண்டான்.

இவர் குலத்தில் தோன்றிய அஜனென்னும் அரசனென்பான் தனது வில்லாகிய பெரிய மந்தரமலையென்னும் மத்தினால், பகையரசர்களாகிற பாற்கடலைக் கலக்கி, ஜோதி வடிவெனச் சொல்லத்தகுந்த அழகிய புன்னகையையுடைய இந்துமதியாகிய லக்ஷ்மியை, இருளைப்போன்ற கருநிறத்தையுடைய —மந்தரமலைகொண்டு பாற்கடலைக் கடைந்து அக்கடலில் தோன்றிய இலக்குமியை மணந்த - திருநெடுமால் போலவே, வளம் பொருந்திய திண்ணிய தனது புஜங்கட்கு அணியாக அணைந்துகொண்டான்.

அந்த அஜமகாராஜனுடைய புதல்வனாகிய தசரத சக்ரவர்த்தியைத்தற்போது உலகத்தில் அறியார்தாரே கிடையாது. அந்தத் தசரத சக்ரவர்த்தி அரிதிற் பெற்ற குலக்குமரர்களாகிய இவர்களை, உள்ளவாறெல்லாம் விரும்பிச்சொல்லிக்கரையேறுதல், நான்குவேதங்கட்குத் தலைவனான நான்முகப் பிரமனுக்கும் அருமையாகும்; ஆனாலும், பற்பல வாத்தியங்களும் முழங்கத்தகுந்த தலைவாயிலையுடைய ஜனக சக்ரவர்த்தியே! இவர்களது வரலாற்றையெல்லாம் நான் அறிந்தபடியிற் சொல்லுகிறேன்; கேட்பாயாக.

உலகத்துயிர்கள் எல்லாம் துன்பமில்லாமல் வாழும்படியாகச் – சூரியன் பனியை வெல்வதுபோல, திருமாலினது சக்ராயுதம்போன்ற தனது நேமிப்படையால் பகையரசர்

ஜனைப்பழித்து உலகத்தைக் காத்தருள்பவனும் – போரில் வெற்றிகொள்ளற்குத் தனது கைவில்லையன்றி வேறு உதவியை வேண்டாதவனும் – தரும தேவதைக்கு மெய்க்காப்புப் போன்றவனும் - "தர்ம சாஸ்திரங்களை வகுத்தருளிய ஆதி மனுச்சக்ரவர்த்தியே இவன்" என்று சொல்லும்படியானவனுமான அந்தத் தசரத சக்ரவர்த்தியானவன், புத்திர பாக்கியம் பெறாத குறையினால், மனவருத்தங்கொண்டவனானான்.

விற்கொம்புபோல் வளைந்த புருவங்களையும் - மழலைச் சொற்களையே மிழற்றுகின்ற சிவந்த கொவ்வைப் பழம் போன்ற அதரத்தையும் - கரிய நெடுங்கண்களையும் - விலைப் பொருளுக்குக் கொடுக்கத் தகுந்த அல்குற் பிரதேசத்தையும் - மின்னற்கொடிபோலத் துவள்கிற சிற்றிடையையுமுடைய வேசையரைத், தனங்களாகிய கொம்புகளையுடைய விலங்குகளென்று கருதி, மயங்கி, அம்மங்கைகளுடன் கூடிவந்து ரோமபதமன்னன் முன்னர் எழுந்தருளி நின்ற பெரியோனாகிய - கலைக்கோட்டுப்பெயரையுடைய சாந்தமஹாமுனியால், தனது புத்திரரில்லாத் துயரத்தை நீக்கிக்கொள்ளக் கருதினான்.

அங்ஙனம் தனது ராஜ்யத்துக்கு அழைத்துவரப்பெற்ற அம்மாமுனிவரைப் பார்த்துத் தசரத மன்னன், "நான் நற்றவம் செய்துவைத்திராமையால், பூமாலையை யணிகின்ற இயற்கை மணமுடைய முடியையுடைய புத்திரர்களை, கச்சையணிந்த அழகிய தனங்களையுடைய எனது மனைவிமார்கள் வயிற்றில் வாய்க்கப் பெறவில்லை; ஆகையினால், நீராற் சூழப்பெற்ற அக்கடல் சூழ்ந்த இந்த நிலவுலகை முழுவதையும் அரசாண்டுவந்த எனக்குப் பின்பு, இந்நிலவுலகத்தைக் காத்தற்குரிய புத்திரர்களை நான் பெறும்படியாகத் தாங்கள் அருள்செய்ய வேண்டு" மென்று சொல்லி, அக்கலைக்கோட்டு மாமுனிவருடைய திருவடிகளில் வணங்கினான்.

தசரதனது அந்த வார்த்தையைக் கேட்ட அந்த ரிசிய சிருங்கப்பெயருடைய மாமுனிவரும், கருணைபொருந்திய களிப்பையுடையவராகி, அரசனை நோக்கி, "இந்திவுலகு ஒன்றுமாத்திரமேயல்லாமல் எல்லாவுலகங்களையும் இனிது காத்திடும்படியான அழகிய இளங்குமரர்களை, உனக்கு நான் இப்போதே தந்திடுகின்றேன்; இக்கணமே, தேவர்கள் வீழ்ந்து அவியுண்ணும்படியான பெரிய யாகத்தைச் செய் தற்கு வேண்டிய பொருள்கள் எல்லாவற்றையும் இங்குவரச் செய்க" என்று சொன்னார்.

சக்ரவர்த்தியும், அம்முனிவர் கட்டளையிட்டபடியே, புதல்வரையளித்திடும் புத்திரகாமேஷ்டிக் குரிய எல்லாப் பொருள்களையும் விரைவாகவே வரவழைத்துத் தந்திடவே, மாதவர்களிற் பெரியோனாகிய, அந்த ரிசிய சிருங்க மாமுனி வர், அந்த யாக காரியத்தை விரைவிற்செய்து நிறைவேற் றினார். அப்போது, அந்த யாகாக்கினியின் நின்றும், ஒளியுடைய அழகிய பொன்மயமான தட்டிலே அமிர்தத்துக் கொப்பான வெண்ணிறப் பாயஸ உணவை யேந்திக்கொண்டு பூதகணத் தரசொன்று வெளிவந்தது.

பொன்னாலான அழகிய பாத்திரத்துடனே, அந்த அக்கினியினின்றும் வெளிவந்த அந்த இனிய உணவைச், சிறப்பித்துச் சொல்லப்பெறும் வேதப் பொருளையுணர்ந்த-பெருமையுடைய - அக்கலைக்கோட்டுமாமுனிவருடைய கட்ட ளையினால், தனக்குத்தானே சமானமான தசரத சக்கரவர்த்தி யானவன், வரிசைப்படியே, அழகிய நெற்றியையுடைய கௌஸலை முதலிய மனைவியர் மூவரிடத்தும் நான்கு பங்காக் கிக்கொடுத்தான்.

உலகத்திற் பரவியுள்ள பாவங்களெல்லாம் செய்துள்ள கொடிய பாவங்களாலும் - அறிவதற்கு அருமையான எல்லை யற்ற வேதங்களிற் கூறப்பெற்றுள்ள தருமங்களெல்லாம்

செய்துவைத்துள்ள தருமங்களாலும் - சிவந்த கொவ்வைக் கனிபோலும் வாயினையுடைய கௌஸலையென்பாள், கடகம் அணிந்த திருக்கரங்களையுடையவரும், சித்திரிகர்களால் சித்திரித் தெழுதமுடியாத திருமேனியையுடையவருமான இந்தக் கரிய கடல்போன்ற ஸ்ரீராமபிரானைப் பெற்றெடுத்தாள்.

அறிவுடையவர்களால் விலக்க முடியாத சிறந்த நியாயங்கள் என்று சொல்லப்பெறும் ஒப்பற்ற பெருநதிகள் தன்னிடத்தில் வந்து சேர்ந்ததால், நிறைந்திருக்கின்ற ஆழமான கடலென்று சொல்லத்தகுந்த நற்குண நற்செய்கைகளின் ஆகரமானவனும், யாவராலும் இகழ்தற்குக்கூடாத நற்குணங்களாலும் அழகாலும், இதோ இங்கு வீற்றிருக்கின்ற ஸ்ரீராமபிரான்என்கிற வள்ளலையே யொத்தவனுமாகிய பரதன் என்னும் பெயருடைய திருக்குமாரனைக், கேகயர் கோன்மகளாகிய கைகேயி யென்பாள் பெற்றெடுத்தாள்.

பிறரால் வெல்லுதற்கு அருமையான வலிபெற்ற வெற்றியையுடையவர்களாகித் தருமத்தை யழித்துக்கொண்டிருக்கும் வீரத்தன்மையையுடைய அரக்கர்களெல்லாரும் அஞ்சி நடுங்குதற்குக் காரணமான மிக்க வலிமையுடையவர்களும், சிவந்த பொன்மயமான-பருத்துள்ள மகாமேருவும் - உயர்ந்த வெள்ளிமயமான கைலைமலையும் - கையில் தனித்தனியே வில்லையெடுத்து நிற்குமாயின், அவ்விரண்டையும் ஒப்பவர்களுமாகிய லக்ஷ்மணன் சத்ருக்னன் என்னும் இரண்டு புத்திரர்களையும், கௌசலை கைகேயி என்னும் இருவர்க்கும் இளைய சுமித்திரையென்பாள் பெற்றெடுத்தாள்.

நான்கு வேதங்களையும் ஒத்த அந்தக் குமாரர்கள் நால்வரும், எப்பொருள்கட்கும் மேம்பட்ட பொருளாயிருக்கும் உண்மைப்பொருளை யறிந்துகொள்வதில் ஸரஸ்வதி தேவிக்கும் மேம்பட்டவர்களாகி, வில்வித்தையை யாராய்ந்து கூறுவதான தனுர் வித்தையானது - தோல்வியுற்ற பகையரசர்

களைப் போற்றங்களிடம் குற்றேவல் செய்யும்படி, கலைகள் நிறைந்த வட்ட பூர்ணத்தை யடைந்திருக்கும் பூர்ண சந்திரனது உதயகாலத்திலே பேரொலியுடன் பொங்கியெழும் அலைகளையுடைய கடல்கள் போலவே - வளர்ந்து வந்தார்கள்.

பகைவரைக் காணப்படாமையால் உறையிலேயே எப்போதும் தங்கிக்கிடக்கும் நீண்ட வேலாயுதத்தையுடைய ஜனகமன்னவனே! இந்தக்குமாரர்கள் நால்வரும், கப்பங்களுடன் அரசர்களெல்லோரும் வந்து வணங்குதற்கு இடமான - வீரக்கழல்கள் செறிந்த பாதங்களையுடைய தசரதன் என்று அழைக்கப்பெறும் பொறுமைக் குணத்தையுடைய சக்ரவர்த்தியினுடைய - புத்திரர்கள் என்பது பெயரளவே தான்; வேதவிதிப்படி செய்யவேண்டிய உபநயனச்சடங்கை இக்குமாரர்கட்குச் செய்வித்து, வேதங்களையெல்லாம் விரைவிற் பயிலும்படி செய்து, இவர்களை வளர்த்து, இப்பெருமையை யடையும்படிச் செய்தவர் வசிஷ்டமா முனிவர்தான் என்றறிந்துகொள்வாய்.

நான் ஆரம்பித்திருக்கும் யாகத்துக்குத் தடைகளை விரைந்து விரைந்து செய்துக்கொண்டிருக்கிற கொடுஞ்செயல்களையுடைய தீக்குணத்து அரக்கர்களை - இங்கேயுள்ள இந்த இராமலக்ஷ்மணர்களைக்கொண்டு - கொலை செய்விக்கும் கருத்துக்கொண்டவனாகி, நான், தசரத மன்னனிடத்திலிருந்து இக்குமாரர்களைப் பெற்றுக்கொண்டு - நடந்துபோய்த் தபோவனத்தினுட் சேர்ந்தேன்; சேர்ந்தவுடனே, பிறராற் பொறுத்தற்குக் கூடாத போராற்றலைக் கொண்டுள்ள தாடகை யென்னும் அரக்கியே முதன் முதலாக எதிர்த்து வந்தாள்.

ஐயா! ஜனக மகாராஜனே!! அலைகள் பாய்ந்து வருதற்கிடமான அக்கடல்போலும் கரிய திருமேனி நிறத்தையுடைய-புருஷோத்தமனாகிய ஸ்ரீராமபிரானது, நீண்டு யர்ந்த நிலையான உருவத்தழகையுடைய தோள்களின் வலிமிக்க

பலத்தை நீ நன்றாகக் கூர்ந்து பார்ப்பாயாக; இந்த ஸ்ரீராம பிரானுடைய தோள்வலியா லெய்யப்பெற்ற அம்பொன்று தானே, உலகத்தில் உருவங்கொண்டு காணப்பெறுகிற நெருப்பைச் சொரியும் கண்களைப்பெற்ற தாடகை யென்னும் அவ்வரக்கியினது மார்பைத் தொளைத்து, அடுத்து நின்ற மலைகளையுந் தொளைத்து, வேகம் அடங்காமல், பல மரங்களையுந் தொளைத்துக்கொண்டு, எதிர் நிற்கும் வேறு பொருளில் லாமையால், பூமியைத் தொளைத்துப் பாய்ந்தது; காண்பாய்;

செவ்வானம் போன்ற நிறங்கொண்டு, நெருப்புப்பற்றி யெரிகின்றாற்போலும் சிவந்திருக்கும் மயிர்களையுடைய - அவ் வரக்கர்களின் மலைகள்போலும் தலைக்குவியல்கள், அறுக்கப் பட்டு வீழ்ந்து கீழே சிதறிக்கிடக்கும் அளவுக்கு ஒரு முடிவேயில்லை; அப்போது இவ்விராமபிரான் ஓர் அம்பினை யெடுத்து எய்யவே, அவ்விடத்தில், அத்தாடகையின் குமா ரர் இருவர்களில் ஒருவனை சுபாகு என்னும் அரக்கன் இறந் தொழிந்து வானுலகிற் சேர்ந்துவிட்டான்; மற்றொரு குமார னை மாரீசன் என்னும் அரக்கனானவன், போய் வீழ்ந்த இடத்தை அறிந்திலேன்; இப்படி இடையூறகற்றப்பட்ட பின்னர், நான், எனது யாகக்காரியங்களைக் குறைவில்லாமல் நிறைவேற்றிக் கொண்டு இங்கே வந்துளேன்.

ஐயா! ஜனக மன்னனே!! இன்னும் ஆராய்ந்து முழு வதும் உணர்வாயாக !!! பிரமதேவனுக்கும் அறிந்துகொள் ளற்கு முடியாதனவாகியும் - இவ்விராமன் கோபித்து ஏவி னால், எல்லா வுலகங்களையும் கடல்களுடனும் மலைகளுடனும் கரிந்துபோம்படியாகச் சுடுகிற்கும் அஸ்திர சஸ்திரங்களை, வெகுநாட் செய்துள்ளதபோபலத்தினால் பிரமனிடமிருந்து பெற்றுக்கொடுத்தவனாகிய நானும் மனம் வெள்கும்படி யாகவே, இந்த ஸ்ரீராமபிராற்குக் குற்றேவல் செய்துக் கொண்டிருக்கின்றன என்பதையும் அறிவாய்.

*கௌதம மகா முனிவரது பத்தினியான அகலிகைக்குச் சாபவடிவத்தை யொழித்துப் பழைய நிஜ வடிவத்தைத் தந்தருளியது, இவ்விராமனது செந்தாமரை மலர் போன்ற—பொன்னுலாகிய வீரக்கழலை யணிந்த திருவடியின் தூளியே காண், எனக்கு, என் உயிரினிடத்தில் உள்ளதைக்காட்டிலும், ஸர்வ சாக்ஷியான—கரிய திருமேனியையுடைய இந்த ஸ்ரீ ராம பிரானிடத்தில்தான் அன்பு மிகுதியாக உண்டு. இவ்விராகவ பிரானது திவ்ய சரித்திரமும் புஜபல பராக்கிரமமும் இதுவாம் என்று, கௌசிக முனிவர் ஜனக மகாராஜனுக்குத் தசரத சக்ரவர்த்தியின் புதல்வர்களினுடைய தன்மைகளையெல்லாம் கூறி முடித்தார்.*

குலமுறை கிளத்து படலம் முற்றுப்பெற்றது.

---

## கார்முகப் படலம்.

சேமித்து வைக்கப்பெற்றிருக்கும் சிவதனுசின் வரலாற்றினைப்பற்றி, சதானந்த முனிவர், விசுவாமித்திரருக்குச் சொல்லிடவே, அந்த வில்லினை, ஸ்ரீ ராம பிரான், இறுத்தமை உரைத்தது.

---

*தாங்கள், "இக்குமாரர்கள், இந்த வில்லையும் ஒரு கை காண்பார்" என்று சொன்னதற்கு, நான் என்ன மறுமொழி கூறுவேன். (இக்குமாரர்களிடத்தில் குலமில்லை குணமில்லை யென்பேனா! பலமில்லை பணமில்லை யென்பேனா!! அழகில்லை ஆற்றலில்லை யென்பேனா! கனமில்லை கல்வியில்லை யென்பேனா!! என்ன மறுமொழி கூறமுடியும் என்றபடி.) இம்மாயமான தொரு வில்லிற்கு நானும் தோற்றுப்போனவாறும் என்று என் மனம் நடுங்குகின்றது. எனது வளர்ப்புப் பெண்ணாகிய ஸீதாப்பிராட்டியும், நல்ல பதியைப் பெறவேண்டியதற்கான நோன்புகளெல்லாம் நோற்றிருக்கின்றாள்; (அது வீண் போகா*

தென மதிக்கின்றேன்) அதற்கேற்ப ஐயனாகிய ஸ்ரீ ராமன், இந்த பயங்கரமான வில்லை யெடுத்து வளைத்து நாணேற்றி விட்டால், என்னையும் துன்பக் கடலிலிருந்தும் கரையேற்றின வராவார் என்றான்.

என்று ஜனகராஜன் விசுவாமித்திர முனிவரைப் பார்த்துச்சொல்லிய பிறகு, தனக்கெதிரே நிற்கும் ஏவலாளிகளைப் பார்த்து, "நீங்கள் சென்று அந்த மலைபோலும் வலியுடைய கட்டுடை வில்லைக் கொண்டு வாருங்கள் இப்போதே" என்று சொல்லவே, நான்கு பேர்கள், "நல்லது!" என்று அடிவணங்கி யெழுந்து ஓடிச்சென்று, பொன்னால் அலங்கரிக்கப் பெற்றிருக்கும் தனுச்சாலையிற் சேர்ந்தார்கள்.

மிக்க பலமுடைய யானையை யொத்த மேனியையுடையவராகியும் மயிர் செறிந்த கல்லைப்போலும் திரட்சியான தோள்களையுடையவராகியும் உற்ற அறுபதினாயிரம் வேலைக்காரர்கள், அளவிடக்கூடாத வன்மையுடையவராயிருந்தும், இடையிடையே தூண் போன்ற கால்களில் நிறுத்தி நிறுத்தி எடுத்து வாரைத்தண்டங்களால் தாங்கி வந்தனர்.

நீண்ட பூமி தேவியானவள் நிலத்தைச் சுமை தாங்கமாட்டாதிருக்கும் முதுகை இளைப்பாற்றும்படியாகத் துணையாக நின்று உதவும்—நீண்டுயர்ந்து விசாலம் பொருந்தி நிமிர்ந்திருக்கும் வடமேரு மலையும் நாணத்தை யடையும்படியாகவும்—உலகில் இடமில்லை யென்னும்படியாகவும், கடல்போலு மிரைத்துக்கொண்டு அம்மிதிலா நகரத்து மக்களெல்லாம் காணும்படியாக அந்த வில் தன்னைச்சேமித்து வைத்திருக்கும் பெட்டகத்துடன் வந்து சேர்ந்தது.

"சங்குஞ் சக்கரமுந் தரித்துள்ள அழகிய திருக்கைகளையுடைய அந்த ஆண் சிங்கம் போன்ற செங்கண்மாலாகிய விஷ்ணுவல்லாமல், இந்த சிவ தனுவைத் தொட்டுத் தாங்கக் கூடியவர்கள், இப்பிரபஞ்சத்துக்குள்ளே யாரிருக்கிறார்கள்?

யாரேனுமொருவர், இன்று, இந்த வில்லை வளைத்து நாணேற்றி ருல்தான், அழகிய திருமடந்தை போன்ற ஸீதா தேவியினு டைய வாழ் நாள், "என்றும் இனி மணமுமில்லை" என்று குறை யாகச் சொல்லாதபடி வாழ்வை யடையக்கூடியபடியாகும்" என்று மகா ஜனங்கள் சொல்லிக்கொள்ளுகிறார்கள்.

"இதனை வில் என்று சொல்லுதல் குற்றமுடையது; இது பொன்மலையாகிய வடமேருவேதான்" என்பார்கள்; "முற் காலத்தில் இதனை வளைத்து நாணேற்றினவன் எந்த மஹானோ" என்பார்கள்; "இதனைச் செய்யும்போது, நான்முகன் கையாற் றொட்டுச் செய்யவில்லைபோலும்; தனது உயர்ந்த தவத்தின் முயற்சியால்தான் செய்திருத்தல் வேண்டும் போலும்" என் பார்கள்.

"திண்ணிய மேரு மலையின் பாகங்களையே திரட்டி யிவ் வில்லாகச் செய்திருக்கிறார்களோ!" என்பார்கள்; "அல்ல; அல்ல; முன்னே கடலைக் கடைவதற்கு மத்தாக நின்றது ஒரு மலை யென்பார்களே! அந்த மந்தரம் என்னும் மலைதான் இது வாயிருக்கலாம்" என்பார்கள்; "அல்லாமல் பெருமை பொருந்திய—ஒளியுடைய சர்ப்ப ராஜனாகிய ஆதிசேஷன் தானோ?" என்று சொல்வார்கள்; "வானத்தில் இந்திரனால் இடப்பெறும் நீண்ட இந்திர வில் தான் கீழே வீழ்ந்திருக்கின் றதோ!!" என்பார்கள்.

"இத்தகைய பயங்கரமான வில்லொன்றினைக் கொண்டு வரும்படியாக மன்னன், ஏன் சொன்னான்?" என்று சொல் வார்கள்; "இவனைப்போலும் மதிகெட்ட மன்னவர்கள் உலகி லுண்டோ?" என்பார்கள்; "இதனை வளைத்து நாணேற்ற வேண்டுமாயின், முன்னைத்தவமொன்றினாலேயே முடிக்கலாம்" என்று சொல்லுவார்கள்; "இந்த வில்லின் பந்தயப் பொருளா யிருக்கும் கன்னியாகிய ஸீதா தேவியும் இந்த வில்லைக் காண் பாளோ!" என்றும் சொல்லுவார்கள்.

"இந்த வில்லால் உதைத்து எய்யப்பெற்ற அம்புக்கு லக்ஷயம் யாதோவிருக்குமோ "என்பார்கள்; இந்த நல்ல வில்லை, கன்யாப் பெண்ணாகிய சீதையின் விவாகக் குறிப்பின்மேல் அரசன் நாட்டுவான் என்பார்கள். சக்கரக் கையனாகிய இராமன், இவ்வில்லை எடுத்து நிச்சயமாக நாண் ஏற்றல் கூடுமோ என்பார்கள்; இது விதி செய்த தீமையால் விளைந்த விளைவென்று சிலர் சொல்வார்கள்.

அங்கே, நெருங்கிக் கூடியிருந்தவர்கள், இப்படிப் பேசிக் கொண்டிருக்கவும், அந்த வில்லை யங்குக்கொணர்ந்தவர்களாகிய வேலைக்காரர்கள், அரசன் ஜனகனுக்கு எதிரில், பூமிதேவி முதுகை நெளித்துக் கீழே தாழும்படியாக வைத்தார்கள்; அந்த வில்லின் வலிமையைக்கண்ட மன்னவர்கள், இதனை வளைப்பவர் யாரோவென்று கைகளை விதிர்த்தார்கள்.

பத்து வயதுடைய யானைபோன்ற ஸ்ரீராமபிரானுடைய முகப்பொலிவை நோக்கியும், அவ்விராமனை மணமகனாகப் பெறுதற்குத் தடைபோலிருக்கிற—வேதனையைத் தருவதாகிய அப் பெருவில்லை நோக்கியும் பிறகு, தனது மகளாகிய சீதையையும் நோக்கி நோக்கி மனம் மறுகிநிற்கும் ஜனக மன்னன் மனத்தை நன்கு நோக்கிய—கௌதம முனிவருடைய புத்திரராகிய சதானந்தர், அவ்வில்லினைப்பற்றியவெல்லாம் சொல்லலுற்றார்.

மேருவை வில்லாக வளைத்துள ஈசன், தமது பாகத்திலிருக்கிற உமையினை யிகழ்ந்து பேசினான், என்னும் காரணங் கொண்டு, பொறுமையில்லாது ஓங்கியிருப்பதாகிய ஒப்பற்ற சினமுடைய வில்லைக் கையிலேந்திக்கொண்டு, பொருந்திய தக்ஷப் பிரமனுடைய வேள்விச் சாலையைச் சார்ந்தனர்; அப்போது,

பற்களும் கரங்களும் இழந்தவர்களாகித் தேவர்கள், ஓடிப் போய்ப் புகாத இடங்களெல்லாம் புகுந்து மறைந்தார்கள்; அத்

தத் தகுதியுடைய யாகத்தின் அக்கினியும் மாறிப்போயிற்று; எண்தோளுடைய முக்கட் கடவுளாகிய சிவபிரானும், கோபம் மாறிப்போனார்.

தண்டம்பெற்ற அந்த வில்லையுடைய சிவபிரான், தேவர்கள் சிரஞ்ஜீவிகளாகையால், அவர்களது நடுக்கத்தைப் பார்த்து, பல முடைய விருஷபம்போன்ற இந்த ஜனக மன்னனது குலத்திலே முன்பிறந்து சிறந்து விளங்கியிருந்த—வாள்வலியாற் பகைவரை வெல்லும் தேவராதனென்று பெயரையுடைய அரசனிடம் வைத்துச் சென்றார்.

கௌசிக குலதிலகரே ! இந்த வில்லினது வன்மையை நான் எடுத்துச் சொல்லவும் வேண்டுமோ !! இதன் பெருமையையும் ஆற்றலையும் உணர்ந்துரைப்பதற்கு, சடாமகுடதாரியாகிய சிவ பிரானுக்கு நிகரான உம்மையல்லாமல், இவ்வுலகில் யாரிருக்கின் றனர்; இந்த வில்லின் பந்தயப் பொருளாகக் குறிக்கப் பெற் றிருக்கும்—இந்த குலக்கொழுந்தாகிய—அழகிய அங்கங்கள் படைத்துள்ள சீதையின் பெருமையையும் வரலாற்றையும் சொல்லி வருகின்றேன்; கேட்பீராக.

வேறு.

இரும்புக்குச் சமானமாகிய—கரிய நீண்ட கொம்புகளை யுடைய இரட்டை யெருதுகளின் பெருமை பொருந்திய பருத்த பிடரினிற் கட்டப்பெற்ற நுகத்தடியைப்பிணைத்து, அதனோடு சேர்ந்து இழுத்தற்குறிய அளவிடற்கரிய ரத்தினங்கள் பதிக்கப் பெற்ற பொன்மயமான கலப்பையைக்கொண்டு அதிற்பிணைக்கப் பெற்ற—வயிரக்கொழுவினைக்கொண்டு, சமானமற்ற பலம் பொருந்திய இந் நிலத்தை—யாக பூமிக்காகச் சுத்தஞ்செய்தற் பொருட்டுப் பல சால்கள் உழுதோம்.

அப்படியுழுதுவரும்போது, அக் கொழுமுகத்துற்ற உழவு சாலின் வழியே தோன்றுகின்ற இளமையான ஒளியைப் பொழி கின்ற பூமடந்தையினுடைய செல்வ உருவே வெளிப்பட்டதென் னும்படியாக—கடலில் தோன்றிய தெள்ளிய அமுதத்துடன்

எழுந்தவளான இலக்குமிதேவியும், அழகினுக்குத் தோற்று ஒதுங்கும்படியான பேரழகுடன்—யாவராலும் தொழப்படுகின்ற நல்ல அழகையுடைய—இப்பெண்ணரசியாகிய சீதை உற்பவித்தனள்.

இந்த அழகியிடத்தமைந்துகிடக்கும் — பெண்ணிற்குரிய குணங்களான—நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு என்பவற்றை யென்னென்று சொல்லுவேன்; அவை, இவளைச்சேர்ந்துள பாக்கியத்தால்—தாம் மேன்மையையடைதற்கு — ஒன்றற்கொன்று "நான்முன்னே நான்முன்னே" என்று பிணங்க ஆரம்பித்துவிட்டன; அழகு என்பதோ இப் பெண்மணியை வந்து கூடுதற்குத்தான் வெகுகாலம் தவத்தைச் செய்தே வந்துளது என்றால் வேறும் சொல்லவேண்டுமோ! பலபடி பேசுவதிற் பயனென்ன! இந்த சீதை இந்நிலவுலகிற்றோன்றின பிறகு—ஒளியுடைய ஆகாயத்திலிருந்து கங்கை தோன்றினவுடன், மற்றைய நதிகளெல்லாம் அழகும் பெருமையும் அழிந்து ஒழிந்தன போலவே, இந்நிலத்துப் பெண்களெல்லாம் அழகிற் குறைந்து ஒதுங்கினார்கள். இங்கு நிகழ்ந்த இந்த விசித்திரத்தைப்போலும் விசித்திரம் எங்கே நிகழ்ந்ததுண்டு; எங்குமில்லையென்றபடி. உலகில் ஒவ்வொருவர்க்கும் அவரவர் தாம் முன்னர்ச் செய்து வைத்துள்ள வினைப்பயனால், தற்போது பெறும் வன்மையும் அதிர்ஷ்டமும் வெவ்வேறுபடியாய் அமைந்திருக்கவும், அன்று சமுத்திர மதன காலத்தில் கடலினின்றும் தோன்றிய இலக்குமிப் பிராட்டியை "எனக்கு எனக்கு" என்று விரும்பிக் கலகம் விளைத்துக்கொண்ட அமரர் குலத்தவர்போலவே, இன்று, இங்கு, எங்கள் யாக பூமியினின்றும் தோன்றிய இந்த இலக்குமியைப் புவி மன்னர்கள் யாவரும் "எனக்கு எனக்கு" என்று விரும்பிக் கலகம் விளைவித்துக்கொண்டார்கள்.

ஒலியுடைய சேனைக்கடலோடும் கூடிவந்து, மதங்கொண்ட யானை போன்ற அரசர்கள், சிங்கம்போல் கர்ஜித்துப் பெண்ணை மணஞ்செய்து கொடு என்று கேட்டவர்கட்கு, "புலித்தோலு

டையும் ஆணையுரிப்போர்வையும் உடைய சிவபிரானுடைய வில்லாகிய இந்தப் பந்தயதனுசை வளைத்தவனே, எங்கள், மங்கை திருமணத்தவன்'' என்று யாங்கள் சொன்னோம்.

அதைக்கேட்ட அம்மன்னவர்கள், அந்த வன்மை பொருந்திய வில்லை வளைக்க மாட்டாதவர்களாகியிருந்தும், மன்மதக் கடவுள் வளைக்கும் கரும்பு வில்லில் தொடுத்தெய்யப்பெறும் மலர்க்கணைக்கு ஆற்றமுடியாதவர்களாகி, மதிமயங்கி, தத்தம் மேன்மையை யிழப்பவர்களாய்த் தகாத காரியத்தில் இறங்கிவிட்டார்கள்; என்னவெனில்; உலகளிக்கும் செற்சொல்லுடைய கௌசிக முனிவரே! கேளும்!! மலைபோன்ற இந்த வில்லுடனே இந் நில உலகளித்த பெண்ணரசைக் காதலித்தவராகிப் போர் செய்யத் தொடங்கினூர்கள் (எமது மன்னவனிடத்திருந்து பெண்ணரசை யபகரித்துக்கொள்ள எம்முடன் போருக்கெழுந்தார்கள்).

அப் போரில், எங்கள் ஜனக மன்னவனது பெரிய சேனையானது, கொடைத்தொழிலை மேற்கொண்ட, செவ்விய வள்ளற் பெருமக்களது பொருளைப்போல், மேன்மேலும் பெருகியது; பொம்மென்னும் ஒலியுடன் வண்டினங்கள் எப்பொழுதும் ஒலித்துக்கொண்டிருக்கும் காரிகையை விரும்பிப் போர் விளைத்த அந்த மன்னவர்களின் சேனையானது, அவர்களது ஆசை போலவே தேய்ந்தொழிந்தது.

அம் மன்னர்கள், என்நினைந்து அகன்றொழிந்தாரெனில், மற்போர்களில் வலிகாக்கும் அழகிய தோளாற்றலுடைய இந்த ஜனக மன்னவன், சிவபிரானுடைய வில்லின் மகிமையைக் காத்தற் பொருட்டு ஆரம்பித்திருக்கும் இந்தப் போரில் மெலிவடைவான் என்பது கருதி, இரக்கங்கொண்டு, ஒளி பொருந்தும் முடியுடைத் தேவர்கள், தக்க சேனைகளை மேன்மேலும் உதவி இம் மன்னற்கே வெற்றியளித்துள்ளார்கள்'' என்று சொல்லி, இருளில் காகங்கள் கூகையைக் கண்டு அஞ்சியோடினதுபோல் ஓடிப்போனூர்கள்.

அம் மன்னவர்கள், ஓடிப்போய் ஒளிந்த அன்று முதல் இன்று வரையில், இந்த வில்லின் அருகேயும் யாருஞ் சென்ற தில்லை; தோற்றோடிப்போய் ஒளிந்த தேர் மன்னர்கள், வலி பெற்றுத் திரும்பினார்களுமில்லை; இனிமேல், எப்போதும், இப் பெண்ணரசிக்கு விவாஹமே கிட்டாதோவென நாங்கள் இருந் துளோம்; விசுவாமித்திர முனிவரே! நீர் சொன்னபடியே இந்தக் கட்டழகன், இராமன், காளை, இவ் வில்லை நாணேற்றி வளைத்தால் மிக நன்றாகும்; மலர்க் குழலுடைய எங்கள் சீதா தேவியின் அழகு பழுதாகமாட்டாது என்று சொன்னார்.

சதானந்த முனிவர், நினைந்து நினைந்து சொன்னவற்றை யெல்லாம், அம் முறைப்படியேதாமும் நினைந்து ஞானியாகிய கௌசிகமுனிவரும், தமது புனைந்த ஜடாமகுடத்தையசைத்துப் போரிற் சிங்கம் போன்ற ஸ்ரீராமபிரானுடைய திருமுகத்தை நோக்கினர்; அமைத்துச் சமைத்தது போன்ற திருமேனியை யுடைய—தியாகிகளுட் சிறந்த ஸ்ரீராமபிரானும், தன்னைக் கருத் துடன் நோக்கிய விசுவாமித்திரர் உள்ளத்தில் நினைந்தவற்றை யெல்லாம் தானும் நினைந்து, அந்த நீண்ட வில்லைக் கடைக் கணித்தார்.

## வேறு.

ஆசிரியராகிய விசுவாமித்திர முனிவருடைய உள்ளக் கிடக்கையை உணர்ந்துகொண்ட, வள்ளலாகிய ஸ்ரீராமபிரான் அந்த வில்லை நாணேற்றுதற் பொருட்டு, சொரியப் பெற்றுள நெய்யாகிய ஆகுதி வீழ்ந்தவாயினிடத்தினின்றும் மேன்மேற் கிளர்ந்தெழுகின்ற யாகாக்கினியைப்போலவே, வலஞ்சுழித் தெழுந்தார்; அவரது உற்சாகத்தையும் வேகத்தையுங் கண்ட தேவர்களும், இந்த வில் அழிந்தே போயது என்று ஆரவாரித் தார்கள்; காமம் வெகுளி மயக்கமென்னும் முப்பகைகளையும் வென்றவர் களாகிய முனிவர்கள், ஆசீர்வசனங்களை மொழிந்து கொண்டிருந்தார்கள்.

பரிசுத்தமான தவங்கள் பலவற்றைச் செய்துயர்ந்த பழைய முனிவராகிய விசுவாமித்திரரால் ஏவப்பெற்ற ஸ்ரீராமபிரான் அந்த வலிய வில்லை யிறுப்பதற்கு முன்னால், மன்மத தேவன், செவ்விய ஆபரணங்களை அணிந்துள்ள சீதா தேவியினுடைய சித்தத்தின் ஒவ்வொரு அம்சந்தோறும், ஆயிரக்கணக்கான மலர்க்கணைகளையெய்திட்டனன்.

பாருங்கள்! இந் நீண்ட வில்லின் கால் மிக வன்மையுடையது என்பார்கள்; நாண முதலிய நற்குணமெல்லாம் உடைய சீதாதேவியினது அழகு பொருந்திய சிவந்த கைகள், இவ்விராமபிரானுடைய அழகிய கையிற் புகாது போமாயின், ஒளி பொருந்திய நெற்றியையுடைய சீதை நல்வாழ்வில்லாதவளாவள் என்றும் சொல்வார்கள்.

நகர மாந்தர்கள், தங்கள் தங்கள் கைகளைக் குவித்துக் கொண்டு, இரு கண்களினின்றும் நீர் பெருக்குக் கொண்டு, பெரிய யானைபோலும் ஸ்ரீராமன், இந்த வில்லை நாணேற்றிலானெனில், கஸ்தூரி மணம் மிக்க கூந்தலுடைய சீதையும் நாமும், அழிவு செய்யும் அக்கினியிற் புகுந்தழிவோம் என்றும் கூறுவார்கள்.

நல்ல தியாகியாகிய இந்த ஜனகராஜன், ஸ்ரீராமபிரானுடன் சீதாதேவியின் மணத்தை மகிழ்ந்து ஏற்றுளானாயின், "இவளை நீ பாணிக்ரஹணம் செய்துகொள்" என்று சொல்லி, முன்பு நின்று, சீதாதேவியை வள்ளலுக்கு அளிப்பதைவிட்டு, கங்கா வெள்ளத்தைச் சடையிலடக்கிய சிவபிரான் வளைத்த வில்லைக் கொணர்ந்து, இப்பிள்ளைக்கு—சிறுவற்கு—முன்வைத்தது பேதைமைத்தனந்தான் என்றுஞ் சொல்லுவார்கள்.

இப்பெருங்காரியத்தில் இச் சிறுவனை (இராமனை) பேவுதலில், அறிவுடைய முனிவராகிய விசுவாமித்திரருக்கு ஒரு நாணமுந் தோன்றவில்லைபோலும் என்பார்கள்; தனது கோறிக்கைப்படியே குலமும் குணமும் பலமும் பணமும் அறிவு

ஆற்றலு முதலிய எல்லாம் பொருந்திய மணமகன் தன் மகளுக்கு வாய்த்த நற்பாக்கியமுடையவனாயிருந்தும், பரீக்ஷையின் நிமித்தம் வில்லைக்கொணர்ந்து முன்னே வைத்த இம் மன்னனினும் கொடியவர் வேறிலர் என்றும் சொல்லுவார்கள். மகானாகிய—வீரனாகிய ஸ்ரீராமனே இந்த வில்லை நாணேற்றாது போதல் கூடுமாயின், பருத்த தனத்தையுடைய சீதாதேவி, பாக்கியம் பெற்றவளேயல்லளென்பது நிச்சயமென்றும் பேசுவார்கள்.

மயிற் சாயலையுடைய பெண்கள், இவ்வண்ணம் சொல்லிக் கொண்டிருக்கவும், நல்ல தவமுடைப் பெரியார் ஜயகோஷம் செய்திடவும், தேவர்கள் களித்திடவும், ஸ்ரீராமபிரான் பெருமை பொருந்திய சிங்கமும் அழகிய ரிஷபமும் பொன்மலையாகிய மேருவும் யானையும் தமது நடை கண்டு நாணும்படியாக நல்ல நடை நடந்து வில்லினிடம் சென்றார்.

பொன்மயமான மலைபோன்றதாகிய அந்த வில்லை ஸ்ரீராமபிரான், தேடுதற்கரிய மாபெரும் மணிபோலும் சீதாதேவியெனும் பொற்கடகமணிந்த பைந்தொடிக்குப் புனைந்திட எடுத்து நீட்டும், மலர்ந்த மாலையை யெடுப்பதுபோலவே, சிறிதும் சிரமமில்லாமல் எடுத்தார்.

ஆகாய வெளியை தடுத்தவண்ணம் நெருங்கி வந்திருந்த இமயவர்களாகிய தேவரும், ஸ்ரீராமன் அந்த வில்லைத் தமது தாளின் கீழே மடுத்ததையும், நாணை வில்லின் நுனியில் ஏற்றினதையும் பார்க்கவில்லை; ஏனெனில், அவருடைய அச் செயலினுடைய வேகத்தால், யாரும் எதையும் காணமுடியவில்லை; வில்லைக் கையினால் எடுத்ததைக் கண்டார்கள்; அடுத்த நிமிஷமே, அந்த வில் ஒடிந்தழிந்த ஒலியைக் கேட்டார்கள்.

## வில்லொடிந்த ஓசை விபரம்.

ஒடிந்த வில்லின் ஓசையைக் கேட்டுத் தேவர்கள் பிரமாண்டமே பிளந்துபோய் விட்டதோ வென்றும், யாரைப் போய்ச் சரண்புகுவோமென்றும் ஏக்கத்துடன் நலிந்து வருந்

தினர்கள்; என்றால், பூமியிலுள்ளார்களது தன்மையைச் சொல்லவேண்டுமோ என்ன! பூமியைத் தாங்கிக்கொண்டு பூமியின் அடிப்புறத்திருக்கும் ஆதிசேஷனென்னும் நாகராஜன், "இது என்ன இடியோ?" என நடுங்கிற்று.

## பிரபஞ்சத்தவர் ஆசிமொழிகள்.

"வெற்றிகொண்ட-பகைவற்கு அச்சந்தரும் வேலாயுதம் பெற்றுள ஜனகமகாராஜனுக்கு இன்றைக்கு நல்வினைப்பயன் கைக்கெட்டியதென்று, "தேவர்கள் பூமாரி பொழிந்தார்கள்; மேகங்கள் பொன்மாரி பெய்தன; பரந்த பெரிய கடல்களெல்லாம் பல மணிகளையும் தூவியெறிந்தொலித்தன; ராஜ ரிஷிக் கூட்டத்தாரெல்லாரும் ஆசீர்வசனங்களை மொழிந்தார்கள்."

பருவ காலம் வந்ததென்னும்போது பொங்கியொலிக்கும் பெருங்கடலைப்போல், மிதிலையென்னும் அப்பெரு நகரிலுள்ளவர்கள், மலர் மாலைகளையும் ஆபரணங்களையும் கலவைச்சாந்துகளையும் பொற்பொடி முதலிய பரிமளப்பொடிகளையும் மணமூட்டப்பெற்ற நெய் வகைகளையும் கடலிலிருந்தெடுக்கப்பெற்ற வெள்ளிய முத்துக்களையும் பொன்னும் மணியும் நுண்ணிய வஸ்திர முதலியவற்றையும் சங்கு கொம்பு முதலிய பேரொலிகளுடன் பல்லோர்க்கும் பல்வகையில் எடுத்து வீசிப் பொங்கியாரவாரித்தார்கள்.

இரண்டு வேல்கள் வந்து கிடந்தனவோ என்று கூறும்படியான இரண்டு கண்களுடனும் விளங்குகிற தண்ணொளியின் இயல்பைப்பெற்ற சந்திரன் போலும் முகமுடைய அம்மிதிலா நகரத்துப் பெண்கள், நலம்பெற்ற தந்திக் கம்பிகளுடன் மகரவுருவிலமைக்கப்பெற்ற வீணைகள் தேன்போலும் இனிய கீதங்கள் சொரியவும் தாங்கள் அணிந்துள்ள காதணி முதலிய ஆபரணங்கள் இடைவிடாது ஒளி வீசிக்கொண்டிருக்கவும் சிறுமுறுவலின் ஒளி விட்டுவிட்டு வீசவும், மேகம் தோன்றுதற்குறிய பருவகாலம் நோக்கி ஆடும் மயில்களைப்போல நடனமாடினர்கள்.

வில்லிறுத்ததை காரணமாகத் தங்கள் குலக்கொழுந்தாகிய சீதாதேவியானவள் நல் வாழ்வைப்பெற்றனள் என்னும் உள்ளக் களிப்பினால், அந்நகரத்து அறிவையுண்ணும் கள்ளுண்டவர் களைப்போல், கணவர்பால் தோன்றிய சினக்குறிப்பினாற் சிவந்து விளங்கும் கருங்கண்களையுடைய பெண்கள், மனத்துக்குப் புண் ணைச் செய்யும் புலவியை நீங்கிக் கணவருடன் கலவியிற் புல்லிக் கொண்டார்கள்; வெள்ளிய—நீர் வற்றிய மேகங்கள் மேலும் மேலும் விரிந்த கடலிற் பரிந்து பாய்ந்து நீர் பருகுவது போல வே, பூமிச்செல்வம் பொருந்தியுள்ள வேந்தனான ஜனகராஜனு டைய செல்வங்களை மன்னர்க்குக் களிப்புத்தோன்றும்படியாக வாரி வாரி முகந்துகொண்டு போனார்கள்.

யாவராலும் வளைக்க முடியாதிருந்த சிவதனு ஒடிக்கப் பெற்ற பெருங்களிப்பினால், அந்நகரில் தோன்றிய-கூத்தர் ஒலித்த மதுர கீதமும், மங்கையர் பல்லாண்டு மொழிந்த அமுத கீதமும், குற்றம் நீங்கிய மகர வீணையிலிருந்தெழக்கூடிய தேன் சொரியும் தெய்வ கீதமும், கிளியெனும் இசையைப் பயின்ற வேய்ங் குழல் கீதமும், கேட்டானந்தித்து, அந்நகரவாசிகளும் விண்ணவர் களும், முறையே உடம்பும் உயிரும் எல்லாம் சித்திரம் போலாக இருந்தார்கள்.

ஸ்ரீராமபிரான், சீதையின் பொருட்டு வெற்றியறிகுறியாக வைக்கப்பெற்றிருந்த சிவதனுவையொடித்து நின்ற ஆற்றலை (வலிமையை)க்காணும் பொருட்டாக அமரர் உலகத்து நங்கை மார்கள் பூமியில் இறங்கிப் பூலோகப் பெண்களைத் தழுவிக் கொண்டார்கள். (அவர்கள் பூலோகப் பெண்களை மயக்கிப் பேரழகுடைமையால் தங்களைப்போலும் சுவர்க்கலோகப் பெண் களென்றே தழுவிக்கொண்டார்கள் போலும்) அப் பெண்களி னுடைய செய்கைகளினாலும் உருவங்களினாலும் ஆடல் பாடல் களினாலும் தம்மினும் வேறுபாடு காணமாட்டாதவர்களாகித் தெளிவு தோன்றாமல் தழுவிக்கொண்டார்களாயினும், அப் பெண்களினுடைய—மையெழுதப்பெற்றுச் செவ்வரி படர்ந்திருக் கும் நீண்ட கண்கள் இமைத்தலைக் காண்டலும் மயக்கமடைந்து நின்றார்கள்.

## ஸ்ரீராமனைப்பற்றி நகரப் பெண்கள் கூறுவது.

கோஸல தேசத்து அயோத்தி நகரத்துச் சக்கரவர்த்தியாகிய தசரத மன்னனது பிள்ளைக்கலியை நீக்கும்பொருட்டுப் புத்திரகாமேஷ்டியிற்றோன்றியவதரித்த உத்தம குமாரன் இவன் என்பார்கள். பிரஜைகளினிடத்துக் கருணைபாலிக்கும் அழகிய செந்தாமரைக் கண்கள் பெற்றவன் என்று சொல்லுவார்கள். தாபமுடைய பிரஜைகளிருக்குமிடங்களெல்லாம் சென்று, அவர்களது தாபமெல்லாம் நீங்கிக் குளிர்ச்சி யடையும்படியாகக் கருணை மழை பெய்யும் மேகம் போன்றவன் என்பார்கள். கண்டவரை வசப்படுத்தும் நீல நிறத்துளிகள் பல சேர்ந்து திரண்டுருவத்தோற்றம் அமைந்திருத்தலால் காயா மரத்தின் பூவையும் ஒப்பானவன் என்று கூறுவார்கள். இங்ஙனம் எல்லாம் நலமாகவே அமைந்து ஓருருவமாகத் தோன்றுகிறபடியால், அந்தப் பெருமனிடத்தில் இவ்வுலக மடங்கலுமே மயல்கொண்டிருக்கின்றது என்று வியந்து கூறுவார்கள். இவ்வெல்லாவற்றையும் கருதி நோக்கும்போது இப்பெருமானை ஸாமானிய மானிடனென்று எண்ணுதற்கில்லை யென்றும் சொல்லுவார்கள்; ஆகையினால், சிறு மீன்கள் பெரு மீன்கள் வரையில் சகல ஜந்துகளுமிருந்து வாழக்கூடிய பாற்கடல்வாசியாகிய ஆதிசேஷசயனனே இப்படியில் அவதரித்திருத்தல் வேண்டுமென்பதைப் பின்னர் அறிந்துகொள்வீர்கள்; பாருங்கள்; என்றும் சொல்லுவார்கள்.

எல்லாம் பூர்ணத்துவம் பெற்று விளங்கியிருக்கும் ஸ்ரீராமபிரானைக் கண்டுகண்டு அனுபவித்தற்கு நங்கையாகிய சீதாபிராட்டிக்கு, இப்போதிருக்கும் இரண்டு கண்கள் போதா; ஆயிரம் நயனங்கள் வேண்டும் என்று சிலர் சொல்லுவார்கள். மற்றும், கொம்புபோலும் ஒசிந்து போழகு வாய்ந்திருக்கும் சீதாபிராட்டியைக் கண்டுகண்டு அனுபவிக்குந்தோறும், அந்த ஸ்ரீராமனுக்குக் காட்சி தோறும் ஆயிரம் ஆயிரமாகத் திருக்கண்கள் பெருகி வளரவேண்டுமென்றும் வேறு சிலர் கூறுவார்கள். அந்த ஸ்ரீராமபிரானுடைய தம்பியாமொருவன்கூட வந்திருக்கின்றான் பாருங்கள்; அவனுடைய விநயம் முதலிய உத்

தம குணங்களைக்கண்டு களியுங்கள். இத்திருக் குமாரர்களைப் பெறுதற்கு இவ்வுலகம் தவஞ் செய்திருத்தல் வேண்டும் என்பார்கள். மற்றும், இவ்வுலகுக்கேயன்றி, இந்நகருக்கு இத்திருக் குமாரர்கள் இருவரையும் அழைத்துவந்து உதவிய—முற்றத்துறந்த பெருந்தவத்தினராகிய விசுவாமித்திர மாமுனிவரை யாவரும் வணங்கிப் போற்றுங்கள் என்றுஞ் சொல்லுவார்கள்.

## சீதாபிராட்டியின் செய்தி.

இங்கே இது இப்படியிருக்க, அங்கே கன்னிமாடத்தில், தன்னை வருத்திக்கொண்டிருந்த சந்திரனும் இரவும் நீங்கிய பிறகு, உயிர்தரிக்கப்பெற்றுப் பின்னும் தன்னை மயக்கியதொரு கரிய திருமேனியை மறுபடியும் காணல் வேண்டுமென்னும் ஆசையினால் வருந்திக்கொண்டிருக்கும்—சிறிய இடையும் பெரிய தனங்களும் செவ்வரி படர்ந்த கரிய வாள்போலுங் கண்களுமுடைய சீதை யென்னும் பொன் வளையலுடைய மடந்தைக்கு உற்றதைச் சொல்லப்புகுந்தோம்.

அத்தகைய சீதை, ஊசல் (ஊஞ்சல்) போல் அப்படியுமிப்படியும் ஆடியோடிக்கொண்டிருக்கும் உயிரினுடன் தன்னையுருக்கும் மலர்ப்படுக்கையைவிட்டு நீங்கிப், பசிய ஆபரணங்கள் அணிந்துள்ள வண்ணப் பெண்கள் பலர் சூழ்ந்துவரும்படி நடந்துபோய்க் குற்றமற்றதொரு தாமரைப் பொய்கையின் கரையில் அமைக்கப்பெற்றிருக்கும் பளிங்கு மாடத்தில் சந்திரகாந்தத்தாலினப்பெற்ற சீதமான நீர் தெளித்துக்கொண்டிருக்கும் மெதுவான மலர்ப்படுக்கையைச் சிரமத்துடனே சென்று சேர்ந்தாள்.

## சீதையின் உபாலம்பனம். (வெறுப்புரைகள்.)

சீதை சொல்லுகிறாள் :—

தண்ணிய—மணம் பொருந்திய தாமரை மலர்களே! பெண்ணாகிய நான் இங்கே வந்திருக்கின்றேனென்னும் பெருமையால், நான் விரும்பிய என் காதலனது அருமையான மரகத வண்

ணத்தை யுங்கள் இலைகளாலே எனக்குக் காட்டித் திருத்தியளித்திருக்கிறீர்கள். அதனால் நான் சிறிது மயக்கந் தீர்ந்திருக்கிறேன்; ஆனால், எனது மேனியின் தளிர்போன்ற நன்னிரத்தைப்போக்கிய அக்காதலனது திருக்கண்களின் உள் நிறங்களை நீங்கள் காட்டிநின்றும், என் உயிர்போலும் அவரையேயெனக்குத் தந்தளித்தற்கு உலோபித்திருக்கின்றீர்களே! ஏன்!!"

## வேறு.

தன்னால் வெல்லப்பெற்று நாணத்தை யடைந்திருக்கும் மேருவாகிய வில்லுடன் அதிற்கட்டப்பெற்றிருக்கும் நாண் கயிற்றில் உலாவிக்கொண்டிருக்கும், தூண்போன்ற திருத்தோள்களும் நிரம்பிய அம்புகள் ஊடாடிக்கொண்டிருக்கும் அம்பறாத்தூணீரமும், ஒளி பொருந்திய சந்திரன்போலும் முப்புரிநூல் உலாவிக்கொண்டிருக்கும் மாலையைப்பெற்ற திருமார்பும் உடைய அக்காதலரை மறுபடியும் காணல்கூடுமானால் எனது ஆவியையும் காணலாகும்போலும் என்றாள்.

ஆகாயத்தைச் சேர்ந்து விளங்கிக்கொண்டிருக்கும் சந்திரனுடன், மேலேசூழ்ந்துள்ள வண்டுகள் ஒலித்துக்கொண்டிருக்கும் பசியமாலைகள் தங்கிக்கொண்டிருக்கும் கேசத்தோடும், ஒழுங்காகியதொரு வில்லைக்கொண்டதொரு மேகமானது தனது இரண்டு கண்களால் எனது ஆவியை மொண்டுகொண்டு என் நெஞ்சிலிருந்தும் உண்டதுண்டு; இது என்றுமுண்டு. "பஞ்சு நிரம்பிய பொதியில் பரவியெரியும் தீயைப்போல என் ஆவியைப் பற்றி யெரிக்கும்படியாக—நீண்ட காலமாக வெற்றியளித்துக் கொண்டிருக்கும் கரும்பு வில்லினின்றும் கொடிய மலர்க்கணைகளை யெனது நெஞ்சமாகிய பிரதேசத்தில் பரவும்படியாகக் கொடிய மன்மத வேடன் எய்துக்கொண்டிருக்கச் செய்தேயும், துன்பங் கலந்த காலத்தில் பெண்களைக் காக்க முன்வந்து, "பயப்படாதீர், பயப்படாதீர்!" என்று அபயமளித்திடாத ஆண்மையெனன் ஆண்மையாகுமோ?"

"இளைத்தலில்லாத என் கொங்கைகளே! எழுந்து விம்மி யென்ன பயனை யடைந்திருக்கிறீர்கள்! மூளைத்தலையுடைய சிறு பிறையைப்போலும் ஒளி பொருந்திய முகத்தையுடைய—எவ ராலும் வளைக்கமுடியாதிருந்த மாமேருவாகிய வில்லைக் கையி லேந்திய—அந்த என் காதலனுடைய திருமார்பின் உள்ளூறப் பொருந்தித் திளைத்து அனுபவித்தற்கு உரிய காலம் வாய்க்கு மாகில் அதற்காகவேண்டிய செம்மையான தவங்களைச் செய் திடுங்கள்".

"எனக்கு எதிரே, உருவெளியில் சந்திரன் போல் தோன் றிக்கொண்டிருக்கும் இந்த உருவானது எங்கிருந்து எழுந்து வந்ததோ! இது வந்து மன்மதன் எய்த அம்புகளாலே வெந்தி ருக்கும் சிந்தையின் நோய் பொங்கிக்கொண்டிருக்கும் எனது கொங்கைகளின்மேல் விஷத்தைப் பொழிந்து வருத்துகின்றது; இது என்து நெஞ்சில் உலாவிக்கொண்டிருக்கும் தீயல்ல; என்று லும், இருட்டில் தோன்றிய சந்திரனுமன்று; ஏனெனில், இந்த சந்திரனுக்கு உள்ளத்திற் களங்கம் காணப்படவில்லையாதலின்".

கோபித்தெழுந்து வந்து மன்மதன் மனங்கொதித்துச் சிந் திக்கொண்டிருக்கும் அம்புகளென்னும் விஷங்களாற் குடையப் பெற்றிருக்கும் எனது சரீரத்திலிருந்தும், வெந்து போகாமல் எழுந்து, கொடிய மதம் நெருங்கிய கரிய யானையைப்போன்ற எனது காதலனாகிய அக்காளையுருவனது திருப்பாதத்தை யடை ந்து அவருடன் தொடர்ந்துபோன எனது ஆவியானது, மறுபடி யும் எனது உள்ளத்திலே வந்து சேர்ந்துளதோ!.

"ஆகாயத்தில் எழுந்து விரிந்த மேகமானது, தனது மார் பில் பிரகாசித்துக் கொண்டிருக்கும் முப்புரி நூலாகிய மின்ன லொடு இம்மண்ணுலகத்தில் இறங்கியதோ வென்னும்படியாக என்னெதிரில் வந்து காட்சி தந்து மறைந்து சென்ற வீரர், உரு வெளித்தோற்றத்தினால் எந்தன் உள்ளத்திலே தங்கியிருந்த போதும், "யாவரிவர்!" என்பது தெளிந்திலேன்; மற்றும், அவர், எந்தன் இரண்டு கண்களினூடே தோன்றியிருந்த போதும், என்னால் காண முடியாதிருத்தல் ஏனோ?"

"மணி முதலிய உயர்ந்த பொருள்களைப் பொழிந்துகொண்டிருக்கும் கடலிலே தோன்றி மற்றெவ்விடத்தும் தோன்ற முடியாதிருக்கும் சாவா மருந்து என்று சொல்லப்பெறும் அமிர்தத்தைக் கைவசம் பெற்றிருந்தும் பின்னர் அவ்வமுதத்தைத் தாங்கிக்கொண்டிருந்த அழகான பொற் கலசத்துடன் கையிழக்கவிட்டுத் தவித்திருந்த ஆதுலர் போலவே, நானும் எனது எதிரில் முன்னர்த்தோன்றி விளங்கிய–பலம் பொருந்திய பெருமையாளனை எனது காதலனது திருத்தோள்களைத் தழுவி யனுபவித்திடாமல், கைகடக்க விட்டிருந்து, தற்போது அந்த நஷ்டத்தைப்பற்றிப் பேசிக்கொண்டிருத்தலில் என்ன பயனுண்டோ?"

என்று இவ்விதமாகச் சொல்லிக்கொண்டு உள்ளம் நைந்து நைந்து இரக்கங்கொண்டு விம்மி விம்மிப் பொன்னின் திணிந்த போன்ற கொங்கைகளையுடைய இளமங்கையான சீதையானவள், துன்பக்கடலில் மூழ்கி மூழ்கித் தவித்துக்கொண்டிருக்கும் போழ்தினில், அங்கே கொலு மண்டபத்தில் மலைபோன்ற சிலை (வில்) முரிந்து வீழ்ந்த கொள்கையைக்கண்டு, குளிர்ந்த மனத்துடன் மையுண்ட கண்களும் மதிபோலும் முகமுடைய நீல மாலையென்னும் தோழியொருத்தி வந்து செய்த செய்தியை எடுத்துப்பேசுவோம்.

வேறு

ஆரங்களும் காதணிகளும் இந்திரவில்லைப்போலும் பல வர்ணங்களுடன் தோன்றிக்கொண்டிருக்கும் மேகலாபரணங்களும் கூந்தலும் சோர்ந்திடவே–நீண்ட விசாலமான கண்கள் பெற்ற நீலமாலை யென்று பெயருடைய தோழியானவள்–நடுக்கமுடைய மின்னலைப்போலக்குதித்துக்கொண்டு விரைவில் வந்து சீதையினெதிரில் தோன்றினாள்.

வந்தவள், வந்து யஜமானியாகிய சீதையின் திருப்பாதங்களில் வணங்கவேண்டிய முறைப்படி வணங்கவில்லை; பொழிகின்ற சொற்கூட்டங்களையுடையவளானாள்; (அதிகமாக

வெறும் வார்த்தைகளையே வழங்கினள் என்றவாறு) அளவில்லாத களிப்புடையளாகி ஆடினள்; பாடினள். (எல்லாம் மறந்து தன்னையும் மறந்து இக்காரியங்களைச் செய்தாள் என்றபடியாம்.) "உனது சித்தத்தில் என்ன இத்துணை மகிழ்ச்சி! இம்மகிழ்ச்சி தோன்றற்கு அங்கே நிகழ்ந்த செய்கை யாது!! இவற்றையெல்லாம், ஏ! சுந்தரியே!! நீலமாலாய்!!! சொல்வாய்" என்று சீதை கேட்க, நீலமாலை சீதையைத்தொழுது சொல்லுவாளாயினள்.

யானை தேர் பரி காலாள் முதலாம் கடல்போன்ற சேனையை யுடையவன்; கல்வி நிரம்பியவன்; தயரதன் என்னும் பெயருடன் பொதுவறத் தனித்தே சென்று வெற்றி பெறக்கூடிய ஆக்கினைச் சக்கரமுடைய மன்னன்; மேகம் போலும் தாபந்தீரப் பொழியும் கொடையுடைய கைகளையுடையவன்; ஆகிய சக்கரவர்த்தியினுடைய புத்திரனாகி, மலர்க்கணை பொழிந்து மையலை விளைத்துக்கொண்டிருக்கும் மன்மதனைக் காட்டிலும் அழகில் மேம்பட்டவன் (இன்னும் அவன்)

மராமரங்கள் தாமோ இவைகள் என்று சொல்லும்படியாகிய வன்மை பொருந்திய இரண்டு தோள்களையுடையவன்; ஆதிசேஷ சயனனாகிய அந்த விஷ்ணு மூர்த்திதான் இவ்வுருவம் எடுத்து வந்தனனோ என்று சந்தேகிக்கத் தகுந்த (அழகும்) ஆற்றலுமுடையவன்; இராமன் என்பது அவன் பெயர்; இளையகோவாகிய தனது தம்பியோடும், தன்னால் வணங்கத் தகுந்த (விசுவாமித்திர) முனிவரோடும் இந்த (மிதிலை)ப்பதியினிலே வந்து சேர்ந்திருக்கிறான்.

பூண்பதற்குச் சுபாவமாகிய வலிமையுடன் தோன்றிய புனிதனாகிய பரமசிவப்பெருமான் எடுத்து எய்த வில்லைக்காணும் பொருட்டே இத்திருக்குமாரன் இங்கு வந்துளான் என்று, உனது தந்தையாகிய ஜனக மன்னனுடைய கட்டளையினால் கொலு மண்டப முற்றத்தை வந்து சேர்ந்த அந்த வில்லதனை,

அந்தப் புருஷோத்தமன் விரைவில் சுலபமாக எடுத்து நாணேற்றி விட்டனன்; அவ்வமயம் ஒடிந்துபோன அந்த வில்லினுடைய பேரொலியைக்கேட்டுச் சுவர்க்க லோகமே நடுங்கிப் போயிற்று.

அம்மகான், அந்த வில்லை ஒரு மாத்திரை நேரத்தளவில், தனது தாளில் மடுத்து, இதற்கு முன் வெகு காலம் பழகியிருந்த சூத்திரம் இதுவென்னும்படியாகத் தனது தோளில் வாங்கியிருந்தான்; அப்போது தேவர்களெல்லோரும் ஏத்திப் புகழ்ந்தார்கள்; மலர் மாரி பொழியப்பெற்றது; அந்த சமயத்தில், அந்த ராஜ ஸபை நடுங்கும்படியாக அந்த வில்லானது முறிந்து வீழ்ந்தது. (என்று இங்ஙனம் நீலமாலை கூறினாள்.)

ராஜ ரிஷியாகிய (விசுவாமித்திரரென்னும்) அருந்தவ முனிவருடன் எழுந்தருளி வந்த மேகநிறத்தவன் தான் அவன், என்று கேட்டலும், செந்தாமரைக் கண்ணினான் என்ற தன்மையினால் "ஆமாம்; அவன்தான் எனக்குக் காட்சிதந்து மறைந்து போன காதலன்" என்று சீதை தனது மனத்தெழுந்த ஐயம் நீங்கினாள்; அதனால், அழகிய மேகலாபரணத்தினுள் அல்குற் பிரதேசம் வளர்ந்தது.

"இடையே இல்லையே என்பார்கள்; ஆனால், "உண்டு உண்டு" என்னும்படியாக மெல்லிய சுபாவத்தையுடைய தனங்களும் விம்மியெழும்படித் தானும் விம்முதல் கொண்ட சீதையானவள், நான் சொல்லியபடியே எனக்கு முன்வந்து அந்த நீலமாலை சொல்லி யுறிவுறுத்திய அடையாளங்களை யுடைய அந்தத் தோன்றலே அந்த வில்முறித்தவனாதல்வேண்டும்; அங்ஙனம் அவன் அல்லாமற்போனால் நான் இறந்துபட்டொழிவேன்; இது திண்ணம்" என்று அகத்துள் எண்ணினாள்.

அந்தக் காதலன்மேல் ஆசைகொண்டு வருந்துபவளாகிய சீதை அத்தன்மையாயினாள்; பசிய தழைகளடைந்த தாமரைப் பூவில் வீற்றிருக்கும் நான்முகன் படைத்துளவில் இற்றுப் போன ஓசையைக் காட்டிலும் பெரியதொரு களிப்பையடைந்துள-கௌசிக முனிவரர்க்கு ஒரு அரிய வார்த்தை ஜனக மன்னன் கூறலாயினன்.

"எமது ஆசிரியரே! பெருந்தவத்தினரே!! விசுவாமித்திரரே!!! உமது அபிப்பிராயத்தை உரைசெய்ய வேண்டுகிறேன்; உமது புதல்வனாகிய ஸ்ரீராமபிரானுடைய திருக்கலியாணந்தான், விரைவிலே இன்று ஒரு பகலிலேயே நிறைவேற்றியிடுதலில் உங்கட்கு அபிப்பிராயமா? அல்லது, முரஜ வாத்தியங்கள் அடிக்கப்பெற்று அதிர்கின்ற வீரக்கழல் பொருந்திய தசரத சக்கரவர்த்தியாகிய அந்தத் தந்தையையும் இந்நகர்க்கு அழைத்து வருதலில் விருப்பமா? சொல்லுங்கள்" என்றான்.

மல்ப்போரிற் சிறந்த ஜனகமன்னன் அந்த வார்த்தையைச் சொல்லிட மாதவத்தனாகிய விசுவாமித்திர முனிவன், "விரைவில் தசரதசக்கரவர்த்தியும் வந்து சேர்ந்திடுதலே நலமாகும்" என்று சொல்லலுமே, அளவுகடந்த களிப்பைக் கொண்ட ஜனகன், "இங்கு நிகழ்ந்த செய்தியை யெல்லாம் அங்குச் சொல்லுங்கள்" என்று ஓலையும் எழுதித் தூதுவரை யயோத்தி நகருக்குப் போக்கினான்.

கார்முகப் படலம் முற்றுப்பெற்றது.

---

## எழுச்சிப் படலம்.

மிதிலாநகரத்தில் நடந்தேறவேண்டிய ஸ்ரீராமபிரானது திருக்கலியாணத்தைப்பற்றிச் சேனைக்கடலுடன் தசரத சக்கரவர்த்தி புறப்படும் பிரிவு.

---

ஜனக மன்னனது உத்தரவு கொண்டு விரைந்து புறப்பட்ட தூதுவரும் கால்களினால் காற்றுப்போல் சென்று, இடிபோலும் குரலுடன் முரஜம் அதிர்கின்ற அயோத்திநகரைச் சேர்ந்தார்கள்; அங்கு, சக்கரவர்த்தியினுடைய அடியிணைகளைத் தொழுவதற்கு இடமில்லாமலே, ஏனைய மன்னவர்களுடைய கிரீடங்களுடன் கிரீடங்கள் பொரக்கூடிய அரண்மனை வாயிலைப் போய்க் கூடினார்கள்.

அங்குச் சென்று, மன்னவனது திருவருளின் ஆணைபெற்று முறையினால் சமீபம் சேர்ந்தார்கள். விளங்கிப் பிரகாசிக்கின்ற அரசனது வீரக்கழல்களைத் தொழுது செல்வனாகிய தசரத சக்ரவர்த்தியைப் புகழ்ந்து பேசினார்கள். பிறகு, மன்னனைப் பார்த்து, "அரச! உன்னுடைய புதல்வர்களாகிய ஸ்ரீராம லக்ஷ்மணர்கள், இவ்விடம்விட்டு விசுவாமித்திர முனிவருடன் புறப்பட்டுப்போன பிறகு இதுவரையில் நடந்த செய்திகள் இவைகளாகுமென்று விவரமாக யாவற்றையும் கூறினார்கள்.

அங்ஙனங்கூறிய தூதர்களும், பிறகு தாம் ஜனக மன்னனிடமிருந்து கொணர்ந்த வோலையை யெடுத்துக்காட்டி, "முடிவில்லாத வளர்புகழுடைய தசரத சக்கரவர்த்தியே! இதுதான், அப் பெருமானது புகழ்ச் செயல்களைக் குறித்திருக்கும் முடங்கலாகும் அது" என்று நீட்டினார்கள். வேறொரு அறிஞன், மன்னனது ஆணையினால் அவ் வோலையை விரும்பி வாங்கினான்; அதிர்கிற வீரக்கழல்களையுடைய தசரதன், அப் புலமகனைப் பார்த்து, "அவ்வோலையை வாசி" என்று கட்டளையிட்டனன்.

இலை முகமாகிய முடங்கலிலே ஜனக மன்னன் முதலியோர் எழுதிக்காட்டிய "தனது தலைமகனாகிய ஸ்ரீராமபிரானது வில் தொழிற் சிறப்புகள்" தன் செவியிற் சார்ந்தபோது, நிலைத்த தன்மையையுடைய வலயங்கள் நிமிர்ந்து நீங்கிடும்படியாக, மன்னனது வயிரங்கள் இழைக்கப்பெற்ற அணிகளுடைய தோள்கள் மலைபோலும் வளர்ந்தன.

அங்ஙனம் களிப்பின் மிகுந்த வெற்றியுடைய வேலாயுதத்துடன் வளர்ந்த தசரத சக்கரவர்த்தியானவர், அச் சபையில் விஜயம் செய்து வீற்றிருந்த வசிஷ்டர் முதலிய சபையோர்களைப் பார்த்து, "தக்ஷ யாகத்தில் சடைக்கற்றையையுடைய மழுவாயுதத்தைப் பெற்ற சிவபெருமான், ஏழுலகையும் முற்றும்படியாக வென்ற மகாமேருவாகிய வன்மைகொண்ட வில், அன்று ஜனக சபையில் எனது திருக்குமாரன் ஸ்ரீராமபிரானது தோளாற்ற

லுக்கு ஆற்றமாட்டாமல் ஒடிந்து வீழ்ந்த பேரொலியல்லவா அன்று, இங்கு நம் காதுகள் செவிடுபடும்படியாக இடித்திருக்க வேண்டும்'' என்று சொன்னான்.

என்று சொல்லி, மலைபோலும் உயர்ந்துள தோள்களைப் பெற்ற தசரத சக்கரவர்த்தியானவர், தனது எதிரில் நின்றிருக்கும், மிதிலைத் தூதர்கட்கு, ''நெருங்கிய வீரக்கழல் பொருந்திய மிதிலைத் தூதர்கள் இவற்றைப் பரிசாகப் பெற்றுக்கொள்ளப் பெறுவர் என்று பொன் திணிந்த ஆபரணங்களும் ஆடைகளும் வழங்கினான்.

மற்றும் கூறுவான்:— ''சூரியதேவன் குலத்துட்டோன்றிய பாக்கியம் பெற்ற எங்களுடைய வரங்களால் வந்தவதரித்த எமது திருக்குமாரனாகிய ஸ்ரீராமபிரான் சென்று தங்கியிருக்கும், அந்த மிதிலா நகரத்தை நோக்கி நமது சேனைகளும் காவலரும் புறப்பட்டுச் செல்லக்கடவர் முற்கூட்டாக'' என்று ஆனைமேல் முரஜம் அறைந்திடுங்கள் என்று தூதுவர்களை ஏவினான்.

அந்த உத்திரவைத் தலைப்பணியாகக் கொண்டதொரு வள்ளுவன், ஆனைமேலேறிக்கொண்டு, தேன் பொழியும் துழாய் மாலையையுடையவன் செங்கண்மால், திருவிக்கிரமாவதாரத்தில் உலக நன்மையின்பொருட்டு மாவலி மன்னனிடம் பரிசாப் பெற்று, விண்ணும் மண்ணும் அளந்து அவரவர் அரசை யவரவர் பெறும்படியாக அளித்த நாளில், அச் செய்தியை தேவர் மூவர் முதலிய ஏவரும் அறியும்படியாக ஜாம்பவான் திரிந்து பறையறைவித்தது போலவே'' திரிந்து பறை சாற்றுவித்தான்.

அங்ஙனம் சாற்றுவிக்கப் பெற்ற முரஜ வாத்தியத்தின் ஒலியானது தங்கள் தங்கள் செவியிற் சார்ந்திடு முன்னர், அந்த அயோத்தி நகரில் உள்ள கோல்போலும் ஒசிந்த இயற்கையையுடைய—வளையற்கையையுடைய பெண்களும் பல்வகை யழகும் அலங்காரமும் பொருந்திய ஆண்களும் வேலாயுதம் பெற்ற வீரர்களும் வெற்றிபொருந்திய மன்னவர்களும் பெருங் காற்றினால் வீசப்பெற்ற கடல்போலக் களிப்பினால் ஓங்கினார்கள்.

## மிதிலை நோக்கிப் புறப்படல்.

விருஷபம்போலும் நடையினையுடைய தசரத சக்கரவர்த்தியினுடைய சேனை வெள்ளமானது, இந்த உலகினில் இனிமேல் இடமில்லையென்னும்படி மிகவும் கூட்டமாகப் பெருகி வளர்ந்து, "அந்த யுக முடிவில் எல்லாப் பொருள்களும் புடைப் பெயர்ச்சியடையும்படியாகக் காற்றினால் மோதப்பெற்ற கடலைப்போல்" பொங்கியெழுந்து புறப்பட்டுப்போயது.

இந்த உலகம் சிறியதுதான் என்று சொல்லும்படியாகச் செறிந்து திரண்ட தேர்க் கூட்டங்கள் மிக நெருங்கி வளர்ந்து போயின; யானைப் படைகளோவென்றால், தம்மைச் சேர்ந்துள சுடர்போலும் பிரகாசிக்கும் வேந்தர்களினாலும், தமது (யானைகளினது) நெற்றியில் ஒளிவிடும் மணிகளினால் விளங்கும் நெற்றிப் பட்டங்களினாலும், வில்லொடு பொருந்திய மேகங்கள் போல் விளங்கித் தோன்றின.

காம்பொடு விரிந்து எழுந்துநின்ற குடை வரிசைகளோவென்றால், கணக்கில்லாத அன்னப்பறவைகள் பால் விரிந்தது போலப் பறந்து சென்றதைப் போன்றிருந்தன. மற்றும், மேலே விரிந்து எழக்கூடிய கொடிக்கூட்டங்களோவெனில், ஆகாயமெல்லாம் தோலுரிந்து சிதறுவன போலும் தோன்றிக்கொண்டிருந்தன.

ஆகாயத்தில் விரிந்து தோன்றி ஆடிக்கொண்டிருக்கும் துகிற்கொடிகள் (துணியால் விரிந்த கொடிகள்) ஆடிக்கொண்டிருக்கும் தன்மையெப்படி யிருந்ததென்னில், தொளையுடைய கையைப் பெற்ற மலைபோலும் யானைகள் கூடிய மதம் பொருந்திய யானைப்படைகளைக் கண்டு, இது கடலோவென்று மயங்கி ஆகாயம் நெருங்கும்படியாக எங்கும் எழுந்து விரிந்த வெள்ளிய மேகக்கூட்டங்கள்-விசாலம் பொருந்திய நீரைப் பருகிடத் தாழ்ந்தனபோலும் தோன்றின.

## ஜனமிகுதியில் தோற்றம்.

அந்தப் பெருங்கூட்டத்தில், ஆபரணங்கள் இடையிலே இளவெயில் வீசிக்கொண்டிருக்கும்; அந்த வெயில், தழைகளினால் இடப்பெற்ற நிழல்கள் கெடும்படியாகத் தவழ்ந்துகொண்டிருக்கும்; அந்தத் தழைகள் மழையின் அழகு கெடும்படியாகப் பெருகி நிற்கும்; அந்த மழைமேகங்களும் குழைந்துபோம்படியாகக் கூட்டமாகப் பேரிவாத்தியங்கள் பேரொலி செய்யும்.

வீரப்பெண்கள் ஏறிச்செலுத்தும் பெருமை பொருந்திய அணிகள் பொருந்தியுள்ள குதிரைகள், அன்னப்பறவைகளால் உந்திச் செலுத்தப்பெறும் அலைகளையுடை ஆறுகள்போல் தோன்றி விளங்கின; பொன்னாபரணம் பூண்ட இளைத்தனங்களால் விளங்கியிருக்கும் மேன்மையுடைய கூந்தல் பெற்ற பெண்கள் ஏறிச்செல்லும் மின்னல்போற் பிரகாசித்துக்கொண்டிருக்கும் இளமைபெற்ற பெண்யானைகள் மின்னலுடன் கூடிய மேகக் கூட்டம்போலிருந்தன.

கடல்போற் சென்றுகொண்டிருக்கும் அச்சேனையில் விரிந்த யானைக்கூட்டங்களின் மதப்பெருக்கினாலும் குதிரைக்கூட்டங்களின் நுரைப்பெருக்கினாலும் பெருகிய ஆறானது, இணையிணையாக எடுத்துச்செல்லும் பெண்கள் இடையிடையே நெருங்குதலால், அவர்களினுடைய துணையான தனங்களிலிருந்து வழியும் குங்குமச் சேற்றினாலும் ஆடவர்களது மணிபொருந்திய புஜங்களிலிருந்து பெருகும் சந்தனச் சேற்றினாலும் மயங்கி மேன்மையாகிய அணை (படுக்கை) போலும் தோன்றிக்கொண்டிருக்கும்.

தேன்பாகைக் காட்டிலுந் தித்திக்கும் சொற்களையுடைய சிவந்த அதரமுடைய பெண்களுருவில் மேற்போர்வை தரித்துக்கொண்டு விளங்குறும் எமனுருவமானது, தான் அணிந்த முத்துமணிகளால் எங்கும் முழுத்த நிலாவை விரித்துக்கொண்டிருப்பதன்றியில், நெருங்கிய மணிவரிசைகளால் இளமையான வெயிலையும் பரப்பிக்கொண்டிருக்கும்.

வில்லைப்பெற்றவராகியும் வாளைக்கொண்டவராகியும் மணம் பொருந்திய கேசத்தை யுடையவராகியும் மலையையும் பழித்து உயர்ந்து கனம் பொருந்திய பொன்மயமான தோள்களையுடைய வராகியும் கொடிகள் போன்ற தத்தமது மனைவிகளின் மருங்கே சென்றுகொண்டிருக்கும் ஆடவர்கள் அருகில் அழகிய பெண் யானைகளுடன்சென்றுகொண்டிருக்கும் களிறு (ஆண்யானை)கள் போல் போனார்கள்.

மணம் பொருந்திய அழகிய புதுமலர்கள் மேகத்தாற் சூழப் பட்டிருத்தல்போல், நெருங்கிய கூந்தலாற் சூழப்பெற்ற பெண் களின் முகத்தோற்றங்கள் விளங்கிக்கொண்டிருத்தலால், அவர் கள் ஏறிச்செல்லும் விமானங்கள், பொருந்திய முழு சந்திரன் ஊர்ந்து செல்லும் விமானத்தைப்போற் சென்றுகொண் டிருந்தன.

அலைகள் நிரம்பிய கடலைப்போலும் முழங்கிக்கொண்டிருக் கும் நெற்றிப்பட்டம் பொருந்திய யானைகள், தொளையுடைய துதிக்கைகளினால் திசைகளில் நிலைத்திருக்கும் யானையை பாய்ந்து செல்லும் தன்மையுடையனவாயினும், அவைகள் செல் லும் மார்க்கங்களில், தங்கள் மதத்தினால் வழிந்துகொண்டிருக் கும் மதப்பெருக்கு நீங்காதபடியினாலுண்டாகிக்கொண்டிருக்கும் சேற்றைக் கடந்துபோக முடியாதிருந்தன.

குதிரைப்பந்திகள், தோய்ந்தும் தோயாமலுமிருக்கும் கச்சு களால் அணியப்பெற்ற தனங்களையுடைய வாராங்கனைகளின் சித்தத்தைப்போல், அங்குமிங்கும் மாலையோடும் தாளத்தோடும் தாவிச்செல்லுமாயினும், கிராம தேவதையான காளியினுடைய நிலையைப்போல எங்கும் நிலைக்காதபடியினால் பாரிடை மிதிக் காதபடியே சென்றன. (மிதித்தும் மிதிக்காமற் சென்றன என்பது கருத்து).

## காமுகர் காமினிகள்.

தத்தம் ஆடவருடன் ஊடல் செய்த மனத்தினையுடைய சில பெண்மக்கள், பொருந்தாத நோக்குடையவர்களாகியும் பெரு

மூச்சுடையவர்களாகியும் செறித்த நெற்றியையுடையவர்களாகியும் இதழ்விரிந்த மாலையையுந் துறந்த கூந்தலையுடையவர்களாகியும், ஆனால், அவ்வாடவர்களினுடைய உயிர் போன்றவர்களாகியும் அவரருகேபோய்க்கொண்டிருந்தார்கள்.

## யானைகள்.

அருவிபோல் மதம் பெருகிக்கொண்டிருக்கும் கன்னப் பிரதேசங்களையுடைய—தனது பாகன் தன்மேற் குத்துதற்கு எடுத்தான். தாறு என்று தெரிந்தவுடனே கோபாக்கினியைக் கக்கிக்கொண்டு அஞ்சாத் தன்மையுடன் செல்லும் யானையானது, வழியிற் செல்லும்போது இடைப்படும் மலைகளைப் பகைவரைப் போல மதித்துப் போர்செய்துகொண்டும், பெரிய மரங்களை ஊறுபட்டு இடையிடை ஒடிந்துபோகும்படியாக உராய்ந்து சாய்த்துக்கொண்டும், ஒரு ஆற்று வெள்ளம்போல ஓடியது.

அங்ஙனம் செல்லும் அக் கூட்டங்கட்கு இடையில் ஓர் உழுந்துகூட இடுவதற்கு இடமில்லையென்னும்படியாகச் சென்றுகொண்டிருந்தார்கள்; ஆனால், அழுந்திய அன்புடைய உயிர்கட்கெல்லாம் அருள்கொம்புபோன்றவனாகிய தசரத மன்னன் இன்னும் எழுந்து புறப்படவே இல்லை; ஆனால், அதற்கு முன்னரே இடைப்படர்ந்து செல்லும் அந்த சேனையின் நுனிக்கொழுந்தானது சென்று கொடியைப் பெற்ற மதிலுறுப்புகளையுடைய மிதிலை வரையிலும் எட்டிவிட்டது.

## பண்டிகள்.

பற்பல வண்டிகளில் தனித்தனியே செல்வார்களாயினும், பரஸ்பரம் கண்டுகொண்டவர்கள் காதல் மிகுதியினால் தங்கள் தங்கள் மனங்கள் பரஸ்பரம் கலந்துகொள்ளும் இயல்புடைய—வண்டுகள் மொய்த்துக்கொண்டிருக்கும் கூந்தலைப்பெற்ற பெண்களினுடைய வதனக்கூட்டங்களினால், அவர்களை யேற்றிச் செல்லும் வண்டிகள், இசைபொருந்திய பெருமையுடையுடன் சென்றுகொண்டிருப்பவை தாமரைத் தடாகங்கள் போவதன் தோற்றத்தை யொத்து விளங்கின.

அக்கூட்டத்தில் ஒரு வண்டியில் ஏறிச்சென்றுகொண்டிருக்கும் ஒருபெண், இடையில் சென்றுகொண்டிருக்கும்-தனது மிக்க அன்பினனான ஒருவனைக் காண்டலும், அவனைத் தனது கடைக்கண்ணால் நோக்கினாள். அஞ்சனமூட்டிய அக்கண்ணின் சிறு நோக்கமானது அந்த ஆண் மகனுக்கு அமுதமூட்டியது போலாயிற்று.

மான் கன்று போலும் நோக்கத்தையுடைய தனது அன்புக்குரியவளைப் பிரிந்து செல்லும் ஒரு ஆண் மகன், தான் செல்லும் மார்க்கத்தில் காணப்பெறும், சேறுடை மருத நிலத்தில் சேர்ந்திருக்கும் அன்னப்பறவையையும் தாமரைப் பூவையும் கண்டான். அதனால் தானும் தன் உள்ளமும் ஊசலாடுவதுபோல் வருந்தினான்.

## வேறு.

அங்கு நெருங்கிச்செல்லும் உலகத்தரசர்களினுடைய பொங்கும் வெண் கொற்றக்குடைகள் போர்த்ததுபோற் போய்க்கொண்டிருத்தலானது, கங்கையாறு போய்க்கொண்டிருத்தலை யொத்திருந்தது. அந்தச் சேனையில் முழங்கும் சங்கமும் பேரியும் மேக கர்ச்சனையை ஒத்திருந்தது.

அழகிய சொற்களையுடைய தேவ மாதர்களைப்போன்ற பெண்களினுடைய, உயிர் கவரும் கூரிய நுனியையுடைய கண்ணென்று சொல்லப்பெறும் காலவேல்கள், இளங்குமரர்களினுடைய நெஞ்சு நடுங்கும்படியான பார்வையை வழங்கிக்கொண்டிருந்தபடியால், அச்சேனை வெள்ளம் போர்க்களத்தையும் ஒத்திருந்தது.

தூண்கள் செறிந்து செல்வதுபோல் வீரர்களினுடைய தோள்கள் செறிந்து சென்றன. ஆகாயத்தில் மின்னல்கள் மிடைந்து விளங்கின போல வாளாயுதங்கள் மிடைந்து சென்றன. தாமரைகள் நெருங்கிச் செல்லுதலைப்போலத் தாமரைப் பாதங்கள் நெருங்கிச்சென்றன; சிங்கங்கள் கூட்டமாகப்போதலைப்போல் காலாட் படைகள் கூடிப்போயின.

அக்கூட்டத்தில் செல்லும் கச்சணிந்த தனங்களின்மேல் வீழ்ந்த பார்வையை வாங்கிக்கொள்ள முடியாது அப்பார்வை யினால் விளங்கிய முகத்தையுடைய ஒரு ஆண் மகன், தான் ஏகும் நெறிதெளியாதவனாகிக் குருடன்போற் சென்று, எதிரே பலமுள்ளதொரு பெரிய—மதயானையில் முட்டிக்கொண்டான்.

நல்ல சுழியையுடையதாகித் தாவிச் செல்லும் ஒரு குதிரை யின் மேலேறிச் செலுத்தும் ஒரு பெண்மணியானவள், அந் தக் குதிரை துள்ளிக் குதிக்கும்போது, அதினின்றும் வழுவிக் கீழே வீழலுற்றாள்; அவளை யொருவள்ளல் தூண்போன்ற தனது புஜத்தினால் தாங்கியேந்தினான்; ஆயினும் தழுவிக் கொண்டிருத்தலை யொழியவுமில்லை; அப்பெண்ணைத் தரையில் வைத்திடவுமில்லை.

இரண்டு பாதங்களும் நோவும்படியாகத் தொடர்ந்து நெருங்கிவரும் போரிற்சிறந்த பாணம்போன்ற கருங்கண்ணை யுடையவொரு பெண்ணை நோக்கிய ஒரு காளையானவன், பருத்த வெவ்விய தனங்களாகிய பாய்ந்து செல்லும் மத யானையை யணைத்தற்கு அந்த நங்கைக்கு மார்பிடம் பெறாது போலுமென்று சொன்னான்.

பொழிந்துகொண்டிருக்கும் மூன்று மதங்களையுமுடைய யானைமேலேறிச் செல்லும் ஒரு வீரன், தனது சுழித்த கேசத் தில் வண்டுகள் ஒலிக்கும்படியாக மலர்களையணிந்து போய்க் கொண்டிருக்கின்றான். அவன், ஒரு பெண்ணின் விழியை நோக்கி, அது மிகவும் கூர்மையுடையதுபோலுமென்று தனது வேலையும் பார்த்தான்.

தரங்கம்போலும் நெறிந்து ஒழுங்கான கூந்தலும் தாமரை போன்ற சிறிய பாதங்களையும் வாள்போலும் கரிய கண்களையும் உடைய ஒரு பெண்ணணங்கினைப் பார்த்து, ஒரு காளை வீரன், நெருங்கிய கச்சுடைய தனங்களையும் நீண்டவளைகளைப்பெற்ற தோள்களையுமுடைய பெண்ணரசியே! "நீர் உமது இடையை மாத்திரம் எங்கே மறந்து வைத்துவந்துளீர்" என்று கேட் டான்.

எமனைப்போலும் கொலைத் தொழிலையுடைய கண்களினு ல்லாமல் வாக்கினால் மறுவார்த்தை சொல்லாமற் சென்று கொண்டிருக்கும் ஒரு பெண்ணைப் பார்த்த ஒரு வள்ளல், "ஆமாம்! ஆற்று நீரிலே உன்னை அங்கையாலெடுத்து ஆர் கரையேற்றுவார்களோ!!" என்று கேட்டான்.

அந்தச் சேனை வெள்ளத்தின் நடுவில் போய்க்கொண்டி ருக்கும் தள்ளமுடியாத பாரமேற்றிக்கொண்ட ஒட்டகம் தெளிந்த தேன்போன்ற இலை முதலிய யாவையும் தின்னவில்லை, அவைகள் தங்கள் உள்ளம்போலவாயும் உலர்ந்தனவாகிக் கள் குடியரைப்போலக் கைக்கும் பொருள்களையே தேடிச்சென்றன.

சிவந்த கண்களும் இருளின் திறள்போலும் மேனியும் தோள்களில் தாங்கிய காவடிச் சுமைகளையும் உடைய பப்பர தேசத்து வீரர்கள் திருத்தும் சம்மட்டிகளையும் அடை மரங் களையும் கழுத்திலேந்திச் செல்லும் மத யானைகளைப்போற் சென்றுகொண்டிருந்தார்கள்.

மதயானைகள் வெறியினால் அருகிற் செல்லும் பிடியானை களோடு பிணங்கி முதுகின்மேல் துதிக்கைகளை நீட்டின; அத னைக்கண்டு அந்தப் பெண்யானை மேலேறிச் செல்லும் அச்ச முடைய பெண்கள்; தளர்ந்து வருந்திப் பயத்தால் தங்களிரண்டு கண்களையும் கைகொண்டு பொத்திக்கொண்டார்கள்; ஆனால், அக்கண் அக்கைக்கு அடங்காது வெளிப்பட்டபடியால் அச்ச மொழியாதிருந்தனர்.

அழகிய மேகலாபரணத்தையுடைய ராஜ கன்னியர்க் கிடையே அவர்க்குக் காவலாக, வால் பூமியில் இடிக்கும்படி யான குள்ளமான பெண் யானைகளின்பேரில் குள்ளமான பெண் களும் ஏறிச்சென்றுகொண்டிருந்தார்கள்; அந்தக் காட்சி யானது, அழகிய தாமரை நாள் மலர்க்கானகத்துள், ஆமைமேல் ஏறிச்செல்லும் தேரைகளின் காட்சியை யொத்திருந்தது.

எதிரே ஒரு மதயானை வந்துகொண்டிருத்தலைக் கண்டவுடன் தனது கால்களை வளைத்துப் பாய்ந்து தன் மேலிருக்கும் ஒரு பெண் மகளைக்கொண்டோடும் குதிரையானது, "இந்தப் பெண்ணழகி இம்பர் நாட்டினர்க்கு (இவ்வுலகத்தினர்க்கு) ப் பொருந்தினவள் அல்லள்; இவள், உம்பர் (அவ்வுலகத்து) அரச குமாரனுக்குப் பொருந்தினவள் ஆவாள்" என்று எடுத்துச் செல்வது போலிருந்தது.

"எந்தை ஸ்ரீராமன், மிதிலையில் வெகுநாளாகவளைத் தேற்றுவார் இல்லாமல் சேமித்து வைக்கப்பெற்றதொரு மலைபோலும் சிலையை இறுத்தனன்" என்றும் ஜனங்களினுடைய களிப்பாகிய சொல்லைக் கேட்டலும், ஸாமானியர்களும் தங்கள் அழகான கூந்தல் சோர்ந்து வீழலைத் தாங்கிக்கொள்ளமாட்டாதவராகியும், சிந்துகின்ற மேகலாபரணத்தையும் சிந்தை செய்யாதவர்களாகியும் மனத்துக் களிகொண்டவர்களாகப் போகின்றார்கள்.

குடையை ஒரு கையிலும் குண்டிகையையொரு கையிலும் தூக்கிக்கொண்டவர்களாகியும் குந்திக்குந்தி நடக்கும் நடையையுடையவர்களாகியும் மூக்கைப் பிடித்த கையைத் தொங்கவிடாதவர்களாகியும் செல்லும் சில அந்தணர்கள், மதவெறிகொண்ட யானையையும் காமமளிக்கும் காரிகை யாரையும் நெருங்கிச் செல்வதற்குப் பயந்து விரைந்து விரைந்து முந்திப்போகிறார்கள்.

தந்தம் நாயகிகளைப்பிரிந்து செல்ல மனமில்லாமல் நிர்ப்பந்தத்தினாற் செல்லும் வீரர்கள், அப்பிரிவின் துயரினால் நீர் ஊறிக்கொண்டிருக்கும் தம் கண்கட்கு நேரே, நாறு பூங்குழலையுடைய தமது நாயகிகளின் உருவெளித் தோற்றம் தோன்றக் கண்டு மயங்கி உண்மையாக நம்பி, "மாறுகொண்டு பிடிவாதத்துடன் தொடர்ந்து வருகின்றாய்! ஆனால் வா!! ஏறு தேர்!!! என்று சொல்லிக் கைகளை நீட்டுவார்கள்.

அக்கூட்டத்தில், ஒலித்துச் செல்லும் தேரும் யானையும் குதிரையும் இடித்துச் செல்லும் வாருடைய முரசம் நிமிர்ந்து

செறிந்து எங்கும் ஓரே ஒலிமயமாக இருந்தபடியால், வீரரும் மாதரும் பரஸ்பரம் உரைத்ததை யுணர்ந்துகொள்ளமுடியாமல் அதனாற் பேச்சொழிந்து ஊமர்களைப்போலவே போனார்கள்.

நுண்ணிய சிலம்பிப் பூச்சிகள் பின்னிய பின்னலைப்போன்று தோன்றும் நுண்ணிய வஸ்திரங்களையும் வண்டுகள் ஒலித்துக் கொண்டிருக்கும் கருங்குழலையுமுடைய மங்கைகள், தத்தம் காற்சிலம்புகள் சிலம்பும்படி ஒதுங்கி நடத்தலால், அந்தக் கூட்டம், பறவைகள் ஒலித்துக்கொண்டிருக்கும் பொய்கை போலவும் எண்ணத்தகும்படியிருந்தது.

தெள்ளிய திரைகளையுடைய கடலில் தோன்றிய இலக்குமி போன்ற பெண்கள், நுண்ணிய திரைகளின் துவாரங்கள்வழியே நோக்கியபோது, அக் கண்களைக்கண்ட ஆண் மக்களின் கண்கள் இரைத்தன; அது யானை மதங்களில் வண்டுகள் இரைத்தலையொத்திருந்தது.

தங்கள் உயிர்த்துணையான நாயகர்களின் உயிரின் அளவும் செருக்கிய மான்கள் பார்ப்பதுபோல் நுழைந்து பார்க்கும் கரிய கண்களையுடைய பெண்மணிகளின் பாதசாலகங்களாகிய ஆபரணங்கள் ஒலித்தன; இனிய வாத்தியங்களென்று எழுந்த மேகங்கள் ஒலித்தன; குதிரைகளும் ஒலித்தன.

பூமிகளிப்படையும் படியாக நடந்து செல்லும் சில பெண்களினுடைய ஒளி பொருந்திய முகங்களாகிய ஒள்ளிய தாமரைகளின் உள்ளே உறைகின்ற கண்களைக் களிக்கும் சிறு வண்டுகள் என்றெண்ணிச் சில ஆடவர்களித்துப் பார்த்தார்கள்; அப்போது மன்மதனும் களித்தான்.

செந்நிறமூட்டிய பவளம்போன்ற அதரத்தையுடைய இளம் பெண்களினது இறுக்கிக் கட்டிய கச்சுகளால் மூடப்பெற்று ஒளிர்கின்ற செவ்விளநீர்போன்ற கொங்கைகளிலிருந்து இழிந்த பரிமளப் பொடிகளும் அச்சேனையின் தூசியும் ஒன்றற்கொன்று விம்மிக்கலந்தன; அந்த இடத்தைக் காணுதற்கேயன்றி நினைத்தற்கும் கூடாமையிருந்தது.

சித்திரம் போன்ற அழகான தேர்களில் ஏறிச்செல்லும் மைந்தர்களும் மங்கையர்களும் உய்த்துச் சொல்லவும் அல்லது நினைக்கவும் அளவற்றவர்களாகிச் சென்றார்கள்; இத்திறத்தவ ராகவே எத்தனையோ பலர் நெருங்கி நெருங்கி ஒலித்து வழிக் கொண்டுபோனார்கள்.

## வேறு.

கடிவாளம் பொருந்திய குதிரைச் சேனையும் தேர்த்தானை யும் காலாட்படையும் கூட்டமாகக்கூடி யெல்லாப் பக்கங்களி லும் வேகத்துடன் செல்லுதலாலுண்டான—பொங்கிப் பருத்த துகட்கூட்டம் நிறைந்தபடியினால், வானத்தில் மேகமானது, பசுந் துளியின் பெருக்கைத்தரும் மழைத்துளையடைக்கப்பட்டுப் போயது; திக்குகளெல்லாம் காவல்செய்து நின்ற திக்கஜங்களி னுடைய மதத்துளைகளும் அடைக்கப்பட்டுப்போயின.

## வீரர்கள் வீர மாதர்களை யுபசரிக்கும் முறை.

தம் தம் மனைகளிலிருந்து நடந்து வந்து வாஹனமேறும் வீரர்கள் தம்மொடு வரும் தமது வீர பத்தினிகளை வாஹனங் களில் ஏற்றுதற்கு நடைபாதையில் அழைத்துச்செல்லும்போது, கேடகம் பிடித்த (கேடகமாவது:— எதிரியின் வாள் வீச்சைத் தடுக்கும் பொருட்டு வீரர்கள் இடக்கையில் ஏந்தும் பரிசை யென்னும் ஆயுதம்; இதனைப் பரிசமென்றும் கூறுவர்; Shield) தமது இடக்கையினாலேயே தமது வலக்கையிற் பிடிக்கப்பெற் றிருந்த-கிளர்ந்த ஒளிகளையுடைய வாள்களையும் பற்றிக்கொண்டு, வளையல்கள் அணியப்பெற்ற தங்களது வீர பத்தினிகளின் தளிர்போன்ற கைகளைத் தமது-ஒளி பொருந்திய மணிகளணிந்த வலக்கைகளினாற் பற்றிக்கொண்டு, பொன்மயமான நெற்றிப் பட்டமணிந்த மதயானைகளினுடைய பெருகிய மதத்தினாலாகிய வழுக்குடைய மார்க்கங்களில், பாத சதங்கைகள் அணிந்த தமது மனைவிமார்களை மெல்ல மெல்ல நடத்திக்கொண்டு போனார்கள்.

பொருள் :—" இத்தகைய நீதிநூல் வாக்கியங்களையெல்லாம் தன் எண்ணம் முடிவுபெறும்படியாக எடுத்துச்சொல்லி யாசிக்க வந்திருப்பவன் கபடமுடைக்கொடியோன்" என்று, தனது மந்திரி, சொல்ல வேண்டிய முறையில் விரித்துச் சொன்ன வார்த்தைகளில் ஒன்றும் ஏற்றுக்கொள்ளாதவனாகி, மாவலியானவன், வாமனனைப்பார்த்து, 'என்னை நீர் கேட்ட மூன்றடியளவுள்ள பூமியை உமது காலடியால் இப்போதே அளந்துகொள்ளக்கடவீர்' என்று சொல்லவும், அவ்வாமனனாகிய நெடியமால், தமது இவ்வவதாரத்திற்கேற்ற குறுங்கைகளை, அம்மன்னன் வார்த்துக்கொடுக்கும் தானநீரின்கீழ் நீட்டினான்."

அடுத்த செய்யுள், வாமன உருவில் (குறளுருவத்தில்) வந்துற்ற திருமாலுருவம், உடனே, தன் இயற்கை நெடுமாலுருவ (திருவிக்கிரம உருவ) மாகி நின்று வளர்ந்து உயர்ந்தமையைக் குறித்து நிற்கின்றது.

" கயந்தரு நறும்புனல் கையில் தீண்டலும்
பயந்தவர் களுமிகழ் குறளன் பார்த்தெதிர்
வியந்தவர் வெருக்கொள விசும்பின் ஓங்கினன்
உயர்ந்தவர்க் குதவிய உதவி ஒப்பவே."

பொருள் :—"குளத்தின் வந்து குளிர்ந்து மணமுற்ற அந்தத் தானநீர் தமது குறுங்கைகளிற் பட்டவுடனே, தமது இவ்வுருவுடைய வாமன ரூபத்தைப், பெற்ற பெரியோர்களும் பார்த்து, இகழத்தக்க உருவுடைய வாமன மூர்த்தியானவர், எதிர் நின்று தம்மைப் பார்த்து ஆச்சர்யமடைந்து நிற்கும் எல்லோர்களும் பயப்படும்படியாக, அறிவொழுக்கங்களிற் சிறந்தவர்க்கு அளிக்கப்பெற்ற உதவியானது உலகெங்கும் பரந்து விரிந்து உயர்ந்து நிற்றலுக்குச் சமானமாக; ஆகாயவீதியில் ஓங்கிய உருவெடுத்துப் பரந்து விரிந்து உயர்ந்து நின்றார்.

அடுத்து வரும் இரண்டு செய்யுள்களும், திரிவிக்கிரம உருவெடுத்து உயர்ந்தோங்கி நின்ற திருமால், தாம் குறளுருவிற்

கேட்டுப் பெற்றபடி மூவடியளவில் உலகமளந்தமையைக் குறித்துக் கொண்டிருக்கின்றன.

"நின்றகால் மண்ணெலாம் நிரப்பி அப்புறம்
சென்றுபா விற்றிலை சிறிது பாரென
ஒன்றுவா னகமெலா மொருக்கி யும்பரை
வென்றகால் மீண்டது வெளிபெ றமையால்."

"உலகெலாம் உள்ளடி அடக்கிற் றோரடி
அலகிலா அவ்வடிக் கன்பன் மெய்யதே
இலைதுலாந் துழாய்முடி யேக நாயகன்
சிலைதுலாந் தோளினாய் சிறியவன் சாலவே."

பொருள்:—"நிலத்தில் ஊன்றப் பெற்றிருந்த காலானது, பூமியின் பரப்பையெல்லாம் மூடி, அப்புறம் போய்ப்பரவ வில்லை; ஆகாயத்தைச் சிறியதாம்படியாக மேலுயர்ந்து நீண்டு வென்ற காலானது ஆகாயப்பரப்பையெல்லாம் ஒரு மிக்கச் சிறிதாம்படியாகத் தனக்குள் ஒடுக்கி மேலும் அளவிடம் கிடைக்கப்பெறாமையால் திரும்பியது."

"அவ்வூன்றிய காலாலாகிய அவ்வோரடி உலகத்தையெல்லாம் பாதத்துள் அடக்கிவிட்டது; அளந்துகொள்ள இடம் பெறாத அந்த மூன்றும் அடிக்கு, பக்தனாகிய மாவலியின் சரீரமே அளவடியாக நின்றது. வில்பொருந்திய தோளினையுடைய ஸ்ரீராமா!! இலைகள் மிகுந்த துளபமாலை புனைந்த உலகுக்கொரு நாயகனாகிய திருமாலின் அவதார மூர்த்தியாகிய அவ்வாமன மூர்த்தி மிகச் சிறியனே!

அடுத்து வருஞ் செய்யுள், இவ்வவதாரப் பயனை யுணர்த்துகின்றது.

"உரியதிந் திரற்கென் றுலக மீந்துபோய்
விரிதிரைப் பாற்கடற் பள்ளி மேவினான்;
கரியவன் உலகெலாங் கடந்ததாளினை
திருமகள் காந்தொடச் சிவந்து காட்டின."

பொருள் :—இம்மூவுல காட்சியும் இந்திரற்கே உரியதாம் என்று சொல்லி, அதனை அவ்விந்திரற்கே அளித்துவிட்டு, ஸர்வ ஸாக்ஷியான அத்திருமால் விரிந்த அலைகளையுடைய பாற்கடற் படுக்கைக்குப்போய் விட்டார். அந்நெடியவனது மூவுலகினை யும் அளந்து கடந்த அடியிணைகள் இலக்குமி தனது மெல்லிய கரங்களால் தொட்டுவருடும்போது மாத்திரம் சிவந்து காட்டின."

கம்பர் கூறிய வாமன - பலிவிருத்தாந்தம் எனப் பெயரிய "கொடையின் பெருமை" முற்றுப்பெற்றது.

"ஆகையினால், வேள்வியை முற்றுவிக்கும் முயற்சியுடை யேனுக்கு, இவ்வுயரிடமல்லாது வேறில்லை" யென்று விசுவா மித்திரர் ஸ்ரீராமனிடம் கூறி யாகத்தில் முயன்றார் "என்பது இனி விளக்கப்படுகின்றது.

கம்பநாட்டாழ்வார்.

"ஆதலால் அருவினை அறுக்கும் ஆரிய
காதலால் கண்டவர் பிறவி காண்குறர்
வேதநூல் முறைமையால் வேள்வி முற்றுவேற்
கீதலா தில்லைவே றிருக்கற் பாலதே."

"ஈண்டிருந் தியற்றுவன் யாகம் யானென
நீண்டபூம் பழுவத்து நெறியின் எய்திப்பின்
வேண்டிவ கொண்டுதன் வேள்வி மேவினன்
காண்தகு குமாரைக் காவல் ஏவியே."

பொருள் :—"இது திருமால் நெடுங்காலமிருந்து தவம் செய்த இடமாகையால், பிறரால் அறுதற்கரிய வினைகளையெல் லாம் அறுத்துத் தொலைக்கும், மேலோய்! ஸ்ரீராமா!! இவ்வி டத்தையன்புடன் தரிசிப்பவர் மற்றும் பிறவிகளை யெடுத்தற்குரிய ராகார். வேத விதிப்படி யாகமாரம்பித்து முடிக்கும் முயற் சியையுடைய எனக்கு, இஃதல்லாது வேற்றிடம் இருத்தற்குரி யதாகாது."

"யான் இவ்விடமிருந்தே எனது யாகத்தைச்செய்வேன்." என்று சொல்லி, முறையாகவே, நீண்ட அழகிய அவ்வனச் சோலையின்கண் சென்று, வேண்டிய சாமக்கிரியைகளைப் பெற்றுக் கொண்டு, அழகிற் சிறந்த அந்த அரசிளங்குமாரர்களிருவரையும் யாகபூமிக்குக் காவலர்களாக ஏவிவிட்டுத் தன் யாககாரியத்திற் புக்கனர்."

## வேள்வி காத்தல்.

வாமன—பலி விருத்தாந்தத்திற்குப் பிறகு, ஸ்ரீ வான்மீகி பகவான், யாக ஸம்ரக்ஷண வ்ருத்தாந்தத்தைப் பின் வருமாறு குறிக்கிறார்.

வான்மீகிபகவான்.

"அங்ஙனம் வாமனராக அவதரித்துப் பலியை யாசித்துத் திரிவிக்கிரம ரூபங் கொண்டு தமது மெல்லடிகளாலே காடு மேடெல்லாமளந்து உலகினுக்கு நன்மையைச் செய்த அம் மஹாநுபாவராகிய, ஸ்ரீமந்நாராயணன் இவ்வாச்ரமத்தில் முன்பு வஸித்திருந்தார். யானும் அந்த வாமந ரூபியான திருமாலினிடத்தில் பரமபக்தியைச் செய்துள்ளவனாகையால், அவருக்குரிய இவ் வாச்ரமத்திலேயே குடியிருக்கின்றனன். யாகத்துக்கு விக்நம் செய்யும் அரக்கர்களும் இவ்வாச்ரமத்துக்கே வருவார்கள். ஸ்ரீராமா! அக்கொடிய அரக்கர்களை யிவ்விடத்திருந்தே கொல்லல் வேண்டும். இவ்வாச்ரமம் எனக்கு எப்படியோ அப்படியே உனக்கும் அதீனமாகும் என்று சொல்லினர். அப்போது அந்த ஸித்தாச்ரமத்தில் வாஸஞ் செய்யும் முனிவர்கள், களிப்பு மிகுந்தவர்களாகிக் குதூஹலத்துடன் இவர்களிடம் வந்து முனிவர்க்குத்தக்கபடி பூஜைசெய்து, ஸ்ரீராமலக்ஷ்மணர்கட்கும் அதிதி ஸத்காரம் செய்தார்கள். ஸ்ரீராமபிரான், விசுவாமித்திரரை நோக்கி, "ஸ்வாமி! இன்றையதினமே தாங்கள் யாகதீக்ஷை பெற்றுக்கொண்டு யாகத்தை யாரம்பித்திடவேண்டுகிறேன்; உங்களது யாகம் ஸித்தி பெறுவது பற்றி இந்த ஸித்தாச்சிரமம் உண்மையான பேர் பெற்றிடல் வேண்டும்" என்றனர். இதைக் கேட்ட விச்வாமித்திர முனிவர் மிகக்களிப்படைந்து ஐம்புலன்களையும் அடக்கிக்கொண்டு அப்போதே யாகஞ்செய்ய தீக்ஷித்துக் கொண்டனர். அரசிளங்குமாரர்களும் அன்றிரவு முழுவதும்

மிக்க ஊக்கங்கொண்டு வஸித்திருந்து விடியற்காலத்தில் எழுந்திருந்து காலஸந்தியை வணங்கி அர்க்கியம் கொடுத்துப் பரிசுத்தர்களாகவே நியமத்துடன் காயத்ரீஜபஞ்செய்து முடித்துக் கொண்டு, அக்நிகாரியங்களை நிறைவேற்றி உட்கார்ந்துகொண்டிருக்கிற விச்வாமித்திரமாமுனிவர்க்கு, வணக்கம் செய்திருந்தனர்.''

இதனுடன் பாலகாண்டம் இருபத்தொன்பதாவது ஸர்க்கம் முடிவு பெறுகிறது.

கம்பநாட்டாழ்வார், தாம் எடுத்துக்கொண்ட வேள்விப் படலத்தின் ஒரு பகுதியாகிய வாமன - பலி விருத்தாந்தத்தை முடித்த பின்னர், யாகஸம்ரக்ஷண விருத்தாந்தத்தைப் பின் வருமாறு குறித்துத் தொடங்கியிருக்கின்றார்.

கம்பநாட்டாழ்வார்.

'' எண்ணுதற் காக்கரி திரண்டு மூன்றுநாள்
விண்ணவர்க் காக்கிய முனிவன் வேள்வியை
மண்ணினைக் காக்கின்ற மன்னன் மைந்தர்கள்
கண்ணினைக் காக்கின்ற இமையிற் காத்தனர்.''

பொருள் :—'' பூவுலகினைப் பரிபாலித்து வரும் தசரத மன்னன் குமாரர்களாகிய ஸ்ரீராமலக்ஷ்மணர்கள், விசுவாமித்திர முனிவர், தேவர்பொருட்டு ஆறுநாட்களிற் செய்யும் அந்த யாகத்தைக், கண்விழியைக்காத்து நிற்கும் இமைகள் போலக், காவல் புரிந்தனர். இச்செயல், பிற வீரரால் நினைத்தற்கேனும் செய்தற்கேனும் அரிதேயாகும்.''

இது, யாகஸம்ரக்ஷணத்தைத் தொகுத்துக் கூறியபடியாம். இனிக்கீழே, பதினைந்து செய்யுட்களால், கம்பர், இதே யாகஸம்ரக்ஷண காரியத்தை விரித்துக்கூறியுள்ளமை யறியலாகும். இச்செய்யுளின் விரிந்தபொருளை ஆராய்ச்சிப் பிரிவில் காணலாகும். இங்கு, யாகம் நடந்தேறிய காலம் '' ஆறு நாட்கள் '' என்பது வெளியாகின்றது. இப்பொருளைத் தரும் சொற்றொடராகிய

இரண்டு மூன்று நாள் என்பதைப் பண்புத்தொகையாகக்கொண்டு மேற் குறிக்கப் பெற்றிருக்கும் "ஆறு நாட்கள்" என்னும் பொருளைக் கொண்டால், முதனூலாகிய ஸ்ரீவான்மீகத்தின் கருத்துக் கிசையப்பொருள் கொண்டதாகும்; அன்றி, அந்த "இரண்டு மூன்று நாள்" என்னும் சொற்றொடரை உம்மைத் தொகையாக்கொண்டு பார்க்கின் "ஐந்து நாட்கள்" என்னும் பொருள்தான் கிடைக்கும்; இது வான்மீகத்தின் கருத்துக்கு ஒருவாறு மாறுபடுமாயினும், மற்றும் பல வடநூல் ராமாயணக் கதையின் பொருளுக்கு மாறுபட்டதாகாது என்பதையறியலாம். வடநூற் புலவர் பலர், "விசுவாமித்திரர் இந்த யாகத்தை ஐந்து நாட்கள் வரை நடத்தினர்" என்றும் குறித்திருக்கிறார்கள். "இவ்விருதிறத்தார் பொருள்களுமே கொள்ளக் கடவன என்பதைக் கருதியே, நம் புலவர் பெருமான், இங்ஙனம் குறித்தனரோ?" என்று ஊஹித்தற்கும் இடமிருக்கின்றது. இங்கு குறித்த "ஆறு நாட்கள்" என்னும் பொருளைப் பின் வரும் ஸ்ரீவான்மீகியின் வாக்கியங்களிலிருந்து அறியலாம்.

வான்மீகிபாகவான்.

"பாலகாண்டம்—௩௦-வது ஸர்க்கம்."

"விசுவாமித்திரர் யாகதீக்ஷை பெற்று வீற்றிருந்த பின், ராமலக்ஷ்மணர்கள், முனிவரை நோக்கி, "மகிமை யமைந்த மாமுனிவரே! யாகரக்ஷணத்தின் பொருட்டு அந்த சுபாகு, மாரீசர்களை நாங்கள் எப்போது தடுத்தல் வேண்டுமோ? அந்தச் சமயம் ஒரு சிறிதேனும் தவறுதல் கூடாதன்றோ?" என்று கேட்க, விசுவாமித்திரர் யாகதீக்ஷை பெற்று மௌனியாக இருந்துவிடவே, அங்குற்ற மற்றை ரிஷிகள் அரசிளங்குமரரை நோக்கி, "ரகுகுல வீரர்களே! இன்று முதல் "ஆறிரவு" நீங்கள் இருவரும் இவ்யாகத்தைக் காத்து ரக்ஷித்தல் வேண்டும். முனிவர் பெருமான் தீக்ஷித்துக்கொண்டு அதற்குரிய மௌன விரதத்துடனிருப்பது பற்றி யாதும் மொழியாதிருக்கிறார்; ஆதலின் நாங்கள் கூறுகின்றோம்" என்று சொன்னார்கள்."

இக்கருத்துகளை நமது புலவர் பெருமான் கம்பநாட்டாழ்வாரும் பின் வரும் இரண்டு செய்யுட்களாற் குறித்திருக்கிறார்.

கம்பநாட்டாழ்வார்.

"காத்தனர் திரிகின்ற காளை வீரரின்
மூத்தவன் முழுதுணர் முனியை முன்னிநீ
தீத்தொழி லியற்றுவ ரென்ற தீயவர்
எத்தருங் குணத்தினாய் வருவதென்றென்றான்."

"வார்த்தைமா றுரைத்திலன் முனிவன் மௌனியாய்ப்
போர்த்தொழிற் குமரனும் தொழுது போந்தபின்
பார்த்தனன் விசும்பினைப் பருவ மேகம்போல்
ஆர்த்தனர் இடித்தனர் அசனி அஞ்சவே."

பொருள்கள் :—"யாகத்தைக் காத்துத் திரிந்துகொண்டிருக்கும் காளைத்தன்மையுடைய ரகுவீரர்கள் இருவரில் மூத்தவராகிய ஸ்ரீராகவபிரான், முற்றுமுணர்ந்த முனிவராகிய விசுவாமித்திரரைக்கிட்டி "ஏத்துதற்கரிய குணமுடையீர்! கொடுந்தொழில் செய்வார் என்று தாங்கள் சொன்ன அந்தக் கொடிய அரக்கர்கள் இங்கு வருவதெப்போது?" என்று கேட்டார்."

"விசுவாமித்திரர் மௌனியாக இருந்து மறுவார்த்தையொன்றும் சொல்லாதிருந்தனர்; இதனை யூகித்தறிந்த போர்த்தொழிற்குரிய இளங்குமரராகிய ஸ்ரீராமபிரானும் அம்முனிவரைத் தொழுது திரும்பினபிறகு, ஆகாயத்தினைப் பார்த்தனர். அப்போது, அரக்கர்கள் பருவகாலமேகம் போலும், இடியும் பயப்படும்படியாகக் கர்ஜித்துக் கொண்டு வந்தனர்."

இங்கு, இவ்விரண்டாஞ் செய்யுளில், கம்பர், "விசுவாமித்திரரது மௌனத்தை ஸ்ரீராமன் ஊஹித்தறிந்ததாகக் கூறியிருக்கின்றனரே யன்றி, வான்மீகி கூற்றினைப்போல், "மற்றைய ரிஷிகள் ஸ்ரீராமபிராற்கு அறிவுறுத்தினர்" என்பதைக் குறிக்கவில்லை என்பதை யுணர்கிறோம். இஃது நாடக நயம் நோக்கிக் கதாநாயகரது பெருமையைப் பலப்படுத்தற்காமென்க.

மற்றும், இச்செய்யுளிலேயே, நம் கம்பர், அரக்கரது பிரவேசத்தையும் காட்டியுள்ளார்; இஃதுமொரு நாடக நயமேயாமென்க.

## அரக்கரது ஆரவாரம்.

பின்னர், அரக்கரது ஆரவாரத்தைப் பின்வரும் நான்கு செய்யுட்களால், கம்பர், குறித்திருப்பதை யறியலாம்.

"எய்தனர் எறிந்தனர் எரியும் நீருமாப்
பெய்தனர் பெருவரை பிடுங்கி வீசினர்
வைதனர் தெழித்தனர் மழுக்கள் ஓச்சினர்
செய்தனர் ஒன்றலாத் தீய மாயமே"

"ஊனகு படைக்கலம் உருத்து வீசின
கானகம் மறைத்தன கால மாரிபோல்
மீனகு திரைக்கடல் விசும்பு போர்த்தென
வானகம் மறைத்தது வளைத்த சேனையே."

"வில்லொடு மின்னுவாள் மிடைந்து லாவிடப்
பல்லியம் கடிப்பினில் இடிக்கும் பல்படை
ஒல்லென உரறிய ஊழிப் பேர்ச்சியில்
வல்லைவந் தெழுந்ததோர் மழையும் போன்றவே."

"கவருடை எயிற்றினர் கடித்த வாயினர்
துவர்நிறப் பங்கியர் சுழல்கண் தீயினர்
பவர்சடை அந்தணன் பணித்த தீயவர்
இவரென இலக்குவற் கிராமன் காட்டினன்"

இவற்றின் பொருள் வெளிப்படை. "அரக்கர் தம் படைகள் யாகத்தைக் கெடுக்கும் பொருட்டுப் போர்க் கோலத்துடன் வந்து ஆர்த்தனன்" என்பதே பொருளாம்.

அரக்கரது பிரவேசத்தையும் அவரது ஆரவாரத்தையும் வான்மீகிபகவான் பின் வருமாறு கூறுகின்றார்.

வான்மீகிபகவான்.

> " கீர்த்திவாய்ந்த அரசிளங்குமரரிருவரும் நம்மொழிகளைக் கேட்டு மிக்க ஊக்கங்கொண்டு ஆறு அஹோராத்திரங்கள் போர்க்கோலத்துடன் நித்திரையின்றிக் காத்துக்கொண்டிருந்தனர்; இங்ஙனம் ஐந்து தினங்கள் கடந்து ஆறும் தினம் வரும்போது, " உபாத்தியாயராகிய விசுவாமித்ரமுனிவரோடும் மற்றுமுள்ள புரோஹிதர்களோடும் கூடிய யஜ்ஞவேதியானது, தர்ப்பம், சமஸம், ஸ்ருக், ஸமித், குஸுமம் ஆகிய இந்த யாகஸாமக்ரிகளுடன் தீடீரென்று எரிந்தது."

குறிப்பு :—யாகவேதி பற்றியெரிதல், கேட்டின் அறிகுறியாகையால், அரக்கர் வருதலை முன்னறிவிக்கின்றதாமென்க. சமஸம் - பானபாத்திரம்; ஸ்ருக் - ஹோமபாத்திரம்; ஸமித் - விறகு; குஸுமம் - மலர்.

> " அந்த யாகமானது மந்த்ரவத்தாக விதிப்படி நடக்கத்தொடங்கிற்று; அப்போது ஆகாயத்தில் பயங்கரமான பெரிய சப்தம் உண்டாயிற்று; மாரீச சுபாகுக்களென்னும் அரக்கர் இருவரும் பல்வித மாயாகாரியங்களைச் செய்துகொண்டு, ஆகாயமெங்கும் பரந்து திரிந்து வர்ஷாகால மேகம்போல் எதிர்நோக்கி ஓடிவந்தனர். அவ்விருவரும் பின்வந்தவர்களும் ரத்த வெள்ளத்தைப் பெய்தனர்; புஷ்டம் முதலியவற்றால் விளங்குகின்ற அந்த யாகவேதிகை, அந்த ரத்தவெள்ளத்தால் நிறைந்து எரிந்துகொண்டிருந்தது. ஸ்ரீராமபிரானும் எதிரே ஓடிச்சென்று அவ்வரக்கரைக்கண்டனர்."

இங்குக்குறித்துள்ள இச்செய்தியில், " உபாத்தியாயராகிய விசுவாமித்திரரும் மற்றும் புரோஹிதர்களும் கூடிய யாகவேதிகையானது ஸாமக்கிரியைகளுடன் திடீரென்று தீப்பற்றியெரிந்தது" என்னும் கேட்டின் அறிகுறியும், " சுபாகு மாரீசரிருவரும் பின்வந்தவரும் ரக்த வெள்ளத்தை யாகவேதியிற் பெய்தனர்; மலர் முதலியவற்றால் விளங்கிகொண்டிருக்கும் அந்த யாகவேதிகை அந்த ரக்தப் பெருக்கால் எரிந்து கொண்டிருந்தது " என்னும் கேடும், ஸ்ரீவான்மீகி பகவானால் சொல்லப்பெற்றுள்ளனவேனும், இஃது அசுத்தமாமென்றும், அதனால் யாகம் நன்கு ஸம்ரக்ஷிக்கப்படாமை விளங்குமாமென்றும், எனவே, ரகுகுலதிலகராகிய-

கதாநாயகராகிய ஸ்ரீ ராமபிராற்கியற்கையாகிய வீரம் தீரம் வாக்நிச்சயம் முன்யோசனை யாதிய உயர் நற்குண நற்செய்கைகட்குக் குறைவுண்டாமென்றும் கருதிய கவிஞராகிய கம்பநாட்டாழ்வார் இதனைச்சீர்திருத்திக் கூறிச்சென்றிருத்தலைப் பின்வரும் செய்யுட்களால் அறியலாம்.

கம்பநாட்டாழ்வார்.

" பவர்சடை அந்தணன் பணித்த தீயவர்
இவரென இலக்குவற் கிராமன் காட்டினான்."

" கண்டஅக் குமரனும் கடைக்கண் தீயுக
விண்டனை நோக்கித்தன் வில்லை நோக்கினான்
அண்டர்நாயக! வினிக் காண்டி ஈண்டிவர்
துண்டம்வீழ் வனவெனத் தொழுது சொல்லினான்."

" தூமவேல் அரக்கர்தம் நிணமும் சோரியும்
ஓமவெங் கனலிடை உகுமென் றுன்னியே
தாமரைக் கண்ணனும் சரங்க ளேகொடு
கோமுனி இருக்கையோர் கூடம் ஆக்கினான்."

பொருள்கள்:—" செறிந்த ஜடையையுடைய விசுவாமித்திர முனிவர் முன் சொன்ன கொடிய அரக்கர்கள் இவர்களேதாமென்று, தம்பியாகிய லக்ஷ்மணனுக்கு ஸ்ரீராமபிரான் காட்டினார்."

"அங்ஙனம் காட்டக்கண்ட இளையவீரனாகிய இலக்குவனும், கடைக்கண்ணில் தீப்பொறி பறக்கும்படியாகக்கோபித்து, ஆகாயத்தைப்பார்த்துத் தனது வில்லையும் நோக்கினவனாகி, ஸ்ரீ ராமபிரானைப்பார்த்து, " தேவநாயக ! இனிப்பாருங்கள் ; இங்கே இப்போதே இந்த அரக்கர்களது துண்டங்கள் வீழ்வதை" யென்று வணங்கிச்சொன்னான்."

" அங்ஙனம் அறுக்கப்படும் அரக்கர்தேக மாமிசமும் ரக்தமும் யாகாக்கினியில் விழுந்திடுமென்று நினைத்து, செந்தாமரைக் கண்ணனாகிய ஸ்ரீராமபிரான், தமது பாணங்களைக்கொண்டு, அந்த விசுவாமித்திரரது ஆச்ரமத்தை ஒரு மண்டபமாகச் செய்துவிட்டனர்; சரக்கூடம் வகுத்தனர் என்றபடியாம். "

## அரக்கர் அழிவு.

*பின்னர், அவ்வரக்கரது அழிவை யிருபெரும் புலவரும் கூறிச்சென்றிருக்கும் விவரத்தைக் கவனிப்போம்.*

**வான்மீகி பகவான்.**

" அப்போது செந்தாமரைக்கண்ணனாகிய ஸ்ரீராமபிரான், சுபாகு மாரீசர் தம்மேலெதிர்த்து வருதலைக்கண்டு, லக்ஷ்மணனைப் பார்த்து, " தம்பி ! இதோபார் !! பெருங்காற்றானது மேகங்களைப் பறக்கடிப்பதுபோல, இந்த மானவாஸ்த்ரமானது கொடுந்தொழிலையுடைய மாம்சபக்ஷணிகளாகிய இவ்வரக்கர்களைப் பறக்கடிக்கப்போகின்றது " என்று சொல்லி அம்மானவாஸ்திரத்தை மாரீசனது மார்பின் மேலெய்தார்."

***இங்கு, இக்கவிஞர் தலைவர், இவ்யுத்தத்தில், இளையோனாகிய இலக்குவற்குச் சிறப்புக் கொடாது போயிருக்கின்றார் என்பது விளங்குகின்றது.***

" அவ்வஸ்திரம் பட்ட மாத்திரத்தில், அம்மாரீசன், கடல் வெள்ளத்தில் நூறு யோசனைக்கப்பால் தள்ளுண்டு வீழ்ந்தனன். சிதேஷு என்னும் அம்மானவாஸ்திரத்தினால் அடியுண்டு தள்ளப்பெற்ற அவன் தன்மையைக்கண்ட இராமன், லக்ஷ்மணனைப் பார்த்து,லக்ஷ்மணா! இவ்வஸ்திரத்தின் தன்மையைப் பார்த்தாயா? இஃது அவனை மோஹிக்கச் செய்ததே யன்றி யுயிரை மாய்க்கவில்லை. பின்னர், மற்ற அரக்கர்களைச்சுபாகுவுடன் அழிப்பது கருதி, ஸ்ரீராமன் தமது ஆக்நேயாஸ்த்ரத்தை ஸுபாஹுவின் மார்பில் நாட்டினார். உடனே அவன் அடியுண்டு கீழே வீழ்ந்து இறந்தான். மற்றுமுள்ள அரக்கர்களையும் வாயவ்யாஸ்த்ரம் தொடுத்து வென்று, அங்குள்ள முனிவர்களது ஆனந்தத்தைப் பெருகச் செய்தனர். பின்பு யாகம் நிறைவேற நடத்தி, நான்கு திசைகளும் யாதொருபத்திரவுமின்றிச் சுகமாக இருப்பது கண்டு, ஸ்ரீராமனது புஜபல பராக்கிரமங்களை வியந்து கொண்டாடினர்."

இத்துடன் முப்பதாவது ஸர்க்கம் முடிகின்றது.



இச்செய்திகளை நமது கவிச்சக்ரவர்த்தி கம்பநாட்டாழ்வார், குறித்துச்சொல்லும் முறையைப்பின்பற்றிப் போவோமாக.

கம்பநாட்டாழ்வார்.

"நஞ்சட எழுதலும் நடுங்கி நாண்மதிச்
செஞ்சடைக் கடவுளைச் சேரும் தேவர்போல்
வெஞ்சின அரக்கரை வெருவி மாதவர்
அஞ்சன வண்ணநின் அபயம் என்றனர்."

"கவித்தனன் கரதலம் கலங்க லீரெனச்
செவித்தலம் நிறுத்தினன் சிலையின் தெய்வநாண்
புவித்தலம் குருதியின் புணரி யாக்கினன்
குவித்தனன் அரக்கர்தம் சிரத்தின் குன்றமே."

பொருள்கள்:—"கடல் கடைந்தகாலத்தில் தோன்றிய நஞ்சானது அழிக்க வருதலுணர்ந்து நடுங்கிப்போய்ச், சந்திரப்பிறையையணிந்திருக்கும் சடையையுடைய தேவனாகிய பரமசிவத்தைச் சேர்ந்த தேவதைகளைப்போல, அரக்கர் முனைந்து வருதலைக் கண்ட முனிவர்கள், பயந்து, ஸ்ரீராமபிரானிடம் வந்து, "அஞ்சனவண்ணத்தாய்! ஸ்ரீராம!! நாங்கள் உன்னையே அடைக்கலம் புகுந்தோம் என்றனர்."

"நீங்கள் கலக்கமுறாதீர்கள்! என்று கையமர்த்தியவராகி, ஸ்ரீராமபிரான், தமது வில்லிற்கட்டிய தெய்வத்தன்மை பொருந்திய நாணைத் தமது செவித்தலம் வரையில் இழுத்து நிறுத்தியவராகி, பாணங்களெய்து, அரக்கரைக்கொன்று, அப்பூமியை ரத்தக்கடலாக ஆக்கினதுமன்றியில், அரக்கரது தலைகளாகிய மலைகளையும் குவித்துவிட்டனர்."

இங்கு, இக்கவி, அரக்கருடன் ஸ்ரீராமன் பொருத போரினை யதிகமாக விரித்துக்காட்டாமல், இராமபிரானது அதிசாமர்த்தியத்தையும் காட்டியிருக்கிறார்; மற்றும் விசுவாமித்திர முனிவர், தமது முயற்சியில் தவறாமல் மௌன விரதமே கொண்டிருந்

தார் என்பதையும் மற்றைய முனிவர்கட்குத்தான் ஸ்ரீராமபிரான் அபயம் கூறி, ராக்கதரைக்கொன்றார் என்பதையும் காட்டிவைத்திருக்கின்றார்.

இதற்கு அடுத்துவரும் செய்யுள், ஸ்ரீராமபிரான், ஒரு பாணம் கொண்டே சுபாகுவை எமலோகத்திற்கும் மாரீசனைக் கடலிற்குள்ளும் அனுப்பினமை வெளிறித்துணர வைக்கப்பட்டிருக்கின்றது.

"திருமகள் நாயகன் தெய்வ வாளிதான்
வெருவரு தாடகை பயந்த வீரர்கள்
இருவரின் ஒருவனைக் கடலின் இட்டதங்
கொருவனை அந்தக புரத்தின் உய்த்ததே."

பொருள்கள்—"இலக்குமி நாயகனாகிய ஸ்ரீராமபிரான் தொடுத்துவிட்ட பாணமொன்றானது, பயப்படத்தக்க தாடகை யென்னும் அரக்கிபெற்ற வீரர்களாகிய சுபாகு மாரீசன் என்னும் புத்திரர்கள் இரண்டுபேர்களில் ஒருவனாகிய மாரீசனைக்கடலிற் கொண்டுதள்ளியது; மற்றொருவனை எமலோகத்திற்கொண்டு போக்கியது."

இராமன் அனுப்பிய தெய்வவாளி யொன்றே என்பதைப் பின்னர்க் குலமுறை கிளத்து படலத்தில், "செக்கர் நிறத் தெரி குஞ்சி" என்னும் தலைப்புடைச் செய்யுளில், "ஓரம்பினொடு மாக்கி, மக்களிலங் கொருவன்போய் வான்புக்கான் மற்றையவன், புக்கவிடம் அறிந்திலேன் போந்தனென் வினைமுடித்தே." எனவற்புறுத்திக் கூறியிருத்தலையும் உணர்க.

"தாடகை சுபாகுமாரீச ரிவர்தமை வென்று தமது யாகத்தைக் காக்க வல்லவனாகிய ஸ்ரீராமபிரான் ஸாமானிய ராஜகுமாரனேயயல்லன்; மற்று, விஷ்ணுவின் அவதாரபுருஷனே யாவ" னென்னும் விசுவாமித்திராது கூற்றினையுண்மைப்படுத்தி, தசரத மன்னற்கு வசிஷ்டர் சமாதனம் கூறியதாகச் சொன்ன இடத்தில், முன்னே "கையடைப் படலத்தில்" "குருவின் வாசகம்" என்

னும் தலைப்புடைச்செய்யுளில், "திருவின் கேள்வனைக் கொணர்மின் சென்றென" எனக்கூறியிருத்தலை வற்புறுத்துவான் வேண்டியே, இங்கே இச்செய்யுளுள்ளும், "திருமகள் நாயகன்" என்னுஞ் சொற்றொடரால் குறித்திருத்தலையுணர்க.

பின்வரும் இரண்டு செய்யுட்களும், மற்றுள்ள அரக்கர்கள் வெருண்டு ஓடின தன்மையைக் குறித்து நிற்கின்றன.

"துணர்த்தபூந் தொடையலான் பகழி தூவினன்
கணத்திடை விசும்பினைக் கவித்துத் தூர்த்தது
பிணத்திடை நடந்திவர் பிடிப்பர் ஈண்டென
உணர்த்தினர் ஒருவர்முன் ஒருவர் ஓடினர்."

"ஓடின அரக்கரை உருமின் வெங்கணை
கூடின குறைத்தலை மிறைத்துக் கூத்துநின்
றாடின அலகையும் ஐயன் கீர்த்தியைப்
பாடின பரந்தன பறவைப் பந்தரே"

"பந்தரைக் கிழித்தது பரந்த பூமழை
அந்தர துந்துபி முகிலின் ஆர்த்தன
இந்திரன் முதலிய அமரர் ஈண்டினர்
சுந்தர வில்லியைத் தொழுது வாழ்த்தினர்."

இவற்றின் பொருள்கள் வெளிப்படை. இவற்றுள், முதற் செய்யுளில், ஸ்ரீராமபிரானது போர்த்திறத்தைக்கண்டு மற்றுள்ள அரக்கர் ஓடினமையும், இரண்டாஞ் செய்யுளில்-அங்ஙனம் ஓடிய அவ்வரக்கரைவிடாது சென்று இராமன் வெங்கணைகொண்டு வென்றமையும், ஐயன் கீர்த்தியை பிசாசுகளும் புகழ்ந்து பாடினமையும், ஆகாயவீதியில் பறவைக்கூட்டங்கள் பரந்திருந்தமையும், மூன்றும் செய்யுளில்-வானவர் பூமாரி பொழிந்து அந்தர துந்துபி முழக்கி இந்திரனுடன் வந்து நின்று ஸ்ரீராமபிரானைத் தொழுதமையும் நன்கு விளக்கப்பட்டிருக்கின்றன.

## மு க ம ன்.

அடுத்துவரும் இரண்டு செய்யுட்களும், யாகத்தைப் பூர்த்தி செய்து விசுவாமித்திர முனிவர் இராமனைப் புகழ்ந்தமையைக் கூறி நிற்கின்றன.

" புனித மாதவர் ஆசியம் பூமழை பொழிந்தார்
அனைய கானத்து மரங்களும் அலர்மழை பொழிந்த
முனியும் அவ்வழி வேள்வியை முறைமையின் முற்றி
இனிய சிந்தையன் இராமனுக் கினையன இசைத்தான்"

" பாக்கி யம்மெனக் குளதெனநினைவுறும் பாண்மை
போக்கி நிற்கிது பொருளெனப் புகல்கிலேன் புவனம்
ஆக்கி மற்றவை அகிலமு மணிவயிற் றடக்கிக்
காக்கு நீயொரு வேள்விகாத் தனையெனும் கருத்தே."

**பொருள்கள் :—** "பரிசுத்தவான்களாகிய தாபதர்கள் ஆசீர்வாதங்களாகிய பூமாரி பொழிந்தார்கள்; அந்தக்காட்டகத்தில் நிற்கும் மரங்களெல்லாங்கூட மலர்களைச் சொரிந்து நின்றன; விசுவாமித்திர முனிவரும் அம்முறைமையிலேயே யாகத்தை நன்கு நிறைவேற்றித் திருப்திபெற்ற மன முடையவராகி யிராமனைப்பார்த்துப் பின்வருமாறு கூறினார்."

"இத்தகைய அற்புதமான செயல் நடந்தது என்னுடைய பாக்கியத்தாலேதான் என்று நினைக்கவேண்டிய செயலைவிட்டு விட்டு, ஸ்ரீராம! நீ இவ்வரக்கர்களைக்கொன்று வென்றுயாகத்தை நிறைவேற்றிக்கொடுத்ததை உனக்கு ஒரு பொருளாகச் சொல்ல மாட்டேன்; ஏனெனில், உலகமனைத்தும் உண்டாக்கி விளையாடிப் பிரளயகாலத்தில் அவ்வுலகனைத்தையும் அழகானவயிற்றிலொடுக்கிக்காத்தருளும் உலகுடை நாயகனாகிய உனக்கு, " இவ்வற்ப வேள்வியொன்றைக் காத்தனை" யென்பது " அபசாரமாகுமே யன்றி உபசாரமாகாது" என்னும் கருத்துக்கொண்டேயாம்" என்றனர்.

அங்குக் கையடைப்படலத்தில் ஸ்ரீராம பரத்வத்தை விசுவாமித்திரர் வாக்கில் குறிப்பினுணர்த்திய, கவிப்பெருமான், இப்படலத்து இச்செய்யுளில் வெளிப்பட உணர்த்தினார் என்பதாம்.

அடுத்துவரும் செய்யுள், " மேலும் ஆகவேண்டிய காரியங்கள் உளவோ? என ஸ்ரீராமபிரான் விரும்பி நின்றார்" என்பதைக்காட்டி நிற்கின்றது.

"என்று கூறிய பின்னரவ் வெழின் மலர்க் கானத்
தன்று தானுவந் தருந்தவ முனிவரோ டிருந்தான்
குன்று போற்குணத் தானெதிர் கோசலக் குரிசில்
இன்றி யான்செயும் பணியென்கொல் பணியென இசைத்தான்."

இதன் பொருள் வெளிப்படை. குன்று போற் குணத்தான் = விசுவாமித்திர முனிவர். கோசலக் குரிசில் = ஸ்ரீராமபிரான். பணி யென்கொல்=வேலையாதோ; (பணி = வேலை.) பணி என=பணிப்பாய் என்று (பணி=கட்டளையிடு.)

இனி அடுத்துவரும் செய்யுள், கேட்ட ஸ்ரீராமற்கு விசுவாமித்திரர் கூறிய மறுமொழியாக அமைக்கப்பட்டிருக்கிறது. இதில் ஸ்ரீராமாவதாரத்தின் அவசியமும் ரஹஸ்யமும் சூசிக்கப் பட்டிருக்கின்றன. இச்செய்யுள் இப்படலத்தின் கடைசியாகும்.

"அரிய யான்சொல ஐயநிற் கரிய தொன்றில்லை
பெரிய காரியம் உளவவை முடிப்பது பின்னர்
விரியும் வார்புனல் மருதஞ்சூழ் மிதிலையர் கோமான்
புரியும் வேள்வியும் காண்டுநாம் எழுகென்று போனார்."

பொருள் :— "ஐய! ஸ்ரீராமா!! உனக்கு அரிய காரியங்களை நான் சொல்லப்புகின், உனக்கு அரிய காரியங்களே இப்பிரபஞ்சத்தினிடத்தில் இல்லையாகும்; ஆயினும், உன்னால் இன்னும் அரும் பெரும் காரியங்கள் ஆக வேண்டியிருக்கின்றன; அவற்றைப்பின்னர்த்தான் ஆரம்பித்து முடித்திடல் வேண்டும்; அவற்றுக் கனுகுணமான — தோற்றுவாயான தொரு பெருங்காரியம் முன்னர் முடித்திடல் வேண்டும்; அஃது யாதெனில், குறித்திடுகிறேன். விரிந்து பரந்து பெருகிவரும் நீர்ப்பெருக்கை மிகுதியும் உடைய மருத நிலங்களாற் சூழப்பெற்ற மிதிலை நாட்டுக்கு அரசனாகிய சனகமாமன்னன் நடத்தப்புகும் கல்யாண மஹோத்ஸவத்தையும் நேரிற் சென்று பார்த்து வருவம்; வாருங்கள்" என்று கூறி யாவரும் எழுந்து போயினார்."

## அகலிகைச் செய்தி.

புலவர் பெருமக்கள் இருவரும், முன்னம் யாம் கூறிப் போந்த யாகரக்ஷண விருத்தாந்தத்தை விஸ்தாரமாகக் கூறிமுடித்த பின்னர், 'விசுவாமித்திர முனிவர், தமது தோழர்களுடனும் சீடர்களுடனும், இராம லக்ஷுவரையும் அழைத்துக்கொண்டு மிதிலா நகரத்துக்குப் புறப்பட்ட செய்தி' யைத்தான் கூறியிருக்கிறார்கள்.

கம்பநாட்டாழ்வார்.

ஆனால், இச்செய்தியைத் தமிழ்ப் புலவராகிய கம்பநாட்டாழ்வார், கடந்த படலமாகிய வேள்விப்படலத்தின் இறுதியாகிய "ஆரிய யான் சொல" என்னும் கவியின் பின்னிரண்டடிகளிற் குறித்துள்ளாரென்பதை நேயர்களினுடைய நினைவுக்குக் கொண்டு வருகின்றோம். இங்ஙனம் அவ்விறுதிச் செய்யுளில், "யாவரும் மிதிலை நோக்கிப் புறப்பட்டனர்" என்பதைக் குறித்திட்டு, அடுத்துத்தாம் தொடங்கியிருக்கும் "அகலிகைப் படலம்" என்னும் பகுதியின் ஆரம்பச் செய்யுளில் அதாவது-முதற்செய்யுளில், "அவர்கள் சோணை யென்னும் நதத்தினைக் குறுகினார்கள்" என்று குறித்திருக்கிறார். இந்த முதற் செய்யுளின் ஆராய்ச்சி, பின்னர் எடுத்துக்கொள்ளப்பெறும். அச்செய்யுள் வரும் :—

கம்பநாட்டாழ்வார்.

"அலம்பு மாமணி யாரத்தோ டகிலணி புளினம்
நலம்பெய் பூண்முலை நாகிள வஞ்சியா மருங்குல்
புலம்பு மேகலைப் புதுமலர்ப் புனையறற் கூந்தற்
சிலம்ப லம்புகாற் சோணையாந் தெரிவையைச் சேர்ந்தார்"

"சோணமாந் தெரிவையைச் சேர்ந்தார்" என்பது பாடபேதம்.

அடுத்து ஆரம்பிக்கப் பெற்றிருக்கும் "அகலிகைப் படல"த்தின் ஆரம்பச் செய்யுள் இதுவாம்.

வான்மீகி பகவான்.

*பாலகாண்டத்தின் முப்பதாவது ஸர்க்கத்தில்* யாக ஸம்ரக்ஷண விருத்தாந்தத்தை *முடித்துக்கூறிய வான்மீகர், அடுத்த முப்பத்தொன்றாஞ் சர்க்கத்தில்,* "அவர்கள் இராம லக்ஷ்மணர்களுடன் மிதிலா நகரத்தை நோக்கிப் புறப்பட்டார்கள்" *என்னும் செய்தியை மிக விஸ்தாரமாகக் கூறியிருக்கின்றார். வான்மீகர் விஸ்தார கவியாகலின், இம்முறை யவருக்குத் தகுதியேயாமென்பது ஒருதலை.*

*இச் செய்தியைக் கம்பர், முன்படலமாகிய வேள்விப் படலத்தின் இறுதிச் செய்யுளுள் பின்னிரண்டடிகளிற் சுருங்கச் சொல்லி விளங்க வைத்துளார் என்பதனை முன்னமே குறித்துள்ளோம்.*

*இந்த முப்பத்தொன்றாவது ஸர்க்கத்தில், வான்மீகி பகவான் "அவர்கள் மிதிலை நோக்கிப் புறப்பட்டனர்" என்னும் செய்தியைக் கூறுதற்கு எடுத்துக்கொண்டனராயினும், பின்னர் மிதிலையில் நிகழ்ந்ததாகச் சரித்திரத்தில் குறிக்கப்பெற்றிருக்கும் எல்லா நிகழ்ச்சிகளையும்பற்றி, முனிவர்கள், இராமனுக்குக்கூறினபடியைக் கூறி, ஸர்க்கத்தினைப் பெருக்கியிருக்கிறார். இம்முறை நாடகச் சுவைக்கு நன்கு பொருந்தவில்லையென்று நல்லார் பலர் நவில்கின்றனர். அவற்றிற் சில ஈண்டு எடுத்துக் காட்டுவாம்.*

வான்மீகி பகவான்.

"யாகம் நிறைவேறிய பிறகு, ராம லக்ஷ்மணர்கள், விச்வாமித்ர முனிவரை நமஸ்கரித்து," மாமுனிவரே! தாங்கள் கட்டளையிட்டபடியே செய்து, மேலும், ஆகவேண்டிய காரியங்கட்கு அநுமதியையும் எதிர்பார்த்து நிற்கின்றோம்; பணித்தருளல் வேண்டும்; இன்னும் நாங்கள் செய்யவேண்டியது யாதுளதோ!" என்று இயற்கையில் மதுர பாஷியாதலால் ஸ்ரீராமபிரான் மதுரமாகவும் கம்பீரமாகவும் மொழிந்தனர். அப்போது அங்குக் குழுமியிருந்த மகரிஷிகள், விசுவாமித்திரருடைய அநுமதிபெற்று ஸ்ரீராமபிரானை நோக்கி, 'புருஷோத்தமா! ராமா!! மிதிலாதிபனாகிய ஜனக

ராஜன், தர்மத்துடன் கூடிய யாகமொன்றை நடத்துகின்றார். அதற்கு நாங்களனைவரும் போகப்போகின்றோம். நரோத்தமனே! நீயும் எங்களுடன் கூடவந்து, அங்கு, நீண்ட காலமாகச் சேமித்து வைக்கப்பெற்றிருக்கும் மிகப் பிரஸித்தியுடைய தாகியதோர் ஆச்சரியகரமான வில்லையும், அந்த உயர்ந்த வில்லின் பொருட்டே தோன்றி வளர்ந்து அழகிற் சிறந்திருக்கிற பெண்மணியையும் பார்த்தல் வேண்டும். அளவிடற்கரிய பலம்பெற்று மற்றார்க்குப் பயங்கரமாகிப் பிரகாசித்துக்கொண்டிருக்கிற அந்த வில்லானது, முன் ஒரு காலத்தில் இந்த ஜனகராஜனது வம்சத்தலைவனாகிய தேவராதனென்னுமோர் விதேக மன்னனால், செய்து நிறைவேற்றிய யாக ஸதஸில் தேவர்களால் அளிக்கப்பெற்று வைக்கப்பட்டிருக்கின்றது. அதனைத் தேவர்கள் கந்தர்வர்கள் அஸுரர்கள் அரக்கர்கள் எவரும் நாணேற்றிட முடியாதவர்களாகிவிட்டார்கள். மானுடரைப்பற்றிக் கூறவும் வேண்டுமோ! பல மன்னர்களும் சென்று அவமானமடைந்து திரும்பிப்போய்விட்டார்கள். காகுஸ்த குலதிலகனே! ஸ்ரீராம!! நீ எங்களுடன் வந்தால், அந்த மஹானுபாவனாகிய ஜனகனையும் பிரஸித்தமான அந்த வில்லையும் மிகப் புனிதமான யாகத்தையும் பார்த்தல் கூடும். ஸீதையென்று பெயருடைய அழகிய பெண்ணரசியையும் பெறக்கூடும். புலிக்குச் சமானமாகிய வீரனே! அந்தப் பிரஸித்த வில்லானது, அந்த மகாராஜனுடைய மாளிகையில் நடந்தேறியதோர் ஒரு மஹோத்ஸவத்தில் வில்கள் அனைத்திலும் பிரதானமாக வைத்து நிறுவப் பெற்று ஆகாய மென்னும் பிரஸித்த நாமத்தையுமடைந்து, அகில் முதலிய தூபங்களாலும் சந்தனம் முதலிய கந்தங்களாலும் நாடோறும் ஆராதிக்கப்பெற்று வரப்படுகின்றது" என்று கூறினார்கள்.

பின்னர், "யாவரும் பிரயாணமாகினர்" என்று ஆரம்பித்து, அதில் வன தேவதாப் பிரார்த்தனையும் விடைபெறலும் கூறி, "அக்நிஹோத்ராரம்பம் முதலியவற்றுக்குரிய ஸாமக்ரிகைகளுடன் நூறு வண்டியிற் புறப்பட்டனர்" என்கிறார். புறப்படும்போது நீண்ட நாட்களாக அவ்வாச்ரமத்தில் தம்மோடு மிகப்பழகியிருந்த பக்ஷிகளும் மிருகங்களும் தம்மைவிட்டுப் பிரிந்திருக்கப்பொறாமல், கூடவருவதைக் கண்டு, அவற்றுக்கு உபசாரங்கூறித் திருப்பியனுப்பிய நிகழ்ச்சியையும் கூறியிருக்கிறார். பின்னும்,

"வெகு தூரம் நடந்து, சூரியன் அஸ்தமிக்கும் வேளையாகையில், அனைவரும் ஒன்றுகூடி சோண நதத்தின் கரையில் வஸித்திருந்து, ஸ்நானஞ் செய்து அக்நிஹோத்ரம் முதலிய நிறைவேற்றி ஒளி மிகுந்த விச்வாமித்ர முனிவரை முன்னிட்டு உட்கார்ந்திருந்தனர். அப்போது ஸ்ரீ ராமபிரான், அம்முனிவரை நோக்கி, 'மஹாநு பாவரே! இந்தச் சோண நதத்தின் கரையில் செழித்த வனங்க ளால் அழகாய் விளங்கும் இந்தத்தேசம் யாருடையது? இதனைக் கேட்க ஆசைப்படுகின்றனன்' என்று கூறிடவும், முனிவரர், பின்வருமாறு அந்தத் தேசத்தின் விருத்தாந்தங்களைக் கூறினர்."

என்று சொல்லி, ஸர்க்கத்தை நிறைவேற்றுகிறார். இத்துடன் ஸர்க்கம் முடிகின்றது.

பின்னர், வான்மீகி முனிவர், அந்தத் தேச விருத்தாந்தத் தைப்பற்றி விசுவாமித்திரர் வாக்கில் வைத்துக்கூறும் முகமாக, (1) குசன் குசநாபன் விருத்தாந்தமும் (2) பிரமதத்தன் குச நாபன் பெண்களை மணந்த விருத்தாந்தமும் (3) விசுவாமித்திரர் கௌசிகீ நதி விருத்தாந்தமும் என்னும் மூன்று விருத்தாந்தங் களையும் முப்பத்திரண்டு முப்பத்து மூன்று முப்பத்து நான்கு ஸர்க்கங்களால் முறையே விஸ்தரித்துக் கூறிப்போயிருக்கிறார்.

இந்த விருத்தாந்தங்கள் மூன்றையும், கம்பநாட்டாழ்வார், முன்படலமாகிய வேள்விப் படலத்தின் ஆரம்பத்திலேயே, அந்த வேள்விப்படலத்தின் 7-ம் செய்யுளிலிருந்து 15-ம் செய்யுள் வரை யிலும் அதாவது ஒன்பது செய்யுட்களால் மிகச்சுருக்கமாகக் கூறிப்பண்படுத்திப் போயிருப்பதால், நாமும், அந்த யாகஸம்ரக்ஷ ணப்பகுதியிலேயே – "கம்பரும் வான்மீகரும்" என்னும் பகுதி யின், 250-ம் பக்கத்திலிருந்து 258-ம் பக்கம் முடிய - அதாவது ஒன்பது பக்கங்களில் வைத்து ஆராய்ந்திருக்கின்றோம்; ஆங்குக் கண்டு கொள்க.

இனிக், கம்பநாட்டாழ்வாருடைய, இந்த அகலிகைப் படலத் தைப்பற்றிச் சில கூறுவோமாதக :—

**கம்பநாட்டாழ்வார் -- அகலிகைப்படலம்.**

கம்பநாட்டாழ்வார் கூறிய இந்த அகலிகைப் படலம், மொத்தம், 85 அல்லது 86 கவிகள் கொண்டதாக இருக்கின்றது. இக்கவிகளுள், இறுதியிற் கூறப்பெற்றிருக்கும் 16 - கவிகளே அகலிகை விருத்தாந்தத்தைக் கூறுகின்றன, மற்றை 70 கவிகளும் வேறு பலவற்றைக் கூறிச்செல்கின்றன. அவற்றுக்கு விவரம் கூறப்புகின், முதற்கவி 'சோணநதச் சிறப்' பையும், அடுத்தகவி 'சூர்யாஸ்தமனத்தையும்', மூன்றாங்கவி, 'யாவரும் நறுமலர்ச் சோலையைச் சேர்ந்தார்' என்பதையும் கூறியிருக்கின்றன.

நான்காம் கவிமுதல் பதினெட்டாங் கவிவரையில் அதாவது, 15 - கவிகளும் "துர்வாஸ மகரிஷியால் இந்திரன் திருவிழந்த செய்தி" யையும், 19 - ம் கவிமுதல் 26 - ம் கவிவரையில் அதாவது 8 - கவிகள், "கடல் கடைந்த செய்தி" யையும், 27 - ம் கவிமுதல் 29 - ம் கவி வரையில் அதாவது மூன்று கவிகள் "திதி தவஞ்செய்த செய்தி" யையும் அடுத்த 30 - ம் கவியொன்று "சரவணபவன்" செய்தியாகிய "சுப்பிரமணிய மூர்த்தியின் அவதார ஸ்தலச் செய்தி" யையும், அடுத்தவொன்று 'சூரியோதயத்' தையும் 32 - ம் கவியிலிருந்து 43 - ம் கவி வரையில் அதாவது 12 - கவிகள் "சகர—சாகரச் செய்தி" யையும், 44 - ம் கவியிலிருந்து 61 - ம் கவிவரையில் அதாவது 18 கவிகள் "பகீரத பாகீரதிச் செய்தி" யையும், அடுத்தவொன்று "விசால நகர" த்தையும் கூறிச் செல்கின்றன.

மேல் 63-ம் கவியிலிருந்து 69-ம் கவிவரையில் அதாவது 7 கவிகள் 'மிதிலை நாட்டின் சிறப்' பைக் கூறிப் பின்னர்த் தான் "அகலிகை விருத்தாந்தம்" ஆரம்பிக்கப் பெற்றிருக்கின்றது.

எனவே, "பல கவிகளாற் குறிக்கப் பெற்றிருக்கும் பெருஞ் சரிதப் பகுதிகள் இரண்டினை விடுத்து, சில கவிகளாற் குறிக்கப் பெற்றிருக்கும் ஒரு சரிதப் பகுதியின் பெயரால் படலத்துக்கே

பெயரிடல் கூடுமோ ?" என்னும் கேள்வி வரல் கூடும். அதாவது 18-ம் கவி வரையில் குறிக்கப் பெற்றிருக்கும் "இந்திரன் திரு விழந்த செய்தி" யும், பின்னர், 26-ம் கவி வரையில் குறிக்கப் பெற்றிருக்கும் "கடல் கடைந்த செய்தி" யும் ஒரே நிகழ்ச்சியைக் குறிப்பனவாகையால், இரண்டையுஞ் சேர்த்து, ஒரு பெயரிற் குறித்தும், பின்னர் 43-ம் கவி வரையில் குறிக்கப் பெற்றிருக்கும் "சகர—சாகரச் செய்தி" யும், பின் 61-ம் கவி வரையில் குறிக்கப் பெற்றிருக்கும் "பகீரத—பாகீரதி" ச்செய்தியும் ஒரே நிகழ்ச்சியைக் குறிப்பனவாகையால் இரண்டையுஞ் சேர்த்து ஒரு பெயரிற் குறித்தும், இதனை மூன்று படலங்களாக்கியிருக்கலாமே என்று எண்ணுவம்; ஆனால், நூலின் அதிகாரப் பெயராகிய இராம சரிதத்துக்குத் தொடர்பில்லாத பிறசரிதப் பகுதிகளின் பெயர்களால், அதிகாரத்தின் உட்பிரிவாகிய படலத்துக்குப் பெயரிடல் தகாதென்பது பெரியார் கருத்தாகும் போலும். கவிச்சக்கரவர்த்தி, கம்பர், இக்கருத்தைக்குறிக் கொண்டுபோலும், திருவவதாரப் படலத்தில், பெரும்பகுதிக் கவிகள் கொண்டுள்ளதொரு உபாக்யானமாகிய கலைக்கோட்டுமாமுனிவரது தொடர்புடைய இரண்டு நிகழ்ச்சிகளையும் படலத்தலைப்பாக்காமல் அவதாரப் படலத்துக்குள்ளேயே அதனை உபாக்யானமாக அடக்கிவைத்துள்ளார் என்பது தெளிவாகின்றது.

ஆகையால், எத்தனை உட்கதைகள் குறிக்கப்பட்டிருப்பினும், இஃது "அகலிகைப்படல" மேதான் என்பது துணிவாம்.

இப்படலத்தின் முதற் கவியைப்பற்றியதொரு ஆராய்ச்சியைப் பேசுவதாக முன்னர்க் குறித்துளோம். அது வரும் :— அக்கவி முன்னம் கூறிய "அலம்புமாமணி" என்பது; அதன் பொருள் பின்வரும் :—

பொருள் :— அலம்பு = ஒலிக்கின்ற, மாமணி = உயர்ந்த ரத்தினங்களும், ஆரத்தோடு = முத்துக்களுடன், அகில் = அகில் மணமும், அணி = அணியப்பெற்ற, புளினம் = மணல்மேடுகளாகிய,

நலம்பெய் பூண்முலை = அழகு மிகுந்த ஆபரணங்களையுடைய ஸ்தனங்களையும்; நாகு இளம் வஞ்சியாம் = மிகவும் இளையவான கொடிகளாகிய, மருங்குல் = இடையையும்; புலம்பு மேகலை = ஒலிக்கின்ற மேகலைகளாகிய ஒட்டியாணத்தையும்; புதுமலர்ப்புனை அறல் = புதுமலர்களாற் புனையப் பெற்றிருக்கும் கருமணலாகிய, கூந்தல் = கூந்தலையும்; சிலம்பு அலம்பு கால் = குன்றுகளை அலம்பிக்கொண்டுபோகும் வாய்க்கால்களாகிய, (சிலம்பு அலம்புகால் =) சதங்கையொலியுடைய பாதங்களையும் உடைய; சோணம் ஆம் = சோண நதமாகிய; தெரிவையை = பெண்ணினை; சேர்ந்தார் — என்றவாறு, அலம்புதல் = புரளுதல்.

இக்கவி, பெண்ணுக்கும் ஆற்றுக்கும் சிலேடையாகப் புனையப்பெற்றதொன்றாகும். கம்பர்க்குச் சிலேடை புனைவதில் ஆற்றலும் அவாவும் அதிகம்; இங்ஙனம் பல கவிகள் கம்பராமாயண காவியத்திற் காணப்படலால் என்க. சோணை யென்றும் சோண மென்றும் கூறப்படுகின்றது. இந்நதியை ஸரஸ்வதியாறென்றும் ஒரு சிலர் கூறுகின்றனர்.

| நதி. | தெரிவை. |
|---|---|
| (1) அலம்பு மாமணியாரத்தோடகிலணி புளினம்.<br>(அலம்புதல் = ஒலித்தல்;<br>ஆரம் = முத்தம்)<br>(புளினம் = மணல்மேடு) | அலம்பு மாமணி யாரத்தோடகிலணி நலம்பெய் பூண்முலை<br>(அலம்புதல் = புரளுதல்;<br>ஆரம் = மாலை) |
| (2) நாகு இளவஞ்சி<br>(வஞ்சி, கொடி) | மருங்குல் (மருங்குல் = இடை) |
| (3) புலம்பு மேகலை | புலம்புமேகலை. |
| (4) புதுமலர்ப்புனை அறல் | புதுமலர்ப்புனை கூந்தல். |
| (5) சிலம்பு அலம்புகால்<br>(சிலம்பு = குன்று;<br>கால் = வாய்க்கால்) | சிலம்பு அலம்புகால்<br>(சிலம்பு = பாதச்சிலம்பு;<br>கால் = பாதம்) |

எனவே, இக்கவி, ஒரு நதியின் வளங்களை நோக்கிப் பெண்ணின் நலங்களைப் புனைந்ததொன்றாகின்றது.

இக்கவியை நோக்கவே, காளிதாச மஹா கவியினுடைய (சுலோகம்) கவியொன்று நினைவுக்கு வருகின்றது. அந்தக்கவியானது, அம்மகாகவி செய்துவைத்துள்ள நூல் பலவற்றுள் சிறிய தொன்றாகிய "சிங்கார மஞ்சரி" யிற் காணப்படுவதொன்றாகும். அது வரும்:—

(1) "பாஹு த்வௌ ம்ருணாளம் (2) ஆஸ்ய கமலம் (3) லாவண்ய லீலா ஜலம், (4) ச்ரோணீ தீர்த்தசிலாச (5) நேத்ர சபரி (6) தம்மில்ல சைவாலகம்; (7) காந்தாயா ஸ்தன சக்ரவாக யுகளம், கந்தர்ப்ப பாணானலைர் தக்தாநாம் அவகாஹநாய விதிநா ரம்யம் ஸரோ நிர்மிதம்." என்பதாம். இது, ஒரு காமினியைக் கண்ணுற்றதொரு காமுகன் கூறியதாகப் புனைந்த தொன்று.

(1) இரண்டு கைகளாகிய தாமரைத் தண்டுகளையும்
(2) முகமாகிய தாமரையையும்
(3) அழகாகிய விளையாடல் நீரையும்
(4) கன்னங்களாகிய நீரணை கற்களையும்
(5) கண்களாகிய மீன்களையும்
(6) கூந்தலாகிய பாசிக்கற்றைகளையும்
(7) தனங்களாகிய சக்ரவாளப் பறவைகளையும்

உடைய இந்தப்பெண், மதன பாணங்களால் தகிக்கப்பெறும் காமுகர்கட்குக் குடைந்து நீராடித் தாபம் நீக்கிக் கொள்ளற்காகப் பிரமனால் அமைக்கப்பெற்றதொரு அழகிய பொய்கையேயாம்" என்பதாம்.

ஆக, இக்கவியுள், ஒரு பெண்ணின் நலங்கள், ஒரு நீர் நிலையின் வளங்களாகப் புனைந்துரைக்கப் பெற்றிருக்கின்றன. மேற்கூறிய, கம்பர் கவியுள், ஒரு நீர் நிலையின் வளங்கள், ஒரு பெண்ணின் நலங்களாகப் புனைந்துரைக்கப் பெற்றிருக்கின்றன.

எனவே, நமது கவிசக்ரவர்த்தி, கம்பநாட்டாழ்வார்க்குக் காளிதாச மஹாகவியின் நூல்களிலும் தக்க பிரவேசம் உண்டென்பது வெளியாகிறது; கம்ப ராமாயணத்துக்கும் ரகுவம்ச நூலுக்கும் தொடர்பு மிகுதியும் காண்கிறோம். அது பின்வரும் பகுதிகளில் எடுத்துக்காட்டப்பெறும். இனி, மேல், எடுத்துக்கொண்ட விஷயமாகிய அகல்யா சாப விமோசனப் பகுதியைப் பற்றியாராயப்புகுவாம்.

வான்மீகி பகவான்.

யாக ஸம்ரக்ஷணப் பகுதிக்குப் பிறகு அதாவது முப்பதாவது ஸர்க்கத்துக்குப் பிறகு, முப்பத்தொன்றாவது ஸர்க்கத்தில், "யாவரும் மிதிலா நகரம் நாடிப் புறப்பட்டார்கள்" என்று கூறி முடித்தவர், உடன் அஹல்யா சாப விமோசனப் பகுதியை எடுத்துக்கொள்ளவில்லை. யாவரும் மிதிலை நாடிப் புறப்பட்ட நடைவழியில் 'நேர்ந்த தோற்றங்கள்,' 'நடந்த நிகழ்ச்சிகள்' முதலானவற்றையும் விஸ்தாரமாகக் கூறியிருக்கிறார். நாற்பத்தெட்டு நாற்பத்தொன்பது ஸர்க்கங்களில்தான் அஹல்யா விருத்தாந்தத்தைச் சொல்லியிருக்கிறார். 48-ல் அஹல்யை சாபம் பெற்றமையும், 49-ல் அச்சாபம் நீங்கினமையும் கூறியிருக்கிறார். இடையில் 6 ஸர்க்கங்களிற் பிற விஷயங்களைப் பேசியிருக்கிறார். விவரம் வரும்.

பின் வரும் விஷயங்களை முறையே முப்பத்திரண்டாவது ஸர்க்கமிருந்து வைத்துப்பார்க்க வேண்டுகிறோம்.

குச குசநாபர் விருத்தாந்தம், பிரமதத்தன் குசநாபன் பெண்களை மணத்தல், விசுவாமித்திரர் கௌசிகி விருத்தாந்தம், கங்கை பார்வதிகளின் பிறப்பு, பார்வதி விருத்தாந்தம், குமாரக் கடவுள் அவதாரம், ஸகர சக்ரவர்த்தி, ஸகரன் அச்வமேதம், ஸகர குமாரர் கபிலரால் அழிதல், அம்சுமான் யாகப்பசுவைக்

கொணர்ந்தது, பகீரதன் தவம், பகீரதன் கங்கையைக் கொணர்ந்தது, பகீரதன் பிரமதேவன், விசாலை நகர விருத்தாந்தப் பாற்கடலைக் கடைந்தது, திதி தவஞ் செய்தல், ஸப்த மருத்துக்கள்

இவற்றுள் முதல் விருத்தாந்தமாகிய "குசகுசநாபர் விருத்தாந்தம்" முப்பத்திரண்டாவது ஸர்க்கமாகவும், கடைசி விருத்தாந்தமாகிய "ஸப்த மருத்துக்கள்" என்பதை நாற்பத்தேழாவது ஸர்க்கமாகவும் முறையே கணக்கிட்டுக் கொள்ளலாம்.

மேற்கூறியவை, வான்மீகி பகவானால் 16 விருத்தாந்தங்களாக விஸ்தாரப்படுத்திக் கூறப்பட்டிருக்குமானாலும் — அதாவது 16 ஸர்க்கங்களால் கூறப்பட்டிருக்குமானாலும் — அவற்றின் கதைத் தொடர்புபற்றிப் பிரித்தால், 6 விருத்தாந்தங்களிலே அடங்கிவிடும். எங்ஙனமெனில் கூறுவோம் :

(1) குசநாபன் கதை (2) கௌசிகீ கதை (3) குமாரக் கடவுள் அவதாரமகிமை. (4) கங்காவதரணக் கதை (5) விசாலை நகரக்கதை (6) கடல் கடைந்த கதை என்னும் தொடர்பில் வைத்து அடக்கலாம்.

கம்ப நாட்டாழ்வார்.

மேற்கூறிய 6 விருத்தாந்தங்களையும் கம்பநாட்டாழ்வார் கூறியிருக்கும் முறையை நோக்குவோமாக.

அவ் ஆறு விருத்தாந்தங்களில், முதலிரண்டு கதைகளைக் கம்பநாட்டாழ்வார், முன்படலமாகிய வேள்விப்படலத்தின் 6-ம் கவியிலிருந்து 14-ம் கவிவரையில் அதாவது 9 கவிகளில் சுருங்கச் சொல்லி விளங்கவைத்துளார் என்பதை முன்னரே குறித்துள்ளோம்.

மற்றைப்பகுதிகளில், "குமாரக்கடவுள் அவதாரம்" கம்பநாட்டாழ்வாரால் விஸ்தரித்துப்பேசப்படவில்லை. அதனை, நாம்

தற்போது எடுத்துக்கொண்ட படலமாகிய அகலிகைப் படலத்தின் 30-ம் கவியொன்றிலேயே ஊஹித்துணர வைத்திருக்கிறார். அக்கவி பின்வரும்.

" ஆய திவ்விடம் அவ்விடம் அவிர்மதி யணிந்த
தூய வன்றனக் குமைவயிற் றோன்றிய தொல்லை
வாயு வும்புனற் கங்கையும் பொறுக்கலா வலத்த
சேய் வளர்ந்தருள் சரவண மென்பதுந் தெரித்தான்."

இச்செய்யுள், விசுவாமித்திரர், இருவர் அரசிளங் குமாரர்களுடன் மிதிலைக்குப் போய்க் கொண்டிருக்கும் வழி நடையில் நேர்ந்த தோற்றங்கள், பலவற்றுள், ஒரு தோற்றத்தைப் பற்றிய செய்தி கூறியதாகிய பொருளுடையது.

இதன்பொருள்:—"இவ்விடம் = இந்த இடமானது, ஆயது = திதிதவஞ் செய்த செய்தியைப்பற்றியது; (இனி) அவ்விடம் = அதோ தெரிகின்ற அவ்விடமோ வெனில், அவிர்மதி அணிந்த தூயவன் தனக்கு = சிவபெருமானுக்கு, உமைவயின் தோன்றிய = உமாதேவியின் பொருட்டாக உதித்த — (மற்றும்) தொல்லை வாயுவும் புனற் கங்கையும் பொறுக்கலா வலத்த = பழைமையான வாயு பகவானும் நீர் நிறைந்த கங்கா நதியும் பொறுத்துக்கொள்ள வியலாத வலத்தையுடைய, சேய் = சுப்பிரமணியக்கடவுள், வளர்ந்தருள் = வளர்ந்தருளிய தாகிய, சரவணம் = நாணற்காடு, என்பதும் தெரித்தான் = என்பதையும் சொன்னான்.

இக்கவியில் அமைந்து கிடக்கும் ஒவ்வொரு சொல்லின் பொருளையும் சொற்களின் தொடர்புகளையும் கருதிக் கருதித் தேர்ந்து தேர்ந்து பொருத்திப் பொருத்திப் பொருள் செய்தால், காளிதாச மகா கவி செய்திருக்கும், குமாரஸம்பவ காவியத்தின் சுவையும் பொருளும் — அதாவது பார்வதி பரிணயமும் சுப்பிரமணியன் அவதாரமும் — மதனன் பாடும் - கிருத்திகா நக்ஷத்திரங்களின் மகிமையும் - பிறவும் புதை பொருளாக விரிந்து தோன்றி

வரக்காணலாம். விரிக்கிற் பெருகும். விசேட வுரையை தனிச் செய்யுள் ஆராய்ச்சியிற் கொள்வோம். இக்கவியில், உமை சேய் சரவணம் இவற்றின் சொற் பொருளைக் கதையோடிணைத்துப் பொருள் காண்க.

நிற்க, வான்மீகி பகவான் எடுத்துக்கூறிய 16 விருத்தாந் தங்களையும் நாம் சுருக்கிக் கூறிவந்த 6 விருத்தாந்தங்களில், கம்பர், வேள்விப் படலத்தில் வகுத்துக்கூறிய மூன்னிரண்டும், மேற்கூறிய கவியிற் கண்ட மூன்றாவதும் போக, நின்றுள்ளன மூன்றே விருத் தாந்தங்கள். அவை :—கங்காவதரணம் விசாலைநகரம் கடல் கடைந்தது என்னும் மூன்று கதைகளாம். இவற்றைக் கம்ப நாட்டாழ்வாரும் மிக விஸ்தாரமாகவே கூறியிருக்கிறார். கங்கா வதரணக் கதையில், சகரன் சாகரர் அம்சுமான் கபிலர் பகீரதன் பாகீரதி இவர்களின் சரித்திர விவரங்கள் நன்கு கூறப்பட்டிருக் கின்றன. இவ்விவரங்களைக் கவி, அகலிகைப் படலத்து, 32-ம் கவி முதல் 61-ம் கவிவரையில் அதாவது 30 கவிகளிற் கூறிப் போயிருக்கிறார்.

பின் ஐந்தாவது விருத்தாந்தமாகிய "விசாலை நகரக்கதை" யைக் கம்பநாட்டாழ்வார், அகலிகைப்படலத்து 62-ம் கவியில் மிகச் சுருக்கமாகக் குறித்திருக்கின்றனர். அக்கவி பின்வரும் :—

" என்று கூறலும் வியப்பினோ டுவந்தன ரிறைஞ்சிச்
சென்று தீர்ந்தனர் கங்கையை ; விசாலைவாழ் சிகரக்
குன்று போற்புயத் தரசன்வந் தடியிணை குறுக
நின்று நல்லுரை விளம்பிமற் றவ்வயின் நீங்கா."

இதன்பொருள் வெளிப்படை. இதிற் பொருந்திய செய்தி "விசாலை வாழ் சிகரக்குன்று போற்புயத்தரசன்" செய்திதான். இவனது விருத்தாந்தத்தை வான்மீகி பகவானுடைய விஸ்தார கதையால் தான் கொள்ள வேண்டுமென்று, கம்பர், வைத்திருக்

கிறார். இது வழிநூலுடையார்தம் மரபு போலும்; இம்முறை, கம்பராமாயணத்தில் பல விடங்களில் காணலாம்.

## வான்மீகி பகவான்.

விசாலா நகரத் தோற்றமும், அதிலாண்ட அரசர் மரபும், தற்போது ஆண்டு கொண்டிருக்கும் சுமதி மன்னன் பெருமையும் வான்மீகி பகவானால் விஸ்தாரமாகச் சொல்லப் பட்டிருக்கின்றன. வான்மீகத்தில், இந்த விசாலா நகர விருத்தாந்தமானது நாற்பத்தேழாவது ஸர்க்கத்தின் பிற்பகுதியிற் சொல்லப்பட்டிருக்கிறது; அதன் முற்பகுதியெல்லாம், 'திதி தவத்தால் தான் பெற்ற புத்திரன், தவத்தில் தனக்கு சிசுரூஷை புரிந்து கொண்டிருந்த இந்திரனால், ஏழுதுண்டங்க ளாக்கப் பட்டது தெரிந்து, விசாரம் கொண்டு, இந்திரனுக்குச் சொன்ன' சில செய்திகளைக் குறித்துக் கொண்டிருக்கின்றது. ஏனெனில், இதன் முன் ஸர்க்கமாகிய நாற்பத்தாறுவது ஸர்க்கத்தில், திதி தவஞ்செய்த செய்தியும், அத் தவத்தில் அவளுக்கு இந்திரன் கபடமாக சிசுரூஷை செய்துக்கொண்டிருந்த செய்தியும், பிறகு, திதி அசுசியாயிருக்கும் ஸமயம் பார்த்து, அவள் கருவை யிந்திரன் ஏழுதுண்டங்கள் செய்த செய்தியும், அத்துண்டங்களே சப்த மருத்துக்களாகத் தோன்றினர் என்னும் செய்தியும் விஸ்தாரமாகச் சொல்லப் பட்டிருக்கின்றது. அச்செய்தியின் தொடர்புதான், இந்த நாற்பத்தேழாவது ஸர்க்கத்தின் முற்பகுதியில் வைத்து ஓதப் பெற்றிருக்கின்றது. பிறகுதான் பிற்பகுதியில் விசாலா நகர விருத்தாந்தம் சொல்லப் பெற்றிருக்கின்றது. ஏனெனில், திதி தவம் செய்து கொண்டிருந்த இடமான குசப்லவனம் என்னும் இடந்தான் பின்பு விசாலா நகரமாயிற்று என்பது கதையின் தொடர்பாக இருக்கின்றது. ஆகையால், முற்பகுதி பிற்பகுதி இரண்டையும் குறிக்கும் நாற்பத்தேழாம் ஸர்க்கத்தையே ஈண்டு மொழிபெயர்த்து எழுதுகிறோம்.

"இங்ஙனம் தனது கருவை இந்திரன் ஏழு துண்டங்களாகச் செய்து விட்டதை யறிந்து, திதி துயரமடைந்து, தேவேந்திரனைப் பார்த்து, "இந்திரா! எனது அஜாக்கிரதையாலும் அசுசியாலுந் தான் இந்தக்கருவானது ஏழு துண்டமாக்கப்பட்டதை நான் ஒப்புக் கொள்ளுகிறேன். வீணான இக்கருவுக்கும் ஒரு மேன்மை யளிக்க வேண்டுகிறேன். அதற்கு உனது அனுக்ரஹத்தையும் அநுமதியையும் அளித்தல் வேண்டும்; என்னிடம் உண்டான இந்த ஏழு புத்திரர்களும், திவ்ய ரூபமுடையவர்களாகி வாதஸ்கந்தத்திற்கு அதாவது வாயு மண்டலத்துக்கு அபிமானி தேவதைகளாகி, ககனன் என்னும் பெயருடன் பிரம லோகத்திலும், ஸ்பர்சனன் என்னும் பெயருடன் இந்திர லோகத்திலும், வாயு என்னும் பெயருடன் விஷ்ணு பத மாகிய அந்தரிக்ஷத்திலும், அநிலன் பிராணன் பிராணேச்வரன் ஜீவன் என்னும் பெயர்களுடன் பூமியில் நான்கு திக்குகளிலும் உன்னால் அளிக்கப்பெற்ற "மாருத" ரென்னும் பொதுப் பெயர் கொண்டவர்களாகி ஸஞ்சரிக்கட்டும்" என்று பிரார்த்தித்தாள். இந்திரனும் ஸம்மதித்து "அப்படியே யாகட்டும்; உனது புத்திரர்கள் யாவரும் தேவத்வம் பெற்று, நீ கேட்ட படியே ஸஞ்சரிப்பார்களாக" என்று சொல்லி இந்திரன் தனது உலகம் சென்றான்."

என்று இக்கதையை இராமபிரானுக்கு விச்வாமித்திரர் சொல்லி, "அந்த இடம்தான் இது; அது இப்போது விசாலை என்னும் நாமத்துடன் விளங்கிக் கொண்டிருக்கின்றது. இந்த இடத்தில் நகரத்தை யுண்டாக்கினவன் பெயர் விசாலன் என்பது" என்று அச்செய்தியாகிய விசாலா நகர விருத்தாந்தத்தை விசாலமாகச் சொல்லுகிறார்.

"இக்ஷ்வாகு மன்னனுக்கு அலம்புஸை என்னும் மனைவியிடத்தில் விசாலன் என்னும் புத்திரன் பிறந்தான். அவன்தான் இந்த விசாலா நகரத்தை யுண்டாக்கினான்; அந்த விசாலனுக்கு ஹேமசந்திரனும், ஹேமசந்திரனுக்கு ஸுசந்திரனும், ஸுசந்திரனுக்கு தூம்ராச்வனும், தூம்ராச்வனுக்கு ஸ்ருஞ்ஜயனும், அவனுக்குப் பராக்ரமமும் ஸம்பத்தும் நிறைந்துள்ள ஸஹதேவனும், ஸஹதேவனுக்குப் பரம தார்மிகனான குசாச்வனும், குசாச்வனுக்கு தேஜஸ் மிகுந்த

ஸோமதத்தனும், அந்த ஸோமதத்தனுக்குக் காகுஸ்தனும் பிறந்து இந்த இடத்தைப் பரம்பரையாகப் பரிபாலித்துக் கொண்டு வாழ்ந்து வந்தார்கள். இப்போது இந்நகரைப் பரிபாலித்து வருகிற சுமதி யென்னும் பிரஸித்திபெற்ற அரசன், அந்தக் காகுஸ்தனுடைய குமாரன்தான். இந்த சுமதி யென்பவன் தேவரோடொத்த பராக்கிரமம் வாய்ந்தவன். இந்த வமிசத்து மன்னர்களெல்லாரும் வமிசத்தலைவரான இக்ஷ்வாகுவின் அனுக்கிரஹம் நிரம்ப பெற்றவர்கள்;"

"என்று விசுவாமித்திரர் கதையைச் சொல்லி, 'இன்று இங்கு தங்கிப்போவோம்' என்று அந்நகரத்தில் தங்கினபோது, இவர்களுடைய வரவை யறிந்து கொண்ட சுமதிமன்னன் புரோஹிதர்களுடனும் மற்றவர்களுடனும் வந்து, உபசரித்து, 'மாமுனிவரே! தாங்கள் என்தேசத்துக்கு விஜயஞ் செய்தருளித் தரிசனம் கொடுத்தது பற்றி மிகவும் சந்தோஷங் கொண்டு, உமது அநுக்கிரஹத்தையும் பெற்றேன்; நானே பாக்யசாலி என்று பல நல்லுரை பகர்ந்தான்."

இத்துடன் நாற்பத்தேழாவது ஸர்க்கம் முடிவு பெறுகிறது. இதற்குமேல் நாற்பத்தெட்டு நாற்பத் தொன்பது இரண்டு ஸர்க்கங்களும் அஹல்யா விருத்தாந்தத்தைக் கூறுகின்றன. நாற்பத்தெட்டாவது ஸர்க்கத்தின் பிரவேசத்தில், "விசுவாமித்திரர்க்கும் ஸுமதி மன்னனுக்கும் ஸ்ரீராமபிரானைப் பற்றிய ஸம்பாஷணைகளின், பெரும் பயனாக, ஸ்ரீராமனது அவதார மஹிமையும் பராக்கிரமமும் தனது யாகஸம்ரக்ஷணமும் முதலிய விருத்தாந்தங்களை ஸுமதிக்குக் கௌசிக முனிவர் விரித்துரைத்தார்" என்று ஆரம்பித்துப், பிறகு நடந்து போகையில், அஹலிகை இருந்த இடத்திற்கு வந்தபோது, "அஹல்யை நல்லுருவைப் பெற்று ஸ்ரீராமபிரானை யுபசரித்தாள்" என்று அவள் சரித்திரத்தைச் சொல்ல ஆரம்பித்தார் என்பதையும் வான்மீகி பகவான் விஸ்தாரமாகக் கூறுகின்றார்.

கம்பநாட்டாழ்வார்.

முன் நாம் குறித்துள்ளபடியாக, விசாலையைக் குறித்த கவியாகிய 62-ம் கவிக்குப்பிறகு, ஏழு கவிகளால் விதேக நாடாகிய

ஜனக சக்ரவர்த்தியின் நாட்டுச்சிறப்பை நன்கு கூறிப் பிறகு, எழுபதாவது கவியிலிருந்து எண்பத்தைந்தாவது எண்பத்தாறுவது கவிவரையில் அஹாலிகையின் விருத்தாந்த ஆராய்ச்சியைக் கம்பர் குறித்துப் பண்படுத்தியிருக்கின்றார். இதனை நன்காராய்ந்து நவில்வதற்கு எடுத்துக்கொள்வோமாக.

ஜனக சக்ரவர்த்தியின் நாடாகிய விதேக நாட்டைக் குறிக்கும் கவிகளாகக் கூறியிருக்கும் ஏழு கவிகளும் பின்வருவனவாம்:— விதேக நட்டினைக் கம்பர் மிதிலை நாடென்றே கூறுகிறார்.

அந்த ஏழுகவிகளும், முறையே, நாடு சோலை கழனி பொய்கை ஓடை குளங்கள் என்னும் ஏழு பொருள்களைக் கூறியிருக்கின்றன.

அந்த ஏழு கவிகளும் கீழே குறிக்கப் பெறுகின்றன:—

"பள்ளி நீங்கிய பங்கயப் பழனநன் றுறை
வெள்ள வான்களை களைவுறு கடைசியர் மிளிர்ந்த
கள்ள வாணெடுங் கண்ணிழல் கயலெனக் கருதா
அள்ளி நாணுறும் அகன்பணை மிதிலைநா டடைந்தார்"

"வரம்பில் வான்சிறை மதகுகள் முழவொலி வழங்க
அரும்பு நாண்மலர் அசோகுகள் அலர்விளக் கெடுப்ப
நரம்பி னுன்றதேன் தாரைகொள் நறுமல ரியாழில்
சுரும்பு பாண்செயத் தோகை நின்றாடுவ சோலை"

"பட்ட வாணுதல் மடந்தையர் பார்ப்பெனுந் தூதால்
எட்ட ஆதரித் துழல்பவர் இதயங்கள் வெறுப்ப
வட்ட நாண்மரை மலரின்மேல் வயலிடை மள்ளர்
கட்ட காவிகள் கட்கடை காட்டுவ கழனி"

"தூவி அன்னந்தம் இனமென்று நடைகண்டு தொடரக்
கூவு மென்குயில் குதலையர் குடைந்ததண் புனல்வாய்
ஓவில் குங்குமச் சுவடுற ஒன்றொடொன் றாடிப்
புவு றங்கினும் புள்ளுறங் காதன பொய்கை"

"முறையி னின்முது வேதியின் முலைவழி பாலும்
துறையி னின்றுயர் மாங்கனி தூங்கிய சாறும்
அறையு மென்கரும் பாட்டிய அமுதமும் அழிதேம்
நறையு மல்லது நளிர்புனல் பெருகலா நதிகள்."

"இழைக்கும் நுண்ணிடை இடைதர முகடுயர் கொங்கை
மழைக்கண் மங்கையர் அரங்கினில் வயிரியர் முழவம்
முழக்கும் இன்னிசை வெருவிய மோட்டிள மேதி
உழக்க வாளைகள் பாளையிற் குதிப்பன ஓடை."

படைநெடுங்கண்கள் உறைபுகப் படர்புனல் மூழ்கிக்
கடையும் முன்கடல் செழுந்திரு எழும்படி காட்டி
மிடையும் வெள்வளை புள்ளொடும் ஒலிப்பமெல் இயலார்
குடைய வண்டினம் கடிமலர் குடைவன குளங்கள்."

என, ஒரு நாட்டிற்குரிய அவசியமான ஏழையும் விரைந்து குறித்துளார். தமிழ்க் கவிஞர்கள் நாட்டுவளமும் நகர் வளமுங் கூறிப்பின்னர்த்தான், சிறப்பான அந்நகரத்தில் நிகழ்ந்த கதையினைத் தொகுத்தும் விரித்தும் கூறுவது வழக்காறாகும். அங்ஙனமே, நமது கவிச்சக்ரவர்த்தியும், கதாநாயகனாகிய ஸ்ரீராமபிரான் திருவவதரித்த நகரமாகிய அயோத்தியைச் சிறப்பித்துத் தனிப் படலமாக எழுதப் புகுமுன், நாட்டுப்படல மென்று, எடுத்துக் கொண்டு, கோசல நாட்டினைக் கூறும் முகமாக நாட்டுவர்ணனை செய்திருக்கிறார் என்பதனை முன்னமே அறிந்துள்ளோம்.

கம்பர்–நாட்டுப்–இறுதிச் செய்யுள் :—

"வீடு சேரநீர் வேலை கான்மடுத்
தூடு பேரினும் உலைவி லாதலம்
கூடு கோசலம் என்னும் கோதிலா
நாடு கூறினும் நகரம் கூறுவாம்"

அங்ஙனமே, கதா நாயகியாகிய சீதா பிராட்டியார் திரு அவதரித்து வளர்ந்து கொண்டிருக்கும் நகரமாகிய மிதிலா நகரத்

தின் வர்ணனையை, இதற்கடுத்த படலமாகிய மிதிலைக் காட்சிப் படலத்தின் முற்பகுதியில் சிலபாசுரங்களினால் நன்கு எடுத்துக் கூறியிருக்கிறார்; அப்பகுதியைப் பின்னர் எடுத்துக் கொள்வோம். அங்ஙனம் நகரம் கூறுவதற்குமுன் நாடு கூறவேண்டியது மரபாகலான், இந்த ஏழு கவிகளினும் நாட்டு வளத்தினை யொருவாறு கூறியிருக்கின்றார் போலும்; அயோத்திபோல் பிரதான நகரமாயின், அல்லது கோஸலம் போல் பிரதான நாடாயின் - தனித் தனிப் படலங்களால் வகுத்துக் கூறவேண்டுவது அவசியமாகும். மிதிலை உப நகரமாகவும், அம்மிதிலையைச் சூழ்ந்த நாடாகிய விதேகமும் அப்பிரதானமாகவும் கொள்ளப்பட்டுக் கிடப்பதால், சில பாசுரங்களாலேயே கூறியமைந்தனர் போலும்.

நாட்டின் வளப்பம் கூறுவதாயின், நாட்டை யலங்கரிக்கும் சோலைச் சிறப்பினையும், அச்சோலைகளை யிடை யிடையே கொண்டு நாட்டின் ஜீவனத்துக்குக் காரணமான உணவுப் பொருள்களைத் தந்தவிக்கும் துணைக்கருவியான கழனிகளையும், அக்கழனிகளாகிய நிலங்கள் வளம் பெறுவது நீரினாலாகலான் அந்நீரின் வளத்தை மிக்குடைய, இயற்கை யூற்றுக்களால் வளமுற்று விளங்கும் பொய்கைகளையும், அப்பொய்கைகளின் ஜீவ ஊற்றுக்கள் காய்ந்து போகாமல் எப்போதும் அவற்றுக்கு நீர்ப் பசையைத் தந்து கொண்டிருக்கும் ஜீவநதிகளையும், ஜீவ நதிகள் பெரும்பாலும் நகர் புறத்திற் பெருகியோடுவது இயற்கையாகலின், அந்நதி நீரினைக் காலின் வழியாக் குளங்களிலும் வேறு நீர்த்தேக்கங்களிலும் நிரப்பி வைத்தருவதற்கென்று ஆக்கப்பெற்று ஓடும் கால்களாகிய நீர் ஓடைகளையும், நீர் ஓடைகள் சிறுகால்களாகவே ஓடிவருமாகலின் அந்நீரினை வளம்பட நிரம்பத் தேக்கிப்பின்னர் மதகுகளின் வழியாகச் சுற்று மிருக்கும் கழனிகளை வளம்படுத்தும் ஸாதனங்களாகிய குளங்களையும் முறையே ஒவ்வொரு கவியாற் கூறிச் சுருங்கச் சொல்லி விளங்க வைத்திருக்கின்றார்.

ஏழு பாசுரங்களையும் இங்கு எடுத்துக் கொண்டு பொருள்

கூறின், வியாஸம் விரியும்; ஆகலான், அதற்கு உரிய இடமாகிய கம்பர் கவியும் உரையும் என்னும் பகுதியிற் பரக்கக் காணலாம்.

எனவே, இனி நாம் எடுத்துப் பேசவேண்டிய பொருள் அகலிகை விருத்தாந்தம் தான். இந்த விருத்தாந்தத்தை வான்மீகி பகவான், நாற்பத்தெட்டு நாற்பத்தொன்பதாவது ஸர்க்கங்களில் கூறியிருக்கின்றாரென்பதையும், நாற்பத்தெட்டில் அகலிகை சாபம் பெற்ற செய்தியையும், நாற்பத்தொன்பதில் அவ்வஹலிகை சாப விமோசனம் பெற்ற செய்தியையும் குறித்திருக்கின்றாரென்பதையும், அந்த நாற்பத்தெட்டிலும் முற்பகுதியெல்லாம் ஸ்ரீராமபிரான் முதலிய மூவரும் பிறரும் கௌதம ரிஷியினுடைய ஆச்ரமம் இருக்கும் பிரதேசத்தில் நுழைந்தாரென்பதைச் சொல்லிப் பிற்பகுதியில்தான் அகலிகை விருத்தாந்தத்தை யெடுத்துக் கொண்டிருக்கிறார் என்பதையும் முன்னமே குறித்துள்ளோம்.

அகலிகை விருத்தாந்தத்தைக் கூறுவதற்கென்றெடுத்துக் கொண்ட கம்பநாட்டாழ்வார், வான்மீகியின் அபிப்பிராயத்துக்குச் சிறிது மாறுபட்டு, வேறு சில ஆதாரமான பிரமாணங்களைத் தேடி யாராய்ந்து, அப்பல ஆதாரங்களின் படியே, அகலிகை விருத்தாந்தத்தில் சில மாறுதல்களைச் செய்து திருத்தியிருக்கின்றாரென்பது விளங்குகின்றது.

இருபெருங் காவியங்களையும் ஒருங்கு வைத்து ஓதி இந்த விருத்தாந்தத்தை யாராய்வார்க்கு இவ்வுண்மை புலனாகும்.

இந்த விருத்தாந்தச் செய்திகளை நன்கு அலசி ஆராய்வதற்குக் கம்ப நாட்டாழ்வார்க்கு, வான்மீகத்தினும் வேறு பிரமாணங்களாக இருந்தவை, பிரமவைவர்த்த புராணமும் வராஹ புராணமும் பாத்ம புராணமும் ஆம் என்பது விளங்குகின்றது.

இந்திரன், அகலிகையின் வீட்டில் பிரவேசித்த செய்தியைக் கூறுவதில், கம்பர், வான்மீகியினும் மாறுபட்டிருக்கிறார். இந்த மாறுபாட்டிற்கு உதவி செய்தது பிரம வைவர்த்த புராணமாகும்.

இந்திரனுக்குக் கௌதம ரிஷியிட்ட சாபச் செய்தியிலும் கம்பர்க்கும் வான்மீகர்க்கும் வித்யாஸ முண்டு. இந்த வித்யாஸத்துக்கு உதவி செய்தது வராஹ புராண மாகும்.

கௌதமர் அகலிகைக்கிட்ட சாபச் செய்தியிலும், கம்பர், வான்மீகியில் மாறுபட்டுப் பாத்ம புராணக் கூற்றினையும் உலக வழக்கையும் ஒத்துக் குறித்திருக்கிறார்.

இந்திரனை இந்திரனென்று, தெரிந்து கொண்டே அகலிகை யவனுடன் கூடியிருந்து கற்பழிந்தாளென்கிறார் ஸ்ரீ வான்மீகி பகவான்.

இந்திரனது வேடத்தினால், மயங்கித் தனது பர்த்தா வாகிய கௌதம ரிஷியென்றே மனத்தில் மதித்து, கணவனுக்கு மனைவி வசப்பட்டிருக்க வேண்டிய முறையில் அடங்கி வசப்பட்டிருந்து கற்பழிந்தாளென்கிறார் கம்ப நாட்டாழ்வார். இந்த உண்மை பிரம வைவர்த்த புராணத்தினால் நன்கு விளக்க முறுகின்றது.

இதனால் இந்திரனது மோசக்கருத்தும் அகலிகை வஞ்சிக்கப் பெற்று ஏமாறிய செய்தியும் வெளியாகின்றன.

தனது பர்த்தாவாகிய கௌதமர்தா னென ஒருப்பட்டு அவரைத் திருப்தி செய்வதற் கென்று, பிரவேசித்த அகலிகை, லீலா சேஷ்டைகளினால் ஐயங் கொண்டு, மறு பிரவேசத்துக்கு இடங்கொடாது மறுத்துத் தாழ்த்திருந்தன ளென்றும், அப்போது தான் உண்மைக் கௌதமர் பிரவேசித்தாரென்றும் கம்பர் கூறியிருக்கின்றார். மன மறிந்த பின்னர், அத்திச் செயலுக்கு அகலிகை யொருப்படாமலிருந்ததினாலேயே, அவளை, நெஞ்சினால் பிழைப்பில்லாதவள் என்று கம்பர் துணிந்து கூறியிருக்கிறார் என்பது ஊஹிக்கப்படுகின்றது.

"நெஞ்சினாற் பிழைப்பிலாளை நீயளித் திடுதி யென்ன"
என்றார். பால - அகலிகை - 84-ம் செய்யுள்.

இந்திரனைக் கௌதமர், சாபமிட்ட செய்தியில்,

வான்மீகிபகவான் :—

"அடா மதிகேடனே! நீ எனது வேஷங் கொண்டு செய்யத் தகாத இச்செயலைச் செய்தனை யாகையால், உனது அண்டங்கள் இரண்டும் அற்று நபும்ஸகனைப் போலிருப்பாயாக"

என்று கூறியிருக்கிறார்.

இதனால், இந்திரன் கௌதம வேஷத்துடன்தான் பிரவேசித்தான் என்பதையும், அதனால், அகலிகை, அவ்வேஷத்தைக் கணவனென்றே கருதி மோசம் போயினளென்பதையும் வான்மீகி பகவான் ஒப்புக் கொள்கின்றாரென்பதும் தெளிவாகிறது.

இந்தச் செய்தியைக் குறிக்கும்போது,

கம்ப நாட்டாழ்வார்,

"புரந்தரன் நடுங்கி யாங்கோர் பூசையாய்ப் போக லுற்றான்"

என்றும், பின்னர்,

"தீவிழி சிந்த நோக்கிச் செய்ததை யுணர்ந்து வெய்ய
தூயவன் அவனை நின்னைச் சுடுசரம் அனைய சொல்லால்
ஆயிரம் மாதர்க் குற்ற அறிகுறி யுனக்குண் டாகென்
றேயினன் அவையெ லாம்வந் தியைந்தன இமைப்பின் முன்னம்."

என்றும் கூறியிருக்கிறார்.

கௌதமர், அகலிகைக்கிட்ட சாபச் செய்தியில்,
ஸ்ரீவான்மீகி பகவான் :—

"நீ இவ்வாச்ரமத்தில், அநேக மாயிரமாண்டுகள் வாயு பக்ஷணம் செய்து கொண்டு, அந்ந பாநாதிகளின்றி வருந்திக் கொண்டு, இப் புழுதியிற் புரண்டுருண்டு, எத்தகைய பிராணிக்கும் புலப்படாதவளாகி வஸித்திருப்பாயாக."

என்கிறார்.

இச் செய்தியைக்

கம்ப நாடாழ்வார் :—

" எல்லையில் நாணம் எய்தி யாவர்க்கும் நகைவந் தெய்தப்
புல்லிய பழியி னோடும் புரந்தரன் போய பின்றை
மெல்லிய லாளை நோக்கி விலைமகள் அனைய நீயும்
கல்லியல் ஆதி யென்றான் கருங்கலாய் மருங்கு வீழ்வாள்."

என்று குறித்திருக்கிறார்.

இனி, மற்றொரு மாறுபாட்டைப் பற்றியும் இங்கே குறிக்க வேண்டியது அவசியமாகின்றது. அதாவது, கௌதம ரிஷியினால் சாபம் பெற்று நாணத்துடன் சென்ற இந்திரன், தன்னை கண்டு வருந்திய தேவர்களை நோக்கித், " தான் இந்த இழிசெயலைச் செய்ததற்குக் காரணம் தேவர்களின் நன்மையைக் கருதினமை தான் " என்று கூறினான் என்பதை,

ஸ்ரீ வான்மீகி பகவான் :—

" கௌதமருடைய சாபத்தினால் அண்டங்கள் அற்றுப் பொலிவழிந்து வருந்திவந்த இந்திரன், அக்கினி முதலான தேவர்களை நோக்கி, " தேவர்களே !" கௌதம முனிவர், எல்லாத் தேவர்களையும் தந்தம் பதவிகளிலிருந்து நழுவச் செய்யும்படியான கோரமான தவத்தைச் செய்து கொண்டிருப்பதால், அவருக்குக் கோபத்தை யுண்டுபண்ணி, யவரது தவத்தை நிறைவேறுமற் செய்து, " உங்களை யெல்லாம் காப்பாற்றும் பொருட்டு இந்தகைய இழிவான காரியத்தைச் செய்தேன்." இப்படி நான் செய்த காரியம் தேவர்களின் பொருட்டே யன்றி வேறன்று. அதற்காக அந்த முனிவர், எனக்கு இந்தக் கடுமையான சாபத்தைக் கொடுத்திட்டார். தேவர்களே! உங்கட்குச் சகாயம் செய்யும் பொருட்டு இக்கடும் சாபத்துக்காளான என்னைச் சாபத்தீங்கு ஒழியும்படியாகச் செய்ய வேண்டியது உங்கள் கடமையல்லவா ? என்றான்."

என்று கூறியிருக்கிறார்.

இச்செய்தியை யெடுத்து நாம் ஆராய்வதற்கு முன்னர், "இந்திரன் அகலிகையினுடைய மனையில் பிரவேசித்த செய்தியைப் பற்றி ஸ்ரீ வான்மீகி பகவான் கூறியிருப்பதாகத் தெரிவிக்கும்

பாகங்களையும் படித்துவிட்டு ஆராயப் புகுவோம். அச்செய்தி பின் வருகின்றது.

வான்மீகி பகவான் :—

ஸ்ரீ ராமபிரானைப் பார்த்து விசுவாமித்திரர் சொல்லுகிறார்:—

"தவத்தால் பெருங்கீர்த்தி பொருந்திய அந்தக் கௌதம முனிவர், தமது பத்தினியாகிய அகலியையுடன் கூடிப்பல ஆண்டுகள் இந்த ஆச்ரமத்தில் நல்ல இல்லறம் நடத்தித் தவஞ் செய்து கொண்டிருந்தார். ஒரு காலத்தில் இந்திரன், அந்த முனிவர் இல்லாத தொரு சமயம் பார்த்து, அந்தக்கௌதம முனிவரைப் போலவே வேடம் புனைந்து கொண்டு, மனைக்குள் வந்து, அஹலியைப் பார்த்து, ஏ! மடந்தையர் மணியே!! காமம் மீறிப் போகத்தில் இச்சையுள்ளவர்கள், இஷ்டப்படியே கிரீடிப்பார்களேயல்லாமல், ருது காலத்தை யெதிர் பார்த்திருக்கமாட்டார்கள்; குறையின்றி அழகையெல்லாம் திரட்டி யெடுத்துப் பிரமன் உண்டாக்கிய உன்னைக் கண்டால் எவர் மனந்தான் தளராதிருக்கும்? நான் இப்போதே உன்னைச் சேர விரும்புகிறேன் என்று வேண்டிக் கொண்டான்"

என்று பின்னும்,

"அப்போது, அஹலியை, தனது கணவராகிய மஹரிஷி, இப்படி ஒருபோதும் விரும்பிக் கேட்டதில்லை. இந்திரன் தான் வெகு நாட்களாக என்னை விரும்பியிருப்பதாகக் கேள்வி; "ஆயிரங் கண்ணனுகிய இந்திரனே, முனி வேடங் கொண்டு வந்திருத்தல் வேண்டும்." என்றறிந்து கொண்டு, அவனைச் சேர்வதில் மனங் களித்துச் சம்மதித்து, அவனுடனிருந்தனுபவித்துப் பின், மன மகிழ்ச்சியுடன், இந்திரனைப் பார்த்து, "வானவர்க்கரசனே! நான் உன்னல் நல்லின்பம் பெற்றுப் பயனடைந்து மகிழ்ந்தேன்: விரை வில் இவ்விடம் விட்டு யாவர்க்கும் தெரியாமல் வெளியே செல்வா யாக; நீயோ தேவர்க்கதிபதி; யாவர்க்கும் பெருமையளிக்கும் உனது பதத்தையும் என் நிலைமையையும் பாதுகாத்துக்கொள்: விரைவில் வெளியே போய்விடு" என்றாள்.

இந்திரனும், அவ்வார்த்தையைக் கேட்டு, அவளைப்பார்த்து, மங்கையர்க்கரசியே! உனது சேர்க்கையால் நான் மிகவுங் களிப்

படைத்தேன். இனி இங்கு நிற்கமாட்டேன்; இதோ இந்த நிமிஷமே வந்த வழியைப் பார்த்துக்கொண்டு போகிறேன் " என்று சிரித்துச் சொல்லிக்கொண்டு " ரிஷி வந்து விடுவாரோ " என்னும் பயத்துடன் அவ்வாச்ரமத்தினின்றும் வெளிவந்தான்.

என்றும் கூறியிருக்கிறார்.

முன்னம் குறித்திருக்கிற — அதாவது தேவர்களுடன், இந்திரன், தனது, இந்த இழி செயலுக்குக் காரணமாயிருந்ததொரு செய்தியைப் பற்றிக் குறித்திருப்பதாகக் கூறியிருக்குட செய்தியுடன், இந்தச் செய்தியையும் — இதிலும் கடைசியாக ஆகிய " ரிஷி வந்து விடுவரோ!" எனும் பயத்தினால் வெளியேறினான் " என்னும் செய்தியையும் பொருத்தி யாராயவேண்டியிருக்கிறது.

மற்றும், உலகுயிர்கட்கு அதிகரித்த பதவிகளை வகுத்தவர்களாகக் கவுரதந்தந்து புராணங்கள் பெருமைப் படுத்திக் கூறும் உயர்ந்த ஸ்தானம் வகித்த தேவர்கட்குத் தலைவனாகிய ஒரு பேரதிகாரி, இங்ஙனம் இவ்விழிதுறையில் இறங்கினமைக்கு ஏதேனும் முக்கியத் தொடர்பான காரணமும் உண்டோ என்னில், அக்காரணமும் இருக்கின்றதென்பது, ஸ்ரீ வான்மீகத்தில் காணப்படுகின்றது. அஃது என்னெனின்,

வான்மீகி பகவான்.

" உலகப் படைப்பிலுற்ற அழகெலாந் திரட்டி யொரு பெண்ணுருவைச் சமைத்த பிரமன், அதற்கு அஹல்யை என்று பெயரிட்டு வளர்த்து வந்து, அவளை யாருக்கு மனைவியாக்கலாமென்பதை ஆலோசித்துக் கொண்டிருந்தார். (ஹல் = அவலக்ஷணம்; ஹல்யா = அவலக்ஷண முடையவள்; ந + ஹல்யா = "அஹல்யா" = அவலக்ஷணம் நீங்கினவள் என்பது பொருளாம்) தேவேந்திரன் தனது உயர்ந்ததொரு அந்தஸ்தையும் அதிகாரத்தையும் நினைத்துக் கர்வங் கொண்டு அவ்வழகி தனக்கே மனைவியாதல் வேண்டுமென நினைந்து, அதனைக் குறிப்பால் பிரமனுக்கும் உணர்த்தித் தனக்கே அப்பெண்ணரசி கிடைப்பாளென எண்ணியிருந்தனன்.

ஆகலான், அவளைத் தன் மனைவியாகவே பாவித்திருந்தான். இதனைக் குறிப்பினுணர்ந்த பிரமன், அப்பெண்ணரசியைத் தன் வசமிருந்து விலக்கி, யவளைப் பாதுகாக்கும் உரும்படியாகக் கௌதம மஹா ரிஷியிடம் சிலகாலம் ஒப்பித்திருந்தார். சில ஆண்டுகட்குப் பின், கௌதமர், அப்பெண்ணினைப் பிரமனிடமே திரும்ப ஒப்பித்து விட்டார். கௌதமருடைய பொறுமை வைராக்கியம் சீலமிவை நன்கு மதித்த பிரமன், அப்பெண்ணரசியினுக்குரிய நாயகன் கௌதமர் தானெனத் தீர்மானித்து, அஹலிகையைக் கௌதமருக்கே விவாஹம் செய்து கொடுத்து விட்டனர். முனிவரும் அஹலிகையும் சில்லாண்டுகள் சுகவாழ்க்கையுடன் இல்லறத்தை இனிது நடத்தி வந்தார்கள். தான் கருதியிருந்த பெண்ணை மணந்து தன்னை யவமானத்துக்காட்படுத்திய கௌதமர்பால் தோன்றிய த்வேஷத்தாலும், பெண்மணி அஹலிகைபாற் பிறந்துடைய காமத்தாலும், இந்திரன், மனம் பொங்கிக் கௌதமரை யவமதித்திடுதல் காரணமாக, அஹலிகையைக் கற்பழித்திடல் வேண்டுமென்னும் கருத்துடன், பலகாலம் பல்வகையிலும் முயன்று கொண்டிருந்தான்.

— வான்மீகி ராமாயணம் — உத்தரகாண்டம்.

எனவே, "இந்திரன் அஹலிகையைக் கருதிப் பலநாட்கள் முயன்று கற்பழித்தான்" என்பதே வான்மீகி பகவானுடைய கூற்றாகவும் நன்கு வெளியாகின்றது. அன்னமிருக்க, இந்திரன் தேவர்களிடம், இந்த இழி செயலுக்குக் கூறியிருக்கும் காரணம் பொருந்தாதிருத்தலை யுணர்கின்றோம்.

இவ்வெல்லாவற்றையும் நன்கு கவனித்த கம்பர், "வான்மீகி பகவானுடைய வாக்குகளைக் கொண்டே அம்மஹானது உட்கிடக்கையை யுணர்ந்து, "வான்மீகி, அஹலிகைபாற் குற்றம் கொண்டிலர்" என்பதை யூகித்து, வான்மீகி ராமாயணத்தில் இடைச்செருகலாக "அஹல்யைபாற் குற்றம்" தோன்றும்படி செய்திருத்தல் கூடுமென்பதைத் தீர்மானித்து, வேறு பல ஆதாரங்களையும் தேடித் தெளிந்து, அஹலிகையை "நெஞ்சினாற் பிழைப்பிலாள்" என்று உணர்த்தினர். அக்கூற்றுக்குத் துணையான, பிரம்ம வைவர்

த்தபுராணம் வராஹபுராணம் பாத்மபுராணம் என்னும் இவற்றின் போக்கிலேயே, அஹலிகை சரித்திரத்தை விஸ்தரித்துரைத்து இராம சரிதத்துக்குப் பெருமை கொடுத்திருக்கிறார்" என்பது ஊஹிக்கப்படுகின்றது.

இனி, கம்பநாட்டாழ்வார், அஹலிகை சரித்திரத்தைச் சொல்லும் முறையைத் தொடர்ந்து கூறுவோமாக.

கம்பராமாயணம்—அகலிகைச்செய்தி.

கம்பநாட்டாழ்வார், அகலிகைச் செய்தியாகிய இக்கதையைத், தர்மத்தையும் இயற்கையையும் நோக்கி, மேற்கூறிப்போந்தவாறு பல்வேறு புராணங்களையும் நாடிப் பின்வருமாறு திருத்தியெழுதியிருக்கிறார்; அச்செய்தி பதினறு பாசுரங்களால் அமைக்கப்பெற்றிருக்கின்றது; அப்பதினறு பாசுரங்களையும் தனித்தனியே ஆராய்வோமாக:—

1. "இனைய நாட்டினை இனிதுசென் றிஞ்சிசூழ் மிதிலை
புனையும் நீள்கொடிப் புரிசையின் புறத்துவந் திறுத்தார்
மனையின் மாட்சியை அழித்திழி மாதவப் பன்னி
கனையும் மேட்டுயர் கருங்கலோர் வெள்ளிடை கண்டார்."

இதன்பொருள்:—(முன் ௲௦௪, ௲௦௫ பக்கங்களிற் குறிக்கப்பெற்றிருக்கும் ஏழுபாசுரங்களாற் கூறப்பெற்றபடியே, பல்வகைச் சிறப்பும்பொருந்திய) - "இத்தன்மையான விதேக நாடாகிய மிதிலைநாட்டினை யினிமையாகவே கடந்துபோய்,ப், பிறகு, மதில்களாற் சூழப்பெற்று அலங்காரத்துடனிருக்கும் நீண்டகொடிகளையுடைய மிதிலா நகரத்தின் புறத்திலேவந்துசேர்ந்து தங்கினார்கள்; அங்கு "மனையின் மாட்சியை அழித்துக்கெடுத்துத் தானும் கற்பினின்றும் இழிந்திருக்கிற - (மாதவத்துக் கௌதமர் பத்னியாகிய) அகலிகையினுடைய வடிவம், நெருங்கிய மேடாகிய பிரதேசத்தில் உயர்ந்த கருங்கல் உருவமாக நின்றிருந்ததை "ஓர்பரந்த இடத்திற் பார்த்தனர்" என்பதாம்.

இச்செய்யுளால், கவியினுடைய குறிப்பாக, "அகலிகை கற்பழிந்தாளென்பதையும், அதனால் இல்லறத்துக்கே ஓர் கேட்டைச் சூழ்ந்தாளென்பதையும், கௌதமர் மஹாதபஸ்வி என்பதையும், அவரதுசாபம் அகலிகையைக் கல்லாக ஆக்கிவிட்டதென்பதையும்" விளக்கமாகப் பெறுகிறோம்; இச்செய்யுள் கவிக் கூற்றாகலின், இச்செய்தியும் கவி இருதயந்தானென்பதையும் அறிகிறோம்.

ஆனால், அகலிகை, "மனமறிந்து கெட்டனளா? அன்றி, மோசம் போய் வல்லான் ஒருவனால் ஏமாற்றப் பெற்றுக் கெட்டனளா?" என்பதொன்றை நமது கவியின் இருதயமறிந்து ஆராய வேண்டியிருக்கின்றது.

அவ்வாராய்ச்சிக்கு இனிவரும் செய்யுட்கள் சான்று கூறும்; அவற்றிலும் வைத்து அடுத்து வருஞ்செய்யுள் ஒரு சூத்திரபாகமாக அமைந்து கிடத்தலை நன்கு கவனிப்போமாக.

2. "கண்ட கல்மிசைக் காகுத்தன் கழற்றுகள் கதுவ.
உண்ட பேதைமை மயக்கற வேறுபட் டுருவம்
கொண்டு மெய்யுணர் வவன்கழல் கூடிய தொப்பப்
பண்டை வண்ணமாய் நின்றனள் மாமுனி பணிப்பான்."

இச் செய்யுள், ஸ்ரீராமபிரானது திருவடித்துகள்களால், அகலிகை தனது கல்லுரு நீங்கி நல்லுருப் பெற்ற தன்மையைக் கூறுகின்றது :—

பதப்பொருள் :—கண்ட — அம்மூவரும் பார்த்த, கல்மிசை — அந்த அஹலிகையின் கல்லுருவின்மேல், காகுத்தன் - ஸ்ரீராமபிரானது, கழல் துகள் கதுவ - பாததூள்கள் பட்டிடவே, உண்ட - முன்னம் இந்திரனோடிருந்தனுபவித்த, பேதைமை மயக்கு அற - அறியாமையினால் மயங்கியதாகிய மயக்கம் நீங்கிடவே, உருவம் - அந்தக்கல் உருவம், வேறுபட்டு - மாறி, அவன் - உலகறிந்ததொரு பெருமானாகிய கடவுளினுடைய, கழல் கூடியது ஒப்ப - பாதாரவிந்தங்களின் ஸ்பரிசம் தொடர்ந்தது போலவே, மெய்

உணர்வு கொண்டு - உண்மை அறிவு பெற்று, பண்டை வண்ணமாய் - முன்னர்க்கொண்டிருந்த பத்தினியாக இருந்த பாதிவ்ருத்திய தன்மையாகவே, நின்றனள் - அந்த அஹலிகை நின்றாள்' (அதை யறிந்த) மாமுனி = மகாமுனிவராகிய விசுவாமித்திரர், பணிப்பான் = (அவள் தன்மையைப்பற்றிச்) சொல்ல ஆரம்பித்தார்.

குறிப்பு:—"உலகறிந்த கடவுட்டன்மை யுடையாருடைய பாதாரவிந்தத் தொடர்பு பெற்றார்க்கு, (1) உண்ட பேதைமை மயக்கு அறும்; (2) உருவம் வேறுபடும்; (3) மெய்யுணர்வு தோன்றும்; (4) பண்டை வண்ணம் பெறலாகும்" என்பது போலவே, "அஹலிகையின் கல்லுருவத்தின்மேல், காகுத்தனாகிய ஸ்ரீராமபிரானது ஸ்ரீபாதத்தூசள் படிந்தவுடனே, அஹலிகைக்கு, (1) இந்திரனுடன் அறியாமையால் முயங்கிய மயக்கம் அறுபட்டது; (2) கல்லுருவம் நல்லுருவமாக மாறுபட்டது; (3) உண்மை அறிவு தோன்றியது; அதனால், (4) முன்னைய வண்ணமாகிய பாதிவ்ருத்திய நிலைமை பெற்றாள்;" என்பது திரண்ட கருத்தாக கொள்ளப்படுகின்றது. "பண்டை வண்ணம்"- என்று இங்குக் குறித்துள்ளது போலவே, மேல், அ௫-ம் கவியிலும் "முன்னை வண்ணத்த ளாகிநின்றாள்" - என்கிறார்; இத்தொடரின் உட்கிடையை உணர்ந்தே போலும், உத்தர காண்டத்தாசிரியரும், இராமாயண பூர்வகாண்டக்கதைகளைச் சொல்லி வரும்போது, வந்துள இந்த அஹலிகைச் செய்தியில், "பண்டைமாணிறம் அஹலிகை பெறப்பணித் தருளி" என்று குறித்திருக்கிறார்; ஆகலின், இந்தப் பண்டை வண்ணத்தில் ஏதோ ஒரு சிறப்புப் பொருளினை யாசிரியர்கள் கவனிக்கின்றார்கள் என்பது தோன்றுகின்றது.

எனவே, இச் செய்யுளில், "மாதவப்பன்னி, காகுத்தன் சழல்துகள் கதுவலால், "முன்னைம் பேதைமையால் அநுபவித்த மயக்கமற்றாள்; உருவம் வேறுபட்டாள்; மெய் உணர்வு கொண்டாள்; பண்டைய வண்ணமாய் நின்றாள்." என்னும் உண்மை வரிசைகளை ஆசிரியக் "கம்ப நாட்டாழ்வார்" குறித்துப் போயிருக்கிறாரென்பது போதமாகின்றது.

"மெய்புணர்பவன் கழல்கூடிய தொப்ப" என்பதொரு பாடபேதம் உண்டென்று கூறுவர்; அந்தப் பாடத்துக்கு, "கண்டகல் மிசைக்காகுத்தன் கழல்துகள் கதுவலே, மெய்புணர்பவன் கழல் கூடியதொப்ப, உண்ட பேதைமை மயக்கற்று, வேறுபட்டு, உருவங் கொண்டு, பண்டை வண்ணமாய் நின்றனள்" - என்பது பொருளாகக் கொள்ளக்கடவது; இந்தப் பாடமும் ஆசிரியர் கருத்தை மாறுபடாதமுறைபிற்காட்டி நிற்கின்றது காண்க.

இனி, மேலே, கவனிப்போம்.

## வேறு.

3. "மாயிரு விசும்பில் கங்கை மண்மிசை இழித்தோன் மைந்த
மேயின உவகை யோடு மின்னென ஒதுங்கி நின்றாள்
தீவினை நயந்து செய்த தேவர்கோன் தனக்குச் செங்கண்
ஆயிரம் அளித்தோன் பன்னி அகலிகை ஆகும் என்றான்."

இதன் பொருள் :—"அகன்ற பெரிய ஆகாயத்திலிருந்து கங்காநதியைப் பூமியில் இறக்கிவரச் செய்தவனாகிய பகீரத சக்ரவர்த்தியின் குலத்தில் தோன்றியவதரித்துள்ள ஸ்ரீராமபிரானே! பொருந்திய உள்ளக்கிளர்ச்சிகொண்டு வியத்துடன் ஒதுங்கி, மின்னல்போலும் உருப்பெற்று நின்றிருப்பவளாகிய இந்தமாது, (யாவளென்னில்) "கெட்டகாரியத்தை வேண்டுமென்றே விரும்பிச் செய்தழிந்தவனாகிய தேவேந்திரனுக்குச்" சிவந்த கண்கள்போலுங் குறிகளையாயிரமாக, அவ்விந்திரனுடைய உடலிற் பொருந்தும்படி சாபத்தினாற் கொடுத்தவனாகிய - கௌதம முனிவருடையபத்தினி அகலிகை யென்பாள் ஆகும்" என்று சொன்னார்.

குறிப்பு :—இக்கவியின் முன்னிரண்டடிகளிலும், ஸ்ரீராம பிரானுதித்துள்ள குலமாகிய சூரியகுலமே, பிறருடைய சாப - பாப - தாபங்களை நிவர்த்திசெய்யும் குலமென்பது விளக்கப்பட்டது; "இவர்குலத்தில் ஒருவனாகிய பகீரதச்சக்ரவர்த்தி யென்பான், வெகு பலப்பிரயத்தனங்களைச் செய்து - பாதலத்திற் சாம்பராக

வீழ்ந்து கிடந்த தமது மூதாதைகளாகிய அறுபதினாயிரஞ்சகரர் களையும், பாப - தாப - சாபங்களினின்றும் கரையேற்றற்பொருட்டு - "ஆகாய கங்கையைப் பூமிக்குக் கொணர்ந்தவன்" என்பது உண்மையாம் என்ப; அதுபோல நீயும், உனது பாதத்தூள் களால், இம்மாது சிரோமணியின் சாபத்தைப்போக்கிக்கல்லுருவை நீக்கி நல்லுருவளித்தாய்; ஆதலால், இஃது உனது வம்சாசாரம் போலும் என்று குறித்தாரென்க.

"மின் என ஒதுங்கி நின்றாள்" - என்றது, "அஹலிகையினு டைய - கழிந்த செயலில் இறக்கும் உணர்ச்சியும், பண்டைய பாதிவ்ருத்திய நற்குணச் செய்கையும்" விளங்குதற்குப்போலும்.

"தீவினை நயந்து செய்த தேவர்கோன்" - என்னும் குறிப்பி னுக்குப் பொருள்தர வேண்டிய அவசியமேயில்லை; இவன் செய்த அக்ரமச் செயலில், நமது கவியரசற்குத் - தோன்றியிருக்கும் உள்ளத்தின் வெறுப்பை, இந்தக் குறிப்பினால் - அதாவது. விசுவாமித்திரர் வாக்குக் குறிப்பினால், நன்கு காணலாகும்; மற்று மொன்று இங்குக் கவனிக்கத்தகுந்தது; கம்பர், "இந்திரனை யக்கிரமச் செயல் செய்தவனென்று குறித்திருக்கின்றார்" அன்றி, "மாது அஹலிகையை மனம் கெட்டவளென்று குறித்திடவில்லை" யென்பது ஊஹித்துணர வைக்கப்பெற்றிருக்கின்றது; அக்குறிப்பு, "மின் என ஒதுங்கி நின்றாள்" - என்னும் கௌரவ வாசகத்தினா லேயே வற்புறுத்தப் பெற்றிருக்கின்றதை நன்கு உணரலாம். ஆனால்;

வான்மீகி பகவான்

இச் செய்தியைக் குறிக்கும் போது, அஹல்யையைப் பற்றி, விசுவாமித்திரர் வாக்கினில் வைத்து,

"மதிம் சகார துர்மேதா
தேவ ராஜ குதூஹலாத்" — என்று,

"இந்திரன் வெகு நாட்களாக என்னை விரும்பியிருப்பதாகக் கேள்வி; ஆதலால், இவன், "ஆயிரங்கண்ணை"யுடையதேவேந்திரனே முனிவேடங் கொண்டு வந்தவனாதல் வேண்டும்: என்று அறிந்து, அவ்வானவர்க்கரசனாகிய இந்திரனுடன் சேரல் வேண்டும் என்னும் "குதூஹலம்" கொண்டு, "மதிமயங்கிச் சம்மதித்து" அவனுடன் இருந்தாள்."

என்று குறித்திருக்கிறார் என்பது, இன்று நாம் காணும் வான்மீகி ராமாயணத்தினால் தெரிகின்றது; ஆயின், நாம், முன்னைய பக்கங்களில் ஆராய்ந்து குறித்துள்ளபடியாக, இச் செய்தி, வான்மீகத்தில் இடைச் செருகலாக இருக்கலாம் என்பதே உறுதியாம் என்க.

"செங்கண் ஆயிரம்" - என்றது இடக்கர் அடக்கலாய், நின்றிருக்கின்றது; ஆயின், "அவை கண் அல்ல புண்ணே" யென்பது வெளிப்படை.

இங்குக் குறித்த இந்தச் சாபத்தைப் பற்றி, மேல்வரும், இப்படலத்தின் ௭௮-ம் செய்யுளாகிய, "தீவிழி சிந்த" என்னும் தலைப்புடைய கவிக்குறிப்பினில் ஆராய்வோமாக.

"பன்னி" - பத்தினி (பத்நி - வடசொல்) என்பதன் சிதைவு. "பதியை நல்வழியில் திருத்துபவள்" - என்பது பொருளாம் என்க. இந்தச் சொற்குறிப்பினாலும், கம்பராம் பெரும்புலவர், அஹலிகையால் காட்டும் அமைதியை யுணர்கின்றோமன்றோ!

இனி, அடுத்துவரும் கவியானது, "ஸ்ரீராமபிரானுடைய வினாவில் வைத்துக், கம்பர், - அஹலிகையைப் பற்றிக் - குறித்திருக்கும் உள்ளக்கிடக்கையின் உண்மையை நன்கு வெளிப்படுத்திக்கொண்டிருத்தலை யறிபலாம்.

4. "பொன்னையேர் சடையான் கூறக் கேட்டலும் பூமிக் கேள்வன்
"என்னையே என்னை யெயிக் வலியல் இருந்த வண்ணம்"
முன்னையூழ் வினையி னலோ நடுவொன்று முடிந்த துண்டோ
அன்னையே அனையாட் கிவ்வா றடுத்தவா றருளு கென்றான்."

பதப்பொருள் :—பொன்னை நேர்-பொன்னைப் போன்ற, சடையான் - ஜடையையுடையவனாகிய விசுவாமித்திர முனிவன், கூற சொல்ல, கேட்டனன் - கேட்டவுடனே, பூமி கேள்வன் - புவிக்கு நாயகனாகிய ஸ்ரீராமபிரான், "என் ஐயே - எனது ஆசிரியரே. இவ்வுலகியல் இருந்த வண்ணம் என்னையே - இந்த உலகின் இயற்கை இருந்தபடி தான் என்ன ஆச்சரியமாக இருக்கின்றது. பாருங்கள்; அன்னையே அனையாட்கு—(நான் இப்போது கண்டு கொண்டிருக்கும் இவ்வம்மையினது முகப்பொலிவினால்) எவ்வகையிலும் தாய்த் தன்மையடைந்துத், தாயையே ஒப்பவளாக இருக்கும் இவ்வம்மைக்கு (அஹலிகைக்கு) இவ்வாறு—இவ்வகையான அபவாதமும் சாபமும், அடுத்த ஆறு - நேர்ந்துள்ளதன்மையானது முன்னை ஊழ்வினையினாலோ-முன்னைப்பிறப்பிற் செய்துவைத்துள வினைப்பயனால் விளைந்ததா? (அன்றி) நடுவு ஒன்று முடிந்தது உண்டோ - இடையிலே நிகழ்ந்தவொரு கிருத்திரிமச் செயலினால் நிறைவேறினது உண்டோ? அருளுக—இதன் விவரத்தைத்திருவாய் மலர்ந்தருளுக (சொல்லியருளுக) என்று வினவினான்" என்பதாம்.

குறிப்பு :—இக்கவியில், நான்காமடியில், முதற்சொல்லாகிய "அன்னையே" - என்னும் "ஏ" காரத்தினால், இதனது முன்செய்யுட்கு முன் செய்யுளாகிய, "கண்டகல்மிசை" - என்னும் தலைப்புடைச் செய்யுளிற் குறித்திருக்கும், "கழல்துகள்கதுவ" "உண்டபேதைமை மயக்கற்று" "உருவம் வேறுபட்டு" "மெய் உணர்வு கொண்டு" "பண்டை வண்ணமாய் நின்றனள்" என்ற சொற்றொடர்களின் குறிப்புகளின்படியே, பாதிவ்ருத்திய முகப்பொலிவிலும் தேகப்பொலிவிலும் - தேகவிலக்கண மனவிலக்கணத் தொடர்ச்சியான - முகப்பொலிவுடன் நின்றுள, மாதவப் பத்தினியாகிய அஹலிகை, தாயெனவே எவ்வகையிலும் விளங்கித்தோன்றலால், இவ்வம்மைக்கு, இத்தகைய உலக அபவாதச் செயலொன்று, முற்பிறப்பின் வினைப்பயனால் விளைந்திருத்தல் கூடாத காரியமாகும்; மற்று, முன்னுமின்றிப் பின்னுமின்றி நடுப்பட்ட

தொருகாலத்தில், ஒரு வலிய தீயவனால்—தன் மதத்தாலும், மனக் கொழுப்பினாலும், ஆள் கட்டினாலும், தோள் வலியினாலும், அதிகார வன்மையாலும், ஆதிக்கத்தன்மையாலும்—நேர்ந்திருத்தல் வேண்டும் என ஸ்ரீ ராமபிரான் கருதியுள்ளார் என்பது குறிப்பின் உணர்த்தப் பெற்றிருப்பதைத் தெளியலாம். இத்தெளிவை—இத்துணிவை, இக் கவியிற்காணும்,—"இவ்வுலகியல் இருந்த வண்ணம் என்னையே" "முன்னையூழ்வினையினாலோ" "நடுவொன்று முடிந்ததுண்டோ?" "அன்னையே அனையாள்"—என்னும் சொற்றொடர்கள் வற்புறுத்திக் கொண்டிருத்தலைக் காண்க. இன்னும்,

மூன்றாமடியில், விளங்கும், ஐய அணியில்—"முன்னையது பூர்வ பக்ஷத்தையும் (ஆக்ஷேபத்தையும்) பின்னையது—சித்தாந்தத்தையும் (ஸமாதானத்தையும்) குறிக்கும் இரண்டு நிபந்தனைகளும் காட்டப்பெற் றிருத்தலை யுணர்க.

வினையினாலோ—என்பதன் "ஓ"காரமும், முடிந்ததுண்டோ— என்பதன் "ஓ" காரமும் வினாப்பொருளையும் எதிர்மறைப் பொருளை யும் தேற்றப்பொருளையும் தெளிவித்துக்கொண்டிருக்கின்றன.

முடிந்தது—என்னும் பதப்பெருமையைத் தோண்டிக் கல்விப் பொருளுணர்ந்து காண்க.

5.　"அவ்வுரை இராமன் கூற அறிஞனும் அவனை நோக்கிச்
செவ்வியோய் கேட்டி மேனாள் செறிசுடர்க் குலிசத் தண்ணால்
அவ்வியம் அவித்த சிந்தை முனிவனை அம்பம் நோக்கி
நவ்விபோல் விழியினுடன் வனமுலை நணுகல் உற்றான்."

இதன் பொருள்:— "அந்த உண்மை பொருந்திய வார்த்தையை ஸ்ரீ ராமபிரான் சொல்லிடலும், அறிவுடைய விசுவாமித்திர முனிவரும், அந்த ஸ்ரீ ராமபிரானைப் பார்த்து, "செம்மையுள்ளச் சிறப்புடையாய்! ஸ்ரீ ராம!! கேட்பாயாக!!!—முன்னொரு நாளில், ஒளி மிகுந்த வஜ்ரா

யுதத்தையுடைய பெருமையனாகிய இந்திரன், கபடம் முதலிய கெடுமைகள் வரவொட்டாமல் நீக்கிக்காத்த சித்தத்தையுடைய, மகா தபஸ்வியாகிய கௌதம முனிவரை யில்லாத சமயம் பார்த்து, வஞ்சகத்தைச் செய்து, மான் விழிபோலும் வெருண்ட பார்வையையுடைய அஹலிகையினது அழகிய தனபாரங்களைக் கட்டியணைதலில் உள்ளம் பொருந்தினான்." என்பதாம்.

குறிப்பு:— மெய்யன்பர்களே! இந்தக்கவி, ஸ்ரீ ராம பிரானிற்கு முனிவரர் கூறிய விடையாகக் குறிக்கப்பெற்றதாயினும், ஸ்ரீ ராமபிரான் பாலும், இந்திரன் பாலும், கௌதமர் பாலும், அஹலிகை பாலும் விஸ்வாமித்திரர் கொண்டுள்ள உட்கிடக்கைகள் வெகு அழகாகக் குறிக்கப்பெற்றிருத்தலை யுணர்கின்றோமன்றோ!

"செவ்வியோய்!" = "செம்மை உள்ளச்சிறப்புடையாய்!"—என்றது முனிவரர் ஸ்ரீ ராமபிரானைக் கூறி விளித்த வியப்புரையாகும். இதற்கு முன் கவியில் விவரித்துள்ளபடி,—"இவ்வுலகியல் இருந்த வண்ணம் என்னையே"—"முன்னையூழ்வினையினாலோ"—"நடுவொன்று முடிந்ததுண்டோ?"—"அன்னையே யனையாள்"—என்னும் இச் சொற்றொடர்களின் உள்ளக் குறிப்பினையுணர்ந்து, ஸ்ரீ ராமபிரானுடைய கொள்கைகளை யுவந்து, "உண்மையே நோக்கும் உயர்குணம் உடையான் இராமன்"—என்பது தேர்ந்து, அவரது அபிப்பிராயத்தை யாமோதித்துப் பேசுபவராகி, யக்குறிப்புணர்த்துஞ் சொல்லாகச் "செவ்வியோய்!" என்றார் என்கிறார் போலும்.

ஏற்ப, விடையளிக்கும்போது, இந்திரனை யிழித்துக் கூறியதை நோக்குக:—

"செறிசுடர்க் குலிசத்தண்ணல்" = "ஒளி மிகுந்த வஜ்ராயுதத்தையுடைய பெருமையனாகிய இந்திரன்"—என்றது, "இந்திரனுக்குப் பெருமை, மதியாலும், மதிப்பாலும், தவத்தாலும், ஒழுக்காலுமன்று; சுட்டெறிக்கும் வஜ்ராயுதத்தால் மாத்திரம் தான்" என்பதை யுணர்த்து

வான் போலும் என்கிறார்: இவ்விடை—இவ்வுரை, முன் கவியில் குறித்துள்ள "முன்னையூழ்வினையினாலோ (அன்றன்று) நடுவொன்று முடிந்ததுண்டோ" என்ற ஸ்ரீ ராமபிரானுடைய உட்கிடையை யுணர்ந்து, அதனையாமோதித்துக்கொண்ட குறிப்பை யுணர்த்தியதாகுமென்க. என்னை?—"ஆயுத பலமே துணைகொண்ட அயோக்கியர்கள், அன்னியர் மனைவியரையும் அவமதிப்பர் போலும்" என்பது உயர்ந்தோருரையன்றோ!

"அவ்வியம் அவித்த சிந்தை முனிவனை"=கபடம் முதலிய கெடுமைகள் வரவொட்டாமல் காத்த சித்தத்தையுடைய கௌதம முனிவரை—என்றது, நினையாத—பிறரைச் சந்தேஹிக்காத பீடுடைமை பிறங்கற்கு ஆம் போலும்.

எனவே, "இந்திரனிடத்திலாவது, அஹலிகையிடத்திலாவது செற்றமும், சினமும், குற்றமும், குறைவும் பாராட்டாத மகா தபஸ்வி"—கௌதமர் என்பது விஸ்வாமித்திரர் கருத்தாமாறு உணர்க; இம்மேன்மையாலன்றோ, தமிழ் மறை தந்தருளிய மாதாநு பங்கியும் "ஐந்தவித்தானாற்றல்" என்னும் சிறப்புரையால் கௌதமரை விதந்து ஓதியிருக்கின்றார் என்க.

"அற்றம் நோக்கி"—"இல்லாத சமயம் பார்த்து" என்றது, "அறிவும் ஆற்றலும் உண்மையும் ஒழுக்கமுமில்லார்க்கு"க் கபடமே முனைந்து நிற்கும்" என்றற்காமென்க. இந்திரனுடைய கபடச் செயலை—வஞ்சகத்தொழிலை யுணர்ந்த துவான்புக்க முனிவர்—கவிஞர், இவ்வுரையில் இக்கவியில்—"அற்றம் நோக்கி" என்று ஆரம்பித்து, அடுத்த வுரையில்—அடுத்த கவியில், "அற்றம் செய்து" என்று முடித்திருக்கும் அழகை யாராய்ந்து உணர்க.

"நவ்விபோல் விழியினாள்" "மான் விழி போலும் வெருண்ட பார்வையுடைய அஹலிகை" என்றது, "இந்திரனது பலகால் வருகையையும், அவனது அதிகாரத் தோற்றத்தையும் ஆடம்பர ஏற்றத்தையும் கண்டு அஞ்சிய அஹலிகையின் அச்சப்பார்வையும் உணர்த்தற்கா

மென்க; இந்திரன் ஒளிந்தொழுகி வருதலால், அவனது ஆதிக்கியத்திற் பயங்கொண்டு, புலியைக்கண்ட மான் போலும் வெருண்டு நோக்கிய அஹலிகைப் பெண்ணரசியின் அச்சப்பார்வை, இந்திரனால் காமப் பார்வையாகக் கருதப்பட்டது போலும் என்கிறார்.

"வனமுலை"—"அழகமைந்த தனங்கள்"—என்றது "அழகினை யமைத்துக் காட்டற்கு மகடூ உக்குறியாக, அங்கபூர்த்திக்கென்றமைந்த, அவ்வழகுடை அவயவம், இந்திரனுக்குக் காமோத்வேகத்தைக் கிளப்பியது என்றற்காமென்க; நன்னோக்கமற்ற, தீ நோக்குடையார்க்கு, நல்லதிலும் தீமைதான் தோன்றும் போலும் என்கிறார்.

எனவே, இக்கவியின் கருத்தால், இந்திரன் தான் ஏமாறினதையே கருதி முனிவர் பாற் செற்றங்கொண்டு, தனது ஏமாற்றத்துக்கும் தோல்விக்கும் காரணமாக நின்ற அஹலிகைப் பெண்ணையே காரணமாக வைத்துக் கௌதம முனிவர்பால் பழி தீர்த்துக்கொள்ளற் பொருட்டு, அவரது அற்றத்தை (இல்லாத(தொருநீண்ட)சமயத்தை)ப் பலகால் கருதி ஆச்ரமச்சாரலில் அடிக்கடி வந்து போய்க்கொண்டிருந்தான் என்பது விளக்கமாயிற்று.

6. "தையலாள் நயன வேலும் மன்மதன் சரமும் பாய
உய்யலாம் உறுதி நாடி உழல்பவன் ஒரு நாள் உற்ற
மய்யலால் அறிவு நீங்கி மாமுனிக்கு அற்றம் செய்து
பொய்யிலா உள்ளத் தான்றன் உருவமே கொண்டு புக்கான்"

பொருள்:— "அழகிய அஹலிகையினது கண்களாகிய வேலாயுதங்களும் மன்மதனுடைய பாணங்களும் தன்மேற் பாய்வதனால் மிக மிக வருந்தி, அவ்வருத்தத்தில் நின்றும் நீங்கிப் பிழைக்கும்படியாகிய உறுதியான மார்க்கமொன்றைப் பல்லாற்றானும் சிந்தித்துத்தேடி அலைபவனாகிய இந்திரன், ஒரு தினத்தில் தோன்றிய வரம்பு கடந்து மீறியெழுந்த மிகுந்த காமமயக்கத்தினால் நல்லறிவு நீங்கி, மகா தபஸ்வியாகிய அந்தக்கௌதம முனிவருக்குப் (இல்லாத சமயத்தைப்) பிரிவை

யுண்டாக்கிப் பொய்யில்லாத மனத்தையுடைய அம்முனிவரது உருவத்தையே தானும் எடுத்துக்கொண்டு, அவ்வாச்ரமத்தினுட் புகுந்தான்."

குறிப்பு:— நேயர்களே! நமது கவிச்சக்ரவர்த்தி, கம்ப நாட்டாழ்வார், "இந்திரனது தீய எண்ணங்கள் பலித்து, அவனுக்கு உலகமுள்ளளவும் வசையே நிலைக்குமாறு செய்த தன்மை"யை இக்கவியில் எத்துணை யுறுதி தோன்றக் குறித்திருக்கின்றார் என்பதை யூன்றிக் கவனிக்கவேண்டுகிறோம்.

அவ்வுறுதியைக் குறிக்கும் சொற்களும், சொற்றொடர்களும் வீழ்ந்திருக்கும் வீழ்ச்சியை உற்று நோக்குவீர்களாக.

இக்கவியிற் பெய்திருக்கும் சொற்கள் யாவுமே ஆராய்ச்சிக்குரியனவாயினும், கீழ் வருஞ் சொற்றொடர்களை நன்கு கவனிக்க வேண்டுகிறோம்.

"உய்யலாம் உறுதிநாடி"; "உழல்பவன்"; "மையலால் அறிவு நீங்கி"; "அற்றம் செய்து" என்னும் இவற்றை நோக்க இதற்கு முன் கவியில், இந்திரன், கௌதமர்பால் தனக்குத்தோன்றி யுதித்த செற்றத்தால், பழி தீர்த்துக்கொள்ளும்பொருட்டு, பல்காலும் முனிவரது ஆச்ரமத்துக்குச் சென்று, தனது ஆடம்பரத் தோற்றத்தையும், அதிகார ஏற்றத்தையும், ஆதிக்க வன்மையையும் அவ் அபலை அஹலிகைக்குக்காட்டி, அம்முனிவரது அற்றத்தை நோக்கிக்கொண்டிருந்தான்" எனக்குறித்துள்ளபடியைத் தொடர்ந்து கூறுகிறார் இந்தக் கவியில் என்பதை யேற்றுத்தொடர்க.

அங்ஙனம் அடிக்கடி சென்ற இந்திரனுடைய இதயத்தில், "அஹலிகையினுடைய கண்களாகிய வேலாயுதங்களும், மன்மத பாணங்களும் பாய்ந்தன" என்பது முதலடியின் கருத்தாகக் குறித்திருக்கின்றார்—"தையலாள் நயனவேலும் மன்மதன் சரமும் பாய"—என்று; பின்னர், "உய்யலாம் உறுதி நாடி உழல்பவன்"—"தன்னை வருத்தும் காம வருத்தத்தில் நின்றும் நீங்கித்தான் பிழைத்துப்போகும்படியான உறுதி மார்க்கமொன்றைப் பல்லாற்றானும் சிந்தித்துத்தேடி அலைபவு

னாகிய இந்திரன்." என்கிறார்; "அதிகாரமும் ஆதிக்கமும் உடையார்க்குக் காமநோய் கண்டால், அறிவு இருப்பினும் அது நீங்கிப்பேதமையே நிலைத்திடும்"—என்பது இத்தொடரால் விளங்கி நிற்றல் காண்க.

அறிவுடையனாதல் பற்றித் தான் செய்ய நினைக்கும் வினையினால் விளையும் பயனை முற்கூட்டியே உணர்தல் கூடும்; அந்த அறிவு கேவலம் சத்துவச் சேர்க்கையுடன் பிணைத்திருந்தாலன்றிக் கடைபோக அதனை நல் வழியில் உய்த்திடல் இயலாது; ராஜஸ உத்வேகத்தையுண்டாக்கும் அதிகாரத் தன்மையும் ஆதிக்க வன்மையும் வந்து குறிக்கிடுமாயின், அஹம்பாவம் மேலிட்டு, சத்துவத்தாலுதித்ததொரு உண்மை யறிவை நீக்கி யறியாமையையே புகுத்திவிடும் என்பது அனுபவ உண்மை யன்றோ? இங்ஙனம், "தான் செய்யும் வினையின் பயனைக் கருதிக் கருதி நன் மனமும் தீ மனமும் நின்று போராடும்" என்பதை "ஆங்கிலப் புலவர் பெருமான், ஷேக்ஸ்பியர் என்பார் தாம் இயற்றிய தொரு நாடக நூலாகிய Rafe of Lucrece—லுக்ரீஸின் கற்பழிவு என்பதில், அத்தீயவனது செயலில் வைத்து நன்கு ஓதியிருக்கின்றார்" என்பதனைக் கேட்டதுண்டு; அஃது ஈண்டு கவனிக்கற்பாலது.

நமது கவிப்பெருமான், அந்த உண்மையை, "உய்யலாம் உறுதி நாடி உழல்பவன்" என்னும் இந்தச் சொற்றொடரால் வற்புறுத்தியுள்ளாரென்பது உண்மையன்றோ?

தனது அதிகாரமும், ஆதிக்கமும், மதிப்பிழந்து ஒரு பெண்ணணங்கின் காரணமாகக் கேவலம் ஒரு வைதீக முனிவரால், தனக்குத் தோன்றிய ஏமாற்றத்தையும், தோல்வியையும் கருதிச் செற்றங் கொண்டு, அதுவே காரணமாக அம்முனிவரிடம் பழி தீர்த்துக்கொள்ளும் ஒரு வினை கொண்டே விளையாட்டாகச்சென்ற இந்திரனுக்கு "மடவார் பயிலி நோன்பாற்றல் திகழ்ச்சிபெறும் நெஞ்சத்திட்பம் நெகிழ்ச்சியுறும்"—என்றபடி அஹலிகையின் கண்களும், தனங்களும், தனது கண்களையும் மனத்தையும் கலக்கிவிடவும், அதே சமயம் சித்தஜனாகிய மன்மதனுங் கோபித்து நிற்றலால் நல்லறிவு மெல்ல நீங்குதலையுணர்ந்தவன் செய்யப்புகும் தீச்செயலின் விளைவால், "உருவும், உயர்வும், பேரும், புகழும், சீருஞ் சிறப்பும்" கெடும் என்பதை நன் மனத்

தாற் சிந்தித்தாஞயினும், ராஜஸ உத்வேகமும், தாமஸ நினைவும் முனைந்து நின்று தீ மனத்துக்கே வெற்றியளித்தன வென்பார், "உய்யலாம் உறுதி நாடி" என்றும், "உழல்பவன்" என்றும், "மையலால்" என்றும், சொற்றொடர்களையும் சொற்களையும் அடுக்கி வைத்துள்ளார்.

1. உய்யலாம் உறுதி நாடல்—ஸத்துவத்தின் காரியம்.
2. உழலுதல்—ராஜஸத்தின் காரியம்.
3. மையல்—தாமஸத்தின் காரியம்.

இம்முக்குணங்களின் போராட்டத்தில், பின்னிரண்டும் ஆதிக்கம் பெற்றிருந்தபடியால், அவையே வெற்றிபெற்றன என்கிறார்; இந்த உண்மையை "அறிவு நீங்கி" என்னும் சொற்றொடர் வற்புறுத்திக்கொண்டிருத்தல் காண்க.

இந்த அறிவு நீக்கத்தின் விளைவுதான் வஞ்சகச் செயலாகப் பரிணமித்துச் செய்யத்தகாத காரியத்தில் இழுத்துவிட்டதென்பார், "பொய்யிலா உள்ளத்தான் தன் உருவமே கொண்டு புக்கான்"— என்று நான்காமடியில் சமர்த்தித்து விட்டார்.

எனவே; இன்னொன்ன குறிப்புக்களால், அதிகாரத்தாலும், ஆடம்பரத்தாலும், ஆதிக்கத்தாலும், அஹலிகையின் அகத்தைக் கலக்க முயன்ற இந்திரனுக்கு, அச்செயல் பலிக்காது போயிற்று என்பதும், அஹலிகை அஞ்சி வெருண்டாள் என்பதும் உணர்த்தப்பெற்றன; அதனாலேதான், இந்திரன், "பதிவிரதையை வஞ்சிக்கப் பதியின் வேடமே" கொண்டு புகுந்தான் என்பதும் விளங்கிற்று.

"பொய் இலா உள்ளத்தான் உருவம்"—என்னும் இச்சொற்றொடர், இந்திரனுடைய உருவம், பொய்யில்லாதவன் உருவமாயினும், உள்ளம் பொய்யுடையது தான் என்னும் உண்மையை வற்புறுத்திக் கொண்டிருக்கின்றது இதனால், "இவனது செயலும், சொல்லும் உண்மையை உணர்த்திவிடும்" என்றவாறும். இங்கு, "உண்மை— கபடச் செயலாம்" என்க.

இங்ஙனம் அறிவு நீங்கிய இந்திரனுடைய கபடச் செயல்கள் இரண்டென உணர்த்தப்பெற்றிருக்கின்றன.

(1) "மாமுனிக்கு அற்றம் செய்தது"—கௌதம முனிவரை யவ்விடத்திலில்லாமல் விலகியொழிந்திடச் செய்தலாம்; இந்தச் செயல் அந்த ஆங்கில நாடக நூலினும் காட்டப்பெற்றிருக்கின்றதென்பர்; எனவே, இம்முறையானது, தீவினையாளர்க்குத் தாம் முயன்றுள தீயவினைபலித்திடுமாறு செய்வதற்குறிய இயற்கை முறையென்பது உணர்த்தப்பெற்றது.

(2) "பொய்யிலா உள்ளத்தான்றன் உருவமே கொண்டு புகல்"—கபடச் செயல் சிறிதுந் தோன்றாத திருவுள்ளமுடைய கௌதம மாமுனிவருடைய உருவத்தையே தானும் மேற்கொண்டு உள்ளே புகலாம்; இங்கு, "உருவமே"—என்பதிலுள்ள ஏகாரத்தை யூன்றிக் கவனித்திடவும்; இந்தத்தேற்றேகாரம் அஹலிகைக்கு நம்பிக்கையை யுண்டாக்கக் கருதி நிற்கின்றது; பதியுருவத்துக்கு அடங்கினவள் பதிவிரதை.

கௌதம முனிவர்க்குக் "கபடச்செயல் தோன்றாத உள்ள மிருந்தபடியால்தான், "இந்திரன் கோழிபோற் கூவினதன்மை"யிற் சிறிதும் சந்தேஹம் கொள்ளாதிருந்தமை விளங்குகின்றது; மற்றும்,

இந்திரன் முன்னரே விரும்பிக் காதலித்திருந்ததொரு பேரழகுடைய பெண்ணணங்கினை விதி வசத்தினால் தான் மணந்து பெற்றுக் கொண்டு வந்துள தன்மையினால், அதிகாரமும் ஆதிக்கமுமுடைய அவ்விந்திரனால் தனக்கு ஏதேனும் கெடுதல் நேரிடுமென்றும், "தனத்திலும், இனத்திலும், ஆளிலும், தோளிலும் பெருத்த அவ்விந்திரன், காமாந்தனாகி ஏதேனும் செய்தல் கூடுமென்றும் சிறிதேனும் எண்ணம் பெறாத வாதுத்தன்மை பெற்ற நெஞ்சுடையார்" என்பார்,—"பொய்யில்லா உள்ளத்தான்" என்றார் போலும், இச்சொற்றொடர், முன் கவியில் குறிக்கப்பெற்றிருக்கும், "அவ்வியம் அவித்த சிந்தை முனிவன்" என்னும் சொற்றொடரின் மறு வீழ்ச்சிதான் போலும்.

இன்னும், "பொய்யிலா உள்ளத்தான்றன் உருவமே"—என்றபடியால், உருவம் மாத்திரம் கௌதம உருவமேயொழிய உள்ளம் இந்திரனது உள்ளமே தானானபடியால், உட்சென்று அவ்வழகினை அனுபவிக்கும்போது, தன்னுள்ளம் போலவே அநுபவிக்க நேருமாகலின், அப்போது சேஷ்டையால் வேறுபட்டால் நீண்ட நாள் கௌதமரிடம்

அநுபவித்த அநுபவ முதிர்ச்சியுடைய அஹலிகைக்கு ஐயம் நிகழ்தல் கூடும்" என்பதை யூகித்துரை வைத்துள்ளார் என்பது உணர்க.

"இந்திரன் கோழி போற் கூவி, முனிவரைக் காலேக்கடன் கழித்தற் பொருட்டுச் செல்லும்படியாக நடுநிசியிலேயே கபடச் செயலால் விலக்கியொழித்திட்டான்" என்பது முதனூற் குறிப்பாமாறு தெளிக.

இனி அடுத்துவரும் கவியானது, "இந்திரனது தீச்செயலேயும், அணங்கரசியின் கற்பு அழிந்த செயலேயும், உடனவள் உணர்ந்துகொண்ட செயலேயும், பின்னர்த் தாழ்ந்திருந்த செயலேயும், முனிவர் முடிகிவந்த செயலேயும்" வற்புறுத்திக்கொண்டிருத்தலே யுணரலாம்.

"புக்கவளோடுங் காமப்புதுமண மதுவின்தேறல்
ஒக்கவுண்டிருத்த லோடும் உணர்ந்தனள் உணர்ந்த பின்னர்த்"
தக்கதன் றென்னவோ ராத்தாழ்ந்தன ளிருப்பத்தாழா
முக்கணன் னய வாற்றல் முனிவனு முடுகிவந்தான்.

இச்செய்யுள்தான், இவ்வாராய்ச்சிக்கு உயிர் அளித்துக்கொண்டிருக்கும் உயர்ந்த கவியாகும்.

இதன் பதப் பிரிவு:— "புக்கு அவளோடும் காமம் புது மணம் மதுவின் தேறல் ஒக்க உண்டு இருத்தலோடும் உணர்ந்தனள்; உணர்ந்த பின்னர் தக்கது அன்று என்ன ஓராத்தாழ்ந்தனள் இருப்ப; தாழா முக்கணன் அனைய ஆற்றல் முனிவனும் முடுகி வந்தான்."

இதன் தெளிந்த பொருள் :— புக்கு = ஆச்ரமத்தினுட் புகுந்து, அவளோடும் —(தனது கபடவுருவத்தைக் கணவனுகிய கௌதமரென்றே மதித்துத் தனது காமச் செயலுக்கு உட்பட்டிருந்த) அந்த அழகியாகிய அஹலிகையோடும், காமம் = (தனது நாகரிக முறைக்கு ஏற்ற வண்ணமே அவ்வப்போது உதிக்கும்) சிற்றின்ப நுகர்ச்சி யின்

பத்தின், புது நலம் = புதுப்புதுச் செவ்விகளாகிய அதாவது சேஷ்டை களாகிய (லீலைகளாகிய) மது இன்தேறல்—கள்ளின் இனிய தெளிவை, ஒக்க = (புணர்ச்சித் துறையில் அவ்வப்போது தோன்றும் உள்ளக் கிடைக்கு உவந்தபடியான அந்தக்காமப் புது நலத்தில் உண்மகிழ்ந்து, உள்ளம் நெகிழ்ந்த மகிழ்ச்சியுடன்) தன்னோடொத்திருந்தனுபவிக்கும் முறையில், உண்டு—(அந்தக் காமப் புதுநலத்தை) யநுபவித்து, இருந் தலோடும் = ஒரு புணர்ச்சி நிறைவேறி மறு புணர்ச்சிக்குக் காத்தி ருந்தபோது உணர்ந்தனள் = (தன்னுடன் கணவன் புணர்ச்சியின்பத் தை யநுபவித்திருந்த முன்னர்ச் சேஷ்டைகட்கும், தற்போது இந்தக் கபடவுருவினன் அனுபவித்துள்ள பின்னர்ச் சேஷ்டைகட்கும் (லீலை கட்கும்) வேறுபாட்டை புணர்ச்சி மயக்கம் நீங்கித் தெளிந்தபோது) ஊஹித்துணர்ந்துகொண்டனள்; உணர்ந்த பின்னர்—(மயக்கம் நீங் கிய தெளிவின் உணர்ச்சியினால்) (ஒரு அந்நியன் எவனோதான் மாறு வேடத்துடன் உள்ளே நுழைந்து தன்னைப் புணர்ந்து தனது கற் பையழித்துவிட்டான் என்பதை நன்கு ஆராய்ந்து) உணர்ந்துகொண்ட பிறகு, தக்கது அன்று என்ன = இத்தீச்செயல் தக்கதாகிய காரிய மாகமாட்டாது என்று, ஓரா—தெளிந்த அறிவினால் உய்த்துணர்ந்து, தாழ்ந்தனள் இருப்ப—(அவ்வேடவுருவைக் கண்டு மனமலைந்த ஐயப் பாட்டுடன் மறு புணர்ச்சிக்கு இடந்தாரமல்) தாமதித்து இருக்கவே, முக்கணான் அனைய ஆற்றல் முனிவனும்—மூன்று கண்களையுடைய பரமசிவப்பெருமான் போன்ற தபோவன்மையுடைய கௌதம முனி வரும், தாழா = தாமதித்திடாமல், முடுகி—விரைந்து விரைந்து, வந் தான்—ஆச்ரமத்தினுள் வந்து சேர்ந்தார்.”

குறிப்பு :—மறு புணர்ச்சிக்கு அப்புனையுருவம் விரும்பிமுயன்ற தேனும் அல்லது சேஷ்டைபுரிந்ததேனும், அவ்வழகி சம்மதிக்காமல், தன்பால் அவ்வமயம் தோன்றியெழுந்த ஐயப்பாட்டின் நிவர்த்தியைக் கோரித் தாமதித்திருந்தாள் என்பது இக்கவியின் திரண்ட கருத் தாகும்.

"அவளோடும்" — தன்னால் மயக்கப்பட்ட அந்த அகலிகை யோடும் என்பது பொருளாம். "ஓடும்" — இது உடனிகழ்ச்சிப் பொருளைத் தருமேனும், இங்குக் கருவிப் பொருளில் கொள்ளுதல் தான் சிறப்புடையது; அதாவது அவளோடும் என்பதை யவளைக் கருவியாக் கொண்டு என்பதே தகுதியாகும்; கருவி — காமம் நுகர்தற்கு உரிய கருவி என்பதாம்; "காமம்"—இன்ப நுகர்ச்சி (வட சொல்). "புது நலம்" அகலிகை யிதுவரையில் அநுபவித் துணர்ந்திராத புதிய செவ்விகள் என்பதாம்.

"மதுவின் தேறல்"—என்னும் உவமையால், கள்ளில் களி கொண்டவர் அறிவிழந்து மேலும் மேலும் கள்ளுண்டு களிக்கும் வெறியை விரும்புதல்போல், காமக் களியைக் கொண்டவர்களும் மதி மயங்கி மேலும் மேலும் நுகர விரும்புவார் என்பது பெறப்பட்டது. ஏற்ப, கவி, "மது" என்னும் "தேறல்" என்னும் பதங்களைப் பிர யோகித்திருப்பது நோக்குக.

"ஒக்க உண்டு" என்கிறார்; இதனால் "அகலிகையும் முதலில் அப்பூனையுருவத்தைக் கணவனென்றே மயங்கி, அதனுடன் அப் புது நலத்தையொக்கச் சேர்ந்து துய்த்தாள்" என்பது பெறப்பட்டது.

"உண்டிருத்தல்"—உண்டு + இருத்தல் = அநுபவித்தலும் மயங்கி யிருத்தலுமாம். அந்நுகர்ச்சியை அநுபவித்து ஒன்றுந் தோன்றாமல் மயங்கியிருந்தாள் என்றவாறும்; அன்றியும், "உண்டு" = ஒரு முறை நுகர்ந்து, "இருத்தல்" = மறுமுறைக்காகக் காத்திருத்தலுமாம் என்க.

"உணர்ந்தனள்" = "மயக்கம் கலைந்து முன்னுணர்வு பெற்ற னள்" என்றவாறும். இந்த உணர்ச்சி தோன்றற்குக் காரணம் "காமப் புதுநலம்" என்னும் சொற்றொடரில் அமைத்துவைக்கப் பெற்

றிருக்கின்றது என்னே! அவ்வுருவத்துடன் தானும் ஒக்கவுண்டு அனுபவித்த புதிய காமப் புதுநலங்களை நினைந்து நினைந்து ஓர்ந்து ஓர்ந்து தேர்ந்து தேர்ந்து, இந்நலங்கள் இதுவரையில் தனது உரிமைக் கணவர்பால் அநுபவித்திருந்ததில்லை யாதலான், அப்புது நலங்கட்குக் காரணவுருவமாகிய அப்புனையுருவத்தில் ஐயவுணர்ச்சி தோன்றி மனம் தெளிந்தாள் என்பது திரண்ட கருத்தாகும்.

“உணர்ந்தபின்னர்த் தக்கது அன்று எனத் தேறு” என்னுந் தொடரை நன்கு நோக்கிப் பொருள் கொள்ளல்வேண்டும். அப்புனையுருவத்தில் ஐயவுணர்ச்சி தோன்றியவுடன் மனம் தெளிவையடைந்து, தனது செயலில் பச்சாத்தாபம் தோன்றித் தான் செய்தது தக்க காரியமாகமாட்டாதெனத் தேறினாள்” என்பது இவ்வடியின் திரண்ட கருத்தாதல் வேண்டும்.

“தேறு”—தேறி (தெளிந்து) என்பது பொருள்; செயா என்னும் வாய்பாட்டு உடன்பாட்டு வினையெச்சம்; இந்த வாய்பாட்டினை, இக்கவி பலவிடங்களிலும் வழங்கியிருக்கின்றாரென்னும் உண்மைகண்டு தெளிக. தேறுதல்=தெளிதல். இவ்விடத்தில் “ஓரா” என்னும் பாடாந்தரம் உண்டு. அதற்கும் இதே வாய்பாடும் பொருளும் கொள்க. “தேறாள்” என்றும் “ஓராள்” என்றும் காணப்படும் பாடபேதங்கள், “எழுதினவன் ஏட்டைக் கெடுத்தான்; படித்தவன் பாட்டைக் கெடுத்தான்” என்னும் பழமொழியை வற்புறுத்தினபடியாகும் என்றுணர்க.

“தாழ்ந்தனள் இருப்ப”—“தாமதித்திருக்கவே” என்பதே பொருளாகும். “மறு புணர்ச்சிக்கு அப்புனையுருவம் விரும்பி முயன்றதேனும் சேஷ்டைபுரிந்ததேனும், ஐயவுணர்ச்சிகொண்டு தெளிந்த அறிவுடைய

அவ்வழகி அதற்குச் சம்மதிக்காமல் பச்சாத்தாபம் கொண்டு, அவ்வையப்பாட்டின் நிவர்த்தியைக் கோரித் தாமதித்திருந்தாள்" என்னும் இச்செய்யுளின் திரண்ட கருத்தை இந்தத் "தாழ்ந்தனள்" என்னும் சொல்தான் வற்புறுத்திக்கொண்டு நிற்கின்றது.

"தாமதித்திருந்தாள்" என்னும் பொருளைச் சிந்தியாமல் மாறு பொருளைச் சிந்தித்திருப்பாரானால், கவி, இவ்விடத்தில், "சார்ந்தனள்" என்றோ "சேர்ந்தனள்" என்றோ குறித்திருத்தல் கூடும். இச்செயல் (பொருளுக்கேற்ற சொல்வீழ்ச்சி) இக்கவிக்கு இயற்கையாமென்பதை இவர் காவியத்தை ஊன்றிப் பன்முறை படித்துணர்ந்தார்க்குப் போதமாகும். "சார்" "சேர்" என்னும் பகுதிகளில் ஆரம்பித்திருந்தாலும் மோனைக்கு முரண்பாடில்லாதிருத்தலை யுணர்ந்திருந்தும், கவி, "தாழ்" என்னும் பகுதி கொண்டே ஆரம்பித்திருக்கும் இம்முறையால் "தாழ்ந்தனள்" என்பது "தாமதித்தனள்" என்னும் பொருளையே வற்புறுத்திக்கொண்டிருத்தலை யுணரலாம். மற்றும் இதற்குத் (தாழ்ந்தனள் என்னும் இப் பதத்திற்குத்) தாமதித்தனள் என்பதே தக்க பொருளாயிருத்தல் வேண்டுமென்பதை, இதற்கடுத்து வீழ்ந்திருக்கும், இதே பகுதியில் ஆரம்பிக்கப்பெற்றிருக்கும் "தாழா" என்னும் கவிக்கூற்று இவ்வுண்மையை உறுதிப்படுத்திக்கொண்டிருத்தல் வெள்ளிடை மலையன்றோ?

இந்தப் பொருள்தான், கவிச் சக்கரவர்த்தியாகிய கம்பநாட்டாழ்வாரது உட்கிடக்கையாகுமென்பதை, இப்படலத்தின் 85-ம் கவியாகிய,

"அஞ்சனவண்ணத்தான்தன் அடித்துகள்கதுவாமுன்னம்
வஞ்சிபோலிடையாள் முன்னைவண்ணத்தள் ஆகி நின்றாள்
நெஞ்சினுற்பிழைப்பிலாளை நீயழைத்திடுகவென்னக்
கஞ்சமா முனிவனன்ன முனிவனும் கருத்துட்கொண்டான்"

என்னும் செய்யுளின் மூன்றாமடியிலுள்ள "நெஞ்சினிற் பிழைப்பிலாளை" யென்னும் சொற்றொடரைக்கொண்டு நிச்சயிக்கலாம்.

இதன் பொருளாவது, "அகலிகை, தன் நெஞ்சினால் உணர்ந்தறி வதற்கு முன்னர், அப்புனை யுருவத்தைக் கணவனென்றே மதித்துச் சேர்ந்திருந்து கெட்டனளாயினும், மனத்தில் உணர்ச்சி தோன்றித் தெளிந்தபின்னர், அத்தீச்செயலுக்கு இடந் தரவில்லை" என்பதாம்.

இங்ஙனம், "அகலிகை தனது நெஞ்சறிந்து பிழை செய்யவில்லை" யென்பதும், "அப் புனையுருவத்தை—மயங்கித் தன் கணவனென்றே மதித்து ஏமாற்றமடைந்து கெட்டனள்" என்பதும், "மனமறிந்து தெளிந்தபின்னர் இடங்கொடுக்கவில்லை" என்பதும், "ஆகிய இக் கருத்துக்களை ஸ்ரீ வான்மீகி பகவானிடத்தும் காணப்படுகின்றன" என்பதும், "இடையில், இதற்கு மாறுபாடான பொருள் கொள்ளும் படியான சுலோகங்களைச் செருகியிருத்தல் வேண்டுமென்று ஊஹிக் தற்கிடமிருக்கின்றது" என்பதும் ஆய இவற்றை, இந்த ஆராய்ச்சிப் பிரிவின் அதாவது "கம்பரும் வான்மீகரும்" என்னும் இந்தப் பிரி வின் 307-வது பக்கம் முதல் 314-வது பக்கம்வரையில் எழுதப்பெற் றிருக்கும் ஆராய்ச்சியிற் கண்டு தெளிந்துகொள்க.

எனவே, இக்கவியின் (புக்கவளோடும் என்னும் கவியின்) அரும் பதங்களாகிய "தேரா" என்பதையும் "தாழ்ந்தனள்" என்பதையும் முறையே பாடபேதமாக்கியும் பொருள் வேறுபடுத்தியும் கெடுத்தல் அழகன்றுமென்பதையும் கவிக்கூற்றுக்கு மாறுபட்டதாமென்பதை யும் மீண்டும் வற்புறுத்துகின்றோம்.

மற்றும் இதனை வற்புறுத்தற்குப் பின்வரும் சிலவற்றையும் சான்றாகக் கொள்க.

கம்பர், அகலிகைச் செய்தியில், "வான்மீகியின் இடைச்செருகற் பாடக் கருத்தைப் புறக்கணித்துப் பிரமபுராணக் கருத்தைச் சிறக் கணித்தெழுதியிருக்கிறார்" என்பதைப் பின்வரும் இச் செய்திகள்

வற்புறுத்திக்கொண்டிருத்தலைக் காண்க. இவை, வான்மீகியின் இடைச்செருகற்பாடக் கருத்துக்கு மாறாகப் பிரம புராணத்திற் காணப் பெறும் உண்மைகள் ஆமாறு கண்டுகொள்க.

1. "கௌதமர், பிரமதேவரின் எண்ணத்திற்கொப்ப, காமதேனு லிங்கம் தேவர்கள் இவர்களை வலஞ்செய்ததுமூலமாகப் பூப்பிரதக்ஷணைப் பயன்பெற்று அகலிகையை மணந்துகொண்டார்"

2. "அகலிகை, தன்னைநணுகிவந்த புனையுருவத்தை யிந்திரனெனற்றெறிந்து கொள்ளாமல் தன் கணவனுடன் இன்பம் நுகர்வதாகவே நினைத்திருந்தாள்"

3. "அகலிகை, மனதாற் குற்றம் செய்திலள் என்பது தெரிந்து கௌதமர், அவளைச் சிறுநதிவடிவமாக மாறிக் கௌதம நதியுடன் கூடிச் சங்கமமானவுடன் முன்னையுருப் பெறும்படியாக மறுசாபமும் கொடுத்தார்."

4. "இந்திரன் சரீரத்தில் ஆயிரம் மாதர்க்குள்ள அறிகுறி தோன்றிப் பின்னர்க், கௌதம—அகலிகை நதிகளின் சங்கமஸ்தானத்தில் ஸ்நானம் செய்வதின் மூலமாய், அவ்விகாரங்கள் நீங்கி, ஆயிரங்கண்களாக மாறும் என்னும் சாபமும் மறுசாபமும் பெற்றான்".

என்னும் இவ்வுண்மைகளைக் காண்க. தடித்த எழுத்தில் இருப்பவற்றைக் கம்பர் கவிகளிற் காணலாகும்.

இனி, நாம் இவ்வதிகாரணத்தில் தற்போது எடுத்துக்கொண்ட "புக்கவளோடும்" என்னும் கவியின் நான்காமடியாகிய "முக்கணான் அனைய ஆற்றல் முனிவனும் முடுகிவந்தான்" என்னும் அடியின் பொருளையும் விரித்துச்செல்வோமாக. இதன்பொருள் வெளிப்படை.

"முக்கணன்"—பரமசிவப்பெருமான்; கண்ணுதற்பெருமானாக லின்; திரிபுரமெரித்த விரிசடைக்கடவுளோடொப்பக் கௌதம முனிவரும், சினந் தோன்றியக்கால், விரும்பின், அவ்விந்திரனையேயன்றி மூவுலகங்களையும் அழித்திடும் ஆற்றலுடையாரென்பார், "முக்கணன் அனைய ஆற்றல் முனிவன்" என்றாரென்க.

"முடுகிவந்தான்"—விரைந்துவந்தான் என்பதாம். இவ்வடியி லுள்ள "முடுகி" என்னும் இப்பதமும், இதற்கு முன்னடியிற் காணப் பெறும் "தாழா" என்னும் பதமும் கௌதம முனிவரது மனத்தின் ஐயப்பாட்டை யுணர்த்தற்பாமென்றுணர்க.

மெய்யன்பர்களே! இந்தக் கவியின் உண்மைப் பொருளையும் உறுதிப் பொருளையும், இப் படலத்தின் 71-ம் கவியின் நான்கனடியிற் காணப் பெறும் "பண்டை வண்ணம்" என்னும் சொற்றொடரோடும், 73-ம் கவியின் நான்கனடியிற் காணப்பெறும் "அன்னையே அனையாள்" என்னும் சொற்றொடரோடும், 85-ம் செய்யுளின் இரண்டனடியாகிய "முன்னை வண்ணத்தள்" என்னும், சொற்றொடரோடும், 85-ம் செய்யுளின் (அதாவது இச் செய்யுளின்) மூன்றனடியாகிய "நெஞ்சினாற் பிழைப்பிலாளை" என்னும் சொற்றொடரோடும் ஒப்பு நோக்கி யுண்மை கண்டு தெளிக.

அக்கவிகள் பின் வருவன:—

இதே படலத்தின் (அகலிகைப் படலத்தின்) 71-ம் கவி:—

"கண்ட கல்மிசைக் காகுத்தன் கழற்றுகள் கதுவ
உண்ட பேதைமை மயக்கற வேறுபட் டுருவம்
கொண்டு மெய்யுணர் பவன்கழல் கூடிய தொப்பப்
பண்டை வண்ண மாய் நின்றனள் மாமுனி பணிப்பான்"

மற்றும் 73-ம் கவி:—

"பொன்னையேர் சடையான் கூறக் கேட்டலும் பூமிகேள்வன்
என்னையே யென்னை யேயிவ் வுலகிய லிருந்த வண்ணம்
முன்னையூழ் வினையி னாலோ நடுவொன்று முடிந்த துண்டோ
அன்னையே அனையாட் கிவ்வா றடுத்தவா றருளுகென்றான்"

இந்திரன் புன்னகையுடன், அஹலிகையைப் பார்த்து, "பெண்ணரசியே நான் மிகவும் சந்தோஷமடைந்தேன் ; இனி இங்கு நிற்க மாட்டேன் ; போய்வருகிறேன் " என்று சொல்லிப் புறப்பட்டு, இடையில் கௌதமர் வந்து விடுவரோ என்னும் அச்சத்துடன் கலங்கி, அவ்வாச்சிரமத்தினின்றும் வெளியே வந்தான். வெளியே வருகையில், பரிசுத்தமான தீர்த்தத்தால் ஸ்நானம் செய்து சமித்து தர்ப்பம் இவற்றுடன் அக்நியைப்போல் ஜ்வலித்துக்கொண்டு உள்ளே புகும் கௌதமரைக் கண்டுவிட்டான். அவரைக் காணவும் தேவேந்திரன் முகம் வெளுத்தான். தவமகிமையால் தேவாசுரர்களாலும் எதிரிடமுடியாத தபோநிதியாகிய கௌதமர், தமது வேஷம் பூண்டு தமதாச்சிரமத்தினின்றும் வெளிவரும் இந்திரனைக்கண்டு செயலுணர்ந்து கோபாவேசம் கொண்டு, "அடா! துர்மதி !! செய்யத் தகாததைக் காமவசப்பட்டு நீ செய்தபடியால், நீ, உன்னுடைய அண்டங்களை யிழக்கக்கடவாய் " என்று சபித்தார். உடனே இந்திரனுடையஅண்டங்கள் அறுந்து கீழே விழுந்தன. பின்னர், அம்மாமுனிவர், அஹலிகையைப் பார்த்து, "நீ இவ்வாச்சிரமத்தில் அநேக காலங்கள் வாயு பக்ஷணம் செய்துகொண்டு அன்னபானாதிகளின்றி வருந்தி இப்புழுதியில் புரண்டுகொண்டு எப்பிராணிவகைக்கும் புலப்படாதபடிவஸித்திருப்பாயாக; என்று அவதார புருஷனாகிய தசரத ராமபிரான் இவ்வாச்ரமபாரிசத்துக்கு வருவாரோ அன்று, அவரது பாதாரவிந்தத் தூகள் பட்டுப் பூர்வம்போலாகி லோப மோஹங்களைவிட்டு, அவரை அதிதி பூஜைகொண்டு ஸத்கரித்துப் பின்னர்ப் பரிசுத்தையாவாயாக " என்று சாபப் பிரதிசாபங்கள் இட்டனர்."



## மிதிலைக் காட்சிப் படலம்.

விசுவாமித்திரர் ஸ்ரீராமபிரான் இலக்குவன் ஆகிய
மிதிலாநகரத்தின் காட்சியைக் கண்டதைப்பற்றிய பிரிவு.

மையறு மலரின் நீங்கி யான்செய்மா தவத்தின் வந்து
செய்யவள் இருந்தாள் என்று செழுமணிக் கொடிகள் என்னும்
கைகளை நீட்டி அந்தக் கடிநகர் கமலச் செங்கண்
ஐயனை ஒல்லை வாவென் றழைப்பது போன்ற தம்மா. க.

பொழிப்புரை :—அந்தக் காவல் பொருந்திய மிதிலாநகரமானது "குற்றமற்ற மலரினின்றும் நீங்கி நான் செய்துவைத்துள்ள பெருந்தவத்தினால், செய்யவளாகிய இலக்குமியானவள், இந்நகர்வந்து இருந்தாள்" என்று சொல்லி, தனது செழுமைபொருந்திய கொடிகளாகிய கைகளை நீட்டி, செந்தாமரைபோன்ற கண்களையுடைய ஐயனாகிய ஸ்ரீ ராமபிரானை அழைப்பது போன்றிருந்தது.

குறிப்புரை:—"அந்தக்கடிநகரின் மாடங்களிலிருக்கும் செழுங்கொடிகள் அசைந்தாடுந்தோற்றம், மிதிலை, தன்கைகளை நீட்டி ஸ்ரீ ராமபிரானையழைப்பதுபோன்றிருந்தது" என்பது கருத்து. மையறு-மை-குற்றம்; அறு-நீங்கிய; அறுமலர்-வினைத்தொகை. செய்மாதவம்-வினைத்தொகை; தவம்-வடசொற்றிரிபு. செய்யவள்:-(செம்மை + அவள்)- அழகுடையாள் (லக்ஷ்மி) - செம்மை - அழகு. இருந்தாள் - தேற்றத்தின் வந்த காலவழுவமைதி ; " இருக்கின்றாள் " என்பது பொருள். செழுமை + மணி - செழு மணி; மணி-வடமொழி. கொடிகள்-துவஜங்கள். கடிநகர்- கடி- காவல்; மணம் என்றுமாம். நகரம் என்னும் வடமொழி திரிந்து நின்று நகர் என்றாயது. கமலச்செங்கண் - கமலம் போன்ற செங்கண் என்பதைக்காட்டிலும் பண்பைப்பிரித்துக்கூட்டி செங்கமலக்கண் என்று கொள்வதில் பொருள் சிறந்திருத்தல்காண்க. ஐயன் - ஆர்யன் என்னும் வடசொற்சிதைவென்பர் ; அழகன் என்றுமாம்-ஐ-அழகு. ஒல்லை-விரைவு. அம்மா - அசை.

நிரம்பிய மாடத் தும்பர் நிரைமணிக் கொடிகள் எல்லாம்
தரம்பிறி தின்மை யுன்னித் தருமமே தூது செல்ல
வரம்பில்பேர் அழகி னானை மணஞ்செய்வான் வருகின் றானென்
றரம்பையர் விசும்பின் ஆடும் ஆடலின் ஆடக் கண்டார். உ.

பொழிப்புரை:—"உயர்ச்சியான தூதுப்பொருள்கள் வேறில்லாக் குறைவை நினைத்துத் தருமதேவதையே தூதாகச்சென்றதால், அளவு சொல்லமுடியாப் பேரழகுடைய சீதாப்பிராட்டியை மணஞ்செய்துகொள்ளக்கூடிய தன்மையான் வருகின்றான்" என்று தெரிந்துகொண்டு ஆகாயத்தில் ரம்பை முதலிய தேவமாதர் ஆடுகின்ற ஆடல்போல, அந்நகரின் வரிசையாகவுள்ள மாடங்களின்மேல் கட்டப்பெற்றிருக்கும் அழகிய வரிசையான கொடிகளெல்லாம் ஆட, அம்மூவரும் பார்த்தார்கள்.

குறிப்புரை.-"மிதிலைநகரின் மாடமேற்கொடிகள் ஆடிக்கொண்டிருத்தலை, அந்நகருள் நுழைந்த விசுவாமித்திரர் முதலிய மூவருங்கண்டார்" என்பது கருத்து. சீதையை மணப்பவன் இராமன்தான் என்பதும், இவ்விஷயத்தில் தருமதேவதை தூது சென்றதென்பதும் ஆகிய இவை தேவரஹஸ்யங்களாயினமையின், இவையுணர்ந்த தேவமாதர்கள் ஆடிக்களித்தனர் என்னும் சுபசூசகத்தைக் கவி குறித்திருப்பது நோக்குக. நிரம்பிய-நிறைந்த என்றுமாம். உம்பர்-மேலே-ஏழனுருபு. நிரை-வரிசை. மணி - ரத்தினமிழைக்கப்பெற்ற என்றுமாம். தரம்-உயர்ச்சி. உன்னி-நினைத்து. தருமம்-வடமொழி. தருமமே - ஏகாரம்-தேற்றம். வரம்பு+இல்-வரம்பில்; அளவு இல்லாத என்று பொருள். பெருமை+அழகு பேரழகு. மணஞ்செய்வான்-மணஞ்செய்பவன், அன்றி "வான்" என்பதை வினையெச்ச வுருபாக்கொண்டு "மணஞ்செய்யும்பொருட்டு" என்றும் பொருள் கொள்ளலாம். வருகின்றான் (ராமன்) எனக்கொள்க. அரம்பையர் - தேவமாதர்கள் என்றும்; ரம்பை முதலியோர் என்றபடி ஆடலின்-இன்-போல.

தயிருறு மத்திற் காம சரம்படத் தலைப்பட் டேங்கும்
உயிருறு காத லாரின் ஒன்றையொன் றுருவ கில்லா
செயிருறு மனத்த வாகித் தீத்திரள் செங்கண் சிந்த
வயிரவான் கணையத் தானை மலையென மலையக்கண்டார். ௬.

பொழிப்புரை:—ஆனைகள் ஒன்றற்கொன்று பொருந்துதல்கூடாது கோபம் மிகுந்த மனம் உடையனவாகி நெருப்புத்திரளைச் சிவந்த கண்கள் சிந்தும்படியாக (நின்று), தயிரைச்சேர்ந்த மத்தினைப்போல, மன்மத பாணம் தங்கள் மேற்படவே கலவியிற்சேர்ந்து ஊடலைச் செய்கின்ற மேன்மேல் வளரும் காதலையுடைய நாயக நாயகிகளைப்போல, வைரம் பொருந்திய பெரிய கட்டுத்தறியினிடத்தே மலைகளின் தோற்றம் கொண்டு போர் புரிதலைக்கண்டார்கள்.

குறிப்புரை:—"யானைகள் விளையாட்டுப்போர் புரிதலை அம் மூவரும் கண்டனர்" என்பது கருத்து. அப்போர், விளையாடலேயாம் என்பதனைக் குறித்திடவே. "தயிருறு......................காதலாரின்" என்று உவமை காட்டினர்போலும். உறு மத்து - வினைத்தொகை. காமன்+சரம்=காமசரம் (வடசொற்றொடர்) மன்மதபாணம்; இப்பா ணம் மாந்தர் மனத்தை, "தயிர் கடையும் மத்தைப் போலக்" கடைந்தி டும் என்பதாம். தலைப்படல், ஊடல், கலத்தல் புலத்தலாம் (கூடலும் ஊடலுமாம்.) உயிர்உறல் - வளர்த்தல் -உறு - துணைவினை. காதலார்= (காதல்+ஆர்) நாயக நாயகிகள். ஒருவல் - ஒன்றுபடல்; இல்லா - முடி யாது. செயிர் - கோபம். திரள் - கூட்டம். செம்மை+கண் - செங் கண்; செம்மை - சிவப்பு. வயிரம் - வைரம் (உறுதி) வான் - பெரிய. கணையம் - யானைகளின் இடையே கிடத்தும் மரம். கணையத்து - "அத்து" சாரியை. மலை - யானைகளின் உருவுக்கு உவமை. மலை தல் - பொருதல் (போர்புரிதல்.)

பகற்கதிர் மறைய வானம் பாற்கடல் கடுப்ப நீண்ட
துகிற்கொடி மிதிலை மாடத் தும்பரிற் றுவன்றி நின்று
முகிற்குலம் தடவுந் தோறும் நனைவன முகிலிற் சூழ்ந்த
அகிற்புகை கதுவுந் தோறும் புலர்வன ஆகக் கண்டார். ௯.

பொழிப்புரை:— நீண்டுயர்ந்த துகிற்கொடிகள், மிதிலாநகரின் மாடங்களின்மேல், சூரிய கிரணம் மறைந்து போகும்படியாகவும், ஆகா யம் பாற்கடல் போல வெளுத்துக்காணும்படியாகவும். நெருங்கி நின்று, ஆகாயத்துற்ற மேகக்கூட்டங்கள் படுந்தோறும் நனைந்து போவனவாகியும் (அம்மேகங்கள் போல்) அங்குச்சூழ்ந்த அகிற்புகைகள் பொருந்துந் தோறும் புலர்ந்துபோவனவாகியும் இருக்கக்கண்டார்கள்.

குறிப்புரை:—அந்நகர் மாடங்களில் விளங்கும் துகிற்கொடிகள், நிறைந்து வரிசையாக இருத்தலால் சூரியவொளி மறைந்தும், அவைகள் வெளுத்திருத்தலால் ஆகாயம் நீலநிறம் நீங்கி வெண்மைபெற்றும், காணப் பெற்றன என்பது கருத்து. கொடிகளின் உயர்ச்சியையுணர்த்த மேகம் தடவுதலையும் அந்நகர் மாதர்கள் மாடங்களின் மேல் அகிற்புகை கூட்டு தலை யுணர்த்த அவை கொடிகளில் கதுவுதலையும் குறித்துளார் என்க. பகற்கதிர்-சூரியன் கிரணம்; பகல்-சூரியன் (பகல் செய்வோன் என்று மாம்,) பகல்-பகு+அல்-பகுக்கப்படுதல். கடுப்ப-ஒப்ப. துகில்-வெண் பட்டு. உம்பர்-உச்சி. துவன்றி-நெருங்கி. முகிற்குலம்-மேகக்கூட்டம். தடவுதல்-தொடல் (பரிசித்தல்) நனைவன-புலர்வன-வினையாலணையும்

பெயர். நனைதல்-ஈரமாதல். முகிலிற்சூழ்ந்த - முகிலில்+சூழ்ந்த-முகிலினிடத்துச் சூழ்ந்த என்றுமாம்; முகில்போற் சூழ்ந்த என்பதே சிறப்பு அகில்-அகரு என்னும் வடமொழிச்சிதைவு என்பர். ஆக-ஆகியிருக்க.

ஆதரித் தமுதுகோ லேய்த் தவயவம் அமைக்குந் தன்மை
யாதெனத் திகைக்கும அல்லால் மதனற்கும் எழுத வொண்ணாச்
சீதையைத் தருத லாலே திருமகள் இருந்த செய்ய
போதெனப் பொலிந்து தோன்றும் பொன்மதில்மிதிலைபுக்கார் ரு.

பொழிப்புரை:-மன்மதக்கடவுளும் சீதையையெழுத வேண்டுமென்னும்விருப்பங்கொண்டு அழகாகிய அமுதத்தில் தனதுபுத்தியாகிய எழுதுகோலைத்தோய்த்துக்கொண்டிருந்தும், இவ்வழகிய பெண்ணினது அவயவங்களையமைக்குந்தன்மை யெப்படியென்று திகைப்பானல்லாமல், அந்த மன்மதனுக்கும் எழுதமுடியாத சீதையைப் பெற்றிருத்தலாலே, அந்தத் திருமகளாகிய இலக்குமி வீற்றிருந்த அழகான தெய்வத்தாமரைபோலும் விளங்கித்தோன்றும் பொன்மயமான மதில்களைப்பெற்றுள்ள மிதிலா நகரத்திற் புகுந்தார்.

குறிப்புரை:—"விசுவாமித்திரர் முதலிய மூவரும் அந்த மிதிலையென்னும் நகரில் புகுந்தார்" என்பதாம். கதாநாயகனாகிய ஸ்ரீராமபிரானும் கதாநாயகியாகிய சீதாப்பிராட்டியும், விவாஹத்துக்கு முன்னர் முதன் முதல் சந்திக்கக்கூடிய இடமாகலின், தமிழிலக்கிய முறைக்கிணங்க, இவ்விடத்தை - இந்நகரத்தை யோர் மலராகக் (மலர்ப்பொய்கையாக - சோலையாகக்) குறிக்கின்றார் போலும். ஆதரித்தல் - விரும்பல். அமுது - இங்கே சித்திரம் தீட்டும் வர்ணத்தை குறித்துளது. கோல் - எழுதுகோல் - சித்திரம் தீட்டும்கோல். அவயவம்- (வடமொழி) உறுப்புகள். திகைக்கும் - மயங்குவான். மதனன் - மன்மதன். சித்திரம் வரைபவரிற்சிறந்தவன் என்க. ஒண்ணா - முடியாத; ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சம். சீதை (ஸீதா வடமொழி) உழவுசால் என்பது பொருள். திருமகள் - இலக்குமி. போது - தாமரைமலர்.

சொற்கலை முனிவன் உண்ட சுடர்மணிக் கடலும் துன்றி
ஆற்கலந் திலங்கு பன்மீன் அரும்பிய வானும் போல
விற்கலை நுதலி னாரும் மைந்தரும் வெறுத்து நீத்த
பொற்கலன் கிடந்த மாட நெடுந்தெரு அதனிற் போனார். சு.

பொழிப்புரை :—சொல் நிரம்பிய சாஸ்திரங்களிற் வல்லவரான அகத்திய முனிவராலுண்ணப் பெற்று நீர் வற்றிப் பிரகாசிக்கும் ரத்தினங்கள் நிறைந்திருக்கும் கடலையும், நெருங்கிய இருளுடன் கலந்து விளங்குகின்ற பல நக்ஷத்திரங்கள் தோன்றியுள்ள ஆகாயத்தையும்போல- வில்லைப்போன்ற நெற்றியையுடைய பெண்மக்களும் மற்றை யவ்வாண் மக்களும் ஊடற் காலத்தில் வெறுத்து நீக்கிய பொன்னுபரணங்கள் பிரகாசத்துடன் (ஒளிர்ந்து கொண்டு) இருந்த மாடங்கள் நிறைந்துள்ள அந்த நகரத்தின் நீண்ட தெருவில் நடந்து சென்றார்கள்.

குறிப்புரை :—“செல்வச் சிறப்பு மிகுந்த மாடங்களையுடைய அந் நகர்த்தெருவில் அம்மூவரும் புகுந்து சென்றார்” என்பதாம். சோலைகளும் செல்வம் மிகுந்த மாடங்களும் நிறைந்துள்ள தெருவுக்கு, ரத்நம் மிகுந்து விளங்கும் கடலையும் நக்ஷத்திரங்கள் மிகுந்து பிரகாசித்துக் கொண்டிருக்கும் ஆகாயத்தையும் உவமித்துள்ள அழகை யூன்றிக் கவனித்திடுக. சொற்கலை - சொல்+கலை=சொற்கள் நிரம்பியநூல்; (சொல்லிலக்கணம் என்றும்.) கலை - கலா என்னும் வடசொற்றிரி பென்றும் குறிப்பர்; முனிவன் - அகத்தியர்; தமிழிலக்கணக்கவிஞர் ஆகலின் என்க. துன்றல் - நெருங்கல். அல்+கலந்து=அற்கலந்து- அல் - இருள். இலங்கல் - விளங்கல். மீன் - நக்ஷத்திரம்; மின்னுதல் உடையதென்பதாம்; பகுதி திரிந்த தொழிற் பெயர். அரும்பல் - தோன்றல். வில்+கலை=விற்கலை; கலை - உவமையுருபாம்; “விற்கு +அலை” என்று கொண்டு,வில்லினுக்கும் அலைத்தலைத் (வருத்தத்தைத்) தரும் என்றும் பொருள் கூறுவர்.

தாறுமாய் தறுகண் குன்றம் தடமத அருவி தாழ்ப்ப
ஆறுமாய்க் கலின மாவி லாழியும் இழிந்தோ ராறாய்ச்
சேறுமாய்த் தேர்கள் ஓடத் துகளுமாய் ஒன்றோ டொன்று
மாறுமா றாகி வாளா கிடக்கிலா மறுகிற் சென்றார். எ.

பொழிப்புரை :—தாற்றுக்கோலையும் அழிக்கின்ற அஞ்சாமை படைத்த மலைபோலும் உருவுடைய யானைகள், நிறைந்த மதநீரைக்கொட்டிட, அதனால் ஆறுபோலவும். பின்னர் சேணம் பூட்டிய குதிரைகளின் வாயிலிருந்து பெருகிவரும் நுரைநீர்களு மிழிந்துசேர்ந்து ஒரு விதமான சேறாகியும், அதன்மேல் தேர்கள் ஓடச்செலுத்துதலால் அந்தச் சேறும் துகளாகியும் இப்படி ஒன்றோடொன்று வேறுவேறாகிச் சும்மா கிடத்தலில்லாத வீதிகளிற் சென்றார்கள்.

குறிப்புரை:— "மிதிலாநகரத் தெருக்களில் எப்போதும் யானைகளும் குதிரைகளும் தேர்களும் சென்றுகொண்டிருக்கும் என்பதாம். தாறு+மாய்-தாறு-முள் (தாற்றுக்கோல்-அங்குசம்) மாய்-அழிக்கின்ற. தறுகண்மை-அஞ்சாத்தன்மை. குன்றம்-(மலைபோன்ற யானை) உவமையாகு பெயர். தாழ்ப்ப - சொரிய. ஆறுமாய்-சேறுமாய்-துகளுமாய் இப்படி வேறுவேறாகத்தோன்றும் தெருக்கள் என்று காட்டுக. ஆறும்+ஆய்-நதிபோன்றாகி. கலினம்+மா-கலினமா; கலினம்-சேணம்; மா-மிருகம்; விலாழி-குதிரைவாயின் ஒழுகும் நுரை; ஓர் ஆறாய்-ஒருவிதமாகி. வாளா-சும்மா. கிடக்கிலா-கிடக்க+இலா-இருத்தல் இயலாத மறுகு-தெரு.

*தண்டுதல் இன்றி ஒன்றித் தலைத்தலை சிறந்த காதல்*
*உண்டபின் கலவிப் போரில் ஒசிந்தமென் மகளிரேபோற்*
*பண்டரு கிளவி யார்தம் புலவியிற் பரிந்த கோதை*
*வண்டொடுகிடந்துதேன்சோர்மணிநெடுந்தெருவிற்சென்றார்.* ௩௪.

பொழிப்புரை:—நீக்கம் இல்லாமற் கலந்து ஒருவருக்கொருவர் மேம்பட்ட காதல்மிகுதியாலே, சிற்றின்பநுகர்ச்சியிற் கலந்துஅநுபவித்த பின்னர், அந்தப்புணர்ச்சிப்போரினால் துவண்டுபோன பெண்களைப்போல இசையின்பத்தைத்தரும் சொற்களுடைய பெண்கள் தமது ஊடலில் அற்றுவீழ்ந்த, மாலைகள், அவற்றினுற்றவண்டுகளுடன் இருந்து தேனைப் பொழிந்துகொண்டிருக்கும் அழகிய நீண்ட தெருவிற்சென்றார்கள்.

குறிப்புரை:—"உயர்குலப் பெண்களும் அவ்வாண்களும் உலகவின்பம் தவிராது நுகரும் உயர்தெருக்களிலும் சென்றார்கள்" என்பதாம். தண்டுதல்-நீங்கல். ஒன்றி-கலந்து. தலைத்தலை-ஒருவர்க்கொருவர் மேம்பட மேம்பட என்றுமாம். காதல்-அன்பின் பெருக்கத்திற்பெறும் சிற்றின்ப நுகர்ச்சி. உண்ட-அனுபவித்த. கலவி-(கூடல்) புணர்ச்சி. போர்-வெற்றி தோல்வி மாறிமாறிவரும்படி இடைவிடாது செய்யும் கலவி. ஒசிதல்-துவளல். மகளிர்-பெண்கள். பண்-இசை.கிளவி-சொல். புலவி-ஊடல். பரிதல்-அற்றுவீழல். கோதை-மாலை. கிடத்தல்-இருத்தல். சோர்தெரு-வினைத்தொகை; சோர்தல் - சொரிதல் (கொட்டுதல்) மணி - அழகு, ரத்நம்.

நெய்திரள் நரம்பில் தந்தம் மழலையின் நிறைந்த பாடல்
தைவரு மகர வீணை தண்ணுமை தழுவித் தூங்கக்
கைவழி நயனம் செல்லக் கண்வழி மனமுஞ் செல்ல
ஐயநுண் இடையார் ஆடும் நாடக அரங்கு கண்டார். கூ.

பொழிப்புரை:—கறைபிடியாமலிருப்பதற்காக நெய் பூசப்பெற்றுத் திரண்டுள்ளனவாகிய (வீணை) நரம்புகளில், இன்னோசையுடைய தங்கள் தங்கள் மழலைச் சொற்கள் போன்று பண் நிரம்பப்பெற்றுள்ள பாடலை யெழுப்பும்படியாகத் தடவப் பெறுகின்ற மகர உருவிலமைக்கப்பெற்ற வீணைகளுடன் மத்தளங்களும் தழுவிச் செறிந்து கொண்டிருக்க, அபிநய வகைகளைக் காட்டிக்கொண்டிருக்கும் கைகள் வழியே கண்கள் செல்லவும் அக்கண்களின் வழியே மனமும் செல்லவும் அழகிய நுண்ணிய இடையையுடைய நடனமாதர்கள் ஆடக்கூடிய நாடக ஸபைகளையும் பார்த்தார்கள்.

குறிப்புரை:—"வாய்ப்பாட்டுடன் வீணையும் மிருதங்கமும் நிரம்பி நாடகப்பெண்கள் ஆடும் நாடகஸபைகளும்" கண்டார். நெய்திரள் நரம்பு - துருவேறாமல் நெய் பூசப்பெற்றுத் திரட்சியாயுள்ள வீணை நரம்பு. தம்தம் மழலை – தமது தமது மழலைச் சொற்கள்; மழலை - உருத்தெரியாச் சொற்கள். தைவரல் - தடவல். மகரம் - ஓர்வகை மீன். தண்ணுமை - மத்தளம். தூங்கல் - செறிதல். பரதநாட்டியமாடு வோர், அபிநயங் காட்டும் போது, அவர்களது கைவழி கண்களும், அக்கண்களின் வழியே மனமும் செல்லுதலியற்கை. ஐய - அழகிய. நாடக ரங்கம்-(வடமொழி) நாடக அரங்கு (தமிழ்) நயனம் - வடமொழி.

பூசலின் எழுந்த வண்டு மருங்கினுக் கிரங்கிப் பொங்க
மாசறு பிறவி போல வருவது போவ தாகிக்
காசறு பவளச் செங்காய் மரகதக் கமுகிற் பூண்ட
ஊசலின் மகளிர் மைந்தர் சிந்தையோ டுலாவக் கண்டார். கo.

பொழிப்புரை:—குற்றம் பொருந்திய பிறவியைப்போல இங்கும் அங்கும் வருவதும் போவதுமாகி, அழுக்கறுத்த பவளம் போன்ற சிவந்த காய்களையுடைய மரகத நிறமுடைய பாக்குமரங்களிற் கட்டப்பெற்றுள்ள ஊஞ்சல்களில் பெண்கள் தங்கள் கூந்தல்களிலிருந்து ஆரவாரத்துடன் எழுந்த வண்டுகள் தங்கள் இடைகள் நோமென்றிரக்கங்கொண்டு மேலெழுந்தபடியே நிறைந்திருக்கும்படி. தங்களைப் பார்த்துக்கொண்டிருக்கும் ஆண்மக்களின் மனத்துடன் அசைந்தாடக் கண்டார்கள்.

குறிப்புரை :—"அந்நகர்ச் சோலைகளில் பாக்கு மரங்களிற் கட்டப் பெற்றுள்ள ஊசல்களில் பெண்கள் ஆடுவதைக்" கண்டார். பூசல் - ஆரவாரம் மருங்கு - இடை. இரங்கல் - வருந்துதல். பொங்கல் - நிறை தல். காசு -குற்றம். மரகதம் - பச்சை. கமுகு - பாக்கு. ஊசல் - ஊஞ்சல். உலாவல் - அலைதல், அசைதல்.

வரம்பறு மணியும் பொன்னும் ஆரமும் கவரி வாலும்
சுரம்படை அகிலும் மஞ்ஞைத் தோகையும் தும்பிக் கொம்பும்
குரம்பணை நிரப்பும் மள்ளர் குவிப்புறக் கரைகள் தோறும்
பரம்பிய பொன்னி அன்ன ஆவணம் பலவும் கண்டார்.　　கக.

பொழிப்புரை :—குரம்பாகிய அணையைக் குறைவற முடிக்க விரும்பிய உழவர்கள் கொண்டு வந்து குவித்திடவே, கரைகளிலெல்லாம், அளவற்ற மணிகளும் பொன் வகைகளும் சந்தனக்கட்டைகளும் கவரி மான் மயிர்களும் பாலைவனத்திற்றரப்பெற்ற அகிற் கட்டைகளும் மயி லின் தோகைகளும் யானைக் கொம்புகளும் விரிந்து பரந்துள்ள காவிரி யாற்றுப் பிரதேசம் போன்ற அந்நகர் கடைத் தெருக்கள் பலவற்றையும் கண்டார்கள்.

குறிப்புரை —அந்நகர்க் கடைத் தெருக்களில், ரத்தினங்களும் பொன் வகைகளும் சந்தனக் கட்டைகளும் கவரி மான்மயிர்ச் சாமரை களும் அகிற் கட்டைகளும் மயில் தோகைகளும் யானைத் தந்தங்களும் பரந்து விரிந்திருக்கக் கண்டார்கள் என்பதாம். வரம்பு - அளவு. மணி - (வடமொழி) ரத்நவகைகள். பொன் - அதன் வகைகளையும் குறித்த உபலக்ஷணமாகி நின்றது. ஆரம் - சந்தணம்; இதற்கு முத்து எனப் பொருள் கொள்ளுதல் சிறவாது; முத்து - மணிவகைளிற் சேர்ந்துள்ள தாகலின் என்க. கவரி - கவரிமான். சுரம் - பாலைவனம்; படை - படைத்த (தந்த என்பதாம்.) மஞ்ஞை - மயில். தும்பி - யானை. குரம்பு - அணை - பேராறுகள் கரைகளை யழிக்காமலிருத்தற்கு இருபுறங் களிலும் அணைக்கப்பெறும் அணைக்குரம்பெனப்படுவது. நிரப்பல் - குறை வறநிறைத்தல். மள்ளர் உழவர். குவிப்புற - குவிக்க; உறு - துணை வினை. பரம்பல் - விரியல். பொன்னி - காவிரி. அன்ன - (போல) உவமை யுருபு. ஆவணம் - கடைகள் - கடைத் தெருக்கள்.

வள்ளுகிர்த் தளிர்க்கை நோவ மாடகம் பற்றி வார்ந்த
கள்ளென நரம்பு வீக்கிக் கையொடு மனமும் கூட்டி
வெள்ளிய முறுவல் தோன்ற விருந்தென மகளிர் ஈந்த
தெள்விளிப் பாணித் தீந்தேன் செவிமடுத் தினிது சென்றார். கஉ.

பொழிப்புரை :—வளர்ந்த நகங்களையுடைய தளிர்போன்ற கைகள் நோவும்படியாக வீணையின் முறுக்காணியைப்பற்றி, பெருகிவரும் தேன் போல ஒலியை இனிமையாகச் செய்யும் வீணை நரம்புகளைக்கட்டி, அவற்றைத் தடவும் கையுடன் மனத்தையும் ஒன்றெனக்கூட்டி, தமது வெள்ளிய புன்னகை தோன்றும்படியாக ஒரு விருந்து போல அந்நகர்ப் பெண்கள் அளித்த தெள்ளிய ஓசையையுடைய பாட்டுக்களைச் செவிகளில் நிறைத்துக்கொண்டு இனிமையுடன் அம்மூவரும் அந்நகர் வீதிகளிற் சென்றார்கள்.

குறிப்புரை :—" அந்நகர்த் தெருக்களில் வீடுகள்தோறும் வீணை கானங்கள் நடந்துகொண்டிருக்கின்றன " என்பதாம். வள் - வளர்ந்த; உகிர் - நகம். தளிர்க்கை - உவமைத்தொகை. மாடகம் - முறுக்காணி. வார்தல் - பெருகுதல். கள் - தேன். வீக்கல் - உறுதிபடக்கட்டல். வெள்ளிய - வெளுத்த. முறுவல் - புன்னகை. " தோன்று " என்பது பாடாந்தரம். தெள் - தெளிந்த. விளி - ஓசை. பாணி - பாட்டு. மடுத்தல் - நிறைத்தல்.

கொட்புறு கலினப் பாய்மா குலான்மகன் முடுக்கி விட்ட
மட்கலத் திகிரி போல வாளியின் வருவ மேலோர்
நட்பினின் இடைய றாவாய் ஞானிகள் உணர்வின் ஒன்றாய்க்
கட்புலத் தினைய வென்று தெரிவில திரியக் கண்டார். கங

பொழிப்புரை :—சுழற்சியையுடைய சேணங்கள் பூட்டப்பெற்றுள்ள பாய்ந்து செல்லும் மிருகங்களாகிய குதிரைகள், குயவனால் விசையாகச் சுற்றி விடப்பட்டுள்ள மண்பாத்திரஞ் செய்வதற்குரிய சக்கரம் போலவும் தன் ஒரு லக்ஷ்யத்தையே நோக்கிச் செல்லும் பாணங்கள் போலவும் வருவனவாகியும், பெரியோரது நேசத்தைப்போல் இடையறாதவாகியும், ஞானிகள் (பலபேர்களாயினும் அவர்களது ஒரே லக்ஷ்யத்தை நாடிய) உணர்ச்சிகளைப் போல ஒருப்பட்ட தன்மையுடையன

வாகியும், நேத்திரேந்திரியத்தால் இன்னவைதாமென்று தெரியக்கூடா தனவாகியும் சுழன்று திரிந்து கொண்டிருக்கக்கண்டார்கள்.

குறிப்புரை :—அந்நகரத்தில் ஒரு லக்ஷ்யத்தையே நாடிக்கொண்டு வட்டமாக ஓடிக்கொண்டிருக்கும் பந்தயக்குதிரைகள் பலவற்றையும் மூவரும் பார்த்தனர் என்பதாம். கொட்பு - சுழற்சி. கலினம் - சேணம். பாய் மா - குதிரை; மா - மிருகம்; பாய்ந்து செல்லுதலால். குலான் மகன் - குயவன். முடுக்கிவிட்ட - விசையாகச் சுழற்றிவிடப் பெற்ற. மட்கலம் - (மண்+கலம்) மண் பாத்திரம். திகிரி - சக்கரம். வாளி - பாணம். மேலோர் நட்பு இடையறாதிருக்குமென்பது அநுபவம். ஞானிகள் - அறிவாளிகள். உணர்வு - உணர்ச்சி. கட்புலம் - (கண்+புலம்) கண்ணிந்திரியம்; புலம் - இந்திரியம். இனைய - இன்ன தன்மையன. தெரிவில - தெரியக்கூடாதன; "தெளிவில" என்பது பாடாந்தரம். கலினப்பாய்மா, வருவ - இடையறாவாய் - ஒன்றாய் - தெருவில் திரியக் கண்டார் என்று முடிக்க.

வாளரம் பொருத வேலும் மன்மதன் சிலையும் வண்டின்
கேளொடு கிடந்த நீலச் சுருளுஞ்செங் கிடையும் கொண்டு
நீளிரும் களங்கம் நீக்கி நிரைமணி மாட நெற்றிச்
சாளரம் தோறும் தோன்றும் சந்திர உதயம் கண்டார். கச.

பொழிப்புரை :—அரத்தால் அராவப்பெற்ற வேலாயுதம்போன்ற கண்களையும், மன்மதக்கடவுளது வில்லைப்போன்ற புருவங்களையும், வண்டுக் கூட்டத்துடன் தங்கியிருந்த நீலநிறச் சுருளாகிய கூந்தலையும், சிவந்த நெட்டி போன்ற உதட்டையும் கொண்டு, நீண்ட பெரிய களங்கம் நீக்கப்பெற்று வரிசையாகவுள்ள ரத்நமயமான மாடங்களின் முகப்பில் உள்ள பலகணிகள் தோறும் தோன்றிக்கொண்டிருக்கும் சந்திரோதயங்கள் போன்ற பெண்களின் முகங்களைக் கண்டார்கள்.

குறிப்புரை :—அந்நகர் மாடங்களின் பலகணிகள் தோறும் நோக்கிக்கொண்டிருக்கும் பெண்களின் முகங்களைக் கண்டார்கள் என்பது கருத்து. வாளரம் - ஓர்வகை அரம். பொருதல் - அராவுதல் கேள் - இனம்; கூட்டம். கிடத்தல் - தங்கியிருத்தல். சுருள் - சுருட்டை. செங்கிடை - செம்மை+கிடை - கிடை - நெட்டி; கிடைச்சி யென்றும் பெயர். களங்கம் - (வடமொழி) கறை. நிரை - வரிசை,

நெற்றி - முகப்பு. சாளரம் - பலகணி. வேல், சிலை, செங்கிடை, சந்திர உதயம் - இவை உவமையாகு பெயர்கள். மன்மதன். களங்கம்- மணிமாடம். சந்திர உதயம் - இவை வடசொற்களும் வடசொற்றொடர்களுமாம்.

பளிக்குவள் ளத்து வார்த்த பசுநறுந் தேறல் மாந்தி
வெளிப்படு நகைய ஆகி வெறியினை நிகழ்த்து கின்ற
ஒளிக்கினும் ஒளிக்க ஒட்டா ஊடலை உணர்த்து மாபோல்
களிப்பினைஉணர்த்தும்செவ்விக்கமலங்கள்பலவும்கண்டார் கரு.

பொழிப்புரை :— கண்ணாடிக் கிண்ணத்தில் வார்க்கப்பெற்றுள்ள குளிர்ந்த மணம் பொருந்திய மதுவைக்குடித்து வெளிக்காட்டும் பற்களைப்பெற்றனவாகிக் கள்ளுண்ட மயக்கத்தைக் காட்டிநிற்கின்ற—ஒளித்தாலும் ஒளிக்கமுடியாதபுலவியைத் (பிணக்கைத்) தெரிவித்துக்கொண்டிருக்கின்றனபோல், தமது சந்தோஷத்தைத் தோற்றிக்கொண்டிருக்கும் அழகான தாமரை மலர்கள் போன்ற பெண்கள் முகங்கள் பலவற்றையும் கண்டார்கள்.

குறிப்புரை :— இதுவும் அந்நகர்ப்பெண்களின் முகங்களைக்குறித்து நிற்கின்றது. பளிக்கு வள்ளம் - பளிங்கு+வள்ளம் ; பளிங்கு - கண்ணாடி ; வள்ளம் - கிண்ணம். வார்த்தல் - கொட்டுதல். பசுமை - குளிர்ச்சி. நறுமை - மணம். மாந்தல் - குடித்தல். நகை - பற்கள். வெறி - (மணம்) கள்ளுண்ட மயக்கம். ஊடல் - நாயக நாயகிக்குள் கூடலுக்கு முன்னிகழும் சிறுகலகம். உணர்த்துமாபோல் - உணர்த்தும்+ஆ(று)+போல். களிப்பு - சந்தோஷம். செவ்வி - அழகு. கமலங்கள் - உவமையாகு பெயராகி நின்று பெண்களின் முகங்களைக்குறித்தது.

மெய்வரு போகம் ஒக்க உடனுண்டு விலையும் கொள்ளும்
பையர வல்கு லார்தம் உள்ளமும் பளிங்கும் போல
மையரி நெடுங்கண் நோக்கம் படுதலும் கருகி வந்து
கையுறச் சிவந்து காட்டும் கந்துகம் பலவும் கண்டார். கசு.

பொழிப்புரை :—தேக ஸம்பந்தத்தால் வருகின்ற சிற்றின்பத்தைக் தம்மைக்கூடவந்த ஆண் மகனுடன் சமமாகவே தாமும் அனுபவித்து, அவ்வின்பத்துக்காக விலைப்பொன்னும் வாங்கிக்கொள்ளுகின்ற - பாம்பின்படம்போன்ற அல்குல் பிரதேசத்தையுடைய விலைமங்கையர்களினது

மெனத்தையும் கண்ணுடியையும் போலவே (கண்டது கலந்து இயற்கை மாறுபடும் தன்மையுடையதாய்) ஆடும் பெண்களின் மைதீட்டக பற்றுச் செவ்வரிபடர்ந்துள்ள நீண்ட கண்களினது பார்வைபடும்போதுப் கரு நிறங்காட்டியும், வந்து அப்பெண்களின் கையிற்பொருந்தும்போது செந்நிறம் காட்டியும் இங்ஙனம் வேறுபடுகின்ற பந்துகள் பலவற்றையும் கண்டார்கள்.

குறிப்புரை :—அந்நகரமாதர்கள், ஆடிக்கொண்டிருக்கிற பந்துகள், விலை மங்கையர்களினது உள்ளத்தையும் கண்ணுடியையும் போல கண்டது கலந்து வேறுபடுந் தன்மையன வாய்த்தம்மியற்கை மாறுபட்டிருக்கக் கண்டார்கள் என்பதாம். மெய் - சரீரம். வருபோகம் - வினைத்தொகை; போகம் (வடமொழி) இன்பம். ஒக்க - சமமாக. உண்டு - அனுபவித்து. விலை-கூலி. பை+அரவு - பாம்பின்படம்; பை - படம். உள்ளம் - மனம். பளிங்கு - கண்ணுடி. மை+ அரி+நெடுமை+கண்; மையரி நெடுங்கண்;மை -தீட்டும் மை. அரி - படர்ந்திருக்கும் செவ்வரி. நோக்கம்—பார்வை. கருகி - கறுமையடைந்து. கை+உற—கை= பொருந்த. கநந்துகம் - பந்து.

கடகமும் குழையும் பூணும் ஆரமுங் கலிங்க நுண்ணூல்
வடகமும் மகர யாழும் வட்டிகை கொடுத்து வாசத்
தொடையலங் கோதை சோரப் பளிக்குநாய் சிவப்பத் தொட்டுப்
படைநெடுங் கண்ணார் ஆடும் பண்ணைகள் பலவுங் கண்டார். கஎ.

பொழிப்புரை :—கையணிகளையும் காதணிகளையும் பூண்டுள்ள மாலைகளையும் கலிங்கதேசத்து நுண்ணிய நூலாற் செய்யப் பெற்ற வடகங்களையும் மகரமீன் உருவத்திற் செய்யப்பெற்ற வீணைகளையும் பந்தயப் பொருளாகக் கொடுத்து, மணம் பொருந்திய மலர்களால் தொடுக்கப் பெற்றுள்ள அழகிய பூச்சரங்கள் சோர்ந்து விழும்படியாக - பளிங்கினுல் நாயுருவிற் செய்யப்பட்டிருக்கும் சூதாடு கருவிகள் சிவக்கும்படியாகத் தமது செங்கையால் தொட்டு, வாள்வேல்போல் கூறிய நீண்ட கண்களையுடைய பெண்கள் ஆடிக்கொண்டிருக்கும் விளையாட்டிடங்கள் பலவற்றையும் கண்டார்கள்.

குறிப்புரை :—அந்நகர் மாதர்களிற் சிலர் விளையாட்டுச் சூதாடியிருத்தலைக் கண்டார். கடகம் - புஜத்தில் அணியும் ஆபரணம். குழை -

காதணி. பூணும் ஆரமும் - பூணும் - பெயரெச்சம். அன்றியே, பூணும் — மற்றையணிகளும்; ஆரமும் - மாலையும் என்றும் கொள்ளலாம். கலிங்கம் - கலிங்கதேசம். நுண்மை+நூல்—நுண்ணூல் — நுண்மை= நொய்ம்மை. நூல் - இழை. வடகம் - அத்தவாளம். "விலைவரம்பறிய லாகா விண்ணுரைக் கலிங்கம்" என்பது சிந்தாமணி. யாழ் - வீணை. வட்டிகை - பந்தயப் பொருள்; ஒட்டம் என்பதுமாம். தொடையல்= (தொடு+ஐ) தொடுக்கப்பட்டது என்பது பொருள்; அல் - சாரியை; அம்+கோதை=அழகிய மாலை யென்பதாம். சோர - வீழ; சோர்தல் - வீழ்தல். பளிக்கு+நாய். பளிக்கு நாய்-நாய்-நாயுருவின் சூதாடுகருவிகள், படை-(படு+ஐ) எதிரிகளைப் படுப்பது என்பதாம். இங்கு வாளையும்வேலை யும் குறித்தது. கண்ணார் - கண்களையுடைய பெண்கள். பண்ணை - விளையாட்டிடம்.

பங்கயம் குவளை ஆம்பல் படர்கொடி வள்ளை நீலம்
செங்கிடை தாங்கம் ஞெண்டு சினைவரால் ஆமை தேம்பத்
தங்கள்வே றுவமை இல்லா அவயவம் தழுவிச் சான்ற
மங்கையர் விரும்பி ஆடும் வாவிகள் பலவும் கண்டார். கஅ.

பொழிப்புரை :—பெண்களின் அவயவங்கட்கு உவமைப் பொருள் களாகச் சொல்லப்பெறும் தாமரை கருநெய்தல் செவ்வல்லி படர்ந்திருக் கும்வள்ளைக்கொடி நீலோத்பலம் சிவந்தநெட்டி அலைகள் நண்டு சினை யுடையவரால் மீன்கள் ஆமை என்னுமிவைகள் தோற்றுப்போய் வாடி யிருக்கத் தங்கட்குத் தாங்களே உவமையல்லாமல் வேற்றுவமை காண முடியாத முகம் கண்கள் உதடு காது வயிறு கணுக்கால் புறங்கால் என் னும் இவ்வயவங்களையே தழுவி மேம்பாடுடைய பெண்கள் விருப்பத் துடன் நீராடிக்கொண்டிருக்கின்ற குளங்கள் பலவற்றையும் கண்டார் கள்.

குறிப்புரை :— அந்நகர்ப் பெண்கள் நீராடிக்கொண்டிருக்கும் நீர் நிலைகளைக்கண்டார்கள் என்பதாம். பங்கயம் - (பங்கஜம் - வடமொழி) தாமரை = சேற்றில் தோன்றுவதால் (பங்கம்+ஜம்) தரங்கம் — (வட மொழி) அலை. ஞெண்டு - நண்டு. வரால் -ஓர் வகைமீன் ; சினை - கருக்கொண்டது. தேம்ப — தோற்றுவாட. அவயவம் — (வடமொழி) உறுப்பு. சான்ற — பெருமையையுடைய. மங்கையர் - மங்கைப் பரு வம் குறித்து நின்றது. வாவி (வாபி - வடமொழி) குளம்.

இயங்குறு புலன்கள் அங்கும் இங்குங்கொண் டேக ஏகி
மயங்குபு திரிந்து நின்று மறுகுறும் உணர்வி தென்னப்
புயங்களில் கலவைச் சாந்தில் புணர்முலைச் சுவடும் நீங்கா
வயங் கெழில் குமரர் வாளாட் டாடிடம் பலவும் கண்டார். கக.

பொழிப்புரை :— தங்கள் தோள்களில் பூசப்பெற்றுள்ள கலவைச் சாந்துகளில் தோன்றியிருக்கும் - மனைவியருடன் புணர்ந்தபோது பட்ட முலையடையாளங்கள் நீங்கப்பெறாது, அதனால் விளங்கிய அழகுடைய குமரர்கள், ஸஞ்சரித்தலியல்பு பெற்ற இந்திரியங்கள் அப்புறமும்இப்புறமும் இழுத்துக்கொண்டு போக அவற்றோடேகி மயக்கத்தையடைந்து திரிந்து நின்று, கலக்கத்தை யடைந்திருக்கும் உணர்ச்சியென்பது இப்படித்தானிருக்கும் என்னும்படியாக - தங்கள் கைகளிலிருக்கும் வாளாயுதங்களைச் சுழற்றி யாடிக்கொண்டிருக்கும் வாட்பயிற்சிச்சாலை பலவற்றையும் கண்டார்கள்.

குறிப்புரை :— அந்நகரில் இளைஞர்கள் வாட்போர்ப்பயிற்சி செய்யுமிடங்களைக்கண்டார்கள் என்பதாம். இயங்குறல்-திரிதல். உறுபுலன் - வினைத்தொகை. புலன்கள் - இந்திரியங்கள். அங்குமிங்கும் - அப்புறமுமிப்புறமும். கொண்டேகல் - அலைத்தேகல். மயங்குபு - மயங்கி. மறுகுறல் - கலங்கல். உணர்வு - அறிவு. புயம் - (புஜம் - வடமொழி) தோள். கலவை - சந்தணமும் மேலும் மணம் பெறக்கூட்டும் கூட்டுப் பொருள்கள். கலப்புப்பொருள்கள். (புணர்முலை - வினைத்தொகை - புணர்ந்தமுலை) இரட்டைமுலை யென்றுங்கூறுவர் ; புணர் - இரட்டை. சுவடு - அடையாளம். நீங்கா - வினையெச்சமீறு கெட்டு நின்றது. வயங்கல் - விளங்கல். எழில் - அழகு. குமரர் - இளைஞர். "மன்மதனையும் அழகு கெடச்செய்வோர்" என்பது பகுதிப்பொருள். வாள்+ஆட்டு= வாட்போர் ; ஆட்டு - போர் ; ஆடு - பகுதி. ஈற்றுமெய்யிரட்டித் தொழிற் பெயராயிற்று. ஆட்டிடம் - பயிலிடம்.

வெஞ்சினம் உருவிற் றென்னும் மேனியர் வேண்டிற் றீயும்
நெஞ்சினர் ஈசன் கண்ணின் நெருப்புறு அனங்கன் அன்னார்
செஞ்சிலை க் கரத்தர் மாதர் புலவிகள் திருத்திச் சேர்ந்த
குஞ்சியர் சூழ நின்ற மைந்தர்தம் குழாமும் கண்டார். உ௦

பொழிப்புரை:—கொடுங் கோபத்தின் உருவம் இப்படித்தான் என்று சொல்லத்தக்க தேகத்தையுடையராகியும், வேண்டுவோர் வேண்டு

வனவற்றை உவந்து கொடுக்கும் விரிந்த மனமுடையராகியும், ஈசனாகிய சிவபெருமானது நெற்றிக் கண் நெருப்பிற்படாது உருவுடன் விளங்கும் மன்மதக் கடவுள் போன்றவராகியும், அழகிய வில்லைக் கையிலுடையவராகியும், முதல்நாளிரவிற் புணர்ச்சிப்போரில் தமது நாயகியரின் ஊடல்களைச் சமாதானம் செய்யும்போது அவர்களது செம்பஞ் சூட்டிய பாதங்களினுதைபட்டு அதனாற் சிவப்பேறிய தலைமயிருடையராகியும் சூழ்ந்து நின்ற வீரர்களின் கூட்டத்தையும்- கண்டார்கள்.

குறிப்புரை :—உருவிலும் உள்ளத்திலும் அழகிலும் ஆற்றலிலும் ராஸிக்யத்திலும் சிறந்த அந்நகரத்து வீரர் பல்லோரைக் கண்டார்கள் என்பதாம். வெம்+சினம்=கொடுங்கோபம்; இது போர்க்குரிய ஊக்கத்தையும் எதிரியை வெல்லும் ஆக்கத்தையும் குறித்தது. உருவு - (ரூபம் - வடமொழி) உரு+உ=உகரம் சாரியை. இற்று - இத்தன்மையது. மேனி - சரீரம். வேண்டிற்று - விரும்பியது. ஈசன் - (பரமசிவன்) கடவுள்; ஆள்வோன் என்பதுமாம். கண்ணின் நெருப்பு - நெற்றிக்கண் நெருப்பு. உறா - ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். அனங்கன் - (மன்மதன்) அங்கமற்றவன். ஈசன், அனங்கன் - வடமொழித்திரிபுகள். அன்னார் - போன்றவர். செம்மை + சிலை— செம்மை=அழகு; சிலை - வில். கரத்தர் - கையுடையார்; கரம் - (வடமொழி) கை. மாதர் - அழகுடைப் பெண்கள்; மாது - அழகு. புலவி - ஊடல். திருத்தல் - சமாதானப்படுத்தல். சேந்த - சிவந்த. குஞ்சி - ஆண்மக்களின் தலைமயிர். மைந்தர் - வீரர்; மைந்து - பலம். குழாம் - கூட்டம்.

வேறு.

பாகொக் குஞ்சொற் பைங்கிளி யோடும் பலபேசி
மாகத் தும்பர் மங்கையர் நாண மலர்கொய்யும்
தோகைக் கொம்பின் அன்னவர்க் கன்னம் நடைதோற்றுப்
போகக் கண்டே வண்டினம் ஆர்க்கும் பொழில் கண்டார். உக.

பொழிப்புரை :—தேன்பாகுக்குச் சமானமான சொற்கள் பலவற்றைத் தாம்வளர்க்கும் தம்கையிற் கொண்டுள்ள கிளிப்பிள்ளைகளுடன் பேசிக்கொண்டு சுவர்க்கலோகப் பெண்களும் நாணமுற்றொதுங்கும் படியாக அழகுடன் வந்து மலர் கொய்து கொண்டிருக்கும்—தோகையுடைய கொம்பு போன்று விளங்கும் அந்நகர்ப் பெண்ணினையோர்க்கு,

அச்சோலைகளிலுள்ள அன்னப்பறவைகள் நடையில்தோற்றோடிப் போகக் கண்டு வண்டுக்கூட்டங்கள் ரீங்காரம் செய்து கொண்டிருக்கும் சோலையைக் கண்டார்கள்.

குறிப்புரை :—அரம்பையர் நாணுறும் அழகும் - அன்னம் நாணுறும் நடையும் கொம்புபோன்ற ஒசிந்த உருவமுடைய கிளிமொழிப் பெண்கள் பலர் மலர் கொய்து கொண்டிருக்கும் சோலையையும் கண்டார்கள். பாகு - தேன்பாகு. பைங்கிளி - (பசுமை+கிளி) பசுங்கிளி; பசுமை - நிறம். மாகம்+உம்பர்=மாகத்தும்பர்; உம்பர் - மேலே (ஏழனுருபு) தோகைக் கொம்பின் அன்னவர்க்கு — "தோகையன்னவர்க்கு, கொம்பின் அன்னவர்க்கு" என்றும் பொருள் கொள்ளலாம். (தோகை - மயில்) "வண்டினம் கண்டு ஆர்க்கும்"—என்றும் கூட்டிப் பொருள் கொள்ளலாம். ஆர்த்தல் - ஒலித்தல். பொழில் - சோலை.

உம்பர்க் கேயும் மாளிகை யொளி நிழல்பாய
இம்பர்த் தோன்றும் நாகநல் நாட்டின் எழில்காட்டிப்
பம்பிப் பொங்கும் கங்கையின் ஆழ்ந்த படைமன்னன்
அம்பொன் கோயில் பொன்மதில் சுற்றும் அகழ்கண்டார். உஉ.

பொழிப்புரை:— பொன்னுலகோர் வசிக்கத்தக்கதான மாளிகை வரிசைகளின் நிழல்கள் தன்னிடத்துப் பாய்தலினாலே, இந்நிலவுலகில் தோன்றக் கூடிய அமராபுரியின் அழகைக் காட்டிக்கொண்டு விரிந்து நிறைந்திருக்கும் கங்கையாற்றைப்போலும் ஆழ்ந்துள்ளதான — சேனை பெற்ற ஜனக மன்னனது அழகிய பொன்மயமான அரண்மனையைச் சூழ்ந்துள்ள அழகிய மதிலைச் சுற்றியிருக்கும் அகழியையும் கண்டார்கள்.

குறிப்புரை:— மாளிகைகளின் நிழல்களைத் தன்னிடத்துக் கொண்ட மிகு ஆழமான அகழ் அந்நகரரசனது அரண்மனையைச் சூழ்ந்திருக்கும் மதிலைச் சுற்றியிருக்கக் கண்டார்கள். உம்பர்—அமரர். ஏய்தல்—பொருந்துதல். மாளிகை—உயர்மனை. ஒளி—வரிசை. இம்பர்—இவ்விடம்; (இவ்வுலகு) நாகம்—(வடமொழி) சுவர்க்கம். ந+அ+கம்=நாகம். (வடமொழிப்புணர்ச்சி); கம்=சுகம்; ந+கம்=(அகம்)சுகமற்றது; ந+அகம்=நாகம்; சுகமற்றதில்லாதது அதாவது மிகுசுகமுடையதென்பதாம்; இரண்டு எதிர்மறைகள் ஒரு உடன்பாட்டையுறுதிப்படுத்தின. நல்+நாடு =நன்னாடு. எழில்=அழகு. "காட்டி, ஆழ்ந்த, சுற்றும் அகழ்" எனக் கூட்டிப் பொருள் கொள்க. பம்பல்—விரிதல்; பொங்கல்—நிறைகல்;

கங்கை—கங்கா (வடமொழி) இன் உவமையுருபு; ஐந்தனுருபாகவும் கொள்ளலாம். படைமன்னன்— (படையையுடைய மன்னன்) உருபும் பயனும் உடன்தொக்க தொகை; மன்னவன் = ஜனகன். அம் + பொன்—அம் = அழகு; பொன் கோயில் = பொன்னுலாகிய வீடு; கோ + இல் = அரசன்வீடு. பொன்மை + மதில்; பொன்மை = அழகுடைமை. அகழ் = அகழப்பெற்றது; அகழ்தல் = தோண்டல்.

பொன்னின் சோதி போதினின் நாற்றம் பொலிவேபோல்
தென்னுண் தேனின் றீஞ்சுவை செஞ்சொற் கவியின்பம்
கன்னிம் மாடத் தும்பரின் மாடே களிபேடோ
டன்னம் ஆடும் முன்றுறை கண்டங் கயனின்றார். ௨௩

பொழிப்புரை:—களித்தாடும் பேடுகளுடன் ஆண் அன்னப்பறவைகள் ஆடிக்கொண்டிருக்கும் முன்றுறைக்கு அருகே, கன்னிமாடத்தின் மீது, பொன்னினது சோதியையும், தாமரைப்பூவினது மணத்தையும் சிறந்தது போலும் இனிமை பெற்ற தேனினைக்காட்டிலும் தித்தித்த சுவையையும் அழகிய சொற்களாலாகிய கவியின்பத்தையும் (கொண்ட சீதையென்னும் பெண்ணரசியை) கண்டு அவ்விடத்தே சிறிது நின்றார்கள்.

குறிப்புரை:—அந்நகர் கன்னிமாடத்தின் மேலிருந்து, அன்னப்பறவைகள் தம் பேட்டுடன் விளையாடிக்கொண்டிருக்கும் உறையுளைப் பார்த்துக்கொண்டிருக்கும் சீதாபிராட்டியைக் கண்டார்கள் என்பதாம். பொன்னின் சோதி, போதினின் நாற்றம், தென்னுண் தேனின் றீஞ்சுவை, செஞ்சொற் கவியின்பம் - இவை பத்மினியிற் பத்மினியாய உயர்குடிப் பெண்ணரசியாயினோர்க்கு ஒதிவைத்த உருவத்தொளியும் இயற்கை மணமும் சொல்லும் பேச்சுமா மென்க. சோதி - (வடமொழி) ஒளி. போது - தாமரை மலர்; "பூவிற்குத் தாமரை" யேயாகலின் என்க. நாற்றம் - மணம்; - நாறு - பகுதி. பொலிவு - விளக்கம். தென்னுண்தேன் - தென்னுண்டதேன். தென் - இனிமை; உண்ட - கொண்ட (நிறைந்த) தேன் + இன் + தீம் + சுவை - தேனைக்காட்டிலும் தித்தித்த சுவை; இன் - ஐந்தனுருபு. செம்மை + சொல் + கவி + இன்பம் - செவ்விய சொற்களாலமைக்கப் பெற்றுப் பொருளிலாழ்ந்த கவிகளிற்றோன்றும் இன்பம். "பொன்னினொளி பூவின்வெறி" எனப்பின்னரும் "கோலங்காண்படல" த்துக்குறித்

திருப்பது காண்க. "தென் உண்" என்பதற்கு - "வண்டுகள் உண்கின்ற" என்றும் கொள்ளலாம்; தென் - வண்டு. கன்னி — மாடம்; கன்னிம்மாடம் - செய்யுளிசை கருதி இரட்டிப்பாயது; (கன்னிப் பெண்கள் உறைவிடம்.) உம்பர் - மேலே - ஏழனுருபு. களித்தல் - ஆடுதல்; பேடு - பெண்; முன்றுறை - (துறை+முன்) இலக்கணப்போலி. "அன்னமா டுறையுளுக் கருகு நின்றுளோக், கன்னிமாடத்திடைக் கண்டதும்" என்று பின்னரும் - கிட்கிந்தா - நாடவிட்டபடலத்துக் குறித்திருப்பதுங் காண்க.

செப்புங் காலைச் செங்கம லத்தோன் முதல்பாரும்
எப்பெண் பாலும் கொண்டுவ மிப்போர் உவமிக்கும்
அப்பெண் தானே ஆயின போதிங் கயல்வேறோர்
ஒப்பெங் கேகொண் டேவரை நாடி யுரைசெய்வாம். ௨௪.

பொழிப்புரை :—பிரமன் முதலாகிய புலவர்கள் எல்லோரும், தாங்கள் ஒரு நூல் சொல்லுங் காலத்தில், அந்நூலின் தலைவியாக எடுத்துக் கொள்ளப் பெற்ற எப்பெண்பாலினர்க்கும் உவமானமாகக் கொண்டு அப்புலவோர்கள் உவமிக்கப்பெறும் அந்தப் பெண்ணரசியாகிய இலக்குமிப்பிராட்டிதானே இங்கு இக்கதா நாயகியாக வாய்த்திருப்பதால், இவ்வணங்கரசிக்கு அயலாகவேறோர் உவமானப் பொருளை எங்கு நாடி எவரைக் கொண்டு உரை செய்யவல்லோம்.

குறிப்புரை :—பெண்கட்கு உவமானமாக எடுத்துக் கூறப்பெறும் இலக்குமிப் பிராட்டியே இந்த சீதைப் பெண்ணரசியாக அவதரித்துள்ளமையின், இப்பெண்ணணங்கினுக்கு உவமானம் எங்கும் நாடி எடுத்தோதுதற்கு முடியாதென்பதாம். செப்பல் - சொல்லல்; இசைச்சொல். காலை - போது. செம்மை + கமலத்தோன் - பிரமன்; கமலம்- (வடமொழி) தாமரை. உவமிப்போர் - உவமானம் எடுத்துக் கூறும் புலவர். ஆயினபோது - இக்கதாநாயகியாயினபோது. ஒப்பு - உவமானம். ஏவரை - எவரை.

பொன்சேர் மென்கால் கிங்கிணி ஆரம் புனையாரம்
கொன்சேர் அல்குல் மேகலை தாங்கிக் கொடியன்னார்
தன்சேர் கோலத் தின்னெழில் காணச் சதகோடி
மின்சேவிக்கும் மின்னர சென்னும் படிநின்றாள். ௨௫

பொழிப்புரை:—மென்மைபொருந்திய கால்களில் பொன்னலாக்கப் பெற்றுள்ள கிங்கிணியாபரணமும் முத்துக்களால் புனையப் பெற்றுள்ள மாலையும் அல்குற் பிரதேசத்தின் மேற் சேர்ந்துள்ள மேகலாபரணமும் தாங்கிக்கொண்டு, கொடிபோன்ற பெண்கள் பலர் தன்னைச் சேர்ந்துள்ள அலங்காரத்தின் இனிய அழகைக் காணும்படியாக, நூறுகோடி மின்னல்கள் சேவிக்கும்படியாக ஒரு மின்னரசு நின்றதென்னும்படியாக ஸீதை நின்றாள்.

குறிப்புரை :—ஸர்வாலங்கார பூஷிதையாக ஸீதாபிராட்டி வந்து நின்றாளென்பதாம். கிங்கிணி - ஒலிதரும் ஓர்வகை மணி; பெரும்பாலும் பொன்னலாக்கப்பெறும். ஆரம் (க) - முத்து. ஆரம் (2) மாலை; ஆரம் (2) - வடமொழி ஹாரம் என்பதன் திரிபு. கொன் - அசை. மேகலை - (மேகலா - வடமொழி) ஒட்டியாணம். கொடியன்னார் - பெண்கள். கோலம் - அலங்காரம் (வேஷம்) எழில் - அழகு. சதகோடி மின் - அநேக மின்னல்கள் என்பதாம்; சதகோடி - (வடமொழி) நூறு கோடி.

உமையாள் ஒக்கும் மங்கையர் உச்சிக் கரம்வைக்கும்
கமையாள் மேனி கண்டவர் காட்சிக் கரைகாணார்
இமையா நாட்டம் பெற்றிலம் என்றார் இருகண்ணால்
அமையா தென்றார் அந்தர வானத் தவரெல்லாம். உகு.

பொழிப்புரை :—உமையாளுக்குச் சமானமாகிய உயர்வுடைப் பெண்களும் கூப்பியகைகளைச் சிரத்தின்மேல் வைத்து வணங்கத் தகுந்த பொறுமையிற் சிறந்த பெண்மணியாகிய ஸீதாபிராட்டியாரின் வடிவழகைக்கண்ட பூவுலகப் பெண்கள், காட்சிக்கு ஒரு வரம்பு காணமுடியாதவராகி, இமைத்தலில்லாத கண்களைப் பெற்றிலமே என்று வருந்தினார்கள்; ஆனால், இமையா நாட்டம் பெற்ற தேவருலகப்பெண்களோ என்னின், இந்தப் பெண்ணுத்தமியின் அழகைக் கண்டனுபவித்தல், தாம் பெற்றிருக்கும் இரண்டு கண்களால் அமையாதென்று வருந்தினார்கள்.

குறிப்புரை :—வரம்பு கட்டமுடியாத அழகுடையாள் சீதை யென்பதாம். உமையாள் - (உமை) பார்வதி. மங்கையர் - பெண்கள். உச்சி - சிரஸின் உச்சி. கரம் - (வடமொழி) கை; இங்கே கூப்பியகை குறிக்கப்பெற்றது. கமை - (க்ஷமா - வடமொழி) பொறுமை; ஏன் என்றால்,

சீதையானவள் பொறுமையைக் கைவிடாது நின்றே கற்பைக் காப்பாற்றும் தன்மை வாய்த்திருத்தலின் என்க. மேனி-சரீரம். காட்சி - காண்-பகுதி. கரை - வரம்பு. காணார் - முற்றெச்சம்; இமையா நாட்டம் - இமையா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்; நாட்டம் - பார்வை; (கண்) நாடு - பகுதி. பெற்றிலம் - "அம்" தன்மைப் பன்மை வினை முற்று விகுதி. அந்தர வானத்தவர் - தெய்வலோகப்பெண்கள்.

வென்றம் மானைத் தாரயில் வேலும் கொலைவாளும்
பின்றம் மானின் பேர்கயல் அஞ்சப் பிறழ்கண்ணாள்
குன்றம் மாடக் கோவின் அளிக்கும் கடலன்றி
அன்றம் மாடத் தும்பர் அளிக்கும் அமுதன்னாள்.　　உஎ.

பொழிப்புரை :—பெண்கள் கண்ணுக்கு உபமானப்பொருளாகச் சொல்லப்பெறுகின்ற அந்த மானைவென்று, தீயில் தோய்த்துக் கூர்மை பெற்ற வேலாயுதமும் கொலைத் தொழிலிற் சிறந்த வாளாயுதமும் கூர்மைத் தொழிலுக்கு முன்நிற்கமாட்டாமல் பின்னிடையும்படியாகவும் அம்மான்போல் வெருண்டு புரண்டு பெயர்கின்ற மீன்கள் பயப்படும்படியாகவும் பிறழும் கண்களையுடைய சீதாபிராட்டியானவள், மந்தார மாலை யாடிக்கொண்டிருக்க, அந்நாளில் விஷ்ணுவினால் விரும்பப்பட்ட பாற்கடலேயல்லாமல், அன்றைக்கு அந்தக் கன்னிகா மாடத்தினுச்சியில் தரப்பெற்றுள்ள அமுதம் போன்றவளாக இருந்தாள்.

குறிப்புரை :—பாற்கடற் பிறந்த அமுதம்போல், அன்று சீதை அந்தக் கன்னிமாடத்துச்சியில் உலகுக்கு க்ஷேமம் தரும் பொருட்டுத் தோன்றிய அமுதம் போன்று அழகுடன் விளங்கி நின்றாள் என்பதாம். அம்மான் - புலவர்களால் எடுத்துச் சொல்லப்பெறுகின்ற அந்தமான் என்பதாம். தார் - மாலை. அயில் - கூர்மை. பின்றல் - பின்னிடல்; தோல்வியுறல். பேர் கயல் — வினைத்தொகை; "கயல்"—மீன். பிறழ்தல் - புரளுதல். குன்றம் - மந்தரபர்வதம்; "அம்"—சாரியை - (குன்றம்+ஆட) ஆடல் - அசைதல். கோ — (தேவர்) தலைவனாகிய விஷ்ணு. கோவின் அளிக்கும் - கோவினால் விரும்பப்படுகின்ற. மாடத்தும்பர் - "உம்பர்" (மேலே) ஏழனுருபு. அமுது - அமுதம் என்பது சாரியை குறைந்து நின்றது; அமுதம் - அம்ருதம் என்னும் வட சொல்லின் திரிபு; அழியாதது என்பது பொருளாம். "அன்றவ் வானத் தும்பர் அளிக்கும் அமுதன்றி - இன்றிம் மாடத் திம்பர் அளிக்கும் அமுதொத்தாள்" என்பது பாடாந்தரம்.

பெருந்தேர் அல்குல் பெண்ணிவள் ஒப்பாள் ஒருபெண்ணைத்
தருந்தான் என்றால் நான்முகன் இன்னுந் தரலாமே
அருந்தா வந்தத் தேவரி ரத்நால் அமுதென்னும்
மருந்தே யல்லா தென்னினி நல்கும் மணியாழி. ௨அ.

பொழிப்புரை :—பெரிய தேர்த்தட்டைப் போன்ற அல்குற் பிரதேசத்தையுடைய அழகிற் சிறந்த பெண்ணாகிய இவளைப்போன்றதொரு பெண்ணுருவைத் தான் சிருட்டித்துத்தரல் கூடும் என்றால், நான்முகக் கடவுள் இன்னும் (இந்தக் கலியிலும்) தந்திருக்கலாமே; அருந்துவதற்கென்று, பின்னும் விரும்பிவந்து வேண்டி நின்றனராயின், ரத்நாகரமென்னும் பெயருடைய கடலானது, அமிர்தமென்று சொல்லப்பெறும் அந்தத் தெய்வ மருந்தையல்லாமல், சிறந்துள வேறெதனைத் தந்திடல் கூடும் ?

குறிப்புரை :—சீதை நான்முகன் படைப்புப் பொருட்குள் அகப்பட்டவள் அல்லளென்பதும், அமிர்தத்தைக் காட்டிலும் சிறந்த பொருளின்மைபோல சிருட்டிப் பொருள்களிற் சீதையைக் காட்டிலும் சிறந்ததொன்றில்லை யென்பதும் கருத்து. "பெரும் பேரழகிற் பெண்ணிவள்" என்பது பாடாந்தரம். "தரும் தான் இன்னும் நான் முகன்" என்பதை, "நான்முகம் இன்னும் தான் தரும்" என்று கொண்டு கூட்டிப் பொருள் கொள்க. தரலாமே—"ஏ" காரம் வினாப்பொருட்டு. அருந்தா—(அருந்தி) செயா எனும் வாய்பாட்டு உடன் பாட்டு வினையெச்சம். அமிர்து—"அம்ருதம்" என்னும் வடசொல்லின் திரிபு. மருந்து - ஔஷதம். மணியாழி - ரத்னங்களையுடைய ஆழமுடைய கடல் என்பதாம்.

அனையாள் மேனி கண்டபின் அண்டத் தரசாளும்
வினையோன் மேவும் மேனகை யாதி மிளிர்வேற்கண்
இனையோர் உள்ளத் தின்னலி னோர்தம் முகமென்னும்
பனிதோய் வானின் வெண்மதிக் கென்றும் பகலன்றே. ௨௯.

பொழிப்புரை :—அத்தகைய அழகுடைய சீதையின் உருவத்தைக் கண்டபிறகு, தேவருலகை ஆட்சிபுரிகின்ற இந்திரன் விரும்புகின்ற மேனகை முதலாகிய - ஒளிர்கின்ற வேல்போலும் கண்களையுடைய - வருந்தி மனதில் வருத்தமுடையோராகியவரது முகமென்று சொல்லப்

பெறுகிற - பனி நிரம்பிய வானிலுள்ள வெளிறிய சந்திரனுக்கு என்றும் பகற்காலமாகவே இருக்கும்.

குறிப்புரை:—வானுலகமாதரது முகங்கள், வீதையினுருவினுக்கு முன், பகலிற் காணப்பெறும் சந்திரனைப்போல ஒளிமழுங்கிக் காணப் பெறும் என்பதாம். அனையாள் — அத்தன்மையள் (சீதை) மேனி - உருவம். அண்டம் — உலகு; உபசாரவழக்கில் சுவர்க்கத்தைக் குறித்து நின்றது; உலகம் உருண்டை வடிவினதாகலின், முட்டை வடிவிற் குறிக் கப்படுவது கவி மரபு; அண்டம் - முட்டை. வினையோன் - தொழிலு டையோன்; வினை - தொழில்; அண்டத்தரசாளும் வினையோன் - இந் திரதேவன். மேவல் - விரும்பல். ஆதி - (வடமொழி) முதல். மிளிர் தல் - ஒளிர்தல். இனையோர் - இத்தன்மையோர் என்பதுமாம். இனை தல் - வருந்துதல் என்னும் பொருளிற் கொள்ளப்பட்டது. இன்னல் - வருத்தம். இன்னலினோர் - " இன் " - சாரியை. தம் - ஆறனுருபு. வருத்தம் பெறலால், வியர்வை கொண்டு நிற்கும், அம் மங்கையரது முகங்கட்கு, பனிசிறைந்த வான்மதி, உவமிக்கப்பெற்றது.

மலர்மேல் நின்றிம் மங்கையிவ் வையகத் திடைவைகப்
பலநா ளுந்தம் மெய்ந்நனி வாடும் படிநோற்றார்
அலகோ இல்லா அந்தண ரோநல் லறமேயோ
உலகோ வானோ உம்பர்கொ லோவீ துணரேமால். கூ0.

பொழிப்புரை :—இந்த இலக்குமி என்னும் பெண்ணானவள், தெய் வத்தாமரையினின்றும் நீங்கி, இப்பூவுலகில் வந்து தோன்றற்குக் காரண மாகப் பலநாட்களும் தங்களது தேகம் நன்றாய் வாடிப்போம்படியாக நோன்பு நோற்றுத் தவம் செய்துயர்ந்தவர்கள், அளவின்றிய அந்தணர் களோ, நல்ல தர்மதேவதையோ, மற்றுமுள்ள இவ்வுலகத்தாரோ, வானுலகமோ, அவ்வானுலக வாசிகள்தாமோ யாவரென்று நாம் அறிய முடியவில்லை.

குறிப்புரை :—மூவுலகத்தவரும் தர்மதேவதையும் செய்துவைத் துள்ள தவம் காரணமாக இலக்குமிதேவி சீதாபிராட்டியாக வந்தவத ரித்தனள் என்பது கருத்தாம். மலர் - தெய்வத்தாமரை. மேல் - ஏழ னுருபு. நின்று - உருபின் மேலுருபு; நீக்கப் பொருளில் வந்துள்ளது. வையத்திடை - " இடை " - ஏழனுருபு; அத்து - சாரியை. வைகல் -

தங்கியிருத்தல். நனி - உரிச்சொல். நோற்றார் - வினையாலணையும் பெயர்; "நோற்றவர்"—என்பது பொருள்; நோல் - பகுதி. அலகு - அளவு; அலகோ - "ஓ" காரம் - அசை; இசை நிறைக்க வந்தது. இல்லா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். அறமேயோ, "ஏ" காரம் தேற்றம். உம்பர் - வானுலகவாசிகள். அந்தணரோ, அறமேயோ, உலகோ, வானோ, உம்பர் கொலோ—"ஓ" காரங்கள் ஐயப்பொருள் உணர்த்திநின்றன. கொல் - அசை. உணரேம் - "ஏம்" - எதிர் மறைத் தன்மைப்பன்மை வினைமுற்று விகுதி; எதிர்மறை யுருபு புணர்ந்து கெட்டது.

தந்நேர் இல்லா மங்கையர் செங்கைத் தளிர்மானே
அன்னே தேனே ஆரமிர் தேயென் றடிபோற்றி
முன்னே முன்னே மொய்ம்மலர் தூவி முறைசாரப்
பொன்னே சூழும் பூவின் ஒதுங்கிப் பொலிகின்றாள். ருக

பொழிப்புரை :—தளிர்போன்ற அழகிய கைகளையுடைய மான் சாயலுடையவளே! உலகின் தாயே!! தேனின் இனியாளே!!! நிறைந்த அமுதச் சொல்லினளே! என்று சொல்லிக்கொண்டு, தமக்கு ஒப்பு வேறில்லாத தாயர் தவ்வையர் முதலிய பெண்மணிகள், சீதையின் பாதாரவிந்தங்களை வணங்கிப் போற்றி செய்து, அவளது சந்நிதியில் நெருங்கிய மலர்களைத் தூவிக்கொண்டு, முறையாக வந்து சேர்ந்து நிற்க, பொன்போலும் மகரந்தங்கள் சூழ்ந்திருக்கும் பூவைப்போலொதுங்கி, விளங்கி நிற்கின்றாள்.

குறிப்புரை :—பெண்கள் பலர், மலர்தூவிச் சூழ்ந்திருக்க, சீதையானவள் பூவைப்போல் விளங்கி நின்றாள் என்பதாம். தம் + நேர் = தந்நேர். மங்கையர் - தாயார் தவ்வையர் முதலியோர். செங்கைத் தளிர் – என்பதை—"தளிர் செங்கை" என மாற்றிப் பொருள் கொள்க. மான், தேன், அமிர்து - உவமையாகுபெயர்கள். ஆர்தல் - நிறைதல். அடி - பாதம். போற்றல் - துதித்தல். முன் - முற்பக்கம்; முன்னே முன்னே - தேற்றத்தின் கண்வந்தஅடுக்கு. மொய்ம்மலர் - "மொய்த்தல்" - நெருங்குதல். தூவி - பெய்து. சாரல் - சேரல். பொன் - உவமையாகுபெயராய்ப் "பொன்போன்ற மகரந்தப் பொடிகளை" யுணர்த்தி நின்றது. பூவின் - "இன்" (போல) உவமையுருபு. பொலிதல் – விளங்குதல். பூவின் ஒதுங்கி - என்பதற்கு, "மங்கையர் தூவிய அப்பூவில் நடந்து" என்றும் பொருள் கொள்ளலாம்.

கொல்லும் வேலும் கூற்றமும் என்னும் இவையெல்லாம்
வெல்லும் வெல்லும் என்ன மதர்க்கும் விழிகொண்டாள்
சொல்லும் தன்மைத் தன்றிது குன்றும் சுவருந்திண்
கல்லும் புல்லும் கண்டுருகப்பெண் கனிநின்றாள். கூ௨.

பொழிப்புரை:—கொலைத் தொழிலைச் செய்யும் வேலாயுதமும் அத்தொழிலைக் கொண்டுள்ள எமனும் என்று சொல்லக்கூடிய இவைகளை யெல்லாம் (இவை) வென்றுவிடும் வென்றுவிடும் என்று சொல்லத் தகுந்தபடியாக மதம் பெற்றிருக்கும் விழிகளைக் கொண்டுள்ளாள் சீதை என்னும் இது சொல்லக்கூடிய தன்மையுடையதுமன்று; அத்தகைய பெண்ணின் கனிபோன்ற சீதையானவள், மலையும் சுவரும் திண்ணிய கல்லும் புல்லும் பார்த்தவுடன் உருகி நிற்கும்படியாக வந்து நின்றாள்.

குறிப்புரை:—மேனியழகையும் மதர்த்தவிழிகளையும் கண்டயாவும் உருகும்படியாகச் சீதை வந்து நின்றாள் என்பதாம். என்னும் மதர்க்கும், சொல்லும்,—“ உம்மைகள் ” பெயரெச்சவிகுதிகள். குன்றும் சுவரும் கல்லும் புல்லும் வேலும் கூற்றமும்—“ உம் ” மைகள் எண்ணுப் பொருளில் வந்தன. வெல்லும் வெல்லும்— “ உம் ” மைகள் வினைமுற்றுப் பொருளில் வந்தன; இது தேற்றப் பொருளில் வந்த அடுக்கு. மதர்த்தல் - களித்தல். பெண்கனி - பெண்கட்குள் கனி போன்றவள்.

வேறு.

வெங்களி விழிக்கொரு விழவு மாயவர்
கண்களிற் காணவே களிப்பு நல்கலால்
மங்கையர்க் கினியதோர் மருந்து மாயவள்
எங்கணு யகற்கினி யாவ தாங்கொலோ. கூகூ

பொழிப்புரை:—காதல் விருப்பாற் களித்திருக்கும் தூர்த்தர்களின் விழிகட்கு ஒப்பற்ற களிப்புப் பொருளாக இருக்கும் விலைமங்கையரும், தங்கள் கண்களால் சீதையைக் காணவே, அவர்க்கும் மனக்களிப்பினைக் கொடுக்குந் தன்மையால், அம்மங்கையர்க்கு இனியதாகிய ஒரு மருந்தும் போன்றவளாகிய இவள், எமது பெருமானாகிய ஸ்ரீராமபிரானுக்கு இனிமேல் யாவதாவளோ? நாயகியே யாவாள் என்றபடி.

குறிப்புரை :—அங்ஙனம் வந்து நின்ற சீதை, நமது நாயகனாகிய ஸ்ரீராமபிரானுக்குத் தக்கநாயகியே யாவாள் என்றபடியாம். வெம்மை+களி—வெங்களி - (வெம்மை - விருப்பம், காதல்) களிவிழி - வினைத்தொகை. விழவு - களிப்பு; விழவும் - " உம் " மை சிறப்புப்பொருளில் வந்தது. ஆயவர் - ஆனவர் (விலை மங்கையர்) " வெங்களியினுக்கொரு விழவுமாய் " — என்பது பாடாந்தரம். மருந்து - நோய்கள் தீர்க்கும் ஔஷதம்; அமிர்தமுமாம். மருந்தும்—"உம்" மை இறந்தது தழுவியது. " களிப்பும் தந்து மருந்தும் போன்றவள் " என்பது கருத்து. ஆயவள் - ஆனவளாகிய சீதை. எங்கள் - உளப்பாட்டுப் பன்மை. நாயகன் - (வடமொழி) தலைவன். யாவது - எத்தன்மையது. ஆங்கொலோ - கொல் - அசை; " ஓ " காரம் வினாப்பொருளது.

இழைகளும் குழைகளும் இன்ன முன்னமே
மழைபொரு கண்ணிணை மடந்தை மாரொடும்
பழகிய வெனினுமிப் பாவை தோன்றலால்
அழகெனு அழகுமோர் அழகு பெற்றதே. ருச.

பொழிப்புரை :—காதணிகளும் மற்றையாபரணங்களும் மற்றும் அவைகளால் உண்டாகும் அழகு என்று புலவோரால் சிறப்பித்துச் சொல்லப்பெறும் அழகும் எனுமிவை இதற்கு முன்னரே, குளிர்ச்சி பொருந்திய மேகம் போன்ற கண்ணிணைகளையுடைய பெண்மக்களுடன் தொடர்பு பெற்றுப் பழகினவாயினும் அம்மங்கையர்க்கு அலங்காரத்தைத் தந்த அளவினவாகவே இருந்தன ; இந்தச் சீதை அவதரித்துள்ள தன்மையால், அவை, இந்த சீதையைச் சேர்ந்து தமக்கொரு அழகை யடைந்தன.

குறிப்புரை :—மற்றைய பெண்கட்கு அழகைத் தந்த அணிகள், சீதா பிராட்டியைச் சேர்ந்து, தமக்கொரு அழகைப் பெற்றன என்பது கருத்து. இழை - ஆபரணங்கள்; இழைக்கப் பெற்றன என்பதாம். குழை-காதணி. இன்ன — இவை. மழை — (குளிர்ச்சி) மேகம்; பொரு - உவமையுருபு. கண்+இணை—" இணை "=இரட்டை. மடந்தைமார்— "மார் " =பலர்பால் விகுதி. பாவை - உவமையாகு பெயராய்ச் சீதையைக் குறித்து நின்றது; பாவை - கொல்லிப்பாவை என்பது கவி மரபு.

எண்ணரு நலத்தினாள் இனையள் நின்றுழிக்
கண்ணொடு கண்ணிணை கௌவி ஒன்றையொன்
றுண்ணவும் நிலைபெறா துணர்வும் ஒன்றிட
அண்ணலும் நோக்கினான் அவளும் நோக்கினாள். ௩௫.

பொழிப்புரை :—நினைத்தற்கும் அரிதாயிருக்கும்படியான அழகை யுடையவளாகிய சீதாதேவி இத்தன்மையளாகிவந்து கன்னிகாமாடத் தின்மேல் நின்றபோது, பரஸ்பரம் (ஸ்ரீராமபிரான் சீதாபிராட்டியாகிய) இருவோரது கண்ணிணைகளும் பொருந்தி ஒன்றையொன்று அனுபவித் தலோடும் நிலைபெறாமல், பரஸ்பர உணர்ச்சியும் ஒன்றாகப்பொருந்தும்படி யாகப் பெருமை பொருந்திய ஸ்ரீராமபிரான் சீதா தேவியைப் பார்த்த னர்; சீதா தேவியும் ஸ்ரீராமபிரானைப் பார்த்தனள்.

குறிப்புரை :— இராமரும் சீதையும் ஒருவர் கண் மற்றொருவர் கண் ணைக்கவ்வி ஒன்றையொன்று விழுங்கவும், அம்மட்டோடு அமையாமல், உணர்வும் ஒன்றுடனொன்று பொருந்தும்படியாக நோக்கினர் என்பது கருத்து. அருமை+நலம் - அருநலம்; அரிய அழகு என்றபடி; நலம் - அழகு; எண்ணுதல் - நினைத்தல். நலத்தினாள் - இன் - சாரியை - உழி வினையெச்சப்பொருட்டு. கௌவல் - விழுங்கல்; பொருந்துதல். உண் ணல் - அநுபவித்தல். ஒன்றுதல் - பொருந்துதல்.

நோக்கிய நோக்கெனும் நுதிகொள் வேலிணை
ஆக்கிய மதுகையான் தோளின் ஆழ்ந்தன
வீக்கிய கனைகழல் வீரன் செங்கணும்
தாக்கணங் கனையவள் தனத்தில் தைத்தவே. ௩௬.

பொழிப்புரை:—பார்த்த பார்வை யென்று சொல்லப்பெறும் கூரிய வேலாயுதங்கள் போன்ற சீதையின் கண்ணிணைகள் பலமே உருவாக ஆக்கப்பெற்ற ஸ்ரீராமபிரானுடைய தோள்களில் ஆழ்ந்து பாய்ந்தன; கட்டப்பெற்ற ஒலிக்கின்ற வீரக்கழலையுடைய வீரனாகிய ஸ்ரீராமபிரா னுடைய செந்தாமரைக் கண்களும் இலக்குமியாகிய அந்த சீதையினு டைய தனபாரங்களில் வீழ்ந்து பதிந்தன.

குறிப்புரை :—இராமபிரானது தோளிணைகளை வலிமையும், சீதையி னது தனபாரங்களை இராமபிரானும் பார்த்துக்கொண்டனர் என்பதாம். நோக்கு - பார்வை. நுதி - கூர்மை. வேல் - உவமையாகு பெயராய்ச்

சீதையின் கண்களையுணர்த்தின. இணை - இரட்டை. ஆக்கிய - உண்டாக்கிய. ஆக்கிய மதுகையான் - மதுகை ஆக்கியான் என விகுதி பிரித்துக் கூட்டுக; பலங் கொண்டமைக்கப் பெற்ற சரீர முடையான் என்பது பொருள். ஆழ்தல், தைத்தல் - பதிதல் என்றும், வீக்கிய - கட்டிய. கனைகழல் - கனைத்தல் - ஒலித்தல். செம்மை + கண் - செங்கண்; செம்மை - அழகு. தாக்கணங்கு - இலக்குமி; தாக்கு + அணங்கு; அழகினால் மற்றப் பெண்களைத்தோல்வியுறத்தாக்கும் பெண் என்பது பொருள். சாமானிய பெண் போல் "அணைதற்குரியன" என்றுமெலும், ஒரு ராஜகுமாரிபோல க்ஷத்திரியனுக்குரிய "ஆற்றல் பொருந்தியனவோ" என்றுமெலும், அவதாரமெடுத்த உயர்குணமுடைமை தோன்ற, தன்னை மணப்பானொருவனது அவதாரமும் ஆற்றலும் தோன்றவைக்கப்பெற்றதொரு வீரசுலக்ஷணமாகிய "சிவதனுவை வளைத்து நாணேற்றுதற்குரிய தோள்கடாமோ" எனப் பார்த்தனள் என்பதாம்; இதற்கநுகுணமாக, "ஸ்ரீராமபிரானும் உலக பிதாவாகத் தோன்றிய தமது அம்சத்துக் கேற்ப, தமக்குரிய அவளும் உலகமாதாவாதற்குரிய பக்குவம் பெற்றிருக்கின்றனளா என அவயவங்களைப் பார்த்தனர்" எனக்கொள்க.

பருகிய நோக்கெனும் பாசத் தாற்பிணித்
தொருவரை யொருவர்தம் உள்ளம் ஈர்த்தலால்
வரிசிலை யண்ணலும் வாட்கண் நங்கையும்
இருவரும் மாறிப்புக் கிதயம் எய்தினர். ௩௭.

பொழிப்புரை :—பார்த்தனுபவிக்கிற பார்வையென்னும் கயிற்றாற்கட்டி ஒருவரை யொருவர் தத்தமது உள்ளத்தில் இழுத்துக்கொள்ளலால், கட்டுடைய வில்லைப் பெற்ற பெருமை பொருந்திய ஸ்ரீராமபிரானும் வாள்போன்ற கண்களையுடைய நங்கையாகிய சீதாபிராட்டியுமாகிய இருவரும் ஒருவர் இருதயத்தில் மற்றொருவராக மாறிப் புகுந்தார்கள்.

குறிப்புரை :—யோகமுறைப்படி, இந்தப்பிரேமா யோகத்திலும் நினைவின் உறுதியால் பரஸ்பரம் இருதயம் மாறிப்புகுந்தனர் என்பது கருத்து. பருகுதல் - குடித்தல்; இங்கே, அநுபவித்தல் என்னும் பொருளிற்கொள்க. பாசம் - கயிறு. பிணித்தல் - கட்டல். ஈர்த்தல் - இழுத்தல். வரிசிலை - கட்டுடைய வில்; வரி - கட்டு. அண்ணல் - பெருமையுடையான். வாள் + கண் = வாட்கண் - உவமைத் தொகை. நங்கை - (பெண்) நம்பி என்பதன் பெண்பால். எய்தல் - அடைதல்.

மருங்கிலா நங்கையும் வசையில் ஐயனும்
ஒருங்கிய இரண்டுடற் குயிரொன் றாயினார்
கருங்கடற் பள்ளியிற் கலவி நீங்கிப்போய்ப்
பிரிந்தவர் கூடினால் பேசல் வேண்டுமோ. நஅ.

பொழிப்புரை :—இடையில்லாத நங்கையாகிய சீதையும், நிந்தையில்லாத மேலோனாகிய ஸ்ரீராமபிரானும் ஒன்றாகும்படியான இரண்டு உடம்புகட்கு ஒரு உயிர் போன்றவராக ஆய் விட்டார்கள். பெரிய பாற்கடலில் அனந்த சயனத்தில் உற்ற தங்கள் சேர்க்கை நீக்கம் பெற்று ஆங்கே போய்ப் பிரிந்தவர்கள் தற்போது இங்குக் கூடினார்களாயின், அச்சேர்க்கையைப் பற்றிப் பேசவும் வேண்டுமோ? வேண்டாம் என்பதாம்.

குறிப்புரை :—“அகலகில்லேன் இறையும் என்ற” அலர்மேல் மங்கையாகிய பெரிய பிராட்டியும் தானுமாக, லோகஸம்ரக்ஷணார்த்தம், பாற்கடலில் ஆதிசேஷ அணையை விட்டு நீங்கி ஆங்கே விலகிப் பிரிந்தவர்கள், இங்கு ஸ்ரீராமபிரானும் சீதாபிராட்டியுமாக அவதரித்துக் கூடின இச்சேர்க்கையைப் பற்றிப் பன்னிப் பேசல் வேண்டாமென்பதே கருத்து. மருங்கு - இடை; மருங்கிலா என்பதற்குப் பெரிதல்லாத சிற்றிடையாள் என்பது பொருளாகும். வசை - நிந்தை. இசை என்பதற்கு எதிர்மொழி. ஐயன் - அழகுடையான்; மேலோன் என்பதுமாம். ஒருங்குதல் - ஒன்றுதல்; ஒருங்கிய - செய்யிய என்னும் வாய்பாட்டு வினையெச்சம். கருங்கடல் - (பாற்கடல்) பெருங்கடல்; “கருமை பெருமை” யாகும். பள்ளி - அணை; படுக்கை. கலவி - சேர்க்கை; போய்ப்பிரிந்தவர் - “பிரிந்து போனவர்” “எனப்பிரித்துக் கூட்டிக்கொள்க.” “பள்ளியிற் பிரிந்தவர்” “பள்ளியிற் கலவி பிரிந்தவர்” “பள்ளியிற் கலவி நீங்கிப் பிரிந்தவர் - என இவ்வாறு கூறினும் பொருள் அமையுமாறிருக்க, “பள்ளியிற் கலவி நீங்கிப் போய்ப் பிரிந்தவர்” —எனக் கூறியதென்னையெனின், ஜலபூதக் கடவுளர்களாகிய (சக்தனும் சக்தியுமாகிய) விஷ்ணுவும் இலக்குமியும், இராமபிரானாக யோகாக்கினியிலும், சீதையாக உழுபூமியிலும் அவதரித்தற்கு ஏற்றபடியே தமதிருப்பிடமாகிய ஜலபூதத்திலிருந்து முன் பூதமாகிய அக்கினி பூதத்தில் சக்தனாகிய விஷ்ணுவும், பின் பூதமாகிய பிருதிவி பூதத்தில் சக்தியாகிய இலக்குமியும் போய்ப்புகுந்தார்கள் என்னும் உண்மையைச் சமத்காரமாகக் காட்டற்கே இங்ஙனம், கவி, கூறினார் எனக் கொள்க.

அந்தமில் அழகனை அணைகி லாமையால்
பைந்தொடி ஓவியப் பாவை போன்றனள்
சிந்தையும் நிறையுமெய்ந் நலனும் பின்செல
மைந்தனும் முனியொடு மறையப் போயினன். ௩௯.

பொழிப்புரை :—முடிவு சொல்ல முடியாத அழகுடையராகிய ஸ்ரீராமபிரானைக் கன்னிமாடத்தின் மேலிருக்கும் தான் அணையமுடியாத் தன்மையினால், பசும்பொன் வளையல்களையுடைய சீதை (பிரமையடைந்து) (பதுமைக்கும் பெண்ணுக்கும் வித்யாஸம் காட்டக்கூடிய) மனமும் தற்காப்பும் தேகலாவண்யமும் (அபஹரிக்கப்பட்டனவாகி) அவர்பின்னே சென்று விடவே, சித்திரப்பதுமை போன்றிருந்துவிட்டாள்; வீரராகிய இராமபிரானும் தமது விசுவாமித்திர முனிவருடன் கண்மறையப்போய்விட்டனர்.

குறிப்புரை :— சீதை கன்னிமாடத்திடையே பிரமை கொண்டு நிற்க, ஸ்ரீராமபிரான் விசுவாமித்திர முனிவரைப் பின் பற்றிக்கொண்டு, சீதையின் கட்புலனுக்கு மறைவாகப் போய்விட்டனர் " என்பது கருத்து. அந்தம் - (வடமொழி) முடிவு. கிலாமை - முடியாமை. பசுமை+தொடி - பைந்தொடி ; தொடி - வளையல் ; பசுமை - இங்குப்பசும்பொன்னையுணர்த்தி நின்றது. ஓவியம் - சித்திரம் ; ஓவியப்பாவை - சித்திரப்பதுமை. " சிந்தை நிறை நலன் " இம்மூன்றும் பெண்ணுருவுக்கும் பதுமையுருவுக்கும் வித்தியாஸம் காட்டும் தன்மையனவாகையால், அம்மூன்றையும் நீக்கிச்சீதைக்கு ஓவியத்தை ஒப்புக்கூறினார் என்க. மைந்தன் - வீரன் ; " ஆசையதிகமேறினும், உத்தமனாகையால், தனது வீரதையைக் காட்டியே அப்பெண்ணை மணப்பான்" " என்னும் கருத்தை யுணர்த்த, ஸ்ரீராமனை - யிங்கு, " மைந்தன் " — எனக்கூறினாரென்க. சிந்தை - (சிந்தா - வடமொழி) மனம். நிறை - தற்காப்பு ; தன்னையுலகினர்க்கு நிறுத்திக்காட்டும் தன்மையுமாம் ; நிறு - பகுதி. மெய்ந்நலன் - மேனியழகு.

பிறையென நுதலவள் பெண்மை என்படும்
நறைகமழ் அலங்கலான் நயன கோசரம்
மறைதலும் மனமெனும் மத்த யானையின்
நிறையெனும் அங்குசம் நிமிர்ந்து போயதே. ௪௦.

பொழிப்புரை :—மணம் கமழும் மாலையையுடைய ஸ்ரீராமபிரான், தன் கண்கட்கு விஷயமாதலினின்றும் மறைந்து நீங்கிப்போகவே, சீதையென்னும் அப்பெண்ணினுடைய மனமென்று சொல்லப்பெறுகின்ற மதம் பிடித்த யானையை யடக்கும் கருவியாகிய தற்காப்பு என்று சொல்லப்பெறும் அங்குசமா(தோட்டியா) னது, கூன்நிமிர்ந்து செயலற்றதாக ஆகிவிட்டது; அப்போது, சந்திரப்பிறை போன்ற நெற்றியையுடைய சீதையினுடைய பெண்மை (க்குணங்களாகிய நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு என்பவை) என்னவாகும்!

குறிப்புரை :— ஸ்ரீராமபிரானது வடிவழகைக்கண்டு மயக்கமடைந்து நின்ற சீதை தன் நிறையழிந்தவளானுள் என்பது கருத்து; காமதாபம் அடைந்தாள் என்பதாம். பிறை - சந்திரிகை; நிலவு; மூன்ரும்பிறைச் சந்திரனுமாம், அன - போல(உவமையுருபு) நுதல் - நெற்றி. பெண்மை - பெண்தன்மை; பெண்மைக்குணங்களாம்; அவை, நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு என்பன. என்படும் - எனப்படுமோ என்பதாம். நறை - மணம். அலங்கலான் - அலங்கல் - மணமாலையைக்குறியதாயிற்று. நயனகோசரம் - கண்கட்கு விஷயமாதல். நயனம் - கண்; தன்னுடையோனை நடத்தும் கருவி என்பது பொருள். மனத்தையடக்கிக்காத்து நிற்கும் நிறையென்னும் குணம், மதம் கொண்ட யானையை யடக்கும் அங்குசம் போன்ற கருவியாமென்க.

மாலுற வருதலும் மனமும் மெய்யுந்தன்
நூலுறு மருங்குல்போல் நுடங்கு வாள்நெடும்
காலுறு கண்வழி புகுந்த காதல்நோய்
பாலுறு பிறையெனப் பரந்த தெங்குமே. ௬௧.

பொழிப்புரை :—காம மயக்கம் மிகுதியாக வந்தடைதலுமே, தனது மனமும், சரீரமும் நூலைப் போன்ற தனது இடையைப் போலவே சுருக்கங்கொண்டு தளர்பவளாகிய சீதையின், வாய்க்கால் போன்ற நீண்ட கண்களின் மார்க்கமாகப் புகுந்த காதல் நோயானது, பாற்பெருக்கைச்சேர்ந்த உறைமோர்த்துளியைப்போல் தேகமெங்கும் பரவிவிட்டது.

குறிப்புரை :— சீதைக்குக் காதல்நோய் அதிகரித்தது என்பதாம். மால் - மயக்கம், காதல். உற - மிகுதியாக. நூல்+உறு - உறு - (போல) உவமையுருபு. மருங்குல் - இடை. நுடங்குதல் - அசைதல்;

தளர்தல். கால் - வாய்க்கால் - மார்க்கம்; உறு - உற்ற. பிறை - உறை மோர்த்துளி. எங்கும் - தேக மெங்கும்.

நோமுறும் நோய்நிலை நுவல கிற்றிலள்
ஊமனின் மனத்திடை உன்னி விம்மினாள்
காமனும் ஒருசரம் கருத்தில் எய்தனன்
வேமெரி அதனிடை விறகிட் டென்னவே. சுஉ.

பொழிப்புரை:— வருந்துவாள்; உற்ற நோயின் நிலையை யாவரோடும் சொல்ல முடியாத வளாக இருப்பாள். ஊமனைப்போல மனத்திடைவைத்தே நினைத்து நினைத்துப் பொருமுவாள். அந்த சமயத்தில் மன்மதக்கடவுளும், எரிகின்ற தீயினிடத்தில் பின்னும் விறகிட்டதைப் போல, ஒரு பாணத்தையவள் மனத்திடம் பார்த்தெய்தனன்.

குறிப்புரை:— சீதை காமதாபத்தினால் வருந்தினாள்; தனக்கு இத்தகைய வருத்தத்தைத்தரும் அந்நோயின் தன்மையை ஒருவரிடமும் சொல்ல முடியாதவளாகி, ஊமரைப்போல, மனத்தினிடமேவைத்துப் பொருமிக்கொண்டிருந்தாள் என்பதாம். நோம் - (நோகும்) வருந்துவாள். உறும் நோய் நிலை - உற்ற நோயின்தன்மை. மனத்திடை - இடை - ஏழனுருபு. உன்னுதல் - நினைத்தல். விம்முதல் - பொருமுதல். நோய் - நோ - பகுதி. காமன், சரம் - வட மொழிகள். வேம்+எரி — வேகின்றதீ.

நிழலிடு குண்டலம் அதனின் நெய்யிடா
அழலிடா மிளிர்ந்திடும் அயில்கொள் கண்ணினாள்
சுழலிடு கூந்தலும் துகிலும் சோர்தரத்
தழலிடு வல்லியே போலச் சாம்பினாள். சுஙூ.

பொழிப்புரை:— மணிநிழலைத் தருகின்ற காதணியில், நெய்யிடாமலும் தழலிடாமலும் ஜ்வலித்துப் பிரகாசித்துக்கொண்டிருக்கும் கூரிய கண்களையுடையவளான சீதை, சுழற்றி முடித்திருக்கப்பெற்ற தனது கூந்தலும் வஸ்திரமும் நிலையினின்று சோர்ந்திருக்க, தீயிற்போடப் பெற்ற கொடியைப்போல் வாடியிருந்தாள்.

குறிப்புரை :—சீதை காமதாபத்தால் வாடிய கொடிபோலிருந் தாள். காது வரையில் நீண்ட கண்களுடையாள் என்பார். "நிழலிடு குண்டலமதனில் மிளிர்ந்திடு கண்ணாள்" என்றார். குண்டலம் - (வட மொழி) காதணி. மிளிர்தல் - பிரகாசித்தல். அயில் - கூர்மை. சுழ லிடல் - சுற்றிவைத்தல். துகில்- வஸ்திரம். சோர்தல் - தளர்தல். வல்லி - கொடி. சாம்புதல் - வாடுதல்; தளர்தல்.

தழங்கிய கலைகளும் நிறையுஞ் சங்கமும்
அழுங்கிய உள்ளமும் அறிவும் மாமையும்
இழந்தவள் இமையவர் கடைய யாவையும்
வழங்கிய கடலென வறியள் ஆயினாள். சுச.

பொழிப்புரை :—ஒலிக்கின்ற மேகலாபரணங்களும் தற்காப்பும் சங்கு வளையல்களும் வருந்திய மனமும் பகுத்தறிவும் மேனிநிறமும் இழந் தவளாகிய சீதையானவள், தேவர்கள் அசுரருடன் கூடிக்கடைந்தகாலத் தில் யாவும் வழங்கிவிட்டு வறிதாக இருந்த கடலைப்போல் வறியளாகவே இருந்தாள்.

குறிப்புரை:—காமதாபத்தால் சீதை ஆபரணங்களையும் மனக்காவலை யும் பகுத்தறிவையும் பிறவற்றையும் இழந்திருந்தாள் என்பதாம். தழங் குதல் - ஒலித்தல். கலை - மேகலை. (வடமொழித்திரிபு) நிறை - தற் காப்பு. சங்கம் - வளை (வடமொழி) அழுங்குதல் - வருந்துதல். மாமை- நிறம். இமையவர் - தேவர். வழங்குதல் - கொடுத்தல். வறியள் - வறுமையுடையாள்.

கலங்குழைந் துகநெடு ். நாணும் கண்ணற
நலங்குழை தாநகில் முகத்தில் ஏவுண்டு
மலங்குழை யெனவுயிர் வருந்திச் சோர்வுறும்
பொலங்குழை மயிலைக்கொண் டரிதிற் போயினார். சுரு.

பொழிப்புரை :—ஆபரணங்கள் தளர்ந்து போய் நழுவிக் கீழே விழவும், நாணம் என்னும் உயர் குணமும் நீங்கிப் போகவும், ஸ்தன ப்ரதேசம் அழகழிந்து போகவும், முகத்திற் பாணம் தைத்து வருந்து கின்ற மானைப்போல உயிர் வருந்தித் தளர்கின்ற - பொன்னாலாகிய காத ணிகளையுடைய மயிலைப் போன்ற சீதையை அழைத்துக்கொண்டு வருந்தி யேனும் அப்புறம் போயினர் தோழியர்.

குறிப்புரை :—மன்மத பாணத்தால் ஏவுண்டு வருந்திக்கொண் டிருக்கும் சீதாதேவியைத் தோழிகள் அப்புறம் அழைத்துக் கொண்டு போயினர். கலம் - ஆபரணம். குழைந்து உகல் - தளர்ந்து நழுவி வீழ் தல்; உகல் - உகு - பகுதி. கண்ணறல் - நீங்கல். நலம் - அழகு. குழைதரல் - தளர்தல் (குறைதல்) நகில் - கொங்கை. ஏவுண்டு - ஏவு ணல்=ஏவப்படல்; எய்யப்படல் என்றவாறு. மலங்கு+உழை=மலங் குழை; மலங்குதல் - மயங்குதல்; உழை - மான். சோர்வுறல் - தளர்தல்; உறு - துணைவினை. பொலம்+குழை=பொலங்குழை=பொன்குழை; குழை - காதணி. பொன் என்பது, ஈறு கெட்ட லகரம் ஒற்றும் அம் சாரியையும் சேர்ந்து பொலம் எனலாயிற்று என்பது தொல்காப்பியம். மயில் - உவமையாகுபெயராய் நின்று சீதையைக் குறித்தது. அரிதின்- அருமையாக; சிரமப்பட்டேனும் என்றபடி.

காதொடு கடைபொரும் கயற்கண் மங்கைதன்
பாதமும் கரங்களும் அனைய பல்லவத்
தாதொடும் குழையொடும் அடுத்த தண்பனிச்
சீதநுண் துளிமலர் அமளி சேர்த்தினார். ௬௩.

பொழிப்புரை :— காதின் அளவு பரியந்தம் கடைப்பாகம் சேர்ந்து பொருந்தியிருக்கும் மீன் போன்ற கண்களையுடைய மங்கையாகிய சீதையி னுடைய கால்கட்கும் கைகட்கும் சமானமாகிய தளிர்களின் துகள்க ளும் நுண்ணியதழைகளும் சேர்க்கப் பெற்றிருக்கும் தண்ணிய - பனி நீரின் குளிர்ந்து நுண்ணியதுளிகள் பொருந்தியுள்ள மலர்ப்படுக்கையிற் கொண்டு சேர்த்தார்கள்.

குறிப்புரை :—தளிர்களும் துளிர்களும் விரித்துப் பனிநீர் தெளித் திருக்கும் மலர்ப்படுக்கையில், சீதையைப் படுக்கவைத்தனர் என்பதாம். காது+ஒடு - காதுவரையில் என்பதாம். கடை - கண்ணின் கடைப்பா கம். பொருதல் - சேர்தல். கயற்கண் - கயல் (மீன்) போன்றகண். பாதம் - (வடமொழி) திருவடி. கரம் - (வடமொழி) கை. அனைய - போன்ற. பல்லவத்தாது - (வடமொழித்திரிபு) தளிர்களின் நுண் துகள்கள். குழை - நுண்தழை. ஒடு இரண்டும் எண்ணுப்பொருளன. அடுத்த - சேர்ந்த. தண்பனிச் சீத நுண்துளி - தண்ணிய பனிநீரின் குளிர்ந்த சிறு துளிகள். அமளி - படுக்கை.

நாளறு நறுமலர் அமளி நண்ணினாள்
பூளைவீ புரைபனிப் புயற்குத் தேம்பிய
தாளதா மரைமலர் ததைந்த பொய்கையும்
வாளரா நுங்கிய மதியும் போன்றனள். சஎ.

பொழிப்புரை :— பருவகாலம் தவறாது மலர்ந்துள்ள மணம் பொருந்திய மலர்ப்படுக்கையில் சேர்ந்துள்ளவளாகிய சீதை, பூளைப்பூவினுக்கு ஒப்பாயிருக்கும் பனி நீரினால் குன்றிப்போயிருக்கும் தண்டுகளையுடைய தாமரை மலர்கள் நெருங்கிய பொய்கையையும், வாள்போன்ற பாம்பாகிய ராகுக்கோளால் மறைக்கப்பெற்றிருக்கும் சந்திரனையும்போல அழகும் ஒளியும் நீங்கியிருந்தனள்.

குறிப்புரை :— காமதாபத்தினால் வருந்திச்சீதை அழகும் ஒளியும் குறைந்து படுக்கையிற் சேர்ந்திருந்தாள் என்பதாம். நாள் - பர்வம். நறுமலர் - நறுமை - மணம். பூளை வீ - பூளைப்பூ ; வீ - பூ. (சிறுகிய வெள்ளியதொருபூவகை). புரை - உவமவுருபு ; போல என்பது பொருள். பனிப்புயல் - பனி நீர்; புயல் - நீர். தேம்பல் - வருந்தல், வாடல். தாளதாமரை - தண்டுடைய தாமரை. ததைதல் - நெருங்கல். வாள்+அரா - வாள் போலும் பாம்பு (ராகுக்கோள் என்பதாம்.) நுங்குதல் - விழுங்குதல். மதி - சந்திரன். பொய்கையைப்போல் அழகும் மதியைப் போல் ஒளியும் குறைந்திருந்தாள் என்பது கருத்து.

மலைமிசைத் தடத்துகு மழைக்கண் ஆலிபோல்
முலைமுகட் டுதிர்ந்தன நெடுங்கண் முத்தினம்
சிலைநுதற் கடையுறை செறிந்த வேர்வுதன்
உலைமுகப் புகைநிகர் உயிர்ப்பின் மாய்ந்ததே. சஅ.

பொழிப்புரை :— மலைகளின் சிகரப்ரதேசத்தில் சொரியப் பெறும் மேகத்தின் சிறு துளிகள்போல், சீதையின் நீண்ட கண்களின் நீர்த்துளிக் கூட்டம் அவளது முலைகளின் உச்சிகளில் உதிர்ந்தன ; வில்லைப்போன்று வளைந்த நெற்றியின் கடைப் பிரதேசங்களில் உறைந்து நெருங்கிய வேர்வை, கொல்லன் உலையில் தோன்றும் புகைக்கு ஒப்பதாகிய சீதையின் மூச்சுக்காற்றினால் தீய்ந்து மாய்ந்து போயிற்று.

குறிப்புரை :—சீதை காமதாபம் பொறுக்கமாட்டாமல் கண்ணீர் விட்டு வெய்துயிர்த்தாள் என்பதாம். மிசைத்தடம் - உச்சிப்பிரதேசம் உகுதல் - சிதறல். மழை - மேகம்; கண்மை - சிறுமையுமாம். மழைக் கண் ஆலி - என்பதில் "கண்" என்பதை ஏழனுருபாகக்கொண்டு "மேகத்தினிடம் தோன்றும் துளி" என்றலுமாம். ஆலி - துளி. முகடு - உச்சி. கண்+முத்து - கண்ணீர்; கண்ணீர் முத்துப்போறலின் என்க. இனம் - கூட்டம். சிலை+நுதல் - (உவமைத் தொகை) வில் லைப்போன்ற நெற்றி. உறை செறிந்த வேர்வு - "வரிப்புனைபந்து" என்பதில் "வரிந்து" புனைந்த பந்து என்பதுபோல "உறைந்து செறிந்த" - எனக் கொள்க. வேர்வு - வியர்வை. உலைமுகம் - உலை யின்முகம் - ஏழனுருபு. நிகர் - உவமவுருபு (போல) உயிர்ப்பின் - உயிர்ப் பினால்; இன் - மூன்றன் பொருள் தந்து நின்றது. மாய்தல் - அழித்தல்.

கம்பமில் கொடுமனக் கான வேடன்கை
அம்பொடு சோர்வதோர் மயிலும் அன்னவள்
வெம்புறு மனத்தனல் வெதுப்ப மென்மலர்க்
கொம்பென அமளியில் குழைந்து சாய்ந்தனள். ௩௬

பொழிப்புரை :—அச்சமில்லாத கொடிய மனத்தையுடைய வன சாரனாகிய வேடன் கையிலிருந்து தன்மேல் பாய்ந்த அம்பினொடும் கீழே சோர்ந்து வீழ்வதோர் மயிலைப்போன்ற சீதையானவள், வெப்பமுற்ற தனதுமனத்தில் தோன்றிய நெருப்பானது தன்னை வாட்டிட, மெல்லிய மலர்க் கொம்பைப்போல் படுக்கையில் தளர்ந்து சாய்ந்து விட்டனள்.

குறிப்புரை :—சீதை, காமபாணம் பொறுக்கமாட்டாமல் படுக்கை யிற்சாய்ந்தனள். கம்பம் - நடுக்கம், அச்சம் என்பதாம். கொடுமனம் - நேரில்லாத (கொடிய) மனம். கானம் - காடு மயிலும் - உம்மை - இழிவு சிறப்பு. வெம்புறல் - வெப்பமுறல். வெதுப்பல் - உஷ் ணப்படுத்தல் - வாட்டல் என்பதாம். குழைதல் - தளர்தல்.

சொரிந்தன நறுமலர் சுறுக்கொண் டேறின
பொரிந்தன கலவைகள் பொறியிற் சிந்தின
எரிந்துவெம் கனல்சுட இழையிற் கோத்தநூல்
பரிந்தன கரிந்தன பல்ல வங்களே. ௩௭.

பொழிப்புரை:—படுக்கையிற் புதிது புதிதாகக்கொணர்ந்து சொரியப்பெற்ற பரிமளம் பொருந்திய மலர்களும் தேகத்தின் வெப்பத்தால் சுருண்டு போய்த் தேகத்தில் தைத்தேறின. உள் வெப்பத்தால், பூசப்பெற்ற கலவைச் சாந்துகள், பொரிந்துபோய்ப் பொறிகள் போல் வெடித்துச்சிதறிவீழ்ந்தன ; ஆபரணங்களிற் கோக்கப் பெற்ற நூல்கள், உள்ளத்தில் எரிந்து வரும் கொடிய நெருப்புச் சுடவே, அற்றுப்போயின; படுக்கையில் விரிக்கப்பெறும் தளிர்களும் கருகிப்போயின.

குறிப்புரை :— சீதைக்குக் காமதாபம் அதிகப்பட்டதென்பதாம். சொரிந்தன நறுமலர் - கொட்டப் பெற்றனவாகிய பரிமளமலர்கள். "சுறுக்கொளல்"—வெந்து தீய்ந்து சுருளல். "சுட்டவிடந்தொறும் சுறுக் கொளும் சுரம்" — என்றார் கண்ணப்பர் மறத்தில், நக்கீரரும். கலவைகள் பொரிந்தன (வாகிப்) பொறிகள் (போற்) சிந்தின. இழை - ஆபரணம் ; இழைக்கப்பட்டன என்பதாம் ; இழைத்தல் - செய்தல். பரிந்தன - அற்றுப்போயின பல்லவங்கள்.

தாதியர் செவிலியர் தாயர் தவ்வையர்
மாதுயர் உழந்துழந் தழுங்கி மாழ்கினர்
யாதுகொல் இதுவென எண்ணல் தேற்றலர்
போதுடன் அயினிநீர் சுழற்றிப் போற்றினர். ருக.

பொழிப்புரை :— ஏவற்பெண்களும் செவிலியர்களும் தாய்மார்களும் மூத்தவர்களுமாகி யங்குக்கூடிய பெண்கள் ; இந்நோய் யாதாகுமோ என்று எண்ணுதலில் தெளியாதவர்களாகி, மிக்க துயரத்தினால் வருந்திவருந்தித் தளர்ந்து கலங்கினார்கள் ; நோய்க்குப்பரிகாரமாக மலர்களுடன் சோறும் கூடிய ஆலத்திநீர் சுழற்றித்தெய்வங்களைப் போற்றித் துதிசெய்தனர்.

குறிப்புரை :— அங்குப்படுக்கையறையில் சீதைக்குத் துணையாகக் கூடியிருந்த பெண்கள், ஒன்றுந் தோன்றாதவர்களாகி ஆலத்தி சுழற்றிக் கடவுளைப் போற்றினர் என்பதாம். தாதியர் - (தாசிகள்) ஏவற்பெண்கள். செவிலியர் - வளர்ப்புத்தாயார் ; தாயர் - மற்றைத்தாயர். தவ்வையர் - தமக்கையர் (மூத்தவர்); இவர், அந்த செவிலித்தாய் முதலிய தாய்களின் மக்களாய்ச் சீதைக்கு மூத்தவர்களாகிய துணைவிகள். மா+துயர் — "மா" — மிகுதி. உழந்து+உழந்து - அடுக்கு. அழுங்கல் -

தனரல். மாழ்தல் - வருந்தல் ; மயங்கல். யாது கொல் - " கொல் வினைப்பொருட்டு. இது வினாவின்மேல் வினா. எண்ணல் – நினைத்தல் தேற்றலர் - மனந்தேற்ற முடியாதவராகி. போது - மலர் ; அயினி சோறு ; போதுடன் அயினி நீர் - மலரும் நிறச்சோறும் சேர்த்துக்கலந்த ஆலத்திநீர். போற்றல் - கடவுளர்த்துதித்தல்.

அருகினின் றசைக்கின்ற ஆல வட்டக்கால்
எரியினை மிகுத்திட இழையும் மாலையும்
கரிகுவ தீகுவ கனல்வ காட்டலால்
உருகுபொற் பாவையும் ஒத்துத் தோன்றினாள். *ருஉ.

பொழிப்புரை :— அப்பெண்மணிகள் அருகிலிருந்துகொண்டு வீசுகிற ஆலவட்டத்தினின்றெழும்பும் காற்றானது, காமாக்கினியை அதிகப் படுத்திவிடவே, மனவெப்பத்தால் கரிவனவாகியும் தீவனவாகியும் உள்ள ஆபரணங்களும் மலர் மாலைகளும் மேலும் நெருப்பைக் கக்குவனவாகக்காட்டலால், பொன்னுருவினளாகிய சீதையானவள், குகையில் உருகிக் கொண்டிருக்கும் பொற்பதுமைக்கு ஒப்பாகத்தோன்றிக் கொண்டிருந்தாள்.

குறிப்புரை :— சீதை, காமதாபத்தினளாகலின், விசிறிக்காற்று, மேலும் அவளுக்குக் காமாக்கினியை அதிகப்படுத்தியதென்பதாம். ஆலவட்டம் - விசிறி ; கால் - காற்று. எரி - நெருப்பு. காட்டல் - தோற்றுவித்தல். உருகு பொற்பாவை - வினைத்தொகை. பொன் + பாவை - " பாவை " - பதுமை.

அல்லினை வகுத்ததோர் அலங்கற் காடெனும்
வல்லெழு அல்லவேல் மரக தப்பெரும்
கல்லெனும் இருபுயம் கமலம் கண்ணெனும்
வில்லொடும் இழிந்ததோர் மேகம் என்னுமால். ருங.

பொழிப்புரை :— மாலையணிந்துள்ளதொரு காடுபோன்று கறுத்த அவர் குஞ்சியானது இருட்டினைவகுத்துக்கட்டியது போலாம் என்பாள் ; அவரது இரண்டு புயங்களும் வலிய இரண்டு தூண்களாம்; அங்ஙனம் அல்ல வேல், இரண்டு பெருத்த மரகத மலைகளாம் என்பாள் ; கண்கள் தாமரைகள் என்பாள் ; அவர், வில்லொடும் கீழிறங்கிய மேகமே என்பாள்.

குறிப்புரை :— சீதையானவள், காமமயக்கம் தலைக்கேறித், தான் கண்ட அவ்வுருவினை நினைந்து புலம்புகின்றாள் என்பதாம். அல் - இருட்டு. அல்லினை வருத்தது - இருட்டைக்கொண்டு வருத்துக்கட்டியது. அலங்கல் - மாலை; மலர்த்தொடை. காடு - மிகுதி. எனும் - என்பாள். எழு - தூண்; வன்மை + எழு - வல்லெழு. மரகதம் - (வடமொழி) பச்சைமணி. கல் - குன்று, மலை. புயம் - (புஜம் - வடமொழி) தோள். கமலம் - (வடமொழி) தாமரை. இழிந்தது - இறங்கியதாகிய.

நெருக்கியுள் புகுந்தரு நிறையும் பெண்மையும்
உருக்கியென் உயிரொடும் உண்டு போனவன்
பொருப்புறழ் தோள்புணர் புண்ணி யத்தது
கருப்புவில் அன்றவன் காமன் அல்லனே. ௫௪.

பொழிப்புரை :— என்னைக்கிட்டிவந்து என் நெஞ்சினுள் புகுந்து, எனது அருமையான தற்காப்புக் குணத்தையும் பெண்மைத்தன்மையையும் உருகச்செய்து, என் உயிருடன் அபஹரித்துச் சென்ற அந்த அற்புதமூர்த்தியினுடைய மலைக்குச்சமானமாகிய தோளினைச் சேர்ந்திருக்கும் புண்ணியத்தைச் செய்துள்ள அந்தவில் கரும்புவில் அல்லவாகலான், அந்த நீல மேனித்திருமூர்த்தி மன்மதக்கடவுள் அல்லர்.

குறிப்புரை :— தன்னுள் காணப் பெற்ற அந்த அற்புத மூர்த்தி, எனக்குள் புகுந்து என் உயிரையும் கவர்ந்து கொண்டுபோயினர்; ஆனால் அவர் மன்மதக்கடவுள் அல்லர்; என்று சொன்னாள் சீதை என்பதாம். நெருக்கல் - கிட்டல். நிறை - தற்காவல். பெண்மை - பெண்தன்மை; நாணமாதிய குணம் பொருந்தினமை. உருக்கி - உருகச்செய்து. உயிரொடும் - உயிருடன் (அக்குணங்களையும்) என்பதாம். உண்ணல் - அழித்தல் (அபஹரித்தல்); அநுபவித்தலுமாம். போனவன் - வினையாலணையும் பெயர். பொருப்பு - மலை. உறழ் - (போல) உவமையுருபு. புண்ணியத்தது - புண்ணியம் செய்துவைத்த தன்மையது என்றும். கருப்பு + வில் - கருப்புவில்; கரும்பாகிற வில்; மன்மதனது வில்.

பெண்வழி நலனொடும் பிறந்த நாணொடும்
எண்வழி உணர்வுநான் எங்கும் காண்கிலன்
மண்வழி நடந்தடி வருந்தப் போனவன்
கண்வழி நுழையுமோர் கள்வ னேகொலாம். ௫௫.

பொழிப்புரை :—பெண்ணிடத்து இயல்பாக அமைந்துள்ள அ
கும், அப்பெண்ணுருவத்தின் உடன்பிறந்த நாணமும், அவற்றை யு
னத்திடத்து எண்ணுதற்குரிய அறிவும். ஆகிய இவற்றை நான், என்
டத்து எங்கும் கண்டிலேன்; (பெண்ணாகிய என்னிடம் முன்னரிருந்
இவை திடீரென்று என்னிடமிருந்து மறைந்து போயினமையால்) பூ
யின் மார்க்கமாக நடந்து தமது பாதங்கள் வருந்தும்படியாகச் சென்
(எனக்குக் காட்சி கொடுத்துப்) போனவராகிய அந்த அற்புத மூர்த்தி
கண்களை வழியாகக் கொண்டு உள்ளே நுழையும் (உள்ளப் பொருள்களை
யபகரித்துச் செல்லும்) கள்வன்தான் போலும் என்பாள்.

குறிப்புரை :— தனது விரகதாபத்தால், தனது அழகு நாண
அறிவு இவை அபஹரிக்கப்பட்டன, உணர்ந்து கலங்கினள் என்பதா
பெண்வழி - " வழி " இடப்பொருளில் வந்தது. நலன் - நலம் (அழகு
என்பதன் ஈற்றுப்போலி. பிறந்த நாணம் - உடன்பிறந்த நாணம் எ
னும் குணம் என்பதாம். அறிவு — தற்காப்பை யுணர்ந்துகொள்ளு
அறிவு. எண்வழி உணர்வு - மனத்திடத்துள்ள அறிவு; எண் - மனம்
வழி - இடம்; உணர்வு - அறிவு ; அன்றியும் எண்ணுமிடத்து அறிவு
என்றுமாம். எங்கும் - தன் உளத்தெங்கும் என்பதாம். காண்கிலன்
காண்+கு+இல்+அன்=" கு "=சாரியை. மண்+வழி - " வழி "
மார்க்கம். போனவன் - வினையாலணையும் பெயர் ; கண்+வழி - "வழி"
இதுவும் அது. ஓர்கள்வன் - ஒப்பற்ற உள்ளக் கள்வன் என்றவாறு
கடவுள் என்றபடி.

இந்திர நீலமொத் திருண்ட குஞ்சியும்
சந்திர வதனமும் தாழ்ந்த கைகளும்
சுந்தர மணிவரைத் தோளு மேயல
முந்தியென் உயிரையும் முறுவல் உண்டதே. ருசு

பொழிப்புரை :—இந்திர நீலமணிக்கு ஒப்பதாகி ஒளியுடன்
கறுத்துள்ள அவரது கேசமும், சந்திரனைப்போல் ஒளியுட
கருணையுமுடைய அவரது முகமும், முழந்தாள் வரையில் தாழ்ந்துள்ள
அவரது கைகளும், அழகான நீலமணிமலைகளைப் போன்ற அவரது
தோள்களும் மாத்திரமேயல, அவரது வெண்ணகையில் தோன்றிய புன்
முறுவலும் முதன்மையாக எனது உயிரைக் கவர்ந்து கொண்டேகியது
என்பாள்.

குறிப்புரை :—சீதை யந்தக் கரியசெம்மலினது அழகுக்கும் கருணைக்கும் கொடைக்கும் ஆற்றலுக்கும் ராஸிக்யத்துக்கும் அறிகுறிகளான அவரது கேசத்தையும் முகத்தையும் கைகளையும் தோள்களையும் புன்னகையையும் நினைத்து நினைத்து வருந்தினள் என்பதாம். இந்திரநீலம் - நீலரத்தினத்திற் சிறந்தது. இருண்ட - கறுத்த. குஞ்சி - ஆண்மக்களின் தலைமயிரைக் குறிக்கும் சொல். "முன்சொன்ன நான்கிலும் யான் வசமிழக்காமல் பின்குறித்த புன்னகையிலே என்வசமிழந்தேன்" என்றாள் என்பது குறிப்பு. என் எனில், முன் நான்குமிருந்தும் பின்னதாகிய ராஸிக்யமின்றியே இன்பமென்ப தொன்றறியாத ஆண்மக்களுமுளராகலின் என்க. ராஸிக்யம் - ரஸிகஸ்வபாவம், அதாவது, இன்பம் நுகரும் தன்மை. இந்திரநீலம், சந்திரவதனம், சுந்தரமணி இவை வடசொற்றொடர்ச்சிதைவுகள். வரைத்தோள் - உவமைத்தொகை; மலைபோன்ற தோள்கள் என்பதாம். முறுவல் - சிறுநகை; இது ராஸிக்யத்துக்கு அறிகுறி; ஆழ்ந்த சிந்தையும் உயர்ந்த நோக்கமும் மேம்பாட்டுணர்வும் உடைய நாகரீகப் பெரியோர் தம்முள்ளக் குறிப்பினை யித்தகைய புன்முறுவலால் வெளியிடுவர் என்பது அனுபவசித்தம்.

படர்ந்தொளி பரந்துயிர் பருகும் ஆகமும்
தடந்தரு தாமரைத் தாளு மேயல
கடந்தரு மாமதக் களிநல் யானைபோல்
நடந்தது கிடந்ததென் உள்ளம் நண்ணியே. ருஎ.

பொழிப்புரை :— அகன்று பிரகாசம் விரிந்து உயிரைக்கவரும் அவரது மார்பும், பொய்கை பெற்ற தாமரை போன்ற பாதங்களும் மாத்திரமேயல்ல; தொளையிலிருந்துபிறந்த பெருமதத்தைச் சொரிகின்ற களித்த உயர்குல யானையைப்போல நடந்துபோன அவரது நடையும் எனது சிந்தையுட் புகுந்து தங்கியது என்பாள்.

குறிப்புரை :— சீதை, இராமபிரானது மார்பின் அழகையும் பாதங்களின் அழகையும் நடையின் அழகையும் சிந்தித்தனள் என்பதாம். படர்தல் - அகன்று விரிதல். பரத்தல் - விரிதல். பருகல் - குடித்தல். தடம் - தாமரைப்பொய்கை. கடம் - மதம் பெருகிவரும் தொளை. களிநல்யானை - களி - என்பது யானையின் பொது நீக்கி ஆண்பாலையும், நல்-என்பது உயர்வுடைமையையும் குறித்து நின்றன. நடந்தது - நடந்த நடை. கிடந்தது - நீங்காமல் இருந்தது என்பதாம்.

க ரு௬.

உரைசெயின் தேவர்தம் உலகு ளானலன்
விரைசெறி தாமரை இமைக்கும் மெய்ம்மையால்
வரிசிலைத் தடக்கையன் மார்பின் நூலினன்
அரசிளங் குமரனே ஆகல் வேண்டுமால். ௫௪.

பொழிப்புரை :—இன்னும் அவரைப்பற்றி ஆராய்ந்து சொல்வோமாயின், மணம் பொருந்திய தாமரைபோன்ற கண்கள் இரண்டும் இமைகின்ற உண்மையினால் தேவருலகின் வாசியாக உள்ளவர் அல்லர் என் தெரிகின்றது; கட்டுடைய வில்லைக்கையில் உடையவராக இருக்கிறார் மார்பிலே முப்புரி நூலும் உடையார்; ஆகலின், அவர், அரசிளங்குமராகிய க்ஷத்திரியராகவே இருத்தல் வேண்டும் என்றாள்.

குறிப்புரை :— சீதை, அம்மூர்த்தி, எவ்வருணத்தாரென்பதைப்பறியும் சிந்தித்தாள் என்பதாம். உரை செய்தல்-விசாரித்தறிதல். தேவதம் உலகு - ஸ்வர்க்கலோகம்; உம்பர்உலகவாஸிகட்குக் கண்இமைகஇல என்பது மரபாகலின், இமைக்கும் கண்பெற்ற இயல்புடைய அம்மூர்த்தி தேவர் கூட்டத்தவர் அல்லரென்பது ஆராய்ச்சியின் பயன்; மார்பின் நூலினன் - என்னும் குறிப்பு, கையில் வில்லேந்தும் மற்றொரு வேடுவகுலத்தினை யொழித்து ஒரு க்ஷத்திரிய வருணத்தான் என்பதையுணர்த்தி நிற்கின்றது அரசிளங்குமரனே - என்பதின் "ஏ" காரத்தேற்றம், சீதையின் மணத்தொழிற்குரிய வர்ணக்கட்டுப்பாட்டின், ஸம்மதியைக்குறித்துளது.

பிறந்துடை நலனிறை பிணித்த எந்திரம்
கறங்குபு திரியுமென் கன்னி மாமதில்
எறிந்தவக் குமரனை இன்னும் கண்ணிற்கண்
டறிந்துயிர் இழக்கவும் ஆகு மேகொலாம். ௫௬.

பொழிப்புரை :— என்னுடன் பிறந்து எனக்கு உடைமைகளாக இருந்த என் மெய்ந்நலன் தற்காவல் என்னும் இவற்றாற் கட்டப்பெற்றதொரு என்மனோஎந்திரமானது, எப்போதும் சுழன்று திரிந்து கொண்டிருக்கும் எனது கன்னித்தன்மையாகிற உயர் மதிலுறுப்புகளை வீசியழித்த அந்தஅழகிய அரசிளங்குமரனை, மறுமடியும் கண்களாற்கண்டு, அவர் இன்னாரென்று தெரிந்து கொண்டு, பின்னரேனும் என் உயிரை யிழத்தலும் கூடுமோ என்பாள்.

குறிப்புரை :— தனது கண்ணுற் காணப்பெற்ற அந்த அற்புத மூர்த்தியே, தனது அழியாத கன்னித்தன்மையை அழித்துளராகலின், அவரே தன்னுயிர் நாயகன் என்றாள் என்பதாம். உத்தமப்பெண்டிர்க்கு மெய்ந்நலனும் தற்காவலும் உடன்பிறந்தே உடைமையாயுள்ளன என்பது இலக்கணம்; ஆகலின், அவ்வுத்தமப் பெண்டிரது மனம், எந்திரம் போல், அந்நியர் உள்ளேபிரவேசியாதபடி சுழன்று காத்துக்கொண்டிருக்கும் என்றார். கன்னி மா மதில்-கன்னித்தன்மைக்குரிய உயர்மதில் என்பதாம். கன்னி - கந்யா என்னும் வடமொழித்திரிபு. எந்திரம்- வடசொற்றிரிபு. கறங்கு பு - "பு" - வினையெச்சவிகுதி. எறிதல் - வீசுதல், வெட்டுதல், அழித்தல் என்பதாம். அக்குமரன் - அவ்வழகன்; அவ்விளைஞன்; அந்த க்ஷத்திரியகுமாரன் என்றாள் என்பதாம். கண்ணிற் கண்டு அறிதலாவது — கண்ணிற்காணல், - அழகு கருணை கொடை ஆற்றல் முதலிய தெரிதல்; அறிதல்: - வர்ணத்தைத் தெரிந்துகொள்ளல்; எனவே வர்ணக்கட்டுப்பாடுடைமை வற்புறுத்தப்பெற்றது. கண்டறிந்து உயிரிழத்தல் - ஒருபிறப்பில் மனங்கொண்டதொன்று அப்பிறப்பிலேயே விசாரிக்கப்பெற்று, அந்நியமாயின், தள்ளப்படாதிருந்தால், அடுத்தபிறவியையும் தூய்மை யாக்காதென்னும் உண்மையால்,"மனோவ்ய பிசாரமும் கூடா" தென ஒழிக்கக் கருதினாள் என்பது உணர்த்தப் பெற்றது; தான் தற்போது அனுபவித்துக் கொண்டிருக்கும் காமதாபம் கொன்றன்ன துன்பம் செய்தலின், அங்ஙனம் கருதினளென்க. ஆகுமே கொலாம் - "ஏ" காரம் - வினாப்பொருட்டு; "கொல்" - வினாவின் மேல்வினா; "ஆம்" - அசை.

என்றிவை இனையன எண்ணும் என்வயின்
நின்றனன் இவனெனும் நீங்கினானெனும்
கன்றிய மனத்துறு காம வேட்கையால்
ஒன்றல பலநினைந் துணங்கும் காலையே. சுo.

பொழிப்புரை :— என்ற இவையும் இவை போன்றவையும் எண்ணுவாள்; இப்போது என்னிடம் வந்து நின்றனர் என்பாள்; இதோ நீங்கினார் என்பாள்; இப்படியாகக்கன்றிய தனது மனத்துற்ற காமவிருப்பத்தால் ஒன்றே அல; பலபல நினைந்து மனம்வேவாள்; அக்காலையில்,

குறிப்புரை :— சீதை இப்படிப் பல எண்ணிக்கொண்டிருந்தாள்; அப்போது. என்ற+இவை - என்றிவை. இனையன - இவை போன்றன.

எண்ணும், எனும், உணங்கும் - என்பவற்றிலுள்ள "உம்மைகள் வினைமுற்றுப் பொருளன. வயின் - இடம். கன்றல் - வெட்முறல். வேட்கை - ஆசை.

அன்னமென் நடையவட் கடைந்த காமத்தீ
தன்னையும் சுடவது தரிக்கி லானென
நன்னெடுங் கரங்களை நடுக்கி ஓடிப்போய்
முன்னைவெங் கதிரவன் கடலில் மூழ்கினான். ௬௧.

பொழிப்புரை :— அன்னப்பறவைபோலும் நடையையுடையவளாகிய சீதைக்கு வந்துசேர்ந்த காமத்தீயானது தன்னையும் சுட்டிடவே அது தரிக்கமுடியாதவன்போல, பழமையான உஷ்ண கிரணங்களையுடை சூரியனானவன், தனது நல்ல நீண்ட கைகளாகிய கிரணங்களை அசைத்து மடக்கி விரைந்துசென்று தண்கடலில் மூழ்கிமறைந்தான்.

குறிப்புரை :— சூரியன் அஸ்தமனத்தையடைந்தான் என்பதாம். இது தற்குறிப்பேற்ற வணியாகும்; தற்குறிப்பாவது:—இயற்கைக்குறிப்பு முதலிய பிறகுறிப்புச் செய்திகளைக், கவி, தனது சரித்திரக்குறிப்புக்கு பொருந்தக் கூறுதலாகும். "உலகினுள் ஒருபொருட் குற்றதன் மைத்திறம், விலக்குபு பிறிதின் விளைந்ததென் றுட்கொண், டேற்றுதல் ஆகும் தற்குறிப் பேற்றம்."—மாறனலங்காரம். அன்னம் மென் நடையவள்—அன்னப் பறவைபோலும் நடையுடையவள்—சீதை; மற்றும், அன்னம் போலும், உயர்வு தாழ்வு, நன்று தீது, முதலிய பகுத்து அறியும் அறிவுடையாள் என்பதும் ஆம். நடை—தொழிற் பெயர்; நட—பகுதி. அடைதல்-தானேவந்து பொருந்துதல். காமத்தீ—மன்மததாபம். தரிக்கிலான்—தாங்கமுடியாதவன்; தரிக்கல்—தாங்குதல். கரங்கள்—கைகள்; இங்கே சூரியனது கிரணங்களையுணர்த்தி நின்றது. முன்னை — பழைமை வெம்மை + கதிர் = "வெம்மை = உஷ்ணம்;" "கதிர்" = கிரணம்.

விரிமலர்த் தென்றலாம் வீசு பாசமும்
எரிநிறச் செக்கரும் இருளும் காட்டலால்
அரியவட் கனல்தரும் அந்தி மாலையாம்
கருநிறச் செம்மயிர்க் காலன் தோன்றினான். ௬௨.

பொழிப்புரை :— விரிந்த பூக்களில் தோய்ந்து வருகின்ற தென்றற் காற்றாகிய சுற்றிவீசும் பாசக்கயிற்றையும், நெருப்புப்போற் சிவந்துள்ள

செக்கர்வானமாகிய ரோமங்களையும், இருளாகிய கருத்த உருவத்தையும் காட்டிக்கொண்டு வருந்தன்மையால், அரியவளாகிய சீதைக்குத் துன்பம் தரும்பொருட்டு, வெப்பம்தரும் அந்திமாலை (மாலைக்காலம்) என்று சொல்லப்பெறுகிற கருநிறத்தையும், செம்மயிரையுமுடைய எமன் தோன்றினன்.

குறிப்புரை :— சூரியன் மறைந்தவுடன் மாலைக்காலமானது தோன்றி எமன் போல் துன்பம் தருவதாயிற்று. கூடினோர்க்கு இன்பம் தருவனவாகிய தென்றலும் இரவும் சந்திரனும் ஆகிய இவை, தணந்தார்க்குத் துன்பம் தருவன ஆகலான், ஸ்ரீராமபிரானைப் பிரிந்து காமதாபம் கொண்டிருக்கும் சீதாபிராட்டிக்குத், தென்றலையும் இருட்டையும் சந்திரனையும் காட்டிவரும் மாலைக்காலம், எமன் போல் துன்பம் தருவதாயிற்று என்பதாம். "எமன் — அந்திமாலை; கருநிறம் — இருள்; செம்மயிர்—செக்கர்வானம்; பாசம்—தென்றல்" என்று இங்ஙனம் உவமேய உவமானங்களைக் கொள்க. விரிமலர், வீசுபாசம்—இவை வினைத்தொகைகள்; எரிநிறம்—உவமத்தொகை; கருநிறம்—பண்புத்தொகை; அந்திமாலை—இருபெயரொட்டுப் பண்புத்தொகை.

மீதறை பறவையாம் பறையும் கீழ்விளி
ஓதமென் சிலம்பரும் உதிரச் செக்கரும்
பாதக இருள்செய்கஞ் சுகமும் பற்றலால்
சாதகம் என்னவும் தகைத்தப் மாலையே. அ௩.

பொழிப்புரை:— மேலே இருந்து ஒலித்துக் கொண்டிருக்கும் பறவைக் கூட்டங்களாகிய பறை (தம்பட்ட) வாத்தியமும், கீழே ஒலித்துக் கொண்டிருக்கும் நீரோட்டங்களாகிய பாதச்சிலம்புகளும், செக்கர்வானமாகிய ரக்தமும், தீங்கைச் செய்யும் இருளாகிய - செய்யப்பெற்ற சட்டையும் ஆகிய இவற்றைப் பற்றிவருதலாலே, அந்த அந்திமாலைக் காலமானது, ஒரு பூதமென்று சொல்லவும் தகுதியுடைத்தாகும்.

குறிப்புரை :—மற்றும், அந்த அந்திமாலை, பார்வைக்குப் பயங்கரமாகியும் சீதைக்குத்துன்பந் தருவதாகியும் தோன்றலால், அது ஒரு பூதம் போலவும் இருந்தது என்பதாம். "பூதம் - அந்திமாலை; பறையொலி - பறவையொலி; சிலம்பொலி - நீரோட்ட (ஓத) வொலி; உதிரம் - செக்கர்வானம்; கஞ்சுகம் - பாதக இருள்" என்று இங்ஙனம் உவமேய உவமானங்களைக் கொள்க. மீது அறை - மேலே சப்திக்கின்ற; அறைதல் -

ஒலித்தல், சப்தித்தல். பறை - ஓர் தாழ்ந்த வாத்திய விசேஷம்; ; ம்
பட்டம். கீழ்விளி - கீழே சப்திக்கின்ற; விளித்தல் - ஒலித்தல், சப்தி த்
தல். ஓதம் - நீர் அல்லது நீரோட்டம். சிலம்பர் - காற்சிலம்பு; சிலட ு
என்பது கடைப்போலியாய்ச் சிலம்பர் என்றாயிற்று. உதிரம் - ரத்தட ;
ருதிரம் என்பது - வடமொழி. பாதகம் - துன்பம் (வடமொழி) கஞ் ;
கம் - சட்டை (வடமொழி) பற்றல் - துணை பெறல். சாதகம் - பூச் ;
(வடமொழி) தகைத்து - தகைத்தது (தகுதியுடையது) என்னக் ;
தகைத்து - என்று சொல்லவும் தகுதியுடையது.

## வேறு.

கயங்கள் என்னும் கனல்தோய்ந்து கடிநாள் மலரின் விடம்பூசி
இயங்கு தென்றல் மன்மதவேள் எய்த புண்ணின் இடைநுழை
உயங்கும் உணர்வும் நன்னலமும் உருகிச் சோர்வாள் உயிருண்ண
வயங்கும் மாலை வரல்நோக்கி இதுவோ கூற்றின் வடிவென்றாள்.

௬௪

பொழிப்புரை :— குளங்கள் என்னும் அக்கினி குண்டத்திற் படி தெழுந்து (கூரியதாகி) மணம் பொருந்திய அன்றலர்ந்த பூக்களில் மகரந்தங்களாகிய விஷத்தைப் பூசிக்கொண்டு (தீங்கு செய்வதாகி அசைந்து வருகிற தென்றற்காற்று (கிய வாளாயுதமா) னது, மன்ம, தேவன் மலர்க்கணை கொண்டு முன்னமே எய்து உண்டாக்கியுள்ள புண் களுக்குள்ளே நுழைந்து துன்புறுத்தவே, வருந்துகின்ற அறிவும் நலட பெற்றமேனியழகும் கரைந்து தளர்பவளாகிய சீதையானவள், தனத உயிரையும் விழுங்கிவிடற் பொருட்டு, விளங்கியிருக்கின்ற அந்தி மாலைக காலம்வருதலைப்பார்த்து, இம்மாலைக்காலம் தான் எமசொரூபமோ என்றாள்.

குறிப்புரை :—மாலைக்காலம் வந்து தோன்றவே, சீதை, காம பாதையினால் மிக்க வருந்தினாள் என்பதாம். தென்றல் வாள் போலவும் மாலை எமன் போலவும் இருந்ததென்கிறார். கயங்கள் - குளங்கள், செயற்கை நீர்த்தேக்கங்கள். கனல் - நெருப்பு. தோய்தல் - படிதல். கடி - மணம். நாள் மலர் - அன்று மலர்ந்த பூ; தேனும் மணமும் மக ரந்தமும் நீங்காதிருத்தலின் என்க. விடம் - விஷம். பூசுதல் - தடவிக் கொள்ளல். இயங்கல் - அசைதல், ஆடுதலுமாம். வேள் - அரசன், வீரன்.

எய்த - தொடுத்த (எய்து ஆக்கிய என்பது பொருள்) இடை எழுத்து. புண்ணின் - "இன்" சாரியை. உயங்கல் - வருந்துதல், சோர்தல். சோர்வாள் - சீதை (வினையாலணையும் பெயர்) "வயங்கும் மாலை உயிருண்ண வரல் நோக்கி" எனக்கூட்டுக. வயங்கல் - விளங்கல். மாலை - மாலைக்காலம். வரல் - வருதல். நோக்கல் - பார்த்தல், கவனித்தலுமாம். இதுவோ — "ஓ" காரம் வினாப் பொருளில் வந்தது. கூற்றின் வடிவு - எம ரூபம்; கூற்று - எம தேவதை; உயிரையும் உடலையும் கூறு (பங்கு) படுத்தலால் "கூற்று" ஆம்.

கடலோ மழையோ முழுநீலக் கல்லோ காயா நறும்போதோ
படர்பூங் குவளை நாண்மலரோ நீலோற் பலமோ பானலோ
இடர்சேர் மடவா ருயிருண்ப தியாதோ என்று தளர்வாள்முன்
மடல்சேர் தாரான் நிறம்போலும் அந்தி மாலை வந்ததுவே. கூரு.

பொழிப்புரை :— மனதுக்குரிய பிராண நாயகரைக் கூடப்பெறுமையாகிற - கூடியும் பிரிந்து நிற்றலாகிய துன்பம் பொருந்தியுள்ள பெண்களினது உயிரை (விழுங்கி) வருத்துகின்றது, கடலோ மழை தானோ முழுத்த நீலமலையோ காயாமரத்தின் நறுவிதாகிய மலர் தானோ விரிந்து அழகிய அன்றலர்ந்த குவளை மலரோ நீலோற் பலப்பூ தானோ அன்றிச் சருமெய்தற் பூவோ, மற்று, நீல நிறம் பொருந்திய வேறு யாதோ, என்று அவரது, நிறத்தையும் தண்மையையும் சாந்தத்தையும் பெருமையையும் எண்ணி யெண்ணித்தளர்ந்து கொண்டிருக்கும் சீதைக்கு எதிரில், இதழ் பொருந்திய மாலையையுடைய ஸ்ரீராமபிரானது நிறத்தைப் போன்ற நிறத்தையுடைய அந்திமாலைக்காலமானது, பின்னும் வருத்தந்தருவான், வந்து சேர்ந்தது.

குறிப்புரை :— உயிர்க்குரிய நாயகனை நேரிற்கண்டும் பிரிய நேர்ந்த துன்பத்தால் வருந்திக்கொண்டிருக்கும் சீதை, தன்னை வருத்தவந்த அந்த மாலைக்காலத்தில் தான் கண்ட அந்த மூர்த்தியின் நிறம் போன்ற பொருள்களை நினைந்து நினைந்து வருந்துகிறாள் என்பதாம். கடல் - நிறத்துக்கும் பரப்புக்கும் உவமை. மழை - நிறம் தண்மை உபகாரச் செயற்கு உவமை. முழுநீலக்கல் - நீலமலை ; இது நிறத்துக்கும் ஒளிக்கும் கனத்துக்கும் உயர்வுடைமைக்கும் மதிப்புக்கும் உவமை. காயா நறும்போது - காயாமரத்தின் ஒழுங்காகச்சேர்ந்த மலர்க்கூட்டம் ; இது,

நிறம் சுவை கூட்டத்தழகு இவற்றுக்கு உவமை. படர் பூம்குவளை நா மலர் நீலோற்பலமலர், கருநெய்தற்பூ, (பானல்) இவை விரிந்து பரந் கருணை வீசும் கண்கட்கு உவமைகளாம். இடர் - துன்பம். மடவார் - பெண்கள் ; இயற்கைப் பேதைமைக்குணம் வாய்ந்தவராகலினென் . உயிர் உண்பது - உயிரைவருத்துவதாகிய பொருள். யாதோ- யாது+ "ஓ" காரம் வினவின்மேல் வினா. மற்றை "ஓ" காரங்கள் ஐய பொருளன. தளர்வாள் - சீதை. மடல் - இதழ். தாரான் - இராமன் ; மாலையுடையான். வந்ததுவே - "ஏ" காரம் - அசை.

மைவான்நிறத்துமின்னெயிற்று வாடைஉயிர்ப்பின்வளர்செக்கர்
பைவாய் அந்திப் படஅரவே இன்னா விளைத்துப் பகைத்தியால்
எய்வான் ஒருவன் கையோயான் உயிரும் ஒன்றே இனியில்லை
உய்வானுறவிப்பழிபூணஉன்னோடெனக்குப்பகையுண்டோ. சு௪

பொழிப்புரை :— கருகிய ஆகாயமாகிய நிறத்தையும் மின்னல்கள கிய பற்களையும் காற்றாகிய மூச்சுக்காற்றையும் வளர்ந்துவரும் செக்க வானமாகிய படத்தையும் வாய்ந்துள்ள மாலைக்காலமாகிய (படமுடை பாம்பே) ஸர்ப்பமே ! துன்பம் உண்டாக்கி என்னைப் பகைக்கின்றாயே என்மேல் மலர்க்கணைகளை யெய்து கொண்டிருக்கும் மன்மதனாகிய ஒ வனோ கை ஓயாமல் எய்துகொண்டிருக்கிறான் ; எனக்கு உள்ள உயிரு ஒன்றேதான் ; யான் பிழைத்துய்வதற்குரிய உறவாகிய துணையே வேறில்லை ; இந்தப்பழியைப் பூணுதற்கு உன்னோடு எனக்கு ஏதேனு பகைமையுண்டோ ?

குறிப்புரை :— சீதை மாலைக்காலத்தை நிந்திக்கின்றாள் என்பதாம் மை - கறுப்பு. வான் - ஆகாயம். மின் - மின்னல் ; எயிறு - பல் வாடை - காற்று. உயிர்ப்பு - மூச்சு. செக்கர் - செவ்வானம் ; பை என்றால் படம். அரவு - பாம்பு ; இன்னா - துன்பம். பகைத்தி+ஆல் "ஆல்" - அசை. "தி" - த்+இ = எழுத்துப்பேறும் விகுதியு சேர்ந்து நின்ற ஏவலொருமை விகுதி. உயிரும். "உம்" - மை இழி சிறப்பு ; ஒன்றே - "ஏ" - காரம் தேற்றம். உய்வான் - "வான்" வினையெச்சப்பொருட்டு. உறவு - துணை. பகை - பகைமை. உண்டோ "ஓ" காரம் எதிர்மறை வினாப்பொருட்டு.

ஆலம் உலகில் பரந்ததுவோ ஆழி கிளர்ந்த தோவவர்தம்
நீல நிறத்தை எல்லோரும் நினைக்க அதுவாய் நிரம்பியதோ
காலன் நிறத்தை அஞ்சனத்தில் கலந்து குழைத்தா காயத்தின்
மேலும்நிலத்தும்மெழுகியதோவிளங்கும்இருளாய்விளைந்ததுவே.
௬௭.

பொழிப்புரை:— கருநிறமுடைய விஷம் எழுந்து உலகெங்கும் பரந்து விரிந்து விட்டதோ? அல்லது நீல நிறமுடைய கடலானது பொங்கியெழுந்து மேல் கீழெங்கும் பரந்துவிட்டதோ? அல்லது நான் கண்ட அந்த உயிர்க்குயிராகிய நாயகரது நீல நிறத்தை உலகில் உள்ள யாவரும் (என்னைப்போலவே) பூர்த்தியாக நினைத்திட, உலகெங்கும் அவரது நிறமாகிய நீலநிறமே பரந்துவிட்டதோ? அல்லது கருநிறமுடைய எமனது நிறத்தையெடுத்துக் கரிய மையிற் கலந்து அவ்விரண்டையும் நன்றாய்க்குழைத்து நீலநிறமுடைய ஆகாயத்தின் மேலும் பூமியிலும் எங்கும் மெழுகிப் பூசிவிட்டார்களோ? இப்படி, விளங்குகின்ற இருளாக விளைந்து எங்கும் பரந்து விரிந்து விட்டதே!

குறிப்புரை:— உலக மெங்கும் கரு நிறமாக்கி விளங்கிக்கொண்டு நிறைந்திருக்கும் இருட்டைக்கண்டு, சீதை, வெறுத்துரைக்கின்றாள் என்பதாம். ஆலம் - விஷம். பரத்தல் - விரிதல். ஆழி=கடல்; ஆழமுடையதாகலின் என்க. கிளர்தல் - பொங்கியெழல். அவர் - ஸ்ரீராமன். எல்லாரும் - உலகினரெல்லாரும். அது+ஆய்=அதுவாய் - அந்த நீல நிறமாய் என்றவாறு. நிரம்பல் - நிறைதல். காலன் - எமன்; ஜீவர்க்கு மரணகாலத்தைத் தருபவனாகலின் என்க. அஞ்சனம் - மை. குழைத்தல் - நன்றாய்த் தேய்த்துக் கலத்தல். காயம் - ஆகாயம்: முதற் குறை; இதனை "நாம ஏகதேச நாம க்ரஹணம்" என்பர் வடநூலோர்; இதன் பொருள்:—ஒரு பெயரின் ஏகதேசத்தைக் கொண்டே அந்தப் பெயரினது பூரணத்தையும் அங்கீகரித்தல்; ஆகாசம் - (வடசொல்) எங்கும் பரந்தது என்பது இதன்பொருள்; இது 'ஆகாயம்', என்று தமிழில் திரிந்து, முதற்குறையாகிக் காயம் - என்று நின்றது. மெழுகல் - பூசிடல். விளங்கல் - நிறைதல். "ஓ" காரங்கள் ஐயப்பொருளன. "ஏ" - காரம் - அசை.

வெளிநின்றவரோபோய்மறைந்தார்விலக்கஒருவர்தமைக்காணேன்
எளியள் பெண்ணென் றிரங்காதே எல்லி யாமத் திருளூடே
ஒளியம் பெய்யும் மன்மதனார் உனக்கிம் மாயம் உரைத்தாரோ
அளியென் செய்த தீவினையே அன்றி லாகி வந்தாயோ?　　௬௮.

—௦—

பொழிப்புரை :—ஏழையாகிய நான் செய்துவைத்துள்ள தீவினை யுருவமே! நீ, தான் இந்த அன்றிற்பறவையின் உருவமாக வந்திருக்கிறாய்போலும்; வெளியே நான் காணும்படி நின்ற எனது உயிர்க்குயிரானவரோ, அந்த முனிவர் பின்சென்று மறைந்துவிட்டார்; உன்னை விலக்கியோட்டுதற்கு ஒருவரையும் காணேன்; ஏழையாகிய நான் ஒரு பெண்தானே யென்றும் இரக்கம் காட்டாமல், இந்த இரவின் ஜாமத்திருளினூடே வந்து, ஒளிந்து நின்று என்மேல் மலர்க்கணைகளை எய்து கொண்டிருக்கும் மன்மதன் என்னும் பாவி, என்னையின்னும் வருத்தும் பொருட்டு, கூவிக்கூவி என்னை வருத்துகின்ற அன்றிற் பறவையாகிய உனக்கு இம்மாயச் செயலைச் சொல்லிக் கொடுத்தானோ.

குறிப்புரை : —துணையின் பிரிவாற்றாது கூவிக்கொண்டிருக்கும் அன்றிற் பறவை, தனது பிரிவாகிய துயரத்தை யதிகப்படுத்திக் கொண்டிருத்தலை நினைந்து வருந்திச் சீதை, அந்த அன்றிற்பறவையை நிந்திக்கின்றாள் என்பதாம். வெளி-வெளிப்பிரதேசம். நின்றவர்-ஸ்ரீராமபிரான். தமை - "தம்" - அசை. எளியள் - எளிமையுடையேன்; ஏழையென்றவாறு. இரங்கல் - தயைகாட்டல். எல்லி - இரவு. யாமம் -ஜாமம் என்னும் வடசொற்றிரிபு. ஒளி (யம்பை)யெய்யும் - ஒளிந்து எய்துகொண்டிருக்கும். மன்மதன்+ஆர்—"ஆர்" பலர்பாற் படர்க்கைவினைமுற்று விகுதி; இங்கு மரியாதை யிகழ்ச்சி குறித்து நின்றது. மாயம் - கபடம். அளியென் - கிருபைக்குப் பாத்திரமானேன்; ஏழையென்றவாறு. தீவினை + ஏ—"ஏ" - காரம் விளிவேற்றுமையுருபு. வந்தாய்+ஓ "ஓ" - காரம் ஐயப்பொருட்டு.

ஆண்டங் கனையாள் இனையநினைந் தழுங்கும் வேலை யகல்வானம்
தீண்ட நிமிர்ந்த பெருங்கோயில் சீத மணியின் வேதிகைவாய்
நீண்ட சோதி நெய்விளக்கம் வெய்ய என்றங் கவைநீக்கித்
தூண்டல்செய்பாமணிவிளக்கின்சுடரால்இரவைப்பகல்செய்தார்.

கூகூ

பொழிப்புரை:— அங்கே அத்தகைய காமதாபத்தால் வருந்திக் கொண்டிருக்கும்சீதையானவள், இப்படி, இரவும் மன்மதனும் அன்றிலும் செய்யும் துன்பங்களை நினைந்து வருந்திக்கொண்டிருக்கும்போது, அகன்றுள்ள ஆகாயத்தைத் தொடும்படியாக நீண்டு ஓங்கியுயர்ந்த அந்த அந்தப்புரத்தில் சந்திரகாந்தக்கல்லாற் செய்திருக்கும் திண்ணையின்பேரில் வைக்

கப்பெற்றிருக்கும் நீண்டு விளங்கிக்கொண்டிருக்கும் சோதியையுடைய நெய்விளக்குகள், சீதைக்கு உஷ்ணத்தைத் தருவனவாக இருக்கின்றன என்றெண்ணி, அவ்விடத்திலிருந்து, அந்தவிளக்குகளையப்புறத்தேயொ துக்கிவிட்டுத் தோழிமார், தூண்டுதல் செய்யவேண்டாத பச்சையுயர் மணிகளைவைத்து, அம்மணிகளிலிருந்து பிரதிபலனமாகிவரும் முற் கூறியவிளக்குகளின் சோதியால், அந்த அந்தப்புரத்தில் நிறைந்திருக் கும் இரவைப் (இருளைப்) பகல் (ஒளி) செய்தார்.

குறிப்புரை:—சீதை படும் காமாவஸ்தையைக் கவனித்த தோழிமார் நெய்யூற்றியேற்றிய சோதியையுடைய பொன்விளக்குகள் சந்திரகாந்தக் கல் மேடையின்மேல் வைக்கப்பெற்றிருந்தாலும், அவை, சீதைக்குத் தாபத்தையதிகப்படுத்திக்கொண்டிருக்கின்றன என்பதையுணர்ந்து, அவ் விளக்குகளையவ்வறையினின்றும் மறைத்துவிட்டு, உயர்ந்த பச்சை மணிகளைப் பலவாகக்கொணர்ந்துவைத்து, அவற்றில், விலக்கிவைக்கப் பெற்றிருக்கும் அந்த நெய்விளக்கங்களின் சோதிகள்பட்டுப் பிரதிபலிக்கச் செய்து,அந்தப் பிரதிபலனச்சுடரால், அவ்வறையைப் பிரகாசப்படுத்தினர் என்பதாம். ஆண்டு—அவ்விடம். அனையாள்—சீதை. இனைய—இப்படி. (மேலே குறித்துள்ளபடி) அழுங்கல் — வருந்தல். வேலை — சமயம். தீண்ட—தொட. நிமிர்ந்த - ஓங்கியுயர்ந்த. பெருங்கோயில்—பெருத்த அரண்மனை; பெரிய அந்தப்புரம் என்றபடியாம். சீதமணி—குளிர்ச் சியைத்தரும்மணி; சந்திரகாந்தக்கல் என்பதாம். வேதிகை—திண்ணை; மேடை. வாய்—எழுனுருபு. சோதி (வடசொல்) விளக்கு. விளக்கம்— விளக்கு, "அம்" சாரியை பெற்றுவந்தது. வெய்ய—வெப்பமுடையன; வெம்மை என்னும் பண்பு திரிந்து வெய்ய என்றாயிற்று. தூண்டல் - தூண்டுதல்; செய்யா - செய்யவேண்டாத. மணி - உயர்மணிகள்; மரகத மணிகள் என்றவாறு. சுடர் - பிரதிபலனஜோதி.

பெருந்திண்நெடுமால்வரைநிறுவிப்பிணித்தபாம்பின்மணித்தாம்பா
விரிந்த திவலை பொருந்தமணி விசும்பின் மீனின் மேல்விளங்க [ல்
அருந்த அமரர் கலக்கியநாள் அமுதம் நிறைந்த பொற்கலசம்
இருந்ததிடைவந் தெழுந்ததென எழுந்ததாழிவெண்திங்கள். ௪௦.

பொழிப்புரை:—பெரிய வலிய நீண்டு உயர்ந்த மந்தரகிரியை மத்தாக நிறுத்தி, அம்மலையைச் சுற்றிக் கட்டப்பெற்ற வாசுகியென்னும் பாம்பாகிய அழகிய தாம்புக்கயிற்றைக் கொண்டு கடைந்ததனல், பரந்து

விரிந்த திவலைகளையுடைய கடலிற் பொதிந்து கிடக்கும் பல்வகை மணி
களும், ஆகாயத்திலிருக்கும் பல்வகை நக்ஷத்திரங்களைக்காட்டிலும் மேல
விளங்கும்படியாகத், தாங்கள் அருந்தும் பொருட்டுத் தேவர்கள், ம
லைக் கலக்கிய நாளில், அந்த உயர்ந்த அமுதம் நிறைந்த பொற்கல
அக்கடலில் தங்கியிருந்தது; அஃது, இன்று இடை வந்து இக்கட
லிருந்துஎழுந்துவிட்டதோ என்னும்படியாக, அக்கடலிலிருந்து வெ
ளிய சந்திரன் உதயமாயிற்று.

குறிப்புரை:— இது சந்திரோதயமானதைக் கூறிற்று. பெருவ
திண்மை நெடுமை, முறையே, மலையின் பரப்பையும் உறுதியையும் உய
தையும் குறித்து நின்றன; மால் - பார்த்தற்கு மயக்கம் தருந்தன்மை;
வரை - இருமடியாகு பெயராய் மலையைக்குறித்தது; இங்கு, இது கட
கடைந்த மந்தரமலையாகும். நிறுவல் - நிறுத்தலாம். பிணித்தல் - க
றிக்கட்டல். பாம்பு - ஸர்ப்பம்; வாசுகியாம். மணி - அழகு. தாம்
கயிறு. திவலை - நீர்த்துளி; இஃது ஆகுபெயராய்க் கடலைக் குறித்தது
பொதிதல் - கூடியிருத்தல். மணி - ரத்நம்; கடலுக்கு "ரத்நாகரம்
என்னும் பெயருண்மை மரபின்வந்தது; (இரத்தினங்கட்கிருப்பிடம் என
பது) மீன்+இன் - மீன் = நக்ஷத்திரம்; "இன்" - ஐந்தனுரு
அருந்த - பருக. கலக்கிய - கடைந்த. பொன்+கலசம் - "கலசம்"
(வடமொழி) பாத்திரம். இருந்தது+இடைவந்து+எழுந்தது+என-
எழுந்தது+ஆழி+வெண்திங்கள் — எனப்பிரித்துப் பொருள் கூட்டி
கொள்க. ஆழி - வட்டம் என்னும் பொருள் தருமாயினும், அஃது இ
குப் பொருந்தாமை அறிக.

வண்டாய் அயனுன் மறைபாட மலர்ந்த தொருதா மரைப்போது
பண்டால் இலையின் மிசைக்கிடந்து பாரும் நீரும் பசித்தான்போல்
உண்டான் உந்திக் கமலத்தின் ஓதக் கடலும் தான்வேறோர்
வெண்டாமரையைப்பூத்ததெனஒத்ததாழிவெண்திங்கள். ௭௬

பொழிப்புரை:— பிரமன் வண்டு போலிருந்து நான்கு வேதங்களை
யும் பாடும்படியாக, முன்னம் ஆலின் இலையின் மேலிருந்து கொண்டு
பசித்தவன் போலப் பூமியையும் நீரையும் உண்டு அடக்கினவனுகிய விஷ்
ணுவினுடைய கொப்பூழாகிய தாமரையிலிருந்து ஒரு தாமரைமலர் உதித்
தெழுந்தது; இப்போது, நீருடைய இக்கடலானது, தானும், மற்றோர்
வெண்தாமரையைப் பூத்திருக்கின்றதோ என்று சொல்லற்குரிய தன்
மையை, கடலில் தோன்றியெழுந்த இந்த வெள்ளிய சந்திரன் ஒத்திருந்
தது.

குறிப்புரை :— உதயமான சந்திரன், கடலிற்றோன்றிய ஒரு வெண் தாமரையைப்போலிருந்தான் என்பதாம். வண்டு - தாமரையில் இருந்து (வேதம் ஓதுதலாகிய) ரீங்காரத்தைச்செய்துகொண்டிருத்தலால் என்க. அயன் - பிரமன் ; அஜன் - என்னும் வடசொற்றிரிபு ; பிறப்பிலி என்பது பொருள். நான்கு+மறை=நான்மறை ; மறைந்த (பலரஹஸ்யமான) அர்த்தங்களையுடையது மறை யென்பதாம் ; மறை நான்காவன - ரிக் எஜுஸ் ஸாமம் அதர்வணம் என்பன; வேறும் சொல்வர். பண்டு-முன்னம். பார் - பூமி ; பரந்திருத்தலால் என்க. பசித்தான் போல் - பசி கொண்டவன்போல் என்றும்; பசித்தான் - வினையாலணையும் பெயர். பசி - எதிர்மறையிலக்கணையாய் நின்று பசுமை, நீங்கிய தன்மையைக், குறித்தது ; நிரப்பு, செவ்வாய் முதலியனபோலவா மென்பர். உண்டான் - வினையாலணையும் பெயர் ; உள்ளே வைத்தவன் என்பதும் பொருள். உந்திக்கமலம் - உந்தித்தாமரை - பண்புத்தொகை ; உந்தி - கொப்பூழ் (தொப்பூழ் என்பதுமாம்) கமலம் - வடசொல். ஓதக்கடல் - "ஓதம்" — நீர். வெண்மை+தாமரை=வெண்டாமரை. ஆழி - கடல் வட்டம் என்பன.

புள்ளிக் குறியிட் டெனப்பன்மீன் பூத்த வானம் பொலிகங்குல்
நள்ளிற் செறிந்த இருட்பிழம்பை நக்கி நிமிர்ந்த நிலாக்கற்றை
கிள்ளைக் கிளவிக் கென்னுங்கொல் கீழ்பால்திசையின் மிசைவைத்த
வெள்ளிக்கும்பத்திளங்கமுகின்பாளைபோன்றுவிரிந்துளதால். எஉ.

பொழிப்புரை —வெண்புள்ளிகளாகிய பல அடையாளங்கள் இடப்பெற்றிருக்கின்றன என்று சொல்லும்படியாகப் பல நக்ஷத்திரங்கள் தோன்றியிருக்கின்ற ஆகாயத்தில் நடு இரவில் விரிந்து பரந்து கூடியுள்ள இருட் கூட்டத்தை நக்கி விழுங்கி யோங்கிப் பரந்திருக்கும் நிலவின் கூட்டமானது, கீழ்த்திக்கின்மேல் வைக்கப்பெற்ற வெள்ளிப்பாத்திரத்திலுற்ற இளமையான பாக்குப்பாளை விரிந்ததைப்போல் விரிந்து பரந்தது; இச்செயல், கிளிபோலும் சொல்லையுடைய சீதைக்கு யாதாகுமோ ?

குறிப்புரை :— பாதியிரவில் ஆகாயத்தில் விரிந்து பரந்திருந்த இருளை மெல்ல நக்கி விழுங்கிக்கொண்டே நிலவானது நன்கு விரிந்தது என்பதாம். புள்ளிக்குறி - புள்ளியாகிய அடையாளம். இட்ட+என= இடப்பட்டன என்னும்படியாக. மீன்=நக்ஷத்திரம் ; மின்னுதலால்

என்க ; இது முதனிலை திரிந்த தொழிற்பெயராம். பூத்தல் - தோ றல். பொலிகங்குல் - விளங்கும் இரவு ; நள் - நடு. கங்குல்நள் - என்பவ மொழிமாற்றி, நள்ளிரவு - நடுராத்திரி யெனப்பொருள்கொள்க. செ தல் - மிகுந்து கூடுதல். இருள் + பிழம்பு = இருட் கூட்டம். நக்கல் - விழுங்கலாம். நிமிர்தல் - ஓங்குதல். நிலாக்கற்றை - நிலவின் தொகு கிள்ளை - கிளிப்பிள்ளை. கிளவி - வார்த்தை ; இஃது, இங்கு, அன்மெ ழித்தொகையாய் நின்று சீதையைக்குறித்தது. என் + ஆம் + கொல் - யாது ஆகுமோ ? என்பதாம் ; கொல் - வினாவின்மேல்வினா. கீழ்பா "பால்" + பிரிவு. திசை - திக்கு ; திசா என்னும் வடசொல் ஆவீ ஐயாயிற்று. திசை + இன் + மிசை - "இன்" - சாரியை ; "மிசை" - ஏழனுருபு. கும்பம் - (வடசொல்) பாத்திரம். இளம் + கமுகு - "கமுகு" = பாக்கு ; இளமைவிரியாப்பருவத்தைக்குறித்து நின்றது. பாளை மோத்தை யென்பதாம். ஆல் - அசை. இவ்விரண்டு செய்யுட்களு கிருஷ்ணபக்ஷத்தின் பின்பக்க இரவைக் குறித்தன.

**விரைசெய் கமலப் பெரும்போது விரும்பிப் புகுந்த திருவினொடு**
**குரைசெய்வண்டின்குழாமிரியக்கூம்பிச்சாப்பிக்குவிந்துளதால்**
**உரைசெய் திகிரி தனையுருட்டி ஒருகோல் ஓச்சி உலகாண்ட**
**அரைசன்ஒதுங்கத்தலையெடுத்தகுறும்பர்போன்றதாக்காம்பல்.**

எா

பொழிப்புரை :— மணத்தையுடைய தாமரையாகிய பெருமல னது, சூரியாஸ்தமனத்திற்குப்பிறகு, தனக்குள் விரும்பிப்புகுந்த இல குமி (அழகு)தேவியும் ஒலித்தலைச் செய்கின்ற வண்டின் கூட்டமு பிரிந்தோடும்படியாகச் சந்திரோதயத்தில் இதழ்கள் மூடி வாட்டமடைந் குவிந்து போயது; சந்திரோதயமானவுடன் விரியத்தகும் செவ்வல்லிமல உடனே இதழ்விரிந்து மலரத்தலைப்பட்டது; இஃது எப்படியிருந்த எனில், புகழைத் தருகின்ற ஆணையென்னும் சக்கரத்தை யுலகமெல்லா செல்லும்படியாகச் செய்து ஒப்பற்ற செங்கோலையெங்கும் செலுத் உலகமெல்லாவற்றையும் ஆண்ட ஒரு சக்ரவர்த்தி, வலிகுன்றி மறைந் வுடன், ஒரு சிற்றரசனை குறுநிலமன்னன் தலையெடுத்து நின்ற போன்றிருந்ததாம்.

குறிப்புரை :—சந்திரோதயத்தில் தாமரை மலர் குவிவதும் அல் மலர் விரிவதுமாகிய இயற்கையை இச்செய்யுள் குறித்துளது; அல்

மலர்ந்து நின்ற செயலானது, உலகமெங்கும் ஆணை செலுத்தியாண்ட சக்ரவர்த்தி வலி குறைந்து மறைந்து நிற்கும்போது, "வலியில்லாத குறுநில மன்னனொருவன் தலையெடுத்தாடுதலை"யொத்திருந்தது என்றார். விரை செய்தல்—மணம் தருதல்; "விரை" - மணம். போது - மலர்; குவியும் தருண மாகலின் என்க. திரு - இலக்குமி; அழகென்பதாம். குரை செய்தல் - ஒலித்தல். குழாம் - கூட்டம்; குழு - என்பது சாரியைபெற்றது. இரிதல் - ஓடுதல். கூம்பல் - கூடுதல் (இதழ்) சாம்புதல் - தளர்தல், வாடுதல். குவிந்துளது - "உள்" - துணைவினை. ஆல் - அசை. உரை செய்தல் - புகழாக்கல் அல்லது புகழ்ந்து சொல்லல். திகிரி - ஆஞ்ஞா சக்ரம். தனை - "தன்" - அசை உருட்டல் - செலுத்தல்; "திகிரி" என்னும் பொருட்கேற்ப "உருட்டு" என்னும் வினைகொடுத்தனர். கோலோச்சுதல் - செங்கோல் செலுத்தலாம்; இது கவி மரபு. கொல்வது - கோலாக அரசனது துஷ்ட நிக்ரஹச்செயலைக் குறித்ததுமாம். அரைசன் - எதுகை நோக்கி ஐகாரம் பெற்றது. ஒதுங்கல்-மறைந்துநிற்றல். தலையெடுத்தல் - வெளிப்பட்டு நிமிர்ந்து நிற்றலாம். குறும்பர் - சிறுவர்; குறுமை+சிறுமை; இங்குக் குறுநில மன்னரைக் குறித்தது. அரக்கு - சிவப்பு.

வண்ண மாலைக் கைபரப்பி உலகை வளைந்த இருளெல்லாம்
உண்ண வெண்ணித் தண்மதியத் துதயத் தெழுந்த நிலாக்கற்றை [ப்
விண்ணும் மண்ணும் திசையனைத்தும் விழுங்கிக்கொண்ட விரிநன்னீர்
பண்ணை வெண்ணைச் சடையன்தன் புகழ்போல் எங்கும் பரந்துளதால்
எசு.

பொழிப்புரை :—அழகாகிய மாலைக்காலமாகிய கைகளை விரித்துக் கொண்டு, உலகத்தை வளைத்துக்கொண்டிருக்கும் இருளையெல்லாம் வாரி விழுங்குதற்காக நினைத்து, குளிர்ச்சி பொருந்திய சந்திரோயத்தில் தோன்றியெழுந்த நிலாக்கற்றையானது, கொடை வண்ணத்திற் சிறந்த அழகாகிய கைகளை விரித்து, உலகத்தை வளைத்துக்கொண்டு விரிந்திருக்கும் இருள் போன்ற தரித்திரங்களையெல்லாம் விலக்க நினைத்துக் கருணை பொருந்திய அறிவாளராகிய சடையவள்ளலாரிடம் தோன்றி, சுவர்க்கம் பூமி முதலிய திக்குகள் எல்லாவற்றையும் மறைத்து விரிந்து நின்றுள்ள, விரிந்த நல்ல நீர் மிகுந்த வயற் செல்வத்தையும் மிகுதியாகவுடைய திருவெண்ணெய் நல்லூர்ச் சடையப்ப வள்ளலாரது புகழினைப்போல் எவ்விடத்தும் விரிந்து பரந்து நின்றது.

குறிப்புரை :—ஆகாயத்தில் இருளையெல்லாம் நீக்கிப் பரந்தொ ரி ரும் நிலாக்கூட்டமானது, உலகில் விரிந்திருக்கும் வறுமையையெல்ல ம் நீக்கிப் பரந்து நிற்கும் கொடை வள்ளலாகிய சடைய வள்ளற் டெ ந மாறாத புகழ்போல் எவ்விடத்தும் விரிந்துளது என்பதாம்.

இச்செய்யுளுடன் முன் செய்யுளையும் பின் செய்யுளையும் ஒட ு நோக்கிப் பொருள் கொள்ளின், கவிச்சக்ரவர்த்தியாகிய, நமது கட ப நாட்டாழ்வாரது உள்ளக்கிடக்கை யொளிர்ந்து பெருகக் காணலாம்.

"சூரிய ஒளி குறைந்து சந்திரகலைகள் விரிந்துள தன்மைக விதந்து கூறும் முறையில், உலகு ஒரு குடைக் கீழ்ப் பொதுவற்றிருக்கு படியாகச் செங்கோலோச்சிப் புரந்ததொரு சக்கரவர்த்தியானவன் வ குன்றி மறைந்திடவே, வலியேதும் புகழேதும் திருவேதும் கொடை யேதும் பெற்றிராதொரு குறுநில மன்னன் தலையெடுத்தாடுதலை, இத முன் செய்யுளின், உவமையாகக்கூறிய, நமது கவிச்சக்கரவர்த்தியாகி கம்பநாட்டாழ்வார், உலகை (தென்னுலகை) யொரு கோலோச்சியாண் பல்லவர் வலிகுன்றிக், குறுநிலமன்னராக இருந்திடவே, சிறிது பெரு கத்தையடைந்துத் தலைநிமிர்ந்து நிற்கும் தமிழ்மூவேந்தராகும் சேர சோ பாண்டியர்களின் ஆதிக்கமும் ஓங்கிவிரியாத காலமாகிய - ஒன்பதா நூற்றாண்டின் பிற்பகுதியாகிய தமது வாழ்நாளில், அம்மூவேந்தர்க்கு ஒற்றுமையையும் பலத்தையும் தனத்தையும் கொடுத்து, அவர்கட் அப்போதைக்கப்போது கூட்டப் பெருவிருந்தளித்து அதனால் திரிகர்த் ராயன் என்றும் சிறப்புப்பெயருடன் விளங்கிக்கொண்டிருக்கும், தம பெருங்கொடையாளராகிய - புகழ் கூறற்குரியராகிய - இக்காவிய புகழ்க்குரியாராகிய ஸ்ரீமான் சடையப்பவள்ளலாரையும், அந்த, முன செய்யுளில், உவமப்போலியாற் குறைகூறினதாகுமோ என்னும் துணு கம் கொண்டவாராகி, இச்செய்யுளால், அக்கொடை வள்ளலாகிய சடை யப்பர் புகழினை விரித்து ஓதுகின்றார்போலும் என்பது ஊஹித்துணர தக்கது; இங்ஙனம் புகழ்ந்தவர், பல்லவ மன்னர்களால் தமிழ் மணம் குறைந்து இருளடைந்திருந்த தென்தமிழ்நாட்டின் ஆகாயப்பரப்பை தமது ராமாயணமாகிய காவியப்பெருக்கால், அவ்வள்ளல் புதுப்பித்தன என்னும் உயர் செய்தியையும் இதன்பின் செய்யுளின் உவமப்போலியா விளக்கியிருக்கின்றார் என்பதும் ஊஹித்துணர்ந்து கொள்ளற்பாற்று.'

வண்ணம் - அழகு; கொடைவண்ணம். மாலை - அந்திக்காலம்; மால்+ ஐ=யாரும் மயங்கும் பெருமையுடைய. பரப்புதல் - விரித்தல்; பரவ

செய்தல். இருள் - இருட்டு; வறுமை. உண்ண-விழுங்க; மறைக்க; ஓட்ட. தண்மை + மதியம் - குளிர்ந்த சந்திரன்; இருமை பொருந்திய அறிவாளனுகிய சடையப்ப வள்ளலார்; மதி + அம் - "அம்" சாரியை; மதி + சந்திரன்; அறிவு. தண்மை - குளிர்ச்சி; கருணை. விண், மண் உலகங்களைக் குறித்து நின்றன. திசை - திசா (வடமொழி) விரி + நல் + நீர் = பரந்த நலமாகிய நீர் என்பதாம். பண்ணை - வயல். வெண்ணெய்ச்சடையன் - திருவெண்ணெய் நல்லூர் சடையப்பவள்ளல். பரந்துளது - "உள்" = துணைவினை. ஆல் - அசை.

நீத்தம் அதனின் முளைத்தெழுந்தநெடுவெண்திங் களெனுந்தச்சன்
மீத்தண் கரங்கள் அவைபரப்பி விரிந்த நிலவாம் வெண் சுதையால்
காத்த கண்ணன் மணியுந்திக் கமல நாளத் திடைப்பண்டு
பூத்த அண்டம்பழைய தென்றுபுதுக்குவா னும்போன் றுளதால்.
எரு.

பொழிப்புரை:—கடற்பெருக்கத்தில் தோன்றி வளர்ந்துள நீண்ட வெள்ளியகிரணங்களையுடைய சந்திரன் என்னும் தச்சனுனவன், உலகம் காத்த கண்ணனுகிய திருமாலினது அழகான உந்திக்கமலத்தண்டிலே முன்னர்த்தோன்றிய பூகோளமானது மிகப்பழையதாகி இருளடைந்திருக்கின்ற தென்றெண்ணி, ஆகாயவட்டத்தின்மேல் தனது குளிர்ச்சிபொருந்திய கிரணங்களாகிய கைகளைப்பரப்பி, பரந்தெழுந்தோங்கி நிற்கும் நிலவாகிய வெளிறிய சுண்ணும்புப் பூச்சினுல், அந்த அண்டமுகட்டினைப் புதுப்பிப்பான் போலவும் இருந்தது.

குறிப்புரை:— வானிற்பழைய இருள்நீங்கிப் புதியநிலவு பரந்துள தன்மையானது, அண்டமுகட்டுக்குச் சுண்ணும்பு பூசிப்புதுப்பித்த தன்மையை யொத்திருந்தது என்பதாம். நீத்தம், தச்சன், தண்கரங்கள், வெண்சுதை - இவற்றுக்குமுறையே வயற்பெருக்கம், சடையப்பவள்ளல், கொடைக்கை, புகழ் என்பன பொருளாகக்கொண்டு நோக்கின், உவமப்போலியாக நின்று, முன் செய்யுளில் ஊன்றித்துக்கொண்ட பொருளின் தொடர்ச்சி கிடைத்தலை யுற்றுநோக்கி யுணரலாம்.

நீத்தம் - பெருக்கம்; நீந்து என்னும் வினையடியாகப்பிறந்த தொழிற்பெயராகக் கொள்க. அதனின் - அதன் + இன் "அது + அன்" - சொல்லுருபும் சாரியையுமாம். இன் ஐந்தனுருபாக் கொள்க. தச்சன் - தக்ஷன் என்னும் வடசொற்றிரிபு, அறிவாளன் என்பதுமாம். மீ -

மேலே. தண்கரங்கள் - குளிர்ந்த கிரணங்கள். வெண்மை+சுதை - "சுதை" - சுண்ணும்பு. காத்த - உலகினை வயிற்றுள் அடக்கி மறைத்து வைத்துக் காத்தலைச்செய்த. கண்ணன் - யாவர்க்கும் கண்ணும் கருத்து மாக உள்ளான் - திருமால் என்பதாம்; இக்கருத்தைப் பின்வரு, இக்காண்டத்து, உலாவியற் படலத்து, கூ-ம் செய்யுளாகிய, "வீதிவாய்ச் செல்கின்றான்போல்" என்னும் பாட்டின் மூன்ருவது அடியில், "யானும் உயர்ந்தோர் தன்னை யாவர்க்கும் கண்ணன் என்றே, ஓதிய பெயர்க்குத்தானே உறுபொருள் உணர்த்தி விட்டான்" - என்பதனுற்கொள். மணியுந்தி - "மணி" - அழகு. உந்திக்கமலம் - உந்தித்தாமரை. நாளம் - தண்டு. இடை - ஏழனுருபு. பண்டு - முன். பூத்த - தோற்றிய. அண்டம் - முட்டை; பூகோளம் (உவமை யாகு பெயர்). புதுக்குதல் - புதுப்பித்தல். போன்றுளதால் - "உள்" - துணைவினை; ஆல் அசை.

இதுவரை கூறியுள்ள கூ-செய்யுட்களாகிய சந்திரோதயக்குறிப்புப்பாடுக்களுடன், கூஅ-ம் செய்யுள் இரண்டாமடியின் "எல்லியாமத்திருளுடே" என்றதையும்; கூகூ-ம் செய்யுள் நான்கனடி "சுடராலிரவைப்பகல் செய்தார்" என்றதையும், எஉ-ம் செய்யுள் முதலடி இரண்டனடிகளில் பின்முன்னுள்ள "பொலிகங்குல், நள்ளிற் செறிந்த இருட்பிழம்பை" என்றதையும் ஒட்டிப்பொருள் நோக்கின்; இந்த சந்திரோதயம் அன்றைய இரவின் பிற்பாகத்ததர்மென்பதையும், அது கிருஷ்ணபக்ஷத்ததா மென்பதையும் ஊஹித்துணர்தல் காணலாம்.

நீங்கா மாயை அவர்தமக்கு நிறமே தோற்றுப் புறமேபோய்
ஏங்காக் கிடக்கும் எறிகடற்கும் எனக்கும் கொடியை ஆனுயே
ஓங்கா நின்ற இருளாய்வந் துலகை விழுங்கி மென்மேலும்
வீங்கா நின்ற கருநெருப்பின் இடையே எழுந்த வெண்நெருப்பே
எசு

பொழிப்புரை:—மிகப்பெருக்கத்தை யடைந்து நிற்கின்ற இருளாக உருவெடுத்துக்கொண்டு வந்து இவ்வுலகப் பரப்பையெல்லாம் மூடி விழுங்கிக்கொண்டது மல்லாமல், மேலும் மேலும் பெருத்துக் கொண்டிருக்கும் கரிய நெருப்பாகிய - இரவின் இருளிடையே எழுந்தோங்கிய வெள்ளை நெருப்பாகிய சந்திர நிலவே! தன்னைவிட்டு என்றும் நீக்கமில்லாத மாயை யுடையவராகிய நீல மேக உருவினராம் அந்த மாயவற்கு நிறத்தி

றால் முன்னிற்க மாட்டாமல் தோற்றே இவ்வுலகினுக்கு வெளியே போயிருந்து எப்போதும் ஏங்கிக்கதறிக்கொண்டிருக்கும்-அலைமோது மியல்பினதாகிய கடலுக்கும், அவரைக்கண்டும் ஆசைகொண்டும் அவரையடைய முடியாது ஏங்கிக்கொண்டிருக்கும் எனக்கும் கொடியை யாகிவிட்டாயே.

குறிப்புரை:-சீதை காமதாபத்தால் நொந்து இரவினூடே இருட்டினிடையே தோன்றிப் பெருகிக்கொண்டிருக்கும் நிலா வெளிச்சத்தை நிந்தித்துரைக்கின்றாள். நீங்கா மாயை - "நீங்கா" - ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்; "மாயை" - மாயா என்னும் வடமொழியின் திரிபு; "இல்லாதது; தோற்ற மாத்திரமாயுள்ளது" - என்று பொருள் கூறுவார்; "நிலையற்றது" - என்பது பொருளாம். "யா மா ஸா மாயா" - என்பது வடநூலோர் முடிபு. அவர்தமக்கு - "தம்" - அசை. நிறமே தோற்று - "ஏ" - காரத்தைப்பிரித்துக் கூட்டி "நிறம் தோற்றே" - எனப்பொருள் கொள்க. புறமே - "ஏ" - ஆகிய இரண்டு ஏகாரங்களும் தேற்றப்பொருளன. ஏங்காக்கிடக்கும் - ஏங்கா - செயா எனும் வாய்பாட்டு உடன்பாட்டு வினையெச்சம் கிடத்தல் - தங்கியிருத்தல். எறிகடல் - வினைத்தொகை; எறிதல் அலைகளைக்கரையில் எறிதலாம். கொடியை - கொடுமையுடையாய். ஆனுயே - "ஏ" - காரம் தேற்றப் பொருள். ஓங்கா நின்ற - "ஆ நின்று" - என்னும் இடைநிலை பெற்ற நிகழ்காலப்பெயரெச்சம். வீங்கா+நின்ற - (வீங்கி நிலைத்த) "வீங்கா" - செயா வெனும் வாய்பாட்டு உடன்பாட்டு வினையெச்சம். கருநெருப்பு - இரவு. வெண் நெருப்பு - சந்திரன்; இரண்டும் அவட்கு நெருப்புப்போல் உஷ்ணத்தைத்தந்து தகித்தலால் என்க.

வேறு.

கொடியை அல்லைநீ யாரையும் கொல்கிலாய்
வடுவில் இன்னமு தத்தொடும் வந்தனை
பிடியின் மென்னடைப் பெண்ணொடுடன் றலைச்
சுடுதி யோகடல் தோன்றிய திங்களே. என.

பொழிப்புரை :— குற்றம் யாதுமேயில்லாத இனிய - அமிர்தத்துடன் கடலிலிருந்து பிறந்தனை; ஆதலால் யார்க்கும் கொடியையாக மாட்டாய் நீ; ஏனெனில், மற்றியாரையும் கொன்றன்ன துன்பம் செய்யாய்; அந்தக்கடலில் தோன்றிய பெண்யானையேபோலும் மிருதுவான

நடையையுடைய இலக்குமியென்னும் ஒரு பெண்ணெடும் உதித்தா என்னும் உண்மையிருக்கும்போதும், அந்தக்கடலில் (அந்த சந்திரனே டும் அந்த இலக்குமியோடும்) பிறந்த சந்திரனே ! ஒரு பெண்ணுகிய எ னைத் தகிக்கின்றுயே ! இது கூடுமோ ? என்றவாறு.

குறிப்புரை :—சீதை, தன்னைச்சுடும் நிலவை நிந்திக்கின்றுள் என பதாம்; உன்னுடன் கூடப்பிறந்தவர் இனிமையும் சாந்தமும் உடைய ராயிருக்க, நீ மாத்திரம் ஏன் இத்தகைய கோபத்துடன் உஷ்ண கொண்டு நிற்கின்றுய் என்பதாம். கொடியை - ஐ விகுதியேற்ற மு னிலை யொருமை வினைமுற்று ; கொடுமையுடையாய் என்பது பொரு அல்லை - அன்மை என்னும் எதிர்மறைப் பண்பின் அடியே பிறந்து விகுதியேற்ற முன்னிலை யெதிர்மறை வினைமுற்றுகும். கொல் கிலா கொல்+கு+இல்+ஆய்=எனப்பகுதி சாரியை எதிர்மறைக்குறி மு னிலையொருமைவிகுதி யாகியவை புணர்ந்தது. " மடுவில் இன்னமுத தொடும் " — என்பது பாடாந்தரம் ; மடு - பள்ளம் ; கடல். வடு குற்றம். இனிமை+அமுதம் - இன்னமுதம் ; அமுதம் - அமிர்த (வடசொல்) வந்தனை - ஐ விகுதி முன்னிலை ; அன்+சாரியை ; இறந் கால முன்னிலைவினைமுற்று. பிடி-பெண்யானை. மென்மை+நடை-மெ +நடை - மென்னடை. பெண் - இலக்குமிதேவி. பெண்ணெடு (எ தனை) என்றால் - என்பது முடிபு. சுடுதி - த்+இ எழுத்துப்போலிய முன்னிலை யொருமை விகுதியுமாம். சுடுதியோ — " ஓ " காரம் இ கப்பொருட்டு. திங்கள் - சந்திரன்.

மீது மொய்த்தெழு வெண்ணில வின்கதிர்
மோது மத்திகை மென்முலை மேற்பட
ஓதி மப்பெடை வெங்கனல் உற்றெனப்
போது மொய்த்தம ளிப்புரண் டாளரோ. எ

பொழிப்புரை :— ஆகாயத்தில் நெருங்கியெழுந்திருக்கின்ற வெ ளிய நிலாவின் கிரணங்களாகிய-தன்னை மோதியடிக்கின்ற சம்மட்டிய னது, தனது மெல்லிய கொங்கைகளின்மேற்படவே, பெண் அன்னப னது, கொடிய கனலைச் சேர்ந்து வருந்துதலைப்போல, மலர்கள் நெரு கிய படுக்கையில் வீழ்ந்து புரண்டாள்.

குறிப்புரை :—சந்திர கிரணங்களாகிய சூடு தாங்கப்பெறுமல் சீதை யானவள் மலர்ப்படுக்கையில் வீழ்ந்து புரண்டாள் என்பதாம். மீது

மேலே (ஆகாயத்தில்); மொய்த்து - நெருங்கி. எழுதல் - தோன்றுதல். வெண்மை+நிலவு=வெண்ணிலவு; நிலா - நிலவெனவந்தது; அரா - அரவு என்பது கதிர்மோது மத்திகை - கதிராகிய மோதுகின்ற மத்திகை; மத்திகை - சம்மட்டி. ஓதிமப்பெடை - பெடையோதிமம் - பெண் அன்னம் என்பதாம். வெம்மை+கனல்=வெங்கனல்=உஷ்ண மிகுதியைக் குறித்தது. உற்று+என=உற்றென; "உற்றது" என்பது உற்று எனக் குறைந்து நின்றது. போது - மலரும் தருணமுற்றபூ. மொய்த்த+அமளி – மொய்த்தமளி - விகாரம்.

நீக்கம் இன்றி நிமிர்ந்த நிலாக்கதிர்
தாக்க வெந்து தளர்ந்து சரிந்தனள்
சேக்கை ஆகி மலர்ந்தசெந் தாமரைப்
பூக்கள் பட்டதப் பூவையும் பட்டனள். எசு.

பொழிப்புரை :—நீக்கமில்லாமல் ஓங்கி யெழுந்துள்ள மதியின்நிலவாகிய கிரணங்கள் தாக்கி மோதுதலால் வெந்து தளர்ந்து சாய்ந்தவளாகிய-நாகணவாய்ப் பறவை போன்ற சீதையும், நீக்கமில்லாமல் ஓங்கியெழுந்த பூர்ண சந்திரனின் நிலவாகிய கிரணங்கள் தாக்கி மோதுதலால், (தனக்கு இருப்பிடமாகி மலர்ந்துள்ள) செந்தாமரைப் பூக்கள் பட்டு வாடி வருந்தும் தன்மையைப் போலவே, தானும் பட்டு வருந்தினள்.

குறிப்புரை :—சந்திரோயத்தினால் வருந்திவாடும் சேக்கையாகிய செந்தாமரை மலரைப்போலவே, அந்த செந்தாமரை மலரையிருப்பிடமாகவுடைய இலக்குமி தேவியின் அம்சபூதையாகிய சீதையும் சந்திர கிரணவேகம் தாங்கமாட்டாமல் வருந்தினாள் என்பதாம். நீக்கம் - நீங்கியிருத்தல்; தொழிற் பெயர்; நீங்கு, நீக்கு - தன்வினை பிறவினைப்பகுதிகள். நிலாக் கதிர் - நிலவாகிய கதிர்; நிலவாகிய - தன் கிரணங்களாகிய ; கதிர் - உஷ்ண கிரணங்கள் என்பதுமாம். தாக்க - மோத வேதல் - வெப்பமுறல்; தளர்தல் - வருந்துதல்; சரிதல் - சாய்ந்திடல் சேக்கை - படுக்கை; இருப்பிடமுமாம். செந்தாமரைப்பூக்கள் - இலக்குமி வசிக்கும் சிவந்த தாமரை மலர்கள். பட்டது - வினையாலணையும் பெயர் ; பட்ட தன்மை யென்பதாம்; பட்ட - அடைந்த - பூவை - நாகணவாய்ப்புள்; உவமையாகு பெயராய்ச் சீதையைக் குறித்து நின்றது.

வாசம் மென்கல வைக்களி வாரிமேல்
பூசப் பூசப் புலர்ந்து புழுங்கினள்
வீச வீச வெதும்பினள் மென்முலை
ஆசை நோய்க்கு மருந்துமுண் டாங்கொலோ. ௮௦.

பொழிப்புரை :—மணம் பொருந்திய மிருதுவாகிய களிபோன்ற கலவைச்சாந்தினை வாரி வாரி மேலே பூசப் பூசவும், மேன்மையாகிய கொங்கைகளையுடைய சீதையானவள், கொதிப்பெடுத்த அச்சூடு தாங்கப்பெறாமல், மேனிவெந்து புழுக்கத்தையே யடைந்தாள்; அன்றியும், ஆலவட்டம் கொண்டு வீசவும் வெப்பத்தையே அடைந்தனள்; ஏனெனில் ஒன்றைப்பற்றிய ஆசையால் உற்ற நோய்க்கு, அவ்வாசைப் பொருளை யல்லாமல் வேறுமொரு மருந்துமுண்டோ ? இல்லை யென்றபடி.

குறிப்புரை :—காமதாபத்தையடைந்த சீதை எவ்வகையாற்றலுக்கும் ஆறுதலையடையவில்லையென்பதாம். வாசம் - மணம்; (வடமொழிச் சிதைவு) கலவைக்களி - கலவைச்சாந்தாகிய களி; களி - விழுது என்பதாம். வாரி - எடுத்து; வாருதல் - அள்ளியெடுத்தல். மேல் - மேனிமேல். பூசல் - தடவல். புலர்தல் - உலர்தல் ; புழுங்கல் - வெப்பமடைதல். வீசல் - விசிறிகொண்டு வீசல். வெதும்பல் - வெப்பமடைதல். மென்முலை - பண்புத்தொகையின் புறத்துப்பிறந்த அன்மொழித் தொகை. ஆசை - அன்பின் ஒரு வகைப்பெருக்கம். நோய்க்கு மருந்து - நோய் தீர்க்க மருந்து என்றும். உண்டு+ஆம்+கோல் = “ ஆம் ” - அசை; “ கொல் ”வினாப்பொருட்டு. ஓ - அசை.

தாய ரிற்பரி சேடியர் தாதுகு
வீய ரித்தளிர் மெல்லணை மேனியில்
காயெ ரிக்கரி யக்கரி யக்கொணர்ந்
தாயி ரத்தின் இரட்டி அடுக்கினார். ௮௧.

பொழிப்புரை :— காமதாபத்தையடைந்த சீதைக்காக அமைக்கப்பெற்றிருக்கும் - மகரந்தங்களைக் கக்குகின்ற மலர்களாலும் காம்பரிந்த மெல்லிய தளிர்களாலும் ஆகியுள்ள மென்மையாகிய படுக்கையானது, சீதையின் மேனியிற் காய்கின்ற நெருப்பினிற்கரிந்து போகப்போக, தாய்மாரைக்காட்டிலும் பரிந்து உதவி செய்து கொண்டிருக்கும் தோழிமார்கள் அம்மலர்களையும் அத்தளிர்களையும் இரண்டாயிரக்கணக்கிற்கு மேல்கொண்டு வந்து அடுக்கினார்கள்.

குறிப்புரை:-காமதாபத்தினால் வெப்பமடைந்த சீதைமேனியின் தாபத்தினால், அவளது அணையின் மலர்களும் தளிர்களும் கரிந்து போகவே, தோழிகள் மேலும் கொணர்ந்து அடுக்கிக்கொண்டிருந்தனர் என்பதாம். தாயரில்—தாய்மாரைக்காட்டிலும்; இல்—ஐந்தனுருபு; தாய்மார்—செவிலித்தாய்மார். பரிதல்—விரும்புதல்; விருப்பமுடன் தொழில் செய்தல் என்பதாம். சேடி—தோழி (வடமொழி) தாது + உகு + வீ = மகரந்தம் + உதிர்க்கின்ற + மலர். அரி + தளிர் = கொழுந்தாகிச் செந்நிறமுற்ற தளிர். மெல் + அணை = மிருதுவாகிய படுக்கை. காய் + எரி = வினைத்தொகை = காய்கின்ற நெருப்பு. ஆயிரத்தின் இரட்டி = இரண்டாயிரம்; (மிகுதி) அடுக்குதல்—மேலும்மேலும் கொட்டுதல்.

கன்னி நன்னகர் நற்கமழ் சேக்கையுள்
அன்னம் இன்னணம் ஆயினள் ஆயவள்
மின்னின் மின்னிய மேனிகண் டானெனச்
சொன்ன அண்ணலுக் குற்றது சொல்லுவாம். அஉ.

பொழிப்புரை:—கன்னிமாடத்திலுற்ற மலர்ப்படுக்கையிலே, அன்னம் போன்ற சீதை இப்படியாயிருந்தனள்; அந்த சீதையினுடைய மின்னலைப் போன்ற வடிவழகைக் கண்டார் என்று நாம் முன்னே சொன்ன பெருமை பொருந்திய ஸ்ரீராமபிராற்குற்ற காமதாபத்தைப் (செய்தியைப்) பற்றியும் சொல்ல ஆரம்பிப்போம்.

குறிப்புரை:—இதுவரையில் சீதையின் விரகதாபத்தைப் பற்றிக் கூறிவந்த கவி, இனி,ஸ்ரீராமபிரானது செய்தியையும் சொல்ல ஆரம்பித்துளார் என்பதாம். கன்னி நல் நகர் - அழகிய கன்னிமாடம். கமழ்+சேக்கை - மலர் மணத்தால் வாசனையுடைய படுக்கை. உள் - ஏழனுருபு. அன்னம் - உவமையாகு பெயராய்ச் சீதையைக் குறித்தது. இன்னணம் - இப்படி. ஆயவள் - ஆய+அவள்; மின்+இன் - "இல்"-உவமையுருபு. மின்னிய - பிரகாசித்த. மேனி - வடிவு. சொன்ன - நாம் முன்னே சொல்லிய. அண்ணல் - ஸ்ரீராமன்; பெருமையுடையோன். உற்றது - உற்ற தன்மை.

ஏகி மன்னனைக் கண்டெதிர் கொண்டவன்
ஓகை யோடும் இனிதுகொண் டுய்த்திடப்
போக பூமியிற் பொன்னகர் அன்னதோர்
மாக மாடத் தனைவரும் வைகினர். அங.

பொழிப்புரை :—மிதிலை நகர்க்குள் விசுவாமித்திரர் முதலிய மூவ ரும் சென்று, அந்நகராதிபனாகிய ஜனகராஜனைக்கண்டு, அந்த மன்னவன் தங்களைத் தக்க பரிவாரங்களோடும் மனக்களிப்போடும் எதிர்கொண் டழைத்து இனிமையில் வரவேற்றுக் கூடவே அழைத்துச் சென்றிட, போகபூமியாகிய சுவர்க்கலோகத்திலுள்ள அமராபுரிக்குச் சமானமாகிய உயர்ந்ததொரு மாடத்தில் எல்லோரும் சேர்ந்தார்கள்.

குறிப்புரை:—விசுவாமித்திரர் ஸ்ரீராமன் இலக்குவன் ஆகிய மூவரும் மற்றும் பலமுனிவர்களுடன் மிதிலைக்குள் வந்துள்ளார்கள் என்று தெரிந்த அந்நகர்க்கதிபனாகிய ஜனகமன்னன் தக்க பரிவாரங்களுடன் அவர்களை யழைத்து வந்து ஒரு மண்டபத்தில் தங்க வைத்தான் என்ப தாம். இப்படலத்தின் ௩௧-வது செய்யுளின் நான்கனடியிற் குறித் துள்ள "மைந்தனும் முனியொடு மறையப் போயினன்"—என்பத னுடன் கூட்டி, இச்செய்யுளின் முதற்பதமாகிய "ஏகி" என்பதற்குப் பொருள்செய்துகொள்க. ஏகல் - செல்லல். மன்னன் - ஜனக மன் னன். அவன் - என்பதும் அதுவே. எதிர்கொண்டு - எதிரே தக்க பரிவாரங்களைக் கொண்டு, ஓகை - உவகை யென்பதின் திரிபு; சந்தோ ஷம் என்பது பொருள். கொண்டு உய்த்திட - அழைத்துக்கொண்டு செலுத்திட; உய்த்து+இட+"உய்த்தல்" - செலுத்தல்; இடு+அ= "இடு" - துணைவினை. போகபூமி - போகந்தரும் உலகு; சுவர்க்கபூமி; போகம் - இன்பம் (வடசொல்) மனித்த உலகத்தவர் செய்து வைத்திரு க்கும் தவத்துக்குத் தக்க இன்பம் தரும் பூமி என்பது மரபு; போக பூமி - வடசொற்றொடர். பொன்+நகர்=பொன்மயமான பட்டணம்; அமராவதி என்பது மரபு; இந்திரனது தலைநகர். அன்னது - போன் றது. மாகம் - உயர்வு. மாடம் - மண்டபம்; அரண்மனை யென்று மாம். வைகல் - தங்கியிருத்தல்.

வைகும் அவ்வழி மாதவம் யாவுமோர்
செய்கை கொண்டு நடந்தெனத் தீதறு
மொய்கொள் வீரன் முளரியந் தாளினல்
மெய்கொள் நங்கை அருள்முனி மேவினன். ௮௪.

பொழிப்புரை :—அப்படித் தங்கியிருக்கும்போது, தம்மை நினைப் போரது தீங்குகளையெல்லாம் அறுத்தெறியும் விசேஷ தர்மத்தைக் கொண்டுள்ள ஸ்ரீராமபிரானது செந்தாமரை போலும் அழகிய கால்

களின் பரிசத்தால் கல்லுரு நீங்கி நல்லுருப் பெற்றவளாகிய அகலிகை என்னும் நங்கை பெற்ற முனிவராகிய சதாநந்தர், மகாதவங்கள் எல்லாம் ஓர் உருவெடுத்துக் கொண்டு நடந்து வரல்போல் வந்து சேர்ந்தனர்.

குறிப்புரை :—இவர்கள் இருந்த அம்மண்டபத்துக்கு, அந்த ஜனக மன்னவரது ஆஸ்தான குருவாகிய - அகலிகை புத்திரராகிய சதாநந்தர் வந்து சேர்ந்தனர் என்பதாம். அவ்வழி - அவ்விடம்; வழி - இடம். மாதவம் - மஹாதபம் என்னும் வடமொழித் தொடர்த்திரிபு. செய்கை - உருவம் ; செய்யப்பட்டது என்பது பொருள். நடந்தது+என; நடந்தென என்றாயது விகாரம், தீதினையறுக்கும் மொய்=தீதற மொய் : " மொய் " - பலம்; இராமனது அவதார தர்மத்தின் விசேஷ பலத்தைக் குறித்து நின்றது; ஸ்ரீராமாவதாரத்தில், பிதுர்வாக்ய மாதுர்வாக்ய பரிபாலனங்களும் துஷ்டநிக்ரஹ சிஷ்டபரிபாலனங்களும் ஸாமான்ய தர்மங்களாகவும், சாபவிமோசனங்களும் மோக்ஷப்பிரதானங்களும் விசேஷ தர்மங்களாகவும் காணப்படலாமென்க. வீரன் - இராமன். முளரி - முள்+அரி=முள்ளான தண்டுகளுடையது; தாமரை யென்பதாம். அம்+தாள்=அழகிய பாதம். தாளினன் - இராமன். மெய்கொள் நங்கை - உருவுகொண்ட பெண்ணாகிய அகலிகையென்பதாம்; மெய்= உருவு. நங்கை யென்பதற்கு நம்பியென்பது ஆண்பாற் பெயர். அருள்= பெற்றவளாத்தருளிய. முனி - சதானந்தர்; மாநசீலர் என்றும் பற்றற்றவர் என்றும் பொருளாம்.

வந்தெ திர்ந்த முனிவனை வள்ளலும்
சிந்தை யார வணங்கலும் சென்றெதிர்
அந்தம் இல்குணத் தாவெடி தாசிகள்
தந்து கோசிகன் தன்மருங் கெய்தினன். அ௫.

பொழிப்புரை :— எதிரே வந்து சேர்ந்தவராகிய சதானந்த முனிவரை வள்ளலாகிய ஸ்ரீராமபிரானும் மனம் பொருந்த வணங்கி நிற்றலும், முடிவில்லாத குணத்தினராகிய அம்முனிவர் சதானந்தர் எதிரே சென்று நீண்ட ஆசீர்வசனங்கள் செய்து போற்றிப்பின்னர் கௌசிக மாமுனிவரது பக்கலுக்குச் சென்று சேர்ந்தனர்.

குறிப்புரை :— வந்து சேர்ந்த சதானந்தரை ஸ்ரீராமபிரான் வணங்கியாசீர்வாதங்கள் பெற்றுக்கொள்ள விசுவாமித்திரரிடம் சென்றார் என்பதாம். " வந்து எதிர்ந்த " — என்பதை " எதிர்வந்த " என்று மாற்

றிப்பொருள் கொள்க. முனிவன் - சதானந்தர். வள்ளல் - தியா ; சக்கரவர்த்தியென்றுமாம். சிந்தை - மனம். ஆர - பொருந்த. ள் ளாலும் - " உம் " - உயர்வு சிறப்பு. அந்தம் - முடிவு; (வடமொ ழி) இல் - இல்லாத; குணத்தான் - குணமுடையான் ; சதானந்தமு னி. ஆசிகள்-ஆசீர்வசனங்கள் ; ஆசிகள் தந்து-" தந்து "=செய்து கொடு; து என்பதாம். கௌசிகன் என்பது கோசிகன் என மருவியது ; கௌ 'க முனிவர் ; விசுவாமித்திரர் என்பதாம். மருங்கு - சமீபம். எய்தினு - சென்று சேர்ந்தான்.

கோத மன்தரு கோமுனி கோசிக
மாத வன்தனை மாமுகம் நோக்கியிப்
போது நீயிவண் போதவிப் பூதலம்
ஏது செய்த தவமென் றியம்பினான். அ .

பொழிப்புரை:—கௌதம மஹரிஷியின் புத்திரனாகி முனிவர்கட் அரசனாகவுள்ள சதானந்த முனி, கௌசிக முனிவராகிய மகாதவத் னரை அழகிய முகம்பார்த்து, இவ்வமயம் தாங்கள் இந்நகர்க்கு எழு ருளும்படியாக இந்நகரம் எத்தவத்தைச் செய்துள்ளதோ என்று உ சாரவார்த்தைகள் சொன்னார்.

குறிப்புரை :—சதானந்தர் விசுவாமித்திரரை வார்த்தைகளா உபசரித்தார் என்பதாம். கௌதமன் - என்பது கோதமன் என விகாரம் பெற்றது. தருதல் - பெறல். கோமுனி - மொழிமாற் முனிவர்க்கரசன் என்று பொருள் கொள்ளப்பெற்றது. கௌசிகன் என்பது கோசிகன் என்று விகாரம் பெற்றது; குசிக வம்சத்தினன என்பதாம். மஹாதப வடசொல் - மாதவன் எனத்திரிந்தது. தனை " தன் " - அசை. மா+முகம்=" மா " - அழகிய; முகம் - வட மொழி. இவண் - இவ்விடம். போத - வர; போது - பகுதி (வா என்பது பொருள்) பூதலம் - என்பது பொருளிற் குறுகி, மிதிலைநகரத் தைக்குறித்தது. செய்தவம் ஏது ? எனக் கூட்டுக.

பூந்தண் சேக்கைப் புனிதனை யேபொரு
வேய்ந்த கேண்மைச் சதானந்தன் என்றெனும்
வாய்ந்த மாதவன் மாமுகம் நோக்கிநூல்
தோய்ந்த சிந்தைக் கௌசிகன் சொல்லுவான். அள.

பொழிப்புரை :—குளிர்ந்த மலராசனத்தையுடைய பரிசுத்தனாகிய பிரமனுக்கு ஒப்புமை பொருந்திய உலகப் பொதுநட்பிற் சிறந்த சதானந்தன் என்று புகழப்படுபவராகிய தெளிந்த மாதவத்தையுடையவரது அழகிய முகத்தைப்பார்த்து, பல நூலாராய்ச்சியிற் றேர்ந்து பழகிய மனமுடைய கௌசிக மாமுனிவர் சொல்லலுற்றார்.

குறிப்புரை:— தெளிந்த மாதவத்தையுடைய சதானந்தரைப் பார்த்து நூலாராய்ச்சியிற் சிறந்த விசுவாமித்திரர் சொல்லவாரம்பித்தார் என்பதாம். பூம்+தண் +சேக்கை —"என்பதை மொழிமாற்றித்" "தண் பூச் சேக்கை" எனக் கூட்டிப் பொருள்கொள்க. சேக்கை—ஆசனம். புனிதன்—பிரமன்; பரிசுத்தன் என்பதாம். புனிதனையே - "ஏ" காரம் தேற்றம். பொருவு ஏய்ந்த - சமானம் பொருந்திய; கேண்மை - நட்பு. சதானந்தன் என்று எனும் - "எனும்"—சொல்லப்படுகிற என்பதாம். என்று எனும் - என்று சொல்லப்படுகிற. வாய்ந்த - வாய்ப்புடைய; தவம் பலித்த என்பதாம். மாதவன் - சதானந்தன். நூல்+தோய்ந்த=நூறோய்ந்த; நூல்களில் ஆழ்ந்து பழகிய என்பதாம்.

வடித்த மாதவ கேட்டியிவ் வள்ளல்தான்
இடித்த வெங்குரல் தாடகை யாக்கையும்
அடுத்தென் வேள்வியு நின்னன்னை சாபமும்
முடித்தென் னெஞ்சத் திடர்முடித் தானென்றான். அஅ.

பொழிப்புரை :—தெளிந்து வாய்ப்புப் பெற்ற மகாதவத்தையுடைய சதானந்தரே! கேளும்; "இந்த வள்ளலாகிய ஸ்ரீராமபிரான், இடிபோற் கர்ஜித்த கொடுங் குரலுடையவளாயிருந்த அந்தத் தாடகையின் சரீரத்தையும், பின்னர் நீண்ட நாட்களாக ஆரம்பித்து எதிர்பார்த்திருந்த எனது யாகத்தையும், அடுத்தவுடன் உனது தாயாகிய அகல்யையின் சாபத்தையும் முறையே முடித்து, அம் மூன்றாலும் பொருந்திக் கிடந்த எனது மனத்துயரத்தைப் போக்கி விட்டான்" எனச் சொன்னார்.

குறிப்புரை .—சதானந்தரே! எனது மனத்திலிருந்த துயரமானது மூன்றுபடிப்பட்டதாக இருந்தது ; ஒன்று - என் தேசத்தைப்பற்றியதாயும், மற்றொன்று என்-ஜாதியைப்பற்றியதாயும், இன்னொன்று என்னைப்பற்றியதாயும் இருந்தன ; தேசத்தைப்பற்றியதென்பது - என்

தேசத்துப்ரஜைகள் தாடகை யென்னும் பேரரக்கியால் தினந்தினம் மடிந்து வருகின்றார்களே என்பது ஆகும்; என் ஜாதியைப்பற்றிய தென்பது - என் ஜாதியாகிய தவத்தினர் கூட்டத்துக்கே ஓர் களங்கத் தைத்தரக்கூடிய படியான பாபத்தையும் சாபத்தையும்பெற்றுக் கல் லாய்க்கிடந்த உனது தாய் அகலியைப்பற்றியது ஆகும்; என்னைப்பற் றியதென்பது - எனது ஆத்ம ப்ரயோஜனமாக நான் ஆரம்பித்திருந்த யாகமானது முடிவு பெறாமல் தாடகை சுபாகு மாரீசர்களாற் கலக்க மடைந்து வந்துள்ளதே என்பதாகும் ஆக இம் மூன்று; துயரங்களை யும், இந்த தியாகியாகிய ஸ்ரீராமபிரான், தாடகையைத் தனது வாளால் உயிரையழித்து முடித்ததாலும், உன் தாயின் சாபத்தினையும் பாபத்தி னையும் தனது தாளால் துடைத்துத் தீர்த்ததாலும், என் யாகத்தைத் தனது குலத்துக்கேற்ற பலத்தாற் காத்து சுபாகு மாரீசர்களை கொன்றுவென்று ரக்ஷித்து முடித்துக் கொடுத்ததாலும் நீக்கியருளினான் என்றார் என்பதாம். வடித்தல் - தெளியப்பெறுதல்; வாய்ப்புப் பெறல் என்பதாம். கேட்டி - கேள்+தி . "தி" - த்+இ என எழுத்துப் பேறும் முன்னிலை விகுதியும் பெற்று நின்றது. வள்ளல் - தியாகி, சக்ர வர்த்தியென்றுமாம். தான் - அசை. இடித்த - கர்ஜித்த - வெம்மை+ குரல் - "வெம்மை" - கொடுமை. யாக்கை - உடல்; எலும்பு, நரம்பு, நிணம், ஊன், தசை முதலானவற்றாற் கட்டப்பெற்றது என்பதாம்; யாத்தல் - கட்டல்; யா - கட்டு (பகுதி) அடுத்து - அடுத்தபடி; பிறகு என்பதாம். வேள்வி - யாகம்; வேள் - பகுதி. சாபம் - (வடசொல்) அழிவெய்தும் கடுஞ்சொல். முடித்தல் - முறையே "ஒழித்தல்" "நிறை வேற்றல்" "நீக்கல்" எனும் பொருள்களைத்தந்து நின்றது. நெஞ்சம் - மனது. இடர் - துன்பம். முடித்தல் - தீர்த்தல்.

என்று கோசிகன் கூறிட ஈறிலா
வன்த போதனன் மாதவ நின்னருள்
இன்று தானுள தேலிரி தியாதிந்த
வென்றி வீரர்க் கெனவும் விளம்பிமேல். அகூ.

பொழிப்புரை:— என்றிப்படிக் கௌசிகமாமுனிவர் சொல்லிடவே, முடிவில்லாத கடுந்தவச் செயலையே தனமாகவுடையவராகிய சாதனந்தர், விசுவாமித்திரரைப்பார்த்து, "ஏ! மாதவரே!! இப்போது தங்களது பூர்ண கிருபையானது இந்த வெற்றி பொருந்திய வீரர்களாகிய ராஜகுமா

ரர்கட்குக் கிடைக்கப்பெற்றதால், இதை விட அருமையான காரியம் யாதிருக்கின்றது என்று சொல்லி மேலும்.

குறிப்புரை :— அதற்குப் பதிலாக சதானந்தர் விசுவாமித்திரரைப் பார்த்துக் "கௌசிகரே! உனது அருள் பெற்ற இந்த ராஜகுமாரர்கட்கு அரியகாரிங்களாக என்ன இருக்கப்போகின்றன?" என்றார் என்பதாம். கோசிகன் - கௌசிகன். ஈறு+இலா = முடிவில்லாத; இலா - ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். வன்மை+தபம்+தனம் = வலிய தவமேபொருள்; இதனையுடையான் வன் தபோ தனன்; தபோதனன் - (வடசொற்றொடர்.) இன்று - இக்காலம் என்பதாம். தான் - அசை. உளதேல் - இருக்குமானால்; உளது+எல். அரிது+யாது=அரிதியாது; குற்றியலிகரம். விளம்பி - சொல்லி.

எள்ளில் பூவையும் இந்திர நீலமும்
அள்ளல் வேலையும் அம்புத சாலமும்
விள்ளும் வீயுடைப் பானலும் போன்றமெய்
வள்ளல் தன்னை மதிமுகம் நோக்கியே. ௬௦.

பொழிப்புரை:-இகழ்ச்சியில்லாத காயாம்பூவையும் இந்திர நீலமணியையும் சேறுடைய கடலையும் மேகக்கூட்டத்தையும் மலர்ந்த பூவினையுடைய கருநெய்தலையும் போன்ற சரீரத்தைப் பெற்ற தியாகியாகிய ஸ்ரீராமபிரானது முகத்தைப்பார்த்து,

குறிப்புரை :— சதானந்தர், மேலும், ஸ்ரீராமபிரானைப் பார்த்துச் சொல்கிறார் என்பதாம். இச்செய்யுள் முன்பின் இரண்டு செய்யுள்களுடனும் தொடர்புடையது. எள்+இல் - இகழ்ச்சியில்லாத. பூவை - காயாமலர். இந்திர நீலம் - (வடமொழி) இந்திர நீலக்கல்; ஓர் உயர் வகை மணி. அள்ளல் - சேறு. வேலை - கடல்; வேலா என்பது கரையை யுணர்த்தும் வடசொல்; எதிர்மறை யிலக்கணையாகிக் கடலைக்குறித்து நின்றது. அம்புத+சாலம் - (வடசொற்றொடர்த்திரிபு) "அம்புதம்" - மேகம்; "சாலம்" கூட்டம்; அம்பு+தம்-ஜலத்தைக்கொள்வது; ஜாலம் சாலம்ஆயிற்று. விள்ளல்-விரியல், மலரல். வீ-மலர். பானல்- கருநெய்தல்; வள்ளல் - இராமன். இவ்வுவமைகளெல்லாம் ஸ்ரீராமபிரானது மேனியின் நிறத்துக்குக் குறிக்கப்பட்டுள்ளன வாயினும், இவை, மேலும், முறையே அழகின்தொகுதிக்கும், விலைமதிக்கப்பெறாத ஒளிக்கும் கனத்

துக்கும், பரப்புக்கும் ஜடஜீவத்தோற்றத்துக்கும், தண்மைக்கும் கருணை க்கும், மலர்ச்சிக்கும் மென்மைக்கும் உவமானங்களாகவும் நின்றிருக்கி றன.

நறுமலர்த்தொடை நாயக நானுனக்
கறிவுறுத்துவன் கேளிவ் வருந்தவன்
இறையெனப்புவிக் கீறில்பல் யாண்டெலாம்
முறையினிற்புரந் தேயருண் முற்றினன். கூ.

பொழிப்புரை:—மணம் பொருந்திய மலர் மாலையையுடைய நாயக ஸ்ரீராமா!! நான் உனக்குச் சொல்லுவேன்; கேட்பாயாக!!! இந் அரும் பெருந்தவத்தினையுடையவராகிய விசுவாமித்திரர், முடிவில்லா பலவருஷகாலங்கள் இவ்வுலகினுக்கு அரசராக இருந்து, நன்கு அர புரிந்து காத்து அருள் நிரம்பினர்.

குறிப்புரை:— ஸ்ரீராமா! நான் இவரைப்பற்றிச் சொல்லும் சரி திரத்தைக்கேட்பாயாக!! இந்த விசுவாமித்திர முனிவர், முன்னர்ப்ப வருஷகாலங்கள் செங்கோன்மை முறையில் உலகையாண்டு காத்துவந் கௌசிகராஜராகும்; உலகையாண்டு கருணை முதிர்ந்தவராகும் நறுமை - மணம். தொடை - மாலை; தொடுக்கப்பட்டதென்பது நாயக - தலைவ; இறைவ. அறிவு உறுத்தவன் - சொல்லுவேன்; அன் விகுதி - தன்மை யொருமை யுணர்த்திற்று. இறை - தலைவன் இறைமை பெறலால்; இறை - வரி; இறுக்கப்படலால் என்க. புவி (வடமொழி) பூமி. யாண்டு — வருஷம். முறை - செங்கோன் முறை புரத்தல் - காத்தல். அருள் முற்றல் - கருணை முதிர்தல்.

அரசின் வைகி அறனின் அமைந்துழி
விரசு கானிடைச் சென்றனன் வேட்டைமேல்
உரைசெய் மாதவத் தோங்கு வசிட்டனைப்
பரசு வானவன் பாலணைந் தானரோ. கூஉ.

பொழிப்புரை:— அரசாட்சியிலிருந்து தர்மத்துடன் பொருந்தியி ருந்தபோது வேட்டை நிமித்தமாக மரங்கள் நெருங்கிய காட்டிற்குச் சென்றவராகி, புகழ்பெற்ற பெருந்தவத்திற் சிறந்தோங்கியவராகிய வசிஷ்ட மகரிஷியை வணங்கும் பொருட்டு, அம்முனிவர் தங்கியிருக்கும் ஆச்ரமத்தினுட்போய்ச் சேர்ந்தார்.

குறிப்புரை :— இந்தக் கௌசிகராஜன், செங்கோல் செலுத்தித் தருமம் தவறாது நடத்திக் கொண்டிருந்தபோது, ஒரு நாள், வேட்டை நிமித்தம் கானகஞ்சென்று, வஸிஷ்டரிஷியின் ஆச்ரமம் புகுந்து, அவரை வணங்கித்துதித்தற் பொருட்டு, அவரிடம் சென்றார். அரசு-அரசாட்சி. வைகல் - தங்கல். அறன் - அறம் என்பதன் கடைப்போலி. உழி - வினையெச்சப் பொருட்டு. விரசுதல் - நெருங்கல். வேட்டை - வேள் - பகுதி; விரும்பல் என்பது பொருள். உரைசெய்தல் - புகழ்தல். பரசுவான் - வணங்குதற் பொருட்டு ; "வான்" - வினையெச்ச விகுதி. அவன்பால் - அவனிடம் ; "பால்" - ஏழனுருபு ; இடத்தில் என்று பொருள். அர் ஓ=அசைகள்.

வேறு.

அருந்ததி கணவன் வேந்தற் கருங்கடன் முறையின் ஆற்றி
இருந்தருள் தருதி என்ன இருந்துழி இனிது நிற்கு
விருந்தினி அமைப்பன் என்னாச் சுரபியை விளித்து நீயே
சுரந்தருள் அமிர்தம் என்ன அருள்முறை சுரந்த தன்றே. சுகூ.

பொழிப்புரை :— அருந்ததி என்னும் உத்தம பத்தினிக்குக் கணவராகிய அந்த வஸிஷ்ட முனிவர், தமது ஆச்ரமத்தை யடைந்தவராகிய கௌசிகராஜனுக்குச் செய்யவேண்டிய உபசாரங்களெல்லாம் கிரமமாகப் பத்தினியுடன் கூடிச்செய்து முடித்து, இங்கு இன்று தங்கியிருத்தல் வேண்டுமென்று சொல்லவே, இந்த மன்னவராகிய கௌசிகரும் தனது பரிவாரங்களுடன் அவ்வாச்ரமத்திலிருந்தபோது, பின்னரும் வஸிஷ்டர் கௌசிகராஜனைப்பார்த்து, "இன்று உமக்கு இனிமையாகிய விருந்து அமைக்கின்றேன்" என்று சொல்லி, தெய்வப் பொதுப்பசுவாகிய காமதேனுவென்னும் சுரபியை அழைத்துச், சுரபியே! நீ இன்று இவர்கட்கு இனிய அமிர்தத்தைப் பெருக்கித் தந்தருள்வாய் என்று சொல்ல, உடனே அதுவும் கிருபையுடன் முறையாக அமுதத்தைச் சுரந்து கொடுத்தது.

குறிப்புரை :— வஸிஷ்டர் கௌசிகராஜருக்குத் தமது அரிய பத்தினியாகிய அருந்ததியுடன் உபசாரமியற்றித் தெய்வப் பசுவாகிய காமதேனுவைக்கொண்டு, இனிய விருந்தும் அளித்தனர் என்பதாம். விருந்தோம்பல் மனைவியுடனிருந்து செய்யவேண்டுதல் விதியாகலின், அக்குறிப்புணர்த்துவான், கவி, "அருந்ததி கணவன்" — எனக்குறித்து

ளார். அருமை+கடன் — " கடன் " — கடமையென்பதன் விகாரம். முறை - கிரமம். ஆற்றல் - செய்யல். இருந்தருள்தருதி - இருதியென்பதாம்; " அருள்தா " - என்பது துணைவினை. என்ன என்றுசொல்ல. இருந்துழி - இருந்தபோது - " உழி " - வினையெச்சப்பொருட்டு. நிற்கு - நின்+கு - அகரச்சாரியை யின்றியே வந்தது " இனி அமைப்பன் விருந்து என்று " — எனமுடிக்க. அமைப்பன் ' அன் " - விகுதி தன்மையொருமை யுணர்த்திற்று. என்று - என்று சொல்லி; " ஆ " - காரம் விகாரத்தில்வந்தது. சுரபி - (வட சொல் காமதேனு; தெய்வப்பசு. விளித்தல் - அழைத்தல். நீயே - " ஏ " காரம் தேற்றம். சுரந்தருள் - சுரந்து கொடு. அமிர்தம் - உணவு என்ன - என்று சொல்ல. அருளினால் அது முறையே சுரந் (துகொடுத் தது.

அறுசுவைத் தாய உண்டி அரசநின் அனிகத் தோடும்
பெறுகென அளித்து வேந்தோ டியாவரு ந் துய்த்த பின்றை
நறுமலர்த் தாரும் வாசக் கலவையும் நல்க லோடும்
உறுதுயர் தணிந்துமன்னன் உய்த்துணர்ந்துரைக்கலுற்றான். ருச.

பொழிப்புரை :—அரசே! உனது சேனையோடும் அறுசுவையுடன் கூடிய உணவைப் பெறுவாய் என்று சொல்லி, விருந்தளித்து, அந்த அரசனோடு யாவரும் உண்டபிறகு, நல்ல மணம் பொருந்திய மலர்களும் மாலைகளும் பரிமளம் மிகுந்துள கலவைச் சாந்துகளும் கொடுத்திடவே, கௌசிக மன்னன், வேட்டையாடலில் நேர்ந்த துன்பம் நீங்கிப் பின்னர் ஆலோசித்தறிந்து சொல்ல வாரம்பித்தான்.

குறிப்புரை :—வசிஷ்ட ரிஷியினது வேண்டுகோளுக்கிணங்கித் தெய்வப்பசுவாகிய காமதேனு அளித்த அறுசுவை யுணவையும் கௌசிக ராஜன் தனது பரிவாரங்களுடன் உண்டு வேட்டையாடிவந்த களைப்பு நீங்கிய பின்னர், ஆலோசித்து ஒரு வார்த்தை சொல்லலுற்றார் என்பதாம். அறு சுவை உண்டி - ஆறு சுவையுடன் கூடிய ஆகாரம்; ஆறுசுவை யாவன:-உவர்ப்பு காழ்ப்பு புளிப்பு துவர்ப்பு கைப்பு இனிப்பு என்பன. உண்டி - உண்+தி - " தி " பெயர் விகுதி. அரச - விளிவேற்றுமை. அனிகம் - சேனை (வடமொழி - அநிகம்) பெறுக - " க " - வியங்கோள் விகுதி. அளித்தல் - கொடுத்தல். வேந்து - அரசன்; சாதியொருமை, துய்த்தல் - உண்ணல், பின்றை - பின் என்னும் இடைச்

சொல்லின் விகாரங்களில் ஒன்று. தார் - மாலை; தரித்துக் கொள்ளப் பெறலால் போலும். வாசம் - மணம் (வட சொல்) கலவை - பரிமளச்சேர்க்கைக்களி. நல்கல் - கொடுத்தல். உறுதுயர் - வினைத்தொகை; உற்றதுயர் என்றும்; வேட்டையாடி வந்ததால் உற்றதுயர் என்பது பொருள். உய்த்துணரல் - ஆலோசித்தறிதல்; உரைக்கலுறல் - சொல்ல ஆரம்பித்தல். உய்த்துணரலாவது - "இங்ஙனம் வேதியரிடம் மன்னர் வேண்டிப் பெறலும் இத்தகைய பொருள் நிமித்தம் கூடும்" என்பதை யென்க; உரைக்கும் முறையுமாம் என்க.

மாதவ வெழுந்தி லாய்நீ வயப்புடைப் படைகட் கெல்லாம்
கோதறும் அமிர்தம் இக்கோ உதவிய கொள்கை தன்னால்
தீதறு குணத்தால் மிக்க செழுமறை தெரிந்த நூலோர்
மேதகு பொருள்கள் யாவும் வேந்தருக் கென்கை தன்னால். ௬௫.

பொழிப்புரை:—பெருந்தவத்தையுடைய வஸிஷ்ட முனிவரே! நீங்களோ இருந்தவிடம் விட்டு எழுந்திருக்கவில்லை; ஆனால், என்னைப் புடைசூழ்ந்து வந்திருக்கும் இந்த என் வெற்றிபெற்ற சேனைக்கெல்லாம் குற்றமற்ற அறுசுவைத்தாய உணவை இந்தப்பசுவானது தானே உதவிய தன்மையினாலும், மற்றும் குற்றமற்ற குணங்களாலுயர்ந்து முற்றும் பற்றற்று நிற்கும் செழித்த வேதப்பொருள்களை முற்றும் தெரிந்துணர்ந்தடங்கிய கற்றவர்கள், "உலகில் மேம்பாடுடைய பொருள்கள் எல்லாம் இரண்டாம் நிலையாகிய இல்லறத்தைக் கைமிகுந்துடைய அரசர்க்கே புரியன" எனச் சொல்லியிருக்கும் தன்மையினாலும்.

குறிப்புரை:—நீரோ இருந்தவிடம் விட்டுப் பெயரவில்லை; இந்தப் பசுவோ அறுசுவைத்தாய உண்டியைத்தானே உதவிய தன்மையைப் பெற்றுள தன்மையாலும், விருந்தோம்பற்குரிய ஸாதனத்திற்சிறந்த இது உலகில் உயர்ந்த பொருளாயிருத்தலாலும், இத்தகைய பொருள்கள் விருந்தோம்பலை உயரறமாக்கொண்ட இல்லறைச் சிறப்புடைய என் போலிய அரசர்க்கே உயரிய பொருள்களெல்லாம் உரிமையுடையன, பெரும்பயன் தருவன ஆகலானும், இவ்வுண்மையை நூல்களும் நூலறிந்த பெரியோர்களும் ஒப்புக்கொண்டிருத்தலாலும், (இது எற்கே உரியது என்றவாறும்.) மாதவ! - விளிவேற்றுமை. எழுந்திலாய் -

"இல்" - எதிர்மறை. வயம் - வெற்றி. புடைப்படை=பக்கம் சூழ்ந்த சேனையென்பதாம். புடை=பக்கம். இக்கோ - இந்தப்பசு. "கோ" வடசொல். நூலோர்=கற்றுணர்ந்த பெரியோர். மேதகு - மேம்பட்ட

நிற்கிது தகுவ தன்றால் நீளிரும் சுரபி தன்னை
எற்கருள் என்றலோடும் இயம்பலன் யாதும் பின்னர்
வற்கலை யுடையோன் யாதோ வழங்கலன் வருவ தாகில்
கொற்கொள் வேல் உழவ நீயே கொண்டகல் கென்று கூற ௬௯

பொழிப்புரை:—முற்றத்துறந்த வானப்ரஸ்த நிலைபெற்ற உமக்கு இது தகுதியாக மாட்டாது; எனக்கே உரியதாகும்; ஆகையினால் இந்த நெடுவாழ்வை யுடைய பெரிய காமதேனுவை எனக்கே கொடுத்திடும் என்று சொல்லவே, முனிவர் சிறிது நேரம் யாதும் கூறாதிருந்தவராயினும், பிறகு சொல்லலுற்றாராகி, கொல்லும் தொழிலுடைய வேலுடையாய்! கௌசிக மன்னா!! என்னால் அதனையுனக்குக் கொடுத்திடல் முடியாது; அப்பசு தானே வருவதேல், நீ கவர்ந்துகொண்டகலலாம் என்று, மரவுரியாடை தரித்த வஸிஷ்ட முனிவர் சொல்ல.

குறிப்புரை:—பற்றற்ற - விருந்தோம்பலை ஏகதேசமேயுடைய வானப்ரஸ்தராகிய உமக்கு இப்பயன் தரும் பசு தக்க உரிமையுடையதன்றாகும்; ஆகையால் எனக்கே கொடுத்திடும் என்றார்; சிறிது நேரம் பேசாதிருந்தும், வஸிஷ்டர், அம்மன்னனது விரைவையும் உறுதியையும் உத்தண்டத்தையும் நோக்கி, அது தெய்வத்தன்மை பொருந்திய பொதுப் பசுவாகலின், யான் தனியே கொடுத்தற்கு உரிமையுடையேனுமல்லேன்; அது தானே வருவதாகில் நீயே கவர்ந்துகொண்டகலலாம் என்று சொல்ல; இச்செய்யுள் முன்பின் செய்யுள்களுடன் தொடர்புடையது. நிற்கு, எற்கு - என்பன. "நின் + கு, என் + கு" - என அகரச் சாரியை புணராமல் நின்ற நான்காம் வேற்றுமைப் பெயர்கள் ஆல் - அசை. நீள் - வாழ்வில் நீண்ட. இயம்பலன் - சொல்லவில்லை "அல் - எதிர்மறை; வற்கலை - மரவுரியாடை (வடசொற்றொடர்த்திரிபு கொல் கொள்வேல் - கொல்லுந் தொழிலைக் கொண்டுள்ள வேலாயுதம் இது; அம்மன்னனது பலாத்காரக்குறியை யுணர்த்தி நின்றது. வேலுழவன் - வேல் கொண்டு உழுவோன்; மன்னன் என்பதாம். சொல்லுபு

வன், வில்லுழவன், வேலுழவன், வாளுழவன் - என்று உபசரித்து முறையே அந்தணரையும் அரசரையும் குறிப்பது கவிமரபாம் என்க. கொண்டு-கவர்ந்து. அகல்க-"க"—வியங்கோள் விகுதி.

பணித்தது புரிவன் என்றுப் பார்த்திவன் எழுந்து பொங்கிப்
பிணித்தனன் சுரபி தன்னைப் பெயர்வுழிப் பிணியை வீட்டி
மணித்தடந் தோளி னற்குக் கொடுத்தியோ மறைகள் யாவும்
கணித்தவெம் பெருமா னென்னக் கலைமறைமுனிவன்சொல்வான். ௬௭.

பொழிப்புரை :—சொன்னபடியே செய்வேனென்று சொல்லிக் கௌசிக ராஜன் எழுந்து கோபாவேசத்துடன் சுரபியைப் பிடித்துக் கட்டினவளவிற் பெயர்ந்து போகும்போது, தன்னைக் கட்டிய கட்டை யறுத்துக் கொண்டு, பசு வஸிஷ்டரிடம் வந்து அவரைப் பார்த்து, "வேதங்களையெல்லாம் ஆராய்ந்தறிந்த எமது பெரியோரே! என்னை அந்த அரசனுக்குக் கொடுத்துவிட்டீர்களோ" என்று கேட்க, ஞான நூல்களையும் வேதங்களையும் அறிந்த முனிவராகிய வஸிஷ்டர் சொல்லுவார்.

குறிப்புரை :—முனிவர் கோபத்துடன் சொன்ன வார்த்தையைக் கேட்ட மன்னவன், அவ்வார்த்தையையே துணையாகக்கொண்டு கோபத்துடன் எழுந்து அப்பசுவைக் கட்டிப் பிடித்து புறப்படும் போது, பசு, கட்டையவிழ்த்துக் கொண்டு வந்து, "என்னை யவர்க்குக் கொடுத்தீர்களோ" என்று முனிவரைக் கேட்க முனிவர் சொல்லலுற்றார் என்பதாம். பணித்தது - கட்டளையிட்டது; வினையாலணையும் பெயர். புரிவன் - "அன்" - தன்மை யொருமை வினைமுற்று விகுதி. பார்த்திவன் - மன்னவன் (கௌசிகன்); ப்ருத்வியை யாள்பவன் - என்னும் பொருளில் தத்திதாந்த நாமமாகவந்தது. பொங்கல் - கோபித்தெழுதல். மணி தடம் தோளினன் - நீலமணி போலும் அகன்ற தோள்களை யுடையவன் (அரசன்) மணி - ரத்தினாபரணமுடைய என்றுமாம். தடம் - விசாலம். கொடுத்தியோ - "தி" - த்+இ - என இறந்தகால இடைநிலையும் முன்னிலை யொருமை வினைவிகுதியும் புணர்ந்து நின்றது; "ஓ" - காரம் வினாப்பொருட்டு. கணித்தல் - ஆராய்ந்து அறிதல். பெரும - விளி வேற்றுமை (பெருமையையுடையாய்) கலை-அறிவு நூல், மறை=வேதம்.

கொடுத்திலன் யானே மற்றிக் குடைகெழு வேந்தன் தானே
பிடித்தகல் வுற்ற தென்னப் பெருஞ்சினங் கதுவும் நெஞ்சோ
டிடித்தெழு முரச வேந்தன் சேனையை யானே இன்று
முடிக்குவன் காண்டி யென்று முனிந்துமெய்சிலிர்த்த தன்றே. ௬௮.

பொழிப்புரை:—"நான் கொடுத்திடவில்லையே; ஆனால், இந்தக் குடை செழித்துள்ள அரசன் தானே பலாத்காரத்தில் பிடித்துக் கட்டிக் கொண்டு போகலுற்ற காரியமாகுமிது" என்று வஸிட்டர் சொல்ல, காம தேனுவானது மிகு கோபம் பொருந்திய நெஞ்சோடு, "இடித்ததிர்ந் தோங்கியிருக்கின்ற முரசவாத்தியத்தையுடைய அரசனது சேனையை, இன்று யான் மாத்திரமே நின்று முடித்து விடுகிறேன்; பார்" என்று சொல்லிக் கோபித்துக்கொண்டு தனது தேகத்தைச் சிலிர்த்து நின்றது.

குறிப்புரை:—"பசி தாகத்துடன் களைத்துவந்து சேர்ந்த தனக்குத் தன் பெருத்த சேனையுடன் பெருவிருந்திடக் களிகூர்ந்த மஹாமுனிவரை லக்ஷ்யம் செய்யாமலும், விருந்திட்ட என்னையும் பொருட்படுத்தாமலும் தனக்குரியதல்லாதவொன்றைக் கவர்ந்திட நினைத்தான் அன்றோ, இம்மன்னன்" என்னும் கோபத்துடன் பசு எழுந்து அரசன் சேனையை முடித்திடுவேன் என்று மயிர் சிலிர்த்தது என்பதாம். தனது உபகார சித்தத்தால் திடீரென்று அம்மன்னற்குச் சேனையுடன் பெருவிருந்திட்ட ஆற்றலுடையதாகலின், தனது அபகார சித்தத்தால் திடீரென்று அச்சேனையை யழிக்கவும் ஆற்றலுடையதாம்; என்பது போதருகின்றது. கொடு+த்+த்+இல்+அன் - பகுதி சந்தி இறந்தகால இடைநிலை எதிர்மறைக்குறி தன்மை யொருமை வினைமுற்று விகுதியாகிய உறுப்புகள் புணர்ந்து நின்றதிது. "கொடுத்திலன்யானே." "ஏ" காரத்தை மொழிமாற்றிக் "கொடுத்திலனே யான்" - எனக் கொண்டு பொருள் கொள்ளப்பட்டது. மற்று - வினை மாற்று - (ஆனால்) அரசனது கர்வ மிகுதியையும் உத்தண்ட ஸ்வபாவத்தையும் உணர்த்துவான் "குடைகெழுவேந்தன்"-என்றார். தானே - "ஏ"-தேற்றமுணர்த்திற்று. அகல்வுற்றது - அகலுதற்கு நினைத்த செயல்; வினையாலணையும் பெயர். கதுவல் - பொருந்தல். முரசம் - பேரிகை; முரஜம் - வடசொல். வேலை - சேனை. முடிக்குவன் - "கு" சாரியை. "வ்"-

எதிர்கால இடைநிலை. "அன்" - தன்மை யொருமை வினைமுற்று விகுதி. காண்டி - காண் + தி - "த் + இ" - எழுத்துப்பேறும் விகுதியும். மெய் சிலிர்த்தல் - தேகத்தை நடுக்குறல்.

*பப்பரர் யவனர் சீனர் அவந்திகர் முதல பல்லோர்*
*கைப்படை அதனி னோடும் கபிலைமாட் டுதித்து வேந்தன்*
*துப்புடைச் சேனையாவும் துணித்தனர் துணித்த லோடும்*
*வெப்புடைக்கொடியமன்னன் தனயர்கள்வெகுண்டுமிக்கார். ௬௬.*

பொழிப்புரை:—பர்ப்பரர் யவனர் சீனர் அவந்திகர் முதலிய பலர் உக்ரத்துடனும் வீரத்துடனும் நின்று போர்புரியும் தேசத்து வீரர்கள்; (பல போர்வீரர்கள்,) கையில் தரித்த பல ஆயுதங்களோடும், பசுவின் தேகத்தினின்றும் தோன்றி, அரசனது வலியையுடைய சேனையை யெல்லாம் அழித்துவிட்டனர்: அப்படியழித்திடவே, கோபம் மிகுந்த கொடிய மன்னவராகிய இந்தக் கௌசிகருடைய புத்திரர்கள் மிகவும் கோபம் கொண்டவரானார்கள்.

குறிப்புரை:—காமதேனு அபகாரம் செய்தற்குரிய தாமஸராஜஸ குணங்களைப் பெருக்கிக்கொண்டு, தனது உடம்பைச் சிலிர்த்ததினால், அத்தேகத்தினின்று போர்வீரர்கள் பலர் தோன்றி மன்னனது சேனையை அழித்து விட்டனர் என்பதாம். "போர்வீரர் தோன்றற்குப்பசு, தன்தேகத்தை ராஜஸ தாமஸ குணங்களுடன் சிலிர்த்தது" என்னும் உண்மையால், முன்னம் "மன்னற்குச் சேனையுடன் விருந்திடற்குத்தக்க தேவதைகளைத் தனது ஸாத்விக உத்வேகம் பொருந்திய மனதுடன் கூடிய தேகத்தை சிலிர்த்ததுண்டாகியது" என்னும் உண்மை யூகித்துணரற்பாற்று. பப்பரர் முதலோர் போரில் நிலைத்து நின்று உக்கரத்துடன் போர் புரியும் வீரமுடைய தேசத்தினர் என்பதாம்; அத்தகைய வீரர்கள் அப்பசுவின் தேகத்தினின்று உதித்தார்கள் என்பது குறிக்கப்பட்டது. பப்பரர் - பர்ப்பர தேசத்தினர்; அவந்திகர் — அவந்தி தேசத்தினர். பல்லோர் -"ஓர்"- ஆர் விகுதி செய்யுள் நோக்கித் திரிந்து நின்றது. கைப்படை — கையிலுள்ள ஆயுதம்; வாள் என்றுமாம் அதன் - சொல்லுருபும் சாரியையுமாம். மாட்டு - ஏழனுருபாம் இடப்பொருளுணர்த்தும் சொல். உதித்தல் - தோன்றுதல் (வடமொழிச்

சார்ப்பு) திப்பு - வலிமை. துணித்தல் - வெட்டிவீழ்த்தல். வெப்பு - சூடு; சுங்குக்கோபத்தையுணர்த்தி நின்றது. தனயர் - புத்திரர் (தநய என்பது வடமொழி) "வெகுண்டு மிக் கார்" - என்பதை மொழி மாற்றி விகுதி பிரித்துக் கூட்டிப் பொருள் கொள்க.

சுரவியின் வலியி தன்றால் சுருதிநூல் உணர வல்ல
வாமுனி வஞ்சம் என்று மற்றிவன் சிரத்தை இன்னே
அரிகுதும் என்னப் பொங்கி அடர்த்தனர் அடர்ப்ப அன்னேன்
எரியெழ விழித்த லோடும் இறந்தனர் குமரர் எல்லாம். கசுOO.

பொழிப்புரை :—"இத்தகைய அதிபலங் கொண்ட செய்கையானது ஒரு அசேதனமான பசுவின் வலிமையாதல்கூடாது; ஆயின், வேத சாஸ்திரங்கள் நன்கு ஓதி அவற்றின் காரியகரமான பிரயோஜனத்தை அநுபவத்தில் உணரவல்ல சிரேஷ்டராகிய வலிஷ்ட முனிவரது வஞ்சச் செயலாகவே இருத்தல் வேண்டும்" என்று நினைத்து," இம்முனிவரது தலையை இப்போதே துணித்து விடுவோம்" என்று கோபித்துப் போர் செய்தனர்; போர் செய்யத் தொடங்கவே, அம்முனிவர், அக்குமரர்கள் அழிந்திடும்படியாகக் கண்களில் நெருப்புத்தோன்றும்படி விழித்துப் பார்த்தனர்; உடன் அக்குமரர் (நூற்றுவரில் நால்வர்ஒழிய மற்றோர்) எல்லோரும் இறந்தொழிந்தனர்.

குறிப்புரை—"அரிய பெரிய போர்ச்செயலாகிய இது, பகுத்தறிவற்ற அசேதனமாகியதொரு பசுவின் செயலாகியிருத்தல் கூடாது; ஆயின், முனிவரே வேதங்களையும் ஞான நூல்களையும் ஓதியுணர்ந்து அவற்றைக்கொண்டு இவ்வீரர்களை (மந்திரவலியால்) உண்டாக்கியிருக்கலாம்" என்று அக்குமரர்கள் ஊஹித்து அம்முனிவரிடம் வலிய போர்க்குச் சென்று அவரது கோபாக்கினியால் இறந்தனர் என்பதாம். "குமரர் எல்லாம்" - என்று பொதுப்பட மிகுதி பற்றி இங்குக் குறிக்கப்பட்டதாயினும், இப்படலத்திலேயே - கஉஎ-ம் செய்யுளில் - முதலடியில் - "மாமுனி வெகுளி தன்னால் மடிகலாமைந்தர் நால்வர்" - என்று காணும் குறிப்பொன்றினால், "கௌசிக மன்னன் புதல்வர் நூற்றுவரில் நால்வர் ஒழிந்த மற்றோர்" - என்பது பொருளாகக் கொள்ளப்பட்டது. சுரபி - காமதேனு, (வடமொழி) "வரம்" - சிரேஷ்டத்தன்மை.

வஞ்சம் - கபடம். மற்று - அசை; அன்றி, வினைமாற்றாக நின்று, "ஆதலால்" - என்னும் பொருளைத்தந்தது என்றுமாம். சிரம் - தலை (வடமொழி); இன்னே - இப்போதே. அருதும் - அரிந்துவிடுவோம்; அரிதல் - துணித்தலாகும்; "கு" சாரியை; "தும்" எதிர்காலங் காட்டும் வினை விகுதி. அடர்த்தல் - பொருதல். அன்னான் - வஸிஷ்டர். எரிஎழ—நெருப்புத்தோன்ற. "குணமெனும் குன்றேறி நின்றார் வெகுளி, கணமேயும் காத்தல் அரிது" - குணக்குன்றாகிய உபசாரத்துடன் உபகரித்தவராகிய வஸிஷ்டர், இவர்களது நன்றியறியாமையையும் ஆக்ரமத்தையும் உத்தண்டத்தையும் நினைந்து, சினந்து அழிக்க எண்ணியே எரியெழவிழித்தனர்" என்க.

ஐயிரு பதின்மர் மைந்தர் அவிந்தமை அரசன் காணு
நெய்சொரி தழலிற் பொங்கி நெடுங்கொடித் தேர் கடாவிக்
கைதொடர் கணையி னோடும் கார்முகம் வளைய வாங்கி
எய்தனன்; முனியும் தன்கைத் தண்டினை எதிர்க என்றான். கoக.

பொழிப்புரை:—புத்திரர் நூறுபெயரும் அழிந்து போனதன்மையைக் கௌசிக மன்னவன் பார்த்து, நெய் பொழியப்பெற்ற அக்கினியைப்போற் பொங்கியெழுந்து, நீண்ட கொடியையுடைய தன்னுடைய தேரைச்செலுத்திக்கொண்டு, தன் கையைத்தொடர்ந்திருக்கும் பாணத்தினோடும் முனிவரிடம் சென்று வில்லை நன்றாக வளையும்படியாகச்செய்து, தனது கைப்பாணத்தினையேவினான்; வஸிஷ்ட முனிவரும் தன்கையிலுள்ள யோகதண்டத்தினையேவி, 'அம்மன்னனை எதிர்த்துப் போர்புரிவாய்' என்று ஏவி விட்டுவிட்டார்.

குறிப்புரை:—நால்வர் கபடத்தால் விலகி ஒளிந்து போயினமையுணராத கௌசிக ராஜன் தனது புத்திரர் நூற்றுவரும் முனிவரது கோபாக்கினியால் இறந்தொழிந்தனர் என்றேமதித்து, முனிவர் மீது மிகக்கோபங்கொண்டு; கோப மிகுதியினால் மேல் விளைவினையூகித்துணரமாட்டாதவராகி, முனிவரிடம் போர்புரிய வந்தனர்; முனிவரும், அம்மன்னனது புத்திரர்களை யழித்தற்பொருட்டு ராஜஸஉத்வேகம் கொண்டு, முன்னம் ஸாத்விக தபோபலனுகச் சேர்த்துவைத்திருந்த தபோ சக்தியை யிழந்துவிட்டவர் ஆதலினால், முன்னமே ஏற்றிவைத்திருந்த மந்த்ர

யோக சக்தி நிரம்பிய தமது தண்டத்தை, அம்மன்னற்கு - எதிராக நின்று போர்புரியும்படியாக ஏவினர் என்க ஞானிகள் தமதுயோக ஞான மகிமையினால் அசரத்தையும் சரமாக்க வல்லவர் என்பதும், அசேதனத்தையும் சேதனமாக்க வல்லவர் என்பதும் போதருகின்றன; முன்னம் அசேதனமாகியதொரு பசு, காமதேனு, சேதனத் தொழிலைச் செய்ததையும், தற்போது அசரமாகியதொரு தண்டம் சரிக்கத்தொடங்கியதையும் தெரிந்தோர் மாகலின் என்க. ஐ+இரு - பதின்மர் - (௫ × ௨ × ௧௦) நூற்றுவர் என்பதாம்; ௧௦௦ மிருதிபற்றிக் கொள்ளப்பட்டதென்க, அன்றியும், வஸிஷ்டரது மகிமையையும் அவர் செய்துள்ள உபகாரத்தையும், தமது பிதா கௌசிகரது பலாத்காரத்தையும் இவர் ஆரம்பித்துள்ள அபகாரச் செயலையும் நன்கு உணர்ந்து தேறிய அந்நான்கு புதல்வரும் இவ்வடாச் செயல்கட்குத் துணைபோதலாகாதென மன்னனுகிய தமது தந்தை யறியாதபடி ஒளிந்து விலகிவிட்டார் என்பதைச்சிறிதும் அறியாத மன்னன், "நூற்றுவரும் இறந்தொழிந்தனர் என்றே கண்டான்" என்றுமாம். மைந்தர் - வீரர்; பிதாவின் அம்சமுடையோர் என்றுமாம். அவிந்தமை-சாம்பரானமை. காணு-கண்டு; செயா வாய்பாட்டு உடன்பாட்டெச்சம். நெடுமை + கொடி + தேர் + கடாவி - "கடாவுதல்" - செலுத்தல். கணை = பாணம். கார்முகம் - வில்; வளைய வாங்கி - ஒரு பொருட் பன்மொழியாம்; அன்றி, மிகுதி யுணர்த்தவுமாம் என்க. எதிர்க்க - வியங்கோள் விகுதி.

கடவுளர் படைகள் ஈறாக் கற்றன் படைகள் யாவும்
விடவிட வேந்தன் தண்டம் விழுங்கிமேல் விளங்கல் காணு
வடவரை வில்லி தன்னை வணங்கினன் வழுத்த லோடும்
அடலுறு படையொன் றீயா அன்னவன் அகன்றான் அன்றே. ௧௦௨.

பொழிப்புரை :—தனது சொந்த ஆயுதங்கள் முதல் தேவதைகள் பிரசாதித்த ஆயுதங்கள் இறுதியாகத் தான் கற்றுள்ளனவாகிய எல்லா விதமான ஆயுத வகைகளையெல்லாம் கௌசிக மன்னன் எடுத்து விடவிட, அந்த முனிவரது யோகதண்டம் விழுங்கிக் கொண்டிருத்தலை, யம்மன் கண்டு தனது கையில் பாணங்களுமில்லா தொழிந்துபோக, வேறு வழியற்றுப் பரமசிவத்தை நினைத்துத் துதித்து வணங்கினார்;

அப்படித் தன்னை வணங்கித் துதித்துக் கொண்டிருக்கின்ற கௌசிக மன்னன் பொருட்டுச் சிவபிரான் நேரே வந்து வலிமையுடையதொரு ஆயுதத்தைக் கொடுத்திட்டு மறைந்தனர்.

குறிப்புரை:—தான் ஏவிய ஆயுதங்களை யெல்லாம் அந்த யோக தண்டம் அழித்துக் கொண்டிருந்ததை யுணர்ந்து கௌசிக மன்னர், மனம் நொந்து, தனது இருதயகமல வாஸியாகிய பரமசிவத்தைத் துதித்திட லும்; அப்பெருமான், "இம்மன்னன் தீய வழியில் இறங்கியிருக்கிறான். வெற்றிபெறான்" என்பதனை யுணர்ந்துளார்; ஆயினும், பக்தன் என்பதை யுன்னியும் அவனது தோத்திரத்தைக்கருதியும், வலியுள்ள தொரு படை யினைத்தந்து மறைந்தனர் என்க; கடவுளர் - தேவவகையினர்; "அர்"- பலர்பால் விகுதி. ஈறு - முடிவாக; ஈறு + ஆ (க) = "ஆ" - கடை குறைந்து நின்றது. கற்றன - தெரிந்துள்ளன; வினைப்பெயர். தண் டம் - கோல் (வடமொழி) காணு - செயா வாய்பாட்டு உடன் பாட்டுப் பொருள். வட + வரை + வில்லி = "வட" - வடக்கு என்பது குறை ந்து நின்றது; வட வரை = மாமேரு; "வரை"- மலை; வில் + இ "-இ"; பெயர் விகுதி; வில்லுடையோன்; வடவரை வில்லி - பரமசிவன் வழுத்தல் - துதித்தல். அடல் = வலி. ஈயா - ஈந்து; செயா வாய் பாட்டு உடன்பாடு. அகல்தல் - நீங்கல்.

விட்டனன் படையை வேந்தன் விண்ணுறைவோர் உலகை யெல்லாம்
சுட்டனன் என்ன அஞ்சித் துளங்கினர் முனியும் வந்து
கிட்டிய படையை உண்டு கிளர்ந்தனன் கிளரும் மேனி
முட்டவெம் பொறிகள் சிந்திப் பொருபடை முரணை தீர்ந்த. கO௬.

பொழிப்புரை:—கௌசிக மன்னன் பரமசிவத்தாற் பெற்ற அந்த ஆயுதத்தை முனிவர் பேரில் விட்டுவிட்டனனென்று தேவர்கள் பயந்து நடுங்கினார்கள்; வஸிஷ்டமுனிவரும் தம்மை வந்து சேர்ந்த அவ்வா யுதத்தை யழித்துப் பொங்கி நின்றனர்; பொங்கிய அம்முனிவரது மேனியை, அப்போர்ப்படையானது வந்து தாக்கி உஷ்ணமாகிய பொறிகளைச் சிந்திக்கொண்டு வலியழிந்து இறந்தது.

குறிப்புரை:—பரமசிவன் கொடுத்த அந்த ஆயுதமும், வஸிஷ்ட முனிவரது யோகபலத்தினால் வலியொழிந்து அழிந்து போயிற்று.

என்பதாம். படை - ஆயுதம்; படு - பகுதி; எதிரியை யழிப்பது என்பது பொருள். துளங்கல் - நடுங்கல். உண்டுகிளர்தல் - விழுங்கிப் பொங்கி நிற்றல்; அதாவது அழித்து இறுமாந் திருத்தல் என்பதாம். மேனி=சரீரம். முட்ட=தாக்க - மோத - பட. பொறிகள் - தீப்பொறிகள். சிந்தல் - சிதறல். பொருபடை - போர்தரும் ஆயுதம். முரண் + அது + இற்று + எ - "முரண்"- வலி; "அது"- எழுவாயுருபு; "இற்று"- இற்றது என்பதன் குறை; "எ"- அசை.

கண்டனன் அரசன் காணுக் கலைமறை முனிவர்க் கல்லால்
திண்டிறல் வலியும் தேசும் உளவெனல் சீரி தல்ல
மண்டலம் முழுதும் காக்கும் மொய்ம்பொரு வலியன் றென்று
ஒண்டவம்புரியவெண்ணி உம்பர்கோன்திசையைஉற்றான். ௧0௪.

பொழிப்புரை :—இச்செய்தியைக் கௌசிக முனிவன் பார்த்தான்; பார்த்து, "விஞ்ஞான நூல்களையும் ஞான சாஸ்திரங்களையும் வேதங்களையும் தபோபலங்களையும் உடைய முனிவர்கட் கல்லாமல் திண்ணிய தேகபலமும் மனோபலமும் தேக ஒளியும் மற்றையோர்க்கு உள்ளன என்று சொல்லுதல் பெருமையாக மாட்டாது; உலக முழுதும் பரிபாலிக்கின்ற வலியும் ஒரு மேலான வலியாக மாட்டாது" என்று தீர்மானித்து, மேலான தவம்புரிய நினைத்து இந்திர திசையாகிய கீழ்த்திக்கை நாடிச் சென்றார்.

குறிப்புரை :—அப்படையும் வலியற்று அழிந்து போகவே, இனி ஆயுத பலமும் ஆள் பலமும் முதலிய வலிமைகளெல்லாம் மேலானவல்ல; அழிந்து போவனவாம்; என்றும் அழிந்து கெடாத ஆத்மபலத்தைக் கொடுந்தவஞ் செய்தேனும் பெறுவேனென்று, கௌசிக மன்னன், கீழ்த்திசை சென்று கடுந்தவம் புரிய ஆரம்பித்தார் என்பதாம். கலை - ஞான நூல்கள்; கலா என்னும் வட சொற்றிரிபு என்பாருமுளர். மறை=வேதம். திண் + திறல் + வலி="திண்"- திண்மை என்னும் பண்படி; திண்மை=உறுதியுடைமை; திறல் - தேக பலம்; வலி= மனோபலம்; தேசு - "தேஜஸ்" என்னும் வடசொற் சிதைவு; ஒளியென்பது பொருள். சீரிது - பெருமையுடையது. மண் + தலம் = பூப்ரதேசம்; அன்றி, மண்டலம் என்பதை வடமொழியாக்கொண்டு,

கோள (வட்ட) வடிவுடைய பூமி என்க்கொள்ளலு மொன்றும். மொய்ம்பு = பலம்; செறிவு. ஒள் + தவம் - ஒண்டவம் "ண்" - விகாரம். ஒள் - ஒளியுடைய. உம்பர் கோன் - இந்திரன்; கிழக்குத்திக்கு இந்திர திசையாகலின் ஏன்க.

மாண்டமா தவத்தோன் செய்த வலனையே மனத்தில் எண்ணிப்
பூண்டமா தவத்த னாகி அரசர்கோன் பொலியும் நீர்மை
காண்டலும் அமரர் வேந்தன் துணுக்குறு கருத்த னாகிம்
தூண்டின னரம்பை மாருள் திலோத்தமை எனுஞ்சொல் மானை. க௦௫.

பொழிப்புரை:—மாட்சிமை பெற்ற வசிஷ்டமா முனிவர் செய்து காட்டிய ஆத்மபல காரியங்களையே மனத்தில் தியானஞ் செய்து கொண்டு, ஏற்ற மகாதவத்தையுடையவராகி யந்தக் கௌசிக மன்னன் மிக விளங்கிக் கொண்டிருக்கும் தன்மையைத் தேவர்கட்கதிபதியாகிய இந்திரன் காணவே, நடுங்கிய மனத்தையுடையவனாகி யத்தவத்தைக் கெடுத்திடும் பொருட்டு, அப்ஸர ஸ்த்ரீகளில் திலோத்தமை யென்று சொல்லப்பெறும் சொல்லிற் சிறந்த மான்போலும் பார்வையுடைய அழகியைத் தவத்தினனிடம் அனுப்பினான்.

குறிப்புரை:—கௌசிக மன்னன், ஆத்மபலத்தை பெறக்கருதி மிகு வைராக்யத்துடன் மா தவச்செயலில் விளங்கியிருத்தலைக்கண்ட இந்திரன், அத்தவத்தினை யழித்தற் பொருட்டுத் திலோத்தமையை யனுப்பினான் என்பதாம். மாண்ட - மாட்சிமை பெற்ற; மாண் - பகுதி. வலன் - பலம் (வடமொழிச்சிதை வென்பர்) ஆத்மபலம் என்றவாறு. பூண்ட = மேற்கொண்ட; பூண் = பகுதி: பொலிதல் - விளங்குதல். நீர்மை = தன்மை. அமரர் வேந்தன் - இந்திரன்; தவஞ்செய்யும் அக் கீழ்திசைக்கதிபதி யென்றுமாம். துணுக்குறல் - நடுங்கல். தூண்டல் - செலுத்தல்; போகச்செய்தல். சொல்மான் = சொல்லழகுடைய மானின் விழியாள்.

அன்னவள் மேனி காணு அனங்கவேள் சரங்கள் பாயத்
தன்னுணர் வழிந்து காதல் சலதியில் அழுந்தி வேந்தன்
பன்னரும் பகநீர் வுற்றுப் பரிணதர் தெரிந்த நூலின்
நன்னயமுணார்ந்தோ னாகு நஞ்செனக் கனன்று நக்கான். க௦௬.

பொழிப்புரை:—கௌசிக மன்னவராகிய அத்தத்தாபதர், அத்தகைய திலோத்தமை யென்னும் அப்ஸர ஸ்திரீயினுடைய அழகிய தேகத்தைக்கண்டு, அத்தக்கணம் மன்மத பாணங்கள் தன்மேற் பாயவே, தவமுழன்ற தமது நல்லறிவிழந்து காதற் கடலில் மூழ்கி, அவளை விரும்பி யருகழைத்து அவளுடன் சிற்றின்ப நுகர்ச்சியிற் புகுந்து, எடுத்துச்சொல்லமுடியாத பல காலங்கள் கழிந்த பின்னர்ச் சோதிடர் தெரிந்துள்ள அச்சாஸ்திரத்தின் நல்ல பரிசயத்தால், உண்மையுணர்ந்தவராகி, விஷம்போற் கோபித்து நகைத்தார்.

குறிப்புரை:—காமபாதையிற் பட்டு காதற் கடலின் மூழ்கினோர்க்குத் தாமதகுண உத்வேகத்தால், உண்மை யறிவு மறைந்து, உள்ளம் இருண்டு கிடக்குமாகலான், அவ்வழகியின்பால் தோன்றும் சிற்றின்ப நுகர்ச்சியே சுவையாகப் பன்னாட்கள் கழித்தனர்; பின்னர்ப் பன்னெடு நாட்கள் கழித்துக் காதல் மயக்கம் கழிந்த பின்னர்த் தன்னுணர்வு தோன்றி, உண்மையுணர்ந்து, ராஜஸகுண உத்வேகத்தால் கோபங்கொண்டனர் என்பதாம். அன்னவள் - திலோத்தமை. மேனி - வடிவழகு. காணா - கண்டு. அனங்கவேள் - மன்மதவேடன். சரங்கள் - பாணங்கள். தன் உணர்வு - மெய்யுணர்ச்சி. சலதி - கடல் (வடசொல்) பன் + அரும் = பன்னுதல் - சொல்லுதல். பகல் - காலம். தீர்வுற்று - நீங்கி; "உறு" துணைவினை. பரிணதர் - பண்டிதர்; இங்கு நாட்கள் கோட்களின் (நக்ஷத்திரங்கள் கிரஹங்கள்) அறிவு கொண்ட சோதிடரைக் குறித்து நின்றது. நூல் = சோதிட நூல். நல் + நயம் = நற்பழக்கம். நஞ்சு = விஷம். நக்கான் - நகைத்தான் இச்செய்தியை "மேனகை" யின் பாலேற்றிச் "சகுந்தலை" யின் பிறப்புக்கதையாகவும் சொல்வர்.

விண்ணமுழு தாளி செய்த வினையென வெகுண்டு நீபோய்
மண்மகள் ஆதி என்று மடவரல் தன்னை ஏவிக்
கண்மலர் சிவப்ப உள்ளம் கறுப்புறக் கடிதின் ஏகி
எண்மரின் வலியன் ஆய எமன்திசை தன்னை உற்றான். ௧௦௭.

பொழிப்புரை:—விண்ணகமெல்லாம் ஆளுகின்ற இந்திரன் செய்துள்ள வஞ்சவினை யிதுவென் றெண்ணி, அப்பெண்ணைப் பார்த்துக் கோபித்து, "நீ விண்ணுலகினின்றும் இழிந்துபோய் மண்ணகத்திலொரு

பெண்ணணங்காகப் பிறந்திடுவாய்" என்று ஏவிவிட்டு, மலர்போன்ற தனது கண்கள் சிவந்திட மனதிற் கோபங்கொண்டு, மிக விரைவிற் சென்று, திக்பாலகர் எட்டுப்பேர்களிலும் வலியவனாகிய எமதர்மராஜன் இருக்கும் திசையாகிய தென்திசை சேர்ந்தார்.

குறிப்புரை:—பின்னர், இது இந்திரன் செய்தவ மோசச் செயல் தான் என்று தெரிந்து, திலோத்தமையைப் பூமியிற் பிறக்கும்படி செய்து, கீழ்த்திசையில் நின்று செய்த கடுந்தவப் பயன், காமக்களியினாற் கழிந்து போயிடவே, மற்றும் உக்ரமான தவஞ் செய்தற் பொருட்டுத் தென்திசை சென்று சேர்ந்தார் என்பதாம். விண் + முழுது + ஆளி = இந்திரன்; "ஆளி" - ஆள்பவன். வினை - செயல்; வஞ்சச்செயலாம். வெகுளல் - கோபித்தல். மண்மகள் - மண்ணுலகிற் பெண். ஆதி - ஆகு வாய் என்பதாம்; இது "கு" ச்சாரியை பெற்று "ஆகுதி" என்றும் வரும். மடவரல் = பெண். தன்னை - "தன்" - அசை. கண்மலர் - பண்புத் தொகை - கண்ணாகிய மலர். கறுப்புற - கோபிக்க; "உற" - துணை வினை. எண்மர் - எட்டுப்பேர். எட்டுத்திசைகளையும் காவல்புரியும் (அஷ்ட) திக் பாலகர். வலியன் - பாச தண்டவலியுடையோன் என்று மாம். உற்றான் - சேர்ந்தான்.

தென்திசை அதனை நண்ணிச் செய்தவம் செய்யும் செவ்வி
வன்திறல் அயோத்தி வாழும் மன்னவன் திரிசங் கென்பான்
தன் துணைக் குருவை நண்ணித் தனுவொடும் துறக்கம் எய்த
இன்றெனக் கருளு கென்ன ஆண்டிறந் தெய்து கென்றான். க0அ.

பொழிப்புரை:—அந்தக் கௌசிகர், தெற்குத்திக்கைச் சேர்ந்து செம்மையாகிய தவத்தைச் செய்துகொண்டிருக்கும்போது, அயோத்தி நகரில் வாழ்ந்துகொண்டிருக்கும் - தேகபலமும் மனோபலமுமுடைய அரசன் - திரிசங்கு என்பவன், தனக்குத் துணைவராக நின்றுள்ள குல குருவாகிய வசிஷ்ட முனிவரைக் கிட்டி, "சரீரத்துடன் ஸ்வர்க்கம் புகும் படியாக இன்று எனக்கு அருள் செய்தல் வேண்டும்" என்று கேட்க, அவர், "இத்தால் உடலுக்குற்ற ஆண்டுகள் நீங்கிப் பின்னர்த் திவ்ய சரீரத்துடன் ஸ்வர்க்கம் புகக்கடவாய்" என்று சொன்னார்.

குறிப்புரை:—அக்காலத்தில், இம்முனிவர் சம்பந்தமாக நடந்தேறியதொரு செய்தி இங்கே குறிக்கப்பெறுகின்றது; இத் தென்திசை தவத்தின் தொடர்புடைய தாகலின் என்க; அதுதான் திரிசங்கு மன்னவன் இத்தூல வுடலுடன் சொர்க்கம் புகக்கருதிய தாகும் என்பதாம். செம்மை + தவம் = செய்தவம்; நல்ல (கடுந்) தவமென்றும். செவ்வி - காலத்தில். திரிசங்கு - ஒரு சூரிய குல மன்னவன் பெயராகும்; மூன்று குற்றமுடையவன் என்பதும் பொருளாக் குறிப்பர். திரி + சங்கு - "சங்கு" - (மூன்றுகள்) குற்றங்கள்; வடசொற்றொடர். துணைக்குரு - இஹ பர காரியங் கட்குத்துணைவராம் புரோஹிதராகலின் என்க; இவர் யாரெனில், இச்சூரியகுல பரம்பரைக்குருவாகிய வஸிஷ்டரேயாவர். தனு - சரீரம் (வடமொழி) துறக்கம் - சொர்க்கம்; இம்மண்ணுலகு கடந்த பின் அடையும் இடம்; துறத்தல் - நீக்கல்; கடத்தலாகும். ஆண்டு - காலம். இறத்தல் - நீங்கல்; அன்றி, இறந்து - இவ்வுடல் துறந்து, ஆண்டு - அவ்விடம் (சொர்க்கம்) எய்துக - அடையக்கடவாய்" என்றுமாம்.

நினக்கொலா தாகின் ஐய நீணிலத் தியாவ ரேனும்
மனக்கினி யாரை நாடி வகுப்பல்யான் வேள்வி என்னச்
சினக்கொடுந் திறலோய் முன்னைத் தேசிகன் பிழைத்து வேறோர்
நினக்கிதன் நாடி நின்றாய் நீசனாய் விடுதி என்றான். ௧௦௬.

பொழிப்புரை:—"ஆசாரியரே! உமக்கு இச்செயல் முடியாதுபோமாயின், இந்த நீண்ட உலகத்திலுள்ள யாவராயிருப்பினும் என் மனதுக்குப் பொருத்த முடையவராகி யென் கருத்தை முடித்துத்தரவல்ல வொருவரைக்குருவாக நாடிக்கொண்டு இத்தூல வுடலுடன் துறக்கம் புகுதற்குரிய யாகத்தை நான் செய்திடுவே"னென்று மிகு கோபத்துடன் சொல்லிடவே, வஸிஷ்டர், "கொடுஞ்சினங்கொண்ட மனோபல முடைய மன்னவ! பரம்பரையாக வந்துள்ள வொரு பழைய ஆசாரியரைத் தவிர்த்து அவர்க்குப் பிழை செய்திட்டு, மற்றும், உனக்கு இதஞ்செய்வானொருவனை நீ குருவாக நாடி நின்றாயாகலின், இச் செயலுக்குரிய நீசனாகவே நீ ஆவாய் என்று சாப மொழி புகன்றார்.

குறிப்புரை:—உலக இயற்கையை யழித்து, அவ்வியற்கைக்கு மாறாகப் பெரும்பேறு பெறுதற்குரிய பொதுக்காரிய மொன்றும்-உலகம் புகழச்செய்திடாமல், கேவலம் யாக காரியத்தினால் முடித்திடலாகு

மென்று துணிவு கொண்டு, அவ்வடாத - நெறிதவறிய - தேவர் யாவர்க்கும் விருப்பமிராதசெயற்குத் தம்மைத் துணை செய்திடும்படி ஏவி நின்ற அம்மன்னனது உத்தண்ட செயலையும், உண்மை தெரிக்கும் நீதியையும் நெறியையும் கூறியும் ஒழுங்கில் நில்லாது தம்மை யவமதித்து நின்ற அவனது அகம்பாவத்தையும் நீக்கிடவே, குரு சினந்து சபித்தனர் என்பதாம். நினக்கு - உனக்கு. ஒலாது - முடியாதது; விகாரம். நீள் + நிலம்; மிக நீண்ட இந்நிலவுலகு. மனக்கு - மனதுக்கு -" அத்து" சாரியை பெறுமற் புணர்ந்தது; வகுப்பல் - செய்வேன் - " அல் " - தன்மை யொருமை வினைமுற்று விகுதி. முன்னை = பழைய; தேசிகன் - ஆசாரியன். பிழைத்து - பிழை செய்து, இதன் - இதம் செய்வோன் நீசன் - தாழ்ந்த தன்மை (உருவம்) உடையோன், விடுதி - "த் + இ". எழுத்துப்பேறும் - விகுதியும்.

மலருளோன் மைந்தன் சீறி வழங்கிய சாபந் தன்னால்
அலரியோன் தானும் நாணும் ஒளியிழந் தரசர் கோமான்
புலரியங் கமலம் போலும் பொலிவொரீஇ வதனம் பூவில்
பலருமாங் கிகழ்தற் கொத்த படிவம்வந் துற்ற தன்றே.　　ககO.

பொழிப்புரை:—பிரமதேவன் புத்திரராகிய வசிஷ்டர் கோபித்துச்சொல்லிய சாபச் சொல்லினால், சூரியனும் கண்டு நாணக்கூடிய தனது தேகத்தின் ஒளிநீங்கிப்போய், அரசர்க்கரசனாகிய திரிசங்கு மன்னன், காலைத் தாமரைபோன்ற தனது முகப்பொலிவு அழிந்து நிற்க, பூமியில், பலரும் இகழ்தற்கொத்த நீசவடிவம் வந்து சேர்ந்தது.

குறிப்புரை:—திரிசங்கு மன்னவற்குக் குருவை யிகழ்ந்து பெற்ற சாபம் வந்துற்றது என்பதாம். மலருளோன் - பிரமன். மைந்தன் - வசிஷ்டன்; சீறி - கோபித்து. வழங்குதல் - மிகக் கொடுத்தல். சாபம் - (வடமொழி) நிக்ரஹச்சொல். அலரியோன் - சூரியன். அரசர் கோமான் - ராஜாதி ராஜன்; சக்ரவர்த்தி யென்பதாம். புலரி - காலைத்தலை - அதி காலைத்தலை யென்பதாம். பொலிவு - அழகு. ஒரீஇ - அளபெடுத்தவினை யெச்சம்; வதனம் -(வடமொழி) முகம். பூவில் = பூமியில். படிவம்-உருவம்.

காசொடு முடியும் பூணும் கரியதாம் கனகம் போன்றும்
தூசொடு மணியும் முந்நூல் தோறரும் தோற்றம் போன்றும்
மாசொடு கருகி மேனி வனப்பழிந் திடவூர் வந்தான்
சிசியென் றியாரும் எள்ளத் திசைப்பொடுபழுவம்சேர்ந்தான். ககக.

பொழிப்புரை:—ரத்தினங்களுடன் கிரீடமும் ஆபரணங்களும் கரும்பொன்னாகிய இரும்பைப் போலவும், வஸ்திரங்களுடன் அணிந்து கொண்டிருக்கும் முப்புரி நூலும் தோலாற் செய்யப் பெற்றிருக்கும் காட்சியைப்போலவும், குற்றமடைந்து கருகிப்போய்த் தன்தேகத்தின் அழகு அழிந்திடவே தன்னகரம் வந்து சேர்ந்தான்; அங்கே "சீ! சீ!!" எனக் கண்டவர் யாவரும் இகழ்ந்து பேசவே, திகைப்புக் கொண்டவனாகிக் காட்டிற்சென்று சேர்ந்தான்.

குறிப்புரை;—திரிசங்குவுக்கு ஆடையாபரணங்களெல்லாம் கருகிப்போய் நீசஉருவம் வந்திடவே, நகர மாந்தர்கள் அவனைச் சீ சீ என்று சொல்லி யிகழ்ந்து ஒதுக்கிவிட மயக்கத்துடன் காடு வந்து சேர்ந்தான் என்பதாம். காசு - ரத்தினம்; ஒடு - எண்ணுப்பொருள். முடி = கிரீடம். பூண் = ஆபரணம். கரியது ஆம் கனகம் = கருப்பாகிய பொன் அதாவது இரும்பு. தூசு - வஸ்திரம். ஒடும் = எண்ணுப்பொருள். மு + நூல் = ப்முப்புரிநூல்; மார்பில் அணியும் நூல். தோல்தரும் தோற்றம் = தோலில் உண்டாகும் காட்சி. மாசு = குற்றம். ஒடு = முன்னைப் பொருளே. கருகி - கரியநிறமடைந்து. மேனி = தேகம். வனப்பு = அழகு. அழிந்திட - அழிய; "இடு"- துணைவினை. எள்ள - இகழ்ந்திட; ஊர் - நகரம். திகைப்பு - மயக்கம். பழுவம் - காடு.

கானிடைச் சிறிது வைகல் கழித்தொர்நாள் கவுசி கப்பேர்க்
கோனினி துறையும் சோலை குறுகினன் குறுக அன்னோன்
ஈனனீ யாவன் என்னை நேர்ந்ததிவ் விடையின் என்ன
மேனிகழ் பொருள்க ளெல்லாம் விளம்பினன் வணங்கி மேவந்தன். ௧௧௨

பொழிப்புரை:—அந்தக்காட்டிலே சிறிது காலம் கழித்திருந்து ஒரு நாளில் ஓர் யோசனை தோன்றவே, கௌசிக மன்னவன் தாபதக் கோலத்துடன் வசித்திருக்கும் சோலை போய்ச் சேர்ந்தான்; சேரவே, அக்கௌசிகன், திரிசங்குவைப்பார்த்து, "தாழ்ந்த உருவமுடையாய்! நீ யார்? என்னை வந்துசேர்ந்து இவ்விடத்தில் ஆகவேண்டிய காரியமென்ன?" என்று கேட்க அம்மன்னவன், முன் நிகழ்ந்துள்ள செய்திகளை யெல்லாம் சொன்னான்.

குறிப்புரை:—நீசவுருவத்துடன் தனது ஆச்ரமம் வந்து சேர்ந்த திரிசங்கு வினால் கௌசிகர் முன் நிகழ்ந்த செய்திகளை யெல்லாம் அறிந்து கொண்டார் என்பதாம். கான் + இடை = காட்டில்; "இடை" ஏழனுருபு. வைகல் = போது. குறுகல் - சேரல். ஈனன் - நீசவுருவினன். சேர்ந்தது = அடைந்தது. இ + இடை = இவ்விடை; "இடை" இடம். மேல் + நிகழ் + பொருள்கள் - மேல் = முன்னம்; நிகழ்பொருள் = வினைத்தொகை; நடந்த செய்தி என்பதாம். விளம்பல் = சொல்லல்.

இற்றிதோ எனாநக் கன்றான் யானொரு வேள்வி முற்றி
மற்றுல களிப்பன் என்று மாதவர் தம்மைக் கூவச்
சுற்றுறு முனிவர் யாரும் தொக்கனர் வசிட்டன் மைந்தர்
கற்றிலம் அரசன் வேள்வி கனற்றுறை புலையற் கீவான். கக௩.

பொழிப்புரை:—உனக்கு இந்நீசவுருவம் வந்தெய்திய தன்மை இப்படிப்பட்டதோ என்று கௌசிக மன்னவன் நகைத்து, "நான் ஒரு பெரும் வேள்வி செய்து உனக்கு (வேறு) உலகம் கொடுக்கிறேன்" என்று சொல்லி மற்றைத் தாபதர்களையும் அழைத்துவரும்படி சொல்லவே, சுற்றியுள்ள முனிவர் யாவரும் வந்து சேர்ந்தனர்; வசிஷ்ட ரிஷியினுடைய புத்திரர்கள், "கௌசிக மன்னரே! அக்கினி காரியமாகிய யாகத் தொழிலைப் புலைத்தன்மை பெற்ற ஒருவனுக்குக் கொடுக்கும் பொருட்டுப் படித்ததில்லை"

குறிப்புரை:—கௌசிகரும் அரசவகுப் பினராகையால் மற்றொரு அரசன் பொருட்டு ஒரு பிராம்மணர் செய்துள்ள அவ்வரீதியைப்பொருதவர்போலும் "மந்திரவலிபெற்றால் எக்காரியங்களும் யாவராலும் செய்தற்குரியனவாம்" என்பதை யீண்டே காட்டுகின்றேன் என்று இரட்டிப்புக் கோபம் கொண்டவராகி வேள்விசெய்து அம்மன்னவற்கு வுலகளித்திடத் தீர்மானித்தனர் என்பதாம். கௌசிகரது இயல்பிற்கும் நட்பிற்கும் ஆற்றற்கும் முறையே ஒத்தோ இசைந்தோ பயந்தோ மற்றும்சில முனிவர்கள் அவர்செயலுக்குச் சம்மதித்து வந்து சேர்ந்தனர்; வசிஷ்டரது புத்திரர்கள் மாத்திரம் தங்தைக்கு ஒவ்வாத செயலிது வென்றெண்ணியோ, அடாது செயல் தானிது வென நினைத்தோ சம்மதியாதிருந்தனர் என்பதுமாம். இற்று + இது + ஓ = (இற்றிதோ); இத்தொட

வினைச் சொற்கள் நிலைமாற்றி "இது + இற்று + ஓ" எனக்கொண்டு ,, இது = இப்புலைச்சரீரம் வந்த செயலாகிய இது; இற்றோ = இத்தன் மைப்பட்டதோ?" எனப்பொருள் கொள்ளப்பட்டது. நக்கு - நகைத்து பகுதி யிரட்டித்துக்காலங்காட்டியது; நகு - பகுதி. அன்னோன் = கௌசி கன். இரு வேள்வி = பெரிய யாகம்; "இரு" = பெருமை. முற்றி = முற்று + இ = முடித்து; "இ" - வினையெச்ச விகுதி. மற்று = அசை; அன்றியும் "வேறு" - என்னும் பொருளிலுமாம்; பின் நிகழ்ந்திருக்கும் "திரி சங்குவுக்கு வேறு உலகம் அமைத்துக்கொடுத்துள செய்தி"யை யுன்னிக், கவி, இப்பதம் தந்துளார் என்பது மொன்று. அளிப்பன் - தருவேன்; "அன்" - தன்மை யொருமை வினைமுற்று விகுதி. மா + தவர் - மஹா + தப = (வடசொற்றொடர்) மகா தவத்தினர் என்பதாம். சுற்றுறு = சுற்றுப்புறங்களிலுள்ள; அன்றி, இக்கௌசிகனை எப்போதும் சுற்றி நேசம் பாராட்டியுள்ள என்றுமாம்; உறு முனிவர் - வினைத் தொகை. தொக்கனர் - கூடிச் சேர்ந்தனர்; தொகுதல் = சேர்தல்; தொகு = பகுதி; இதுவும் பகுதியிரட்டித்துக் காலம் காட்டும் வினையாம் மைந்தர் - அம்சமுடையவர். கற்றிலம் = படித்திலோம், "அம்" - தன் மைப்பன்மை விகுதி. அரசன் - இது அண்மை விளி; "அரசனே!,, என்பது பொருள். (கனல் + துறை) கனற்றுறை என்னும் குறிப்பி னால் வேள்வி எனுஞ்சொல் "கல்யாணம்" - என்னும் பொருளினிரு ந்து நீங்கி, "யாகம்" என்னும் பொருளில் நின்றது என்று குறிப்பர். ஈவான் - தரும் பொருட்டு; "வான்" வினையெச்ச விகுதி.

என்றுரைத் தியாங்கள் ஒல்லோம் என்றனர் என்னப் பொங்கிப்
புன்றொழிற் கிராத ராகிப் போகெனப் புகற லோடும்
அன்றவர் எயினர் ஆகி அடவிகள் தோறும் சென்றார்
நின்றவேள் வியையும் முற்றி நித்தனை வருக என்றான். ககசு.

பொழிப்புரை:—என்று அந்த வஸிஷ்ட புத்திரர் சொல்லி, "இதற்கு நாங்கள் சம்மதியோம்" என்று மறுமொழி கூறி விட்டனர்; என்று அவர்கள் சொல்லிடவே, கௌசிகத் தாபதர், மிகக் கோபித்து "அந்த வஸிஷ்ட புத்திரர்கள் அற்பத் தொழிலையுடையவராகிய வேடர் களாகிப் போகக்கடவர்" எனச் சபித்தலோடும், அப்புத்திரர்கள்

உடனே, வேடர்களின் தன்மையை யுடையவர்களாகிக் காடெங்கும் ஸஞ்சரிக்கலாயினர்; பிறகு கௌசிகத்தாபதர், மற்றைய சுற்றுறு முனிவரோடும் நிலைத்திருந்து யாக காரியத்தையும் முடித்துவிட்டுத், தேவர்களை நோக்கி, "வரக்கடவீர்கள்" எனக் கூறினார்.

குறிப்புரை :—அங்ஙனம் அவ்வரிய செயலுக்குச் சம்மதியாத பொறாமை கொண்ட வஸிஷ்ட புத்திரர்களை வேடர்களாகும் படியாகச் சபித்து விட்டுக் கௌசிகத்தாபதர், உற்ற முனிவருடன் கூடி நிலைத்திருந்து தமது தபோபலங்கொண்டு, அவ்வரிய வேள்வியை நிறைவேற்றிப், பின்னர் தேவர்களை யழைத்தார் என்பதாம். உரைத்து + யாங்கள் - உரைத்தியாங்கள் = குற்றியலிகரம். ஒல்லேம் = சம்மதிக்கோம். பொங்கி - கோபித்து. கிராதர் - வேடர். போக + என = போகென - விகாரம். புகறல் - புகல் + தல் = சொல்லல். எயினர் = வேடர்; எய்யுந்தொழிலுடையார்; "நர்" = பலர் பால்விகுதி. அடவி = காடு. நின்று - நிலைத்திருந்து. நித்தரை வருக = "வருக" - இது யாக மந்திரங்களிற் கூப்பிடும் சொல் என்பர்."

அரசனிப் புலையற் கென்னே அனற்றுறை முற்றி எம்மை
விரைசுக வல்லை யென்றான் விழுமிதென் றிகழ்ந்து நக்கார்
புரைசைமா களிற்று வேந்தைப் போகநீ துறக்கம் யானே
உரைசெய்தேன் தவத்தின் என்ன ஓங்கினன் விமானத் தும்பர்.
ககரு.

பொழிப்புரை :—இந்நீசனுக்காக அக்கினி காரியமாகிய யாகத்தையும் நிறைவேற்றி, எம்மையும் "விரைவில் வாருங்கள் என்று சொல்லி விட்டான் இந்த அரசன்!" "என்ன ஆச்சரியம்!!" "நன்றாயிருக்கிறது!!!" என்று சொல்லி யிகழ்ந்து அத்தேவர்கள் நகைத்து வாராதிருந்து விட்டனர். இதனைக்கண்ட, புதிய தபோபலமுடைய கௌசிகர்ப் பெற்றி, பட்டம்பூட்டிய பெரிய யானையையுடைய திரிசங்குவைப் பார்த்து, "நானே என் தபோபலத்தினால் கட்டளை யிடுகிறேன். நீ சுவர்க்கம் போகக்கடவாய்" என்று சொல்ல, அம்மன்னவனும் அம் மந்திர வலியையுடைய மானத்திலேறி உயர்ந்து சென்றான்.

குறிப்புரை :—தேவர்களும் இச்செயலுக்குச் சம்மதியாமலும் அவி பெற்று அநுபவிக்கொடாமலும் இகழ்ந்திருந்ததால், கௌசிகத் தாபதர்,

மிருதியும் கோபங்கொண்டு, தமது தபோ வலிமையினால், திரிசங்கு மன்னனை மந்திர வலியுடைய திவ்ய விமானத் தேற்றித் தபோபலத்தாற் சொர்க்க மேற்றினர் என்பதாம். என்னோ - என்ன ஆச்சரியம்; "ஒ"- வினைப்பொருட்டு. அனல் + துறை = அக்கினித்துறையிற் செய்யும் யாக காரியம். விரைசல் = சேரல். வல்லை = விரைவு. விழுமிது - நல்லது; இகழ்ச்சிக் குறிப்பு; விழுமம் = நன்மை. நக்கார் - நகைத்தார். புரைசைமாகளிறு = பட்டத்துப் பெரிய யானை; "களிறு"- ஆண்யானை; மதம் (களி) உடையதாகலின். துறக்கம் = ஸ்வர்க்கம். யானோ - "ஒ" காரம் தேற்றப்பொருளது. உரை செய்தல் = விரித்துச் சொல்லல். தவத்தின் - தவத்தினால்; "இன்"-மூன்றன் பொருளில் நின்றது. ஓங்கல் - உயர்தல். உம்பர் - ஏழனுருபு.

ஆங்கவன் துறக்கம் எய்த அமரர்கள் வெகுண்டு நீசன்
ஈங்குவந் திடுவ தென்னே இருநிலத் திழிக என்னத்
தாங்கலில் வீழ்வான் மற்றுத் தாபத சரணம் என்ன
ஓங்கினன் நில்நில் என்ன உரைத்துரு மொக்க நக்கான். ௩௩௭.

பொழிப்புரை:—அப்போது திரிசங்கு மன்னன் சுவர்க்கம் வந்து சேரவே, தேவர்கள் கோபங்கொண்டு, "நீச வுருவினன் இவ்வுலகத்து வந்து சேருவது என்ன ஆச்சரியமான செயலாயிருக்கிறது!" "இப்புலையன் பெரிய பூமியினிடத்து இழிந்து வீழ்க" என்று கோபித்துச் சொல்ல, உடனே, அம்மன்னன், பூமியில் தலைகீழாக வீழ்வானாகி, "கௌசிகத்தாபதரே! இதோ கீழே வீழ்கிற யான் உமது அடைக்கலம்" என்று பெருங் குரலுடன் சொல்லக், கௌசிகத்தாபதர் உயர்ந்து நின்றவராகி, "அங்ஙனே நில் நில்" என்னச் சொல்லி இடிபோற் கர்ஜித்து நகைத்தார்.

குறிப்புரை:—திரிசங்கு மன்னன் அப்புலைச் சரீரத்துடனே சுவர்க்கஞ் சேரக் கண்ட - இதுவரையில் நிகழ்ந்திடாத செயலாகலின் - தேவர் கோபித்தனராகி, திவ்ய சரீரம் பெறாது ஒரு நீச சரீரம் இத்திவ்ய உலகத்தில் வந்து இவ்வுலகையும் அபரிசுத்தமாக்கிடல் கூடாதென, அவனைப் பூமியில் வீழச் சொல்லினர் என்பது கருத்து. "மந்திர வலியினால் உயர்த்துகுரு வொருவனைத் தகித்தல் தகுதியோ?" எனக் கௌசிகர் கோபித்

தனர் என்பதாம். இழி + க = இழியக்கடவன்; "க"-வியங்கோள்வினை முற்று விகுதி. தாங்கல் = பூ; எவற்றையும் தாங்கி நிற்றலான் என்க இது ஆகுபெயர்; பொறை யென்னுஞ் சொல் பூமி என்பதை யுணர்த்தி நிற்றல் போலவா மென்ப. வீழ்வான் - திரிசங்கு மன்னன்; முற்றெச்சம். மற்று - வினைமாற்று. தாபத!- விளிவேற்றுமை; தவத்தினையுடையாய் என்பது பொருள் (வடமொழி); சரணம் - அடைக்கலம் (வடமொழி) ஓங்கல் - உயர்(ந்து இருத்)தல். உருமு + ஒக்க = உருமொக்க "உருமு"- இடி. "ஒக்க"- சமானமாகி. நக்கான் - நகைத்தான்; கோபச்சிரிப்பு. தன் தவத்தால் எதுவும் செய்யலாம் எனத் துணிவுடன் "நில் நில்" என்றனர் என்பதாம்.

பேணலா திகழ்ந்த விண்ணோர் பெரும்பதம் முதலாம் மற்றைச்
சேணமுழு தமைப்பன் என்னாச் செழுங்கதிர் கோணாள் திங்கள்
மாணொளி கெடாது தெற்கு வடக்கவாய் வருக என்று
தாணுவோ டேனை எல்லாம் சமைக்குவன் என்னும் வேலை. கஙஎ.

பொழிப்புரை :—மந்திரவலியைப் போற்றாமலும் அதன் பயனைத் தருதற்குச் சம்மதிக்காமலும் இகழ்ந்து தள்ளிய (உலகினரது மந்திரவலியையும் யாகப்பொருள்களாகிய வரிகளையுமே தமக்கு துணையாக் கொண்டு அதிகாரிகளாக நிலைத்திருக்கும்) தேவர்களது பெரிய பதவிகள் முதலிய மற்றைய இடங்களுமுடைய சுவர்க்கம் (அதிகாரஸ்தானங்களை) முழுதும் வேறாகவே இன்று நான் (எனது தவ மகிமையாலும் எனது சுற்றாறு முனிவரது மந்திரவலியாலும்) உண்டாக்கி வைக்கிறேன் என்றுகூறி, சூரியன் சந்திரன் மற்றக் கிரஹங்கள் நக்ஷத்திரங்கள் முதலிய மாட்சிமை பொருந்திய தங்கள் ஒளி கெடாமல் (கிழக்கு மேற்காக இயங்கும் இயக்கம் நீங்கி) தெற்கு வடக்கவாய் வரக்கடவனவாம் என்று சொல்லி, மற்றும், நிலையியற் பொருள் இயங்கியற்பொருள் (ஸ்தாவர ஜங்கமங்)கள் எல்லாம் இப்போதே உண்டாக்குவேன் என்னும் போது.

குறிப்புரை :—மந்திரவலியும் தபோ வன்மையும் ஆத்மதத்வ - பிரகிருதிதத்வ உணர்ச்சியும் உடையவர் ஆகலின், வேறான சுவர்க்க பதவிகளும் உலகப் பொருள்களும் உண்டாக்க முனைந்தனர் என்பதாம். பேணலாது - போற்றாமல்; பேண் + அல் + ஆ + து "அல்" = சாரியை

"ஆ"-எதிர்மறை; "து"- வினையெச்ச விகுதி. விண்ணோர்—தேவரு லகவாசிகள்; அதிகாரி தேவர்கள் என்றுமாம். பதம்—பதவி; இருப் பிடம் அல்லது அதிகாரத்தானங்கள் என்றுமாம். முதல்+ஆம்—முத லாகிய. மற்று+ஐ-மற்றை—வேறுபதங்களையுமுடைய; சேண்—ஸ்வர்க் கம்; உயர்பதம். அமைப்பல் - "ப்+அல்"- "ப்"- எதிர்கால இடைநிலை; "அல்" தன்மை யொருமை வினைமுற்று விகுதி. செழுங்கதிர்—சூரி யன்; இங்கு, செழுமை உஷ்ணதிக்கியத்தை யுணர்த்தியது. கோள்+ நாள்—கோணாள். கோள்களும் நாள்களுமாம்; கோள்கள்—கிரஹங்கள்; நாள்கள்—நக்ஷத்திரங்கள். திங்கள்—சந்திரன். மாண் ஒளி—மாட் சிமை பொருந்திய பிரகாசம். தெற்கு வடக்க+ஆய்—தெற்கிலிருந்து வடக்கு நோக்கிச்செல்லும் இயக்கம் உடையனவாக என்பது பொருள்; வடக்க - வடக்கன என்பதாம். தாணு - (ஸ்தாணு—வடமொழி) நிலையி யற் பொருள்கள்; "ஸ்த" நிலைத்தல் (வடசொற் பகுதி) அசரம் அல்லது ஸ்தாவரம் என்பதாம். ஓடு—எண்ணுப்பொருள். ஊர்வ - ஊருரும் பிராணிகள் அதாவது ஸஞ்சரிக்கும் இயல்புடையவைகள்; இயங்கியற் பொருள் என்பதுமதுவே; இதனைச் "சர" மென்றும் "ஜங்கமம்" என் றும் சொல்வர். சமை+க்+கு+வ்+அன் - சமைக்குவன்—உண்டாக்கு வேன்; "க்"- சந்தி; "கு" சாரியை; "வ்"-எதிர்கால இடைநிலை; "அன்" தன்மையொருமை வினைமுற்று விகுதி. வேலை—போது.

நறைத்தரு உடைய கோனும் நான்முகக் கடவுள் தானும்
கறைத்தரு களனும் மற்றைக் கடவுளர் பிறரும் தொக்குப்
பொறுத்தருள் முனிவ நின்னைப் புகல்புகுந் தவனைப் போற்றும்
அறத்திறன் நன்று தாரா கணத்தொடும் அமைக அன்னான். ககஅ.

பொழிப்புரை:—பரிமள மலர்தரும் கற்பகம் முதலிய தருக்களை யுடைய அரசனாகிய இந்திரனும், நான்கு முகங்களையுடைய தேவனாகிய பிரமனும், நஞ்சைக்கொண்ட கழுத்தினையுடைய சிவ பிரானும், மற்று முள்ள தேவர்கள் பிறரும் கூட்டமாக வந்து சேர்ந்து, "கௌசிக முனி வரே! பொறுமை காட்டியருளல் வேண்டும்; உம்மை அடைக்கலம் புகுந்தவனாகிய அம்மன்னவனைக் காப்பற்ற முயன்று கொண்டிருக்கும் உமது தர்மாசரணை மிகவும் நல்லதே யாகும்; அவன் நக்ஷத்திரக் கூட் டங்களில் ஒருவனாக அமைந்திடுக."

குறிப்புரை:—இம்மாதவ ஞானியுடன் எதிர்த்து நிற்பின், தத்தமது பதவிகளும் கெட்டு உலகு நிலைகுலைவதன்றி இயற்கையும் கெடும் என்பதை யுன்னி, எத்தேவரும் சேர்ந்து அம்முனிவரைச் சமாதானப் படுத்த முயன்றனர் என்பதாம்; பிரார்த்தனையுடன் நில்லாது அவரது பிரயத்தனத்திற் கௌரவம் காட்டினலன்றிக் கோபமும் ஆக்ரஹமும் நீங்கா வெனக்கருதி, அத்திரிசங்குவைச் சுவர்க்க வீதியில் நக்ஷத்திரங்களில் ஒன்றாகத் தனிப்பத மளித்தனராம். நறை = மணம்; தரு - விருக்ஷம். கோன் = அரசன்; இந்திரன் -"ன்"- சாரியை. தான் = அசை கறை—விஷம்; தருதல்-பெறல். களன் = கழுத்தினையுடையவர்; சிவன். களம் = கழுத்து (வடமொழி); தொக்கு = கூடி; தொகு = பகுதி; பகுதி இரட்டித்துக்காலம் காட்டியது. பொறுத் தருள் - "அருள்" மரியாதை குறிக்கும் துணைவினை. புகல் - அடைக்கலம்; சரண் புகுந்தவன்—திரிசங்கு மன்னன். அறத்திறன் = அறத்தின் திறமை; தர்மாசரணை என்பதாம். நன்று - நல்லது; தமது சம்மதியை யளித்தனர் என்பதாம். தாராகணம்-நக்ஷத்திரக்கூட்டம் (வடசொற்றொடர்) "கணம்"-தொகுதி.

அரசமா தவனீ யாதி ஐந்துநாள் தென்பால் வந்துன்
புரைவிளக் கிடுக என்னுக் கடவுளர் போய பின்றை
நிறைதவன் விரைவின் ஏகி நெடுங்கடற் கிறைவன் வைகும்
உறைவிடம் அதனை நண்ணி உறுதவம் உஞற்றும் காலை. ௧௧௬

பொழிப்புரை:—"நீர் ரிஷிச்ரேஷ்டர்களில் ஒருவராவீர்; ஐந்து நக்ஷத்திரங்கள் தென் திசைக்கு வந்து உமது புகழை விளக்கிச் சென்று கொண்டிருக்கட்டும்" என்று வாக்குறுதி கொடுத்துத், தேவர் கூட்டத்தினர் மறைந்து போனபிறகு, நிறைந்த தவத்திற் சிறந்தவராகிய கௌசிக முனிவர், மீண்டும் தவ வலியைப் பெருக்கிக் கொளற்காக விரைந்து சென்று நீண்ட கடல்கட்குத் தலைவனாகிய வருணதேவன் தங்கியிருக்கும் இடமாகிய மேற்குத்திசையைச் சேர்ந்து மிக்க தவத்தினைச் செய்யும்போது.

குறிப்புரை:—மற்றும் அவரை ரிஷிச்ரேஷ்டர்களில் ஒருவராகவும் ஒப்புக்கொண்டு, அப்பெருமை விளங்கிடுவதற்காக நக்ஷத்திரங்களில் ஐந்தினைத் தென்பாற் செல்லவும் அமைத்தனராம் என்க; இந்த ராஜ

உத்வேகமாகிய கோபச்செயலால் தமது வலிமை குறைந்தமை யுண்ணி அதனை மீண்டும் நிறைத்திடல் கருதி, மேற்றிசை சென்று கடுந்தவம் புரிந்தனர் என்பதாம்; கீழ்த்திசைத் தவம் திலோத்தமை பாற் கொண்டிருந்த காமத்தாலும், தென்றிசைத்தவம் திரிசங்குவிற்காகத் தேவர் பாற்கொண்டிருந்த கோபத்தாலும் அழிந்து போயினமை யுணர்த்தப் பெற்றது; இவற்றொடு முன்னம், கையடைப்படலத்து, பத்தாஞ் செய்யுளின், இரண்டாமடியிற் கூறிய "தவஞ் செய்வோர்கள் வெருவாச் சென்றடை காம வெகுளியென"- என்னும் உதாரணத்தையும் கூட்டி, கௌசிக முனிவரது அனுபவ உதாரண விளக்கத்தை மெய்ப்பித்திடல் நன்று. அரச மாதவன் - அரசன்+மா+தவன்—"அரசன்"- சிரேஷ்டன் என்பதாம்; அதாவது மாதவ சிரேஷ்ட(ரில் ஒருவ)ன் என்பது பெறப்பட்டது; அரச மாதவன் என்பதற்கு "ராஜரிஷி" என்னும் பொருள் கூறலாமாயினும், பொருந்தாமை காண்க; என் எனில், ராஜரிஷி அல்லது ராஜமுனி யென்பதற்கு "ராஜ்யத்தையே ஆச்ரமமாக் கொண்டு முனிவருத்தியைக் கைக்கொண்டவன்" என்பதே பொருள் காணப்படுதலின் என்க. "ராஜ்யம் ஏவ ஆச்ரம: தஸ்மிந் முநி:- ராஜமுநி என்பது சிறந்த வ்யாக்யாதா மல்லிநாதரது உரையாம்; ஆகையால், இதற்கு (அரசமாதவன் என்றதற்கு) "முனிக்கோ" என்பதைப்போல் "ரிஷிச்ரேஷ்டன்" என்பதே பொருளாக்கொள்ளல் பெற்றது; ஆதி-ஆ(கு)தி - என்பதாம். ஐந்து நாள் - ஐந்து நக்ஷத்திரங்கள்; அவையாவன:—அநுஷம் கேட்டை மூலம் பூராடம் உத்திராடம்" என்பன என்பர். புரை - பெருமை; புகழாம். விளக்கிடுக -"இடு"-துணைவினை. கடவுளர் - தேவர். பின்றை -"பின்" என்னும் இடைச்சொல்லின் திரிபுகளுள் ஒன்று. நிறைதவன் - (வினைத்தொகை) நிறைந்த தவ வலிமையுடையான் என்பதாம்; தவவலியை நிறைத்திடும் முயற்சியுடையான் என்பதுமாம். நெடுமை+கடல்+கு+இறைவன் - வருணதேவன்; இத்தேவன் உறைவிடம் மேற்றிசை யாம் என்பர். உறு+தவம் - "உறு"—மிகுதி. உஞற்றல்—செய்யல். காலை—போது.

குதைவரி சிலைவாள் தானைக் கோமகன் அம்பரீடன்
சுதைவரு மொழியன் வையத் துயிர்க்குயி ராய தோன்றல்
வதைபுரி புருட மேதம் வகுப்பவோர் மைந்தற் கொள்வான்
சிதைவில கனகம் தேர்கொண் டடவிகள் துருவிச்சென்றான், ௧௨௰.

பொழிப்புரை :—குதையும் கட்டுமுடைய வில்லையும் வாளையும் உடைய சேனைகட்கு அரசனாகிய அம்பரீஷன் என்னும் மன்னவன், அமிர்தம்போற் சொல்லுடையவனாயினும், உலகினுயிர்கட்கு உயிர்போல் இன்பு செய்யும் குணத்தொடு தோன்றினவனாயினும், ஒரு பெரும் பொது நன்மையைக்கருதி, வதம் புரியும் தொழிலையுடைய "நர பசு" யாகமொன்றைச் செய்தற்காக ஒரு சிறுவனை விலைக்குக் கொள்ளும் பொருட்டு, அழிவில்லாத மிக்க பொன்னைத் தேர்மீதேற்றிக் கொண்டு, பார்ப்பனர் வாழும் காடுகள் தோறும் தேடிச் சென்றான்.

குறிப்புரை :—"இனிய சொல்லினன் ஈகையன் எண்ணினன், வினையன் தூயன் விழுமியன் வென்றியன்" ஆயினும், அம்பரீஷமன்னன், வதைத் தொழிற்குரிய "புருடமேதம்" செய்தற்கு ஒருப்பட்டமை தீய செயலன்றோ எனின்; அன்றாம். அச்செயல் தந்நலம் நீக்கிப் பொதுநலங்கருதி, உலகுயிர்களின் நலத்தைக் கோரி, ஒரு மத வுண்மையைத் துணைகொண்டு, செய்யப்படுவதாகலின் என்க. ஒரு சமயச் சார்புடையவர், அச்சமயம் கூறும் கொள்கையெல்லாம் நன்மையே யாம் என நம்பிக்கை கொண்டு, அச்சமயக் கொள்கைகளைச் செய்யின் குற்றமுடையவரெனக் கருதப்படாரென்ப. பயனற்ற கொள்கைகளை யடிப்படையாக் கொண்ட அம்மதம் ஒருவாறு குற்றமுடையதாக ஆராய்ச்சியிற் கொள்ளப்படுமாயினும், அம்மதச் சார்புடையாரை அக்கொள்கைகளைப் பற்றுவதாற் குற்றமுடையவரென்று கருதுதல் நியாய விரோதமாமென்க. இவ்வுண்மையை எல்லாத்தேயத்தினரும் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள்.

**Professor Perry,** opens his article on "**Religious Experience**" with the words :—

"The least religious experience is so mysterious and so complex, that a moderate degree of reflection upon it, tends to a sense of intellectual impotence."

*　　*　　*　　*

"The definition of religion as our union with God has proved satisfactory to religious minds only on account of the other emotional term, "God." The word

"God" too has been proclaimed as undefinable for the very same reasons as the term "Religion."

* * * *

"God, whatever notion of divinity man may have had, has been from the begining and is still an idea of moral significance to every one who uses the word and believes in the existence of a God."

"God, to the savage as well as to the Christian apologetic of the twentieth century, is that power which forces upon men a definite line of conduct and every believer in God, considers that, the duty of his life, which in his opinion he trusts to be the will of his God."

* * * *

"When **Jephtha, the Judge of Israel,** thought that **Yahveh** demanded of him the sacrifice of his daughter, as a burnt offering, he obeyed with a bleeding heart. From the stand point of his belief, his act was moral, for, it was according to his religion and his conception of God."

"**Ximenes,** one of the most uncompromising inquisitors of Spain, had thousands of victims burned at the stake, and yet, it is said, that he was so tender hearted that he could not bear the groans and cries of the suspected heretics, whom he ordered to be tortured on the rack. He appears to us as a villian and a hard hearted scoundrel, but the truth is that, from the stand point of his conscience, his infamous "**autos da fe**" were truly moral acts which with logical necessity were derived

from his conception of "God." As was his religion so was his morality. We cannot blame him, we must blame his religion. From the higher stand point of a modern God conception his acts were immoral, if judged by present standards, and their badness only proves how important it is for us to have the right kind of religion."

குதை=வில்லில் அம்புவைத் தெய்யுமிடம். வரிசிலை - "வரி"= கட்டு. வாள்=கத்தி. தானை=சேனை. கோமகன்=அரச குமாரன்; அரசன் என்பதாம். அம்பரீடன்=அம்பரீஷ மன்னவன்; புராண புருஷர்களில் மிக்க நல்லவனும் பக்தனும் ஞானியுமாகக் கருதப் பெற்றவன்; சுதை+தரு+மொழியன்=இனிய சொல்லினன் என்பதாம்; "சுதை" =அமுதம்; (வடமொழி) "தருதல்"=பெறுதலுமாம். வையத்து உயிர்க்கு உயிராய தோன்றல்—"தோன்றல்"=தோன்றினவன் (பிறந்தவன்); சாதியொருமைப் பெயர். வதை=(வடமொழி) கொலை. புருடமேதம் - நரமேதம் ; அல்லது நரபசுயாகம் (வடசொற்றொடர்) மைந்தன்=ஆண்மகன். கொள்வான் - "கொள்தல்"=விலைக்கு வாங்குதல்; " வான் "- வினையெச்சப்பொருட்டு. சிதைவு இல=கெடாதனவான; வினைப்பெயர். கனகம்=பொன்; இங்கு விலை நாணயத்தைக் குறித்து நின்றது. அடவி=காடு. துருவல்=தேடல்.

நற்றவ ரிசிகன் வைகும் நனைவரு பழுவம் நண்ணிக்
கொற்றவன் வினவ லோடும் இசைந்தனர் குமரர் தம்முள்
பெற்றவள் இளவல் எற்கே என்றனள் பிதாமுன் என்றான்
மற்றைய மைந்தன் நக்கு மன்னவன் தன்னை நோக்கி.　　கஉக

பொழிப்புரை :—நல்ல தவத்தையுடைய ரிசீகமுனிவர் குடும்பத்துடன் தங்கியிருக்கும் குளிர்ந்த சோலையுடைய ஆச்ரமத்தைச் சேர்ந்து அம்பரீட மன்னவன், தனது வேண்டுகோளைச் சொல்லிக் கேட்டவோடும், பெற்றோர்கள் இசைந்தார்கள் ; ஆயினும், குழந்தைகளைப் பெற்றவளாகிய தாயானவள், " இளையமகன் எனக்கு வேண்டும்" என்றனள் ; தந்தையோ, " மூத்தவன் எனக்கு வேண்டும் " என்றனன்,

மற்றோனாகிய - பின்னும் மூன்னுமில்லாத - நடுமைந்தனாகிய சுனச்சேப னை, சிரித்து, அவ்வம்பரீஷ மன்னனைப்பார்த்து,

குறிப்புரை :—அச்செயல் பொது நலக்குரிய செயலென்றும், அர சனுடைய ஆணை யென்றும் அப்பெற்றோர்கள் தெரிந்துளாராயினும், தமக்குயிர் போன்ற அன்புக்குரிய பொருள்களான கடைசி மகனையும் முதல் மகனையும் அவ்விலைக்குக் கொடுத்திட மறுத்தனர் என்பதாம். நல்+தவ+ரிசிகன்=நல்ல தவத்திற் சிறந்த ரிசீக முனிவன்; இந்த ரிசீகனென்பவர், கௌசிக முனிவற்கு முன்னவளாகிய "கௌசிகி" என்பவளை மணந்தவர் என்பது புராணக் கூற்று. நனை=மலர்; பழு வம்=சோலை; இங்கு இச்சோலையை யுடைய ஆச்ரமத்தைக்குறித்தது. நண்ணல்=சேரல். கொற்றவன் - கொற்றம்+அன்=வெற்றியுடைய வனான அம்பரீஷன்; "கொற்றம்"=வெற்றி; "அன்"=படர்க்கைப் பெயர் விகுதி. இசைதல்=ஒப்புக்கொள்ளல். குமரர்=புத்திரர்; (வடமொழி) தம்+உள் - "தம்" - அசை; உள் - ஏழனுருபு. பெற்ற வள்=தாய். இளவல்=இளையோன் - "அல்"=பெயர் விகுதி; தோன் றல் - என்பதில் "அல்" - போல. எற்கு - என்+கு=அகரச்சாரியை பெறாது "கு" என்னும் நான்கனுருபை யேற்று நின்றது. "ஏ"-காரம் தேற்றப் பொருட்டு. முன்=முன்னவன் (விகுதி புணர்ந்து கெட்ட பெயர் என்பர்.) மற்றைய=வேறான. மைந்தன் - குமாரன். நக்கு - நகைத்து; நகு=பகுதி. தன்=அசை.

கொடுத்தருள் வெறுக்கை வேண்டிற் றெற்கமாம் விழுமம் குன்ற
எடுத்தெனை வளர்த்த தாதைக் கெனஅவற் கீந்து வேந்தன்
தடுப்பரும் தேரில் ஏற்றித் தாண்டுமாத் தூண்டிச் செல்லச்
சுடர்க்கதிர்க் கடவுள் வானத் துச்சியஞ் சூழல் புக்கான். ௧௨௨

பொழிப்புரை :—"அம்பரீஷ மன்னரே! என்னைத் தாம் பெற்றுக் கொளற்கு விலைப்பொருளாக, என்னைப் பெற்றெடுத்து வளர்த்த என் தந்தையினிடம், அவரது தரித்திரமாகிய துன்பம் நீங்கும்படியாக, அவர் வேண்டியதாகிய செல்வத்தைக் கொடுத்தருளக் கடவீர்" என்று சொல் லிடவே, மன்னவன் அங்ஙனமே, அவன் தந்தைக்கு அப்பொருளைக் கொடுத்து, தடுக்க முடியாத தேரின்மேல் அம்மைந்தனை யேற்றிக் கொண்டு, பாய்ந்து செல்லும் குதிரைகளைத் தூண்டிக் கொண்டுபோக,

சூரியன் வானத்துச்சிக்கு வரும்போது, அழகியதொரு சோலையிற் புகுந்தனன்.

குறிப்புரை :—குடும்பத்தில் விருப்பப்படாத வொருவனாக இருந்து வாழ்தலைக்காட்டிலும் ஒரு பொதுநலக் காரியத்துக் கேனும் உதவலாம் என்று ஒருவாறு நினைவு கொண்டவனாகி, மைந்தன் சுனச்சேபன் பெற்றோரின் விருப்ப மின்மையையும் அரசனது ஆக்கினையையும் தனது குடும்ப வறுமையையும் நோக்கி யொப்புக் கொண்டனன் என்பதாம். கொடுத் தருள் - "அருள்"= துணைவினை. வெறுக்கை = செல்வம்; ஞானிகளால் வெறுக்கப்படுவதென்பதாம். வேண்டிற்று - வேண்டியது; "து" வ்விகுதியும் "இன்" சாரியையும் பெற்ற வினைப் பெயர். ஒற்கம்=வறுமை; விழுமம்=துன்பம். குன்ற=குறைய; நீங்க. தாதை= தந்தை (தாத - வடசொற்றிரிபு) அவற்கு - அவன்+கு. ஈந்து= கொடுத்து; ஈ=பகுதி. தடுப்ப+அரும்; தடுப்பரும் - விகாரம். தாண்டும்+மா=தாண்டிச்செல்லும் மிருகம் அதாவது குதிரை யென்பதாம்; "மா"=மிருகம் ; பரிமா (குதிரை) என்பது போல. சுடர்+கதிர்+கடவுள்=சூரியன்; உஷ்ணம் பொருந்திய கிரணங்களையுடைய தேவன் என்பதாம். வானத் துச்சி - "உச்சி" யென்பது இங்குப் "பொழுதைக்" குறித்தது. அம்+சூழல்=அழகிய சோலை ; சூழல்=சூழ்ந்துள்ள இடம்.

அவ்வயின் இழிந்து வேந்தன் அருங்கடன் முறையின் ஆற்றச்
செவ்விய குரிசில் தானும் சென்றனன் நியமம் செய்வான்
அவ்வியம் அவித்த சிந்தை முனிவனை ஆண்டுக் காணாக்
கவ்வையி னோடும் பாத கமலங்கள் உச்சி சேர்த்தான். ௧௨௩

பொழிப்புரை :— அந்த அரசன் அம்பரீஷன் தேரினின்றும் இறங்கித் தான் செய்யவேண்டிய அரிய நித்திய நியமங்களைக் கிரமமாகச் செய்து கொண்டிருக்கவே, செம்மை பொருந்திய குமாரனாகிய சுனச்சேபனும் தன்னுடைய நித்திய கர்மங்களைச் செய்யும் பொருட்டு அந்தச் சாலைக்குச் சென்று, அங்கே, வஞ்சம் முதலான குற்றங்களை நீக்கிய மனமுடைய கௌசிக முனிவரைக் கண்டு, துன்பத்துடனும் அவரது பாத தாமரைகள் தனது முடியிற் படும்படி வணங்கி நின்றான்.

குறிப்புரை :—தனது அம்மானாகிய கௌசிக முனிவரது தபோமகிமையைக் கேட்டுள்ளவனாகலின், அவரது ஆச்ரமத்தைக் கிட்டின

வுடன், அந்நினைவுதோன்றி அம்மஹானைக்கொண்டு தனது காரியத்தைச் சௌகரியமாகவும் ஸாதகமாகவும் நிறை வேற்றிக் கொள்ளலாமென்று எண்ணி யவரைக் கிட்டி வணங்கினன் என்க. வயின்=இடம். இழிதல்=இறங்கல். அருமை+கடன்=அரியவான நித்திய கடமைகள் என்பதாம். முறையின்=கிரமமாக. ஆற்றல்=நிறைவேற்றல். செவ்விய=செம்மையுடைய. குரிசில்=குரு ஸ்ரீ யென்னும் வடமொழிச்சிதை வென்பர்; அரசிளங்குமரன் என்றுமாம். நியமம்=கடமை (வடமொழி) செய்வான் - "வான்"=வினையெச்ச விகுதி. ஔவியம் - அவ்வியம்; பொறாமை; குற்றம் என்பது பொருள். அவித்தல்=ஒழித்தல். சிந்தை - வடமொழி ஆவீறு ஐயாயிற்று. முனிவன்=கௌசிக முனிவன். ஆண்டு=அவ்விடம். காணு=கண்டு (உடன்பாட்டு வினையெச்சம்.) கவ்வை - துன்பம். பாதகமலம் - பாதாரவிந்தம் (வடமொழி) உச்சி - தலையினுச்சி.

விறப்பொடு வணக்கம் செய்த விடலையை இனிது நோக்கிச்
சிறப்புடை முனிவன் என்னை? தெருமரல் செப்பு கென்ன
அறப்பொருள் உணர்ந்தோய் எந்தன் அன்னையும் அத்தன் தானும்
உறப்பொருள் கொண்டுவேந்தற் குதவினன் என்றான் உற்றோன். ௧௨௬

பொழிப்புரை:—பயத்துடன் வந்து வணங்கினவனாகிய இளம் பிராயமுடைய சுனச் சேபனை, சிறப்புப் பொருந்திய முனிவராகிய கௌசிகர் இனிமையாகப்பார்த்து, "உனக்கு இக்கலக்கம் வந்த காரணமென்ன? சொல்லக்கடவாய்!" என்று கேட்க, துன்பமுற்ற அக் குமரன், முனிவரைப்பார்த்து, "தர்மஸூக்ஷ்மங்களின் உட் பொருளை நன்குணர்ந்த முனிவரே! எனது தாயாகிய கௌசிகையும், எனது தந்தையாகிய ரிசீகரும் மிகுதியான பொருளை எனக்குரிய விலையாகப் பெற்றுக் கொண்டு இந்த அம்பரீஷ மன்னற்கு என்னை யாகபசுவாக் கொடுத்தனர்" என்றான்.

குறிப்புரை:—சுனச் சேபன், மாமனாகிய அந்தக் கௌசிக முனிவரிடத்தில், தனக்குற்றதுயரத்தைப் பயத்துடன் சொன்னான் என்பதாம் விறப்பு=அச்சம். வணக்கம் செய்த - வணங்கிய. விடலை=இளைஞன். சிறப்பு=தவச் சிறப்பு. என்னை - ஐகாரச்சாரியை பெற்ற "என்"

என்னும் வினா. தெருமரல்=மயக்கம், கலக்கம். செப்புக - வியங்கோள் வினைமுற்று; செப்பு=சொல்லு. அறம்+பொருள்=வேற்றுமைத் தொகை; அறச்செயல்களின் பொருள் என்பதாம். உணர்ந் தோய் - வினையாலணையும் பெயர் விளியேற்று நின்றது; "ஆய்"- என்னும் வினையுருபு "ஓய்"- என்னும் செய்யுள் விகாரம் பெற்றது. அன்னை= தாய். அத்தன்=தந்தை. தான் - அசை. உறு=மிகுதி; பொருள்= பொன். கொண்டு=பெற்று. உற்றோன்=துன்ப முற்றோன்; சுனச் சேபன்.

மைத்துன னோடு முன்னோன் வழங்கிய முறைமை கேளாத்
தத்துறல் ஒழிநீ யானே தடுப்பனின் னுயிரை யென்னாப்
புத்திரர் தம்மை நோக்கிப் போகவேன் றோடும் என்ன
அத்தகு முனிவன் கூற அவர்மறுத் தகறல் காணா. கஉரு

பொழிப்புரை :—தனது தமக்கையும் தனது மைத்துனரும் செய் துள்ள முறையல்லாக் காரியத்தை, அத்தகுதியுடைய கௌசிக முனிவர் கேட்டுத் தெரிந்துகொண்டு, அம்மருகனைப் பார்த்து, "நடுக்கம் நீங்கு வாய் நீ; யானே உனது உயிரை யழிவதினின்றும் தடுத்துக்காக்கிறேன்" என்று சொல்லித், தன்னை வஞ்சித்து ஒளிந்து போய், வஸிஷ்டரின் போரில் இறவாதொழிந்து திரிந்து கொண்டிருக்கும் தனது புத்திரர் கள் நால்வரையும் அழைத்து, அவரைப் பார்த்து, இச் செய்தியை விவரமாகச் சொல்லி "இக்குமாரனுக்குப் பிரதியாக இம்மன்னனுடன் போங்கள்" என்று தனித்தனிச் சொல்லவும், இப்புத்திரர்கள் அவ் வாணையை மறுத்து நீங்கிப்போதலைக் கண்டு,

குறிப்புரை :—இங்ஙனம், நூன்முறையும் உலகமும் மனமும் ஒவ் வாத ஒரு காரியத்தை வறுமை காரணமாகச் செய்தார்களே என்று கவன்றனராயினும், அப்பெற்றோரை யாதும் கூறாமலே, இவ்வாபத்தி னின்றும் தன் மருமகனைக் காத்திடலாமெனநினைந்து, அவனது வித்தை யிலும் விநயத்திலும் பித்ருபக்தியிலும் மனங்கொண்டு, அன்னவை பெற் றிராதுதிரியும் தனது நான்கு புத்திரரையும் யேவினர் என்க. இச்செயல் கைகூடுமாயின், அரிதிற் பெற்ற தனது தவப்பயனை யழித்துக் கொள்ள வேண்டாமே எனக்கருதினார் என்பதாம். மைத்துனன்=சகோதரி யொடு சேர்க்கையுடையவன் என்பது பொருள்; மிதுனம்=சேர்க்கை

(வடமொழி) இதன் தன்மை=மைத்துனம்; இதனை யுடையான் மைத்துனன் என்று குறிப்பர். முன்னோர் - "ஆள்" எனும் பெண்பாற் பெயர் விகுதி "ஓ" - காரமாக விகாரப்பட்டது. வழங்குதல்=செய்தல். முறைமை=காரியம் என்றுமாம்; எதிர்மறையிலக்கணையாகி "முறையற்ற காரியம்" எனப் பொருள்பட்டு நின்றது என்றும். கேளா - கேட்டு; உடன்பாடு. தத்துறல்=கலக்கம். தடுப்பன் -"அன்"=தன்மை யொருமை வினை முற்று விகுதி. அகறல்-அகல் + தல்=நீங்கல். காணா - கண்டு; உடன்பாடு.

எழுங்கதி ரவனும் நாணச் சிவந்தனன் இருகண் நெஞ்சம்
புழுங்கினன் வடவை தீய மயிர்ப்புறம் பொறியில் துள்ள
அழுங்கலில் சிந்தை யீர்நீர் அடவிகள் தோறும் சென்றே
ஒழுங்கறு புளிஞ ராகி உறுதுயர் உறுக என்றான். ௧௨௩

பொழிப்புரை :—கௌசிக முனிவர், உதிக்கின்ற சூரியனும் நாணும்படியாக இரண்டு கண்களும் சிவந்தவராகியும், தேகத்தின் புறத்திலுள்ள ரோமங்கள் உஷ்ணமடைந்து தீப்பொறிகள் சிதறும்படியாகவும் வடவா முகாக்கினி தீய்ந்து போம்படியாகவும் மனம் சிவந்து போனவராகியும், அவர்களைப் பார்த்து, "இரக்கமற்ற மனமுடையவரே! நீங்கள் காடுகள் தோறுஞ் சென்று ஒழுக்கங்கெட்ட வேடுவர்களாகி மிகுதியும் துன்பத்தை யடையக்கடவீர்கள் என்று சபித்தார்.

குறிப்புரை :—குலாசாரத்தை மதியாமல் பித்ருபக்தியுமில்லாது திரிபவராகையால், அவர்களை ஒழுக்கமில்லாத வேடுவர்களாகவே திரிந்து துன்புறும்படி செய்தனர் என்பதாம். எழும் கதிரவன் - உதிக்கின்ற சூரியன்; "கதிரவன்" - கிரணங்களையுடையவன் என்பதாம். இங்கே கிரணம் உஷ்ண கிரணத்தைக் குறித்து நின்றது; அடைகொடாமல், "கதிரவன்" எனவருஞ் சொல், சூரியனை யுணர்த்துமென்பது மரபு. புழுங்கல்-வெப்பமுறல். வடவை - (படபை-வடமொழிச்சிதைவு) கடலிலிருக்கும் தீயினுக்குப் பெயராம். மயிர்ப்புறம் - என்பதை மொழி மாற்றிப் பொருள் கொள்க. பொறி - தீப்பொறி. துள்ளல் - சிதறல்; வீழ்தல். அழுங்கல் - இரங்கல். ஒழுங்கு + அறு=ஒழுக்கமில்லாத. புளிஞர் - வேடர்; "ஞ்"- பெயரிடை நிலை. உறு + துயர்= "உறு"- மிகுதி.

மாமுனி வெகுளி தன்னால் மடிகலா மைந்தர் நால்வர்
தாமுறு சவரர் ஆகச் சபித்தெதிர் சலித்த சிந்தை
ஏமுறல் ஒழிக இன்னே பெறுகென இரண்டு விஞ்சை
கோமரு மகற்கு நல்கிப் பின்னரும் குறிக்கல் உற்றான். கஉஎ

பொழிப்புரை:—முன்னம் வஸிஷ்ட முனிவரது கோபாக்கினியினால் இறவாது மிருந்து நின்ற அந்தத்தமது புத்திரர் நால்வரையும் எதிராகவே வேடர்களாகும் படியாகச் சபித்துவிட்டு, மருமகனைப் பார்த்து, "நடுங்கிய சிந்தையில் கலக்கம் ஒழிந்திடுக; இரண்டு மந்திரங்களையிப்போதே பெற்றுக் கொள்க" என்று சொல்லிக் கொடுத்துப் பின்னரும் சொல்லுற்றார்.

குறிப்புரை:—அவனது மனோ பயத்தையும் நீக்கித் தேக விபத்துக்கும் இரண்டு மந்திரங்களைச் சொல்லிக் கொடுத்துத் தந்திரமும் கூறுகின்றார் என்பதாம். மாமுனி - வஸிஷ்டர். தன் - அசை. மடிகலா - இறவாத; ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்; மடி+கு+அல்+ஆ = "கு" "அல்"- சாரியைகள். "ஆ"- எதிர்மறை. தாம் - அசை. உறு - மிகவும். சவரர்=வேடர். சலித்தல் - நடுங்கல். சிந்தை- சிந்தா (வடமொழி) ஏமுறல் - கலங்கல். இன்னே - இப்போதே. விஞ்சை=வித்தை (மந்திரம் என்பதாம்) கோமருமகன் - கோமகன் என்பது போல. குறிக்கல்=சொல்லல்.

அரசனோ டேகி யூபத் தனைக்குபிம் மறையை ஆய்தி
விரசுவர் விண்ணு ளோரும் விரிஞ்சன்மால் விடைவ லானும்
உரைசெறி வேள்வி முற்றும் உனதுயிர்க் கீறுண் டாகா
பிரசமென் தாரோய் என்னப் பழிச்சொடும் பெயர்ந்து போனான். கஉஅ

பொழிப்புரை:—தேனூற்றும் மென்மலர் மாலையுடையாய்! அரசனுடன் நீ சென்று, அவன் வேள்வி மண்டபத்திலுள்ள யூபஸ் தம்பத்தில் உன்னைக் கட்டும்போது இந்த மந்திரங்களை யாராய்ந்து சொல்; அப்போதே, தேவர்களும் பிரமனும் விஷ்ணுவும் பரமசிவனும் வந்து சேர்வார்கள்; உடனே புகழ்பொருந்திய அந்த யாக காரியம் நிறைவேறி விடும்; உனது உயிர்க்கும் கேடுகள் உண்டாகமாட்டா "என்று சொல்ல, அவன் தோத்திரத்தொடும் அவ்விடம் விட்டுப் போனான்.

குறிப்புரை :—உயிரும் அழிந்து படாமல், உலகப் பொதுநல காரியத்திற்கும் உதவி புரிந்து, கடவுளர் தரிசனத்தையும் பெறுதற்குப் பாக்கியம் பெற்றவ னிவனேயா மென்பதாம். யூபம் - யாக மண்டபத் தில் யாக பசுவைக் கட்டுந் தூண். அணைக்குபு - கட்டும்போது. மறை - மந்திரம். ஆய்ந்து - ஆராய்ந்து சொல். விரசுதல் - சேர்தல். விரிஞ் சன்—பிரமன். மால்—விஷ்ணு. விடை வலான்—விருஷபத்தை வாஹனமாகச் செலுத்தும் பரமசிவன்; "விடை"- வ்ருஷபம் (வட மொழி) காளை யென்பது பொருள். முற்றும்—நிறைவேறிவிடும் ஈறு (கள்) உண்டாகா-"உண்டாகா"- பலவின் படர்க்கைவினை முற்று. பிரசம் + மென் + தாரோய்—"பிரசம்"—தேன்; "தாரோய்"-தாரான் என்பதன் விளிவேற்றுமையின் "ஆய்"-"ஓ" காரவிகாரம் பெற்றது; பசுவாக விலை கொடுத்துக் கொள்ளும் போது, விற்போர், அப்பசுவை யலங்கரித்துக்கொடுத்தல் மரபாகலின் என்க. பழிச்சு—துதி. பெயர் தல்—நீங்கல்.

மறைமுனி உரைத்த வண்ணம் மகத்துறை மைந்தன் ஆய்ச்
சிறையுறு கலுழன் அன்னம் சேமுதல் பிறவும் ஊரும்
இறைவர்தொக் கமரர் சூழ இளவல்தன் உயிரும் வேந்தன்
முறைதரு மகமும் காத்தார் வடதிசை முனியும் சென்றான். ௬௨௯

பொழிப்புரை ;—அந்தக் குமாரனை சுநச் சேபன், அரசனுடன் அவ்யாகத்துறையிற்சென்று, அம்மந்திரத்தை யாராய்ந்து செபித்திடவே, சிறைகள் பொருந்திய கருடனையும் அன்னப் பறவையையும் விருஷபத் தையும் இவை முதலிய பிறவாஹனங்களையும் ஏறிச் செலுத்தும் கடவு ளர் யாவரும் தேவர்கள் சூழும்படியாக, அவ்யாக பூமியிற் கூடி, இளை ஞனாகிய சுநச் சேபன் உயிரையும் அம்பரீஷ மன்னனது தக்கமுறையி லாரம்பிக்கப் பெற்ற யாகத்தையும் காத்தளித்தார்கள்; இவை முடித் துக் கொடுத்த கௌசிக முனிவரும் தவஞ் செய்யற் பொருட்டு வட திசைக்குப் போனார்.

குறிப்புரை :—மந்திரவலியினால், யாக பூமியினிடத்து உயிர்ப்பலி கொடாமலே தேவதைகளையும் திருப்தி செய்து யாக காரியங்களை நிறை வேற்றுவதன்றியும் அந்தத் தேவதைகளையும் பிரத்யக்ஷீகரிக்கலாம்

என்பது உணர்த்தப்பெற்றது; "எண்ணிய எண்ணியாங் கெய்துப எண்ணியார் திண்ணியர் ஆகப் பெறின்"- ஆகலின் என்க. மறை= மந்திரம். "மைந்தன் மகத்துறை (யில்) மறை (யை) முனியுரைத்த வண்ணம் ஆய" - என முடிக்க. வண்ணம்=மாதிரி. மகத்துறை - "மகம்"=யாகம்; "துறை"=பூமி. ஆய=ஆராய்ந்து ஜபிக்க. சிறை உறு=இறகுகள் பெற்ற. கலுழன் - கருத்மான் என்னும் வடமொழிச் சிதைவு. அன்னம் -ஹம்ஸம் என்னும் வடமொழித்திரிபு; "ஹம்ஸம்"- வடசொல், தமிழாகும் இலக்கணப்படி "அஞ்சம்"- ஆகி, இது, "அன்னம்"- எனத்திரிந்தது. சே - காளை. பிறவும் - ஐராவதம் முதலிய மற்றை மூர்த்திகளையும். ஊர்தல் - ஏறிச் செலுத்தல். இறைவர் - கடவுளர்; தலைமைத்தேவர்; "இறைமை" - தலைமை. தொக்கு- கூடி; தொகு=பகுதி; முதனிலை (பகுதி) யிரட்டித்துக் காலங் காட்டியது. அமரர்=தேவர்; மரணமற்றவர் என்பதாம். சூழல்= சுற்றுதல். இளவல் தன் - சிறுவனுடைய. முறை தரு=கிரமமாக ஆரம்பிக்கப் பெற்ற. "தரல்"- பெறல். மகம் - யாகம் (வடமொழி) காத்தார் - "கா" பகுதி. முனி=கௌசிக முனிவர்.

வடாதிசை முனியும் நண்ணி மலர்க்கரம் நாசி வைத்தாங்
இடாவுபிங் கலைதாம் மைய இதயத்தூ டெழுத்தொன் றெண்ணி
விடாதுபல் பருவம் நிற்ப மூலமா முகடு விண்டு
கடாதிருள் படலை மூடச் சவித்தகெத் தலமும் தாவி. ௧௩௦

பொழிப்புரை:—கௌசிக முனிவரும், வடதிசையைச் சேர்ந்து, மலர்போன்ற வலதுகையை நாசியில் வைக்கவேண்டிய முறைப்படி வைத்துப் பிராணாயாமஞ் செய்து வலப்பக்கத்து நாடியும் இடப்பக்கத்து நாடியும் வலிகெட்டுப் போம்படியாக நன்கு பழகிப் பிரத்தியாஹாரமும் செய்து, நாளையில் சேர்ந்து, தனது இருதயத்தினூடே தாரக மந்திரமாகிய பிரணவமாம் ஓரெழுத்தை விதிப்படி எண்ணித் தியானத்திற் கைவந்து, இங்ஙனம் இடைவிடாது பல பருவகாலங்க ளிருந்து ஸமாதியில் நிலைத்திருக்கவே, மூலாதாரத்தி லிருந்து எழும்பியதாகிய குண்டலினி நாடியானது, ஸ்வாதிஷ்டானம் மணிபூரகம் அநாஹதம் விசுத்தம் ஆஞ்ஞை யாகிய ஆதார மண்டலங்களில் ஏறியிறங்கி நிலைத்தும் ஏறி

யிறங்கி நிலைத்தும் இங்ஙனம் பன்னெடு நாட் பயிற்சியால் மேற்புறமாகிய ஆயிரந்தள முற்ற பிரம்ம ரந்திர ஸ்தானம் பேதித்துத் தடுக்கப்படாத, பரந்து விரிந்த இருட் கூட்டம் மூடிட எவ்வுலகங்களும் தாவிச் சலித்தது.

குறிப்புரை ;—இயம நியம ஆஸநங்களில் தேர்ந்து ரேசக பூரக விதி முறையிற் பழகி ஸஹித கும்பகமும் நீங்கிக் கேவல கும்பகமும் கைவந்துப் பிராணாயாம ஸித்தி பெற்ற கௌசிக முனிச்ரேஷ்டர், கீழ் திக்கில் ரம்பையின் பிரவேசத்தால் தோன்றிய காமசோதனை யிலும், தென்திக்கில் திரிசங்குவின் ப்ரவேசத்தால் தோன்றிய குரோதசோதனை யிலும், மனமழிந்துவிடாமல், இடைவிடாது யோகாங்கங்களிற் பழகிக் கேவல கும்பகம் கைவரப்பெற்ற தன்மையினால், ஓஜா சக்தி பெருகி "எண்ணிய எண்ணியாங்கு" முடிக்கும், ஆற்றலுற்று, இதற்கும் சோதனை யாக வந்த சுநச்சேபப் பிரவேசத்தால் தோன்றிய க்ஷமாசோதனை யாகிய பிரத்யாஹாரத்தும் தேறினவராகலான், மேலே வேறு யாதொரு ப்ரதிபந்தகமும் நேராதபடியே தாரணை தியானங்களிலும் ஏறி, ஸமாதி யில் நன்கு நிலைத்து விட்டார் என்பதாம். வடாதிசை - வடதிசை, விகாரம்; திசை - (திசா - வடமொழி) திக்கு. முனி—மகநசீலர் (விசுவா மித்திரர்) என்பதாம். மலர்க் கரம் - மலர் போன்று குவிந்தகை யென் பதாகும்; "கரம்"- (வடமொழி) கை. நாசி=மூக்கு (வடமொழி); ஆங்கு =அப்படியே, இடா - வலப்பக்கத்து நாடி. (வடமொழி) பிங்கலை இடது பக்கத்து நாடி (பிங்கலா - வடமொழி, இடாவு பிங்கலை - "உ" கரம்=சாரியை. தாம் - அசை; நையு=வலி கெட்டிட. நைதல்= வலிகுன்றல். இதயம்=ஹ்ருதயம் என்னும் வடமொழித்திரிபு. ஊடு =எழுனுருபு. எழுத்தொன்று=ஓரெழுத்து என்பது பொருள்; பிரண வம் என்பதாம்; "ஓம் இத்யேகாக்ஷரம்"- சுருதியாகலின் என்க. எண்ணல்—தியானித்தல். விடாது=இடைவிடாது; தளராது. பல் பருவம் - பலகாலர்; "பருவம்"- (வடமொழி) ருதுக்கள் என்பதாம். நிற்ப - ஸமாதியில் நிலைக்க. மூலம் - மூலாதார ஸ்தானத்திலிருக்கும் குண்டலினி நாடியை யாகுபெயராற் குறித்துளது. மாமுகடு - பெரிய (மிக்க) மேற்புறம்; அதாவது முடிவுஸ்தானமாகிய பிரம்மரந்திர ஸ்தானம்; முகடு=உச்சி. விண்டு=பிளந்து. தடாது=தடுக்கப்படா

மல். இருள் + படலை = இருட்கூட்டம்; "படலை" = பரந்த வடிவு. மூட = மூடிவிட. எத் தலமும் = எந்த உலகமும்; "தலம்" - ஸ்தலம் என்னும் வடமொழித் திரிபு. தாவல் = தாண்டல்.

## வேறு.

எயிலெ ரித்தவன் யானை உரித்தநாள்
பயிலு றத்துரி போர்த்திடும் பண்பெனப்
புயல்வி ரித்தெழுந் தாலெனப் பூதலம்
குயில்வு றத்திக் கொழும்புகை விம்மவே. ௧௯௧

பொழிப்புரை:—முப்புரங்களையும் எரித்தவராகிய சிவபிரான், கஜமுகாசுரனைக் கொன்று அவனது தோலை, தமது தேகத்துடன் செறியச் செய்து, தம்மேலெங்கும் போர்த்துக்கொண்ட தன்மையைப் போலவும், ஆகாயத்தில் மேகம் பரந்து எழுந்ததைப் போலவும், பூமியை நெருக்கிக் கொண்டு நிறைந்த புகை நெருங்கிடவே.

குறிப்புரை:—முனிவரது தபாக்கினியால், உலகெங்கும் புகை சூழ்ந்து நெருக்கி, பரமசிவன் யானைத்தோலைப் போர்த்துக் கொண்ட தன்மை போலவும், ஆகாய மெங்கும் மேகம் விரிந்து எழுந்தது போலவும் எங்கும் இருண்டு கறுத்துப்போயது. எயில் எரித்தவன் - சிவபிரான்; "எயில்" - மதில்; இஃது இங்கு ஆகு பெயராகி நின்று திரிபுரங்களையும் குறித்தது. உரித்தல் = உடலினின்று தசையை வேறாக்கல். பயிலுறுத்தல் = பழகுதல்; உடம்பொடு செறித்தல் என்பது பொருளாம். உரி - பகுதித்தொழிற் பெயர்; தோல் போர்த்திடல் - மூடல். பண்பு = தன்மை. புயல் = மேகம். பூதலம் = (வடமொழி) பூமி. குயில் வுறுத்தல் = நெருக்கல். கொழுமை + புகை-"கொழுமை" = மிகுதி. புகை - புகு = பகுதி. விம்மல் = நெருங்கல், மிகலுமாம்.

தமந்தி ரண்டெல கியாவையும் தாவுற
நிமிர்ந்த வெங்கதிர்க் கற்றையும் நீங்குறக்
கமந்த மாதிரக் காவலர் கண்ணொடும்
சுமந்த நாகமும் கண்சும் புளித்தவே. ௧௯௨

பொழிப்புரை :—இருள் நெருங்கி உலகெல்லாம் பரவவும், அதனால் பரவிய சூரியனது உஷ்ண கிரணக் கூட்டமும் நீங்கிவிடவும், நிறைந்த திக்குப்பாலகர்களது கண்களுடன் திக்குகளைச் சுமந்திருக்கும் யானைகளினது கண்களும் கூசி நின்றன.

குறிப்புரை :—இருள் மிகுந்து, சூரிய வொளியும் மங்கி, திக்குகள் கண்மூடின என்பதாம். தமம் = இருள் (வடமொழி) தாவுதல் = தாண்டிச் செலல்; பரவல் = நிமிர்தல் - ஓங்கி நிற்றல்; கமந்த = நிறைந்த; கமம் = நிறைவு. சுமந்த = தாங்கி நின்ற. மாதிரம் = திக்கு. வெம்மை + கதிர் + கற்றை = "உஷ்ண" "கிரணக்கூட்டம்" சூரியனது ஒளிப் பிழம்பு என்பதாம். நீங்குற - "உற" - துணைவினை. மாதிரக்காவலர் = திக்குப்பாலகர். நாகம் = யானை. கட்புளித்தல் = கூசுதல். உலகு + யானை = உலகி யானை - குற்றியலிகரம்.

திரிவ நிற்ப செகதலத் தியாவையும்
வெருவல் உற்றன வெங்கதிர் மீண்டன
கருவி உற்ற ககனம் எலாம்புக
உருவி உற்றிட உம்பர் துளங்கினர். ௧௩௩

பொழிப்புரை :—பூமியில் உள்ள ஜங்கம ஸ்தாவரங்கள் யாவும் பயப்பட ஆரம்பித்தன; சூரியனுடைய உஷ்ண கிரணங்கள் மீண்டன; மின்னலும் முழக்கலும் முதலிய செய்வனவாகிப் பூமிக்குத் துணைக் கருவிகளாகவுள்ள மின்னல் மேகம் முதலியன உற்றிருக்கும் ஆகாய மெலாம், இப்புகையானது ஊடுருவிப் பாய்ந்திடவே, அவ்வுலக வாஸிகளாகிய தேவர்கள் நடுங்கினார்கள்.

குறிப்புரை :—மண்ணுலகிலுற்ற ஸ்தாவர ஜங்கமப் பொருள்களும் விண்ணுலகுற்ற மற்றைக் கருவிப் பொருள்களும் நடு நடுங்கிக் கலங்கின என்பதாம். திரிவ - (வினைப்பெயர்) இயங்கியற் பொருள்கள்; ஸஞ்சரிக்கும் சரப் பொருள்களாகிய ஜங்கமங்கள் என்பதாம். நிற்ப - (வினைப் பெயர்) நிலையியற் பொருள்கள்; நிலைத்திருக்கும் அசரப் பொருள்களாகிய ஸ்தாவரங்கள் என்பதாம். செகதலம் - ஜகதலம் என்னும் வடமொழித் திரிபாம். வெருவல் - நடுங்கல் (தொழிற் பெயர்) வெம்மை + கதிர் =

"வெம்மை"- சூடு; உஷ்ணமுடைய சூரிய கிரணங்கள். கருவி - உலகுக்குத் துணைக்கருவிகளாக இருக்கும் மின்னல் மேகம் முதலியன. உற்ற - பொருந்திய; உறு=பகுதி. ககனம் - (வடமொழி) ஆகாயம் உருவியுற்றிடல்=ஊடுருவிப் பொருந்தல்; உம்பர்=தேவர்; இடவாகு பெயர். துளங்கல் - நடுங்கல்.

புண்ட ரீகனும் புட்டிருப் பாகனும்
குண்டை யூர்தியும் குலிசியும் மற்றுள
அண்டர் தாமும்வந் தவ்வயின் எய்தியே
எண்த போதனன் தன்னை எதிர்ந்தனர். ௧௯௪

பொழிப்புரை:—பிரமனும் விஷ்ணுவும் சிவபிரானும் இந்திரனும் மற்றுள்ள தேவர்களும் அவ்விடத்து வந்து சேர்ந்து, மனோநிக்ரஹத்தைப் பெற்ற தபோதனராகிய கௌசிக முனிவரைச் சந்தித்தார்கள்.

குறிப்புரை:—காம க்ரோத க்ஷமா சோதனையில் தேறி, மற்றும் பொறிவழிகளில் மனத்தைச் செல்லவிடாமல் நிக்ரஹம் செய்து, கேவல கும்பகத்தின் ஸாதனையால் எண்ணியது முடிக்கும் ஆற்றல் மிகுந்தும், விருப்பற்று, ஓஜோசக்தியைப் பெருக்கிக் குண்டலினியால் ஸுஷும்னையைச் செலுத்தி, மூலாதார முதலிய ஸர்வாதாரங்களையும் வெகு சுலபத்தில் தாண்டுறச் செலுத்தித், தாரணை செய்து, மூர்த்தி விவஹாரங்களுமற்ற ஸர்வதோமுகமான ப்ரணவாகாரத்தைத் தியானித்து, ஸமாதியில் நிலைத்து ப்ரம்மரந்த்ர ஸ்தானத்தைப் பேதித்துக் கௌசிக முனி உக்ரதவஞ் செய்ததைத் தெரிந்து கொண்ட அதிகார மூர்த்திகளாகிய பிரமன் முதலான தேவர்களும் நடுநடுங்கி வந்து சேர்ந்தார்கள் என்பதாம். புண்டரீகம் - தாமரை; சிறப்பாக வெண் தாமரையைக் குறித்திடும் வடசொல்; புண்டரீகத்தில் வீற்றிருப்பவன் புண்டரீகன் - பிரமன்; நான்முகக் கடவுள். புள்+திரு+பாகன். புள்ளா (கருடனு)கிய அழகிய வாஹனத்தைச் செலுத்துபவன் - விஷ்ணு; "புள்" - பக்ஷி (கருடன்); "பாகன்" - செலுத்துவோன்; விஷ்ணு என்பதாகும். குண்டை யூர்தி - சிவபிரான்; "குண்டை" - ரிஷபம்=காளைமாடு; "ஊர்தி" - வாஹனம்; இஃது இங்கு அவ்வாஹனத்தை யுடைய சிவபிரானை யுணர்த்தி நின்றது. குலிசி - வஜ்ராயுதம்; இதனையுடைய

இந்திரன். "உம்"- மைகள் எண்ணுப்பொருளன. அவ்+வயின் - அவ்விடம்; "வயின்" = இடம். எண்+தபோதனன் = எண்ணத்தக்க தபோதனன் என்பதாம்; எண்ணல் - சிந்தித்தல்; கணித்தல் என்றபடி, இவரும் (இவரே) தக்க தபோதனர் என்று யாவரும் நினைக்கத் தக்க என்பதாம்; "எண்"- எண்ணம்; அன்றியும்; "எண்"- மனம் என்றாகி மனோ நிக்ரஹத்திற் சிறந்த - என்றும் பொருளாம்; அன்றியும் "எண்" எட்டு என்னும் பொருளுடையதாகி, எட்டாகும் எண்ணிக்கை பெற்ற இயம நியம ஆஸந ப்ராணுயாம ப்ரத்யாஹார தாரணு த்யாந ஸமாதி என்று சொல்லப்பெறும் "அஷ்டாங்க யோக ஸாதனையிற் சிறந்தவர்" என்றும் பொருளாம். "தபோதனன்" - தப+தந - "தவ" - (வடமொழி தவம்; "தந" - (வடமொழி) பொருள்; தபோதந - (வடசொற்றொடர்) தவமே பொருள்; இதனையுடையான் "தபோதனன்" (வடசொற்றொடர்த்திரிபு) எதிர்தல் - சந்தித்தல்; காணுதலுமாம்.

பாதி மாமதி சூடியும் பைந்துழாய்ச்
சோதி யோனுமத் தூய்மல ராளியும்
வேத பாரகர் வேறிலர் நீயலால்
மாத போதன என்ன வழங்கினார். ௧௩௫

பொழிப்புரை :—பகுதிப்பிறையைச் சிரவில் அணிந்து கொண்டிருக்கும் சிவபிரானும், பசிய துழாய் மாலையை யணிந்துள்ள ஜோதியோனாகிய விஷ்ணுவும், அந்தப் பரிசுத்தமான தாமரையில் வீற்றிருப்பவராகிய பிரமனும், நேரில் வந்து, "மிகுந்த தவத்தையே பொருளாகக் கொண்டுள்ள கௌசிக முனிவரே! வேதத்தின் எல்லைக்குச் சென்றவர், நீரேயல்லாமல் வேறு யாரும் இலர்" என்னும் நல்லுரை வழங்கினார்கள்.

குறிப்புரை :—வேதத்தின் முடிவானது, "ஜீவர்கள், விருப்பு வெறுப்பற்று மனதை ஏகாக்ரப் படுத்தி, ஓஜா சக்தியை உறுதிப் படுத்தி, எங்கும் பரவும் எல்லாமறியும்-யாவும்-நடத்தும்-செயலில் தேறி, தன்னையே எங்குங் கண்டு, எல்லாமாய பரப்ரம்மப் பொருளோ டொத்து நிற்கும் தன்மைபெறலே யாகலின், அம்முடிவினைத் தமது யோக பலத்தினுற் பெற்று விளங்கும் இந்தக் கௌசிக முனிவரைப் பார்த்து, அம் மும்மூர்த்திகளும், "வேதபாரகர், நீயலால் வேறிலர்" என்றனர் என்பதாம். பாதி மாமதி சூடி - சிவபிரான்; "பாதி" - பகுதி

யென்பதன் திரிபு. சூடி - சூடு+இ - "சூடு" பகுதி; "இ" பெயர் விகுதி. பைந்துழாய்=பசுமை+துழாய்="பசுமை" - நிறத்தையும் இளமையையும் குறித்து நின்றது; பசுமை="ஈறு போதல்" என்னும் நன்னூற் சூத்திரப்படியே, ஈறு போகியும் அடி யகரம் ஐயாகியும் தன் ஒற்றிரட்டியும் "பைந்"-என்றாகித்துழாயுடன் கூடியது; துழாய் - திருத்துளவம் (துளசி) சோதி=ஜோதி என்னும் வடசொற்றிரிபு; பிரகாசம் என்பது பொருள். சோதியோன் - பிரகாசமுடையோன்; விஷ்ணு என்றபடி; "ஆன்" என்னும் படர்க்கைப் பெயர் விகுதி, செய்யுள் விகாரமடைந்து "ஓன்" என்றாயிற்று. தாய்+மலர்+ஆளி=பரிசுத்த தாமரை மலரையுடையான்; பிரமன் என்றாம்; ஆளி - ஆள்+இ=ஆள்பவன் என்பதாம்; "இ" படர்க்கைப் பெயர் விகுதி. "உம்" மைகள் எண்ணுப் பொருளன. வேத+பாரகர்=(வடசொற்றொடர்) வேதத்தின் எல்லை சென்றவர் என்பது பொருள்; பாரகர் - பாரம்+கர்="பாரம்"- எல்லை; "கர்"-கதர் என்பதன் பொருளுடையது; பாரம் கதர் என்பதன் சிதைவு; எல்லையைச் சென்றவர் என்பது பொருள். வடநூலிலக்கணம். மா+தப+தந=மாதபோதந=மிகுந்த தவத்தைத் பொருளாகவுடையவரே! "மா" மஹா என்னும் வடசொற் சிதைவு; "தப" தவம்; "தந" பொருள்; இது விளிவேற்றுமை. வழங்கினர் என்றதற் கேற்ப "நல்லுரை" என்பது கொள்ளப்பட்டது; வழங்குதல் - கொடுத்தல் ஆகலின் என்க.

அன்ன வாசகம் கேட்டுணர் அந்தணன்
சென்னி தாழ்த்திரு செங்கம லங்குவித்
துன்னு நல்வினை உற்றதென் றேங்கினான்
துன்னு தேவர்தம் சூழலுள் போயினோர். ௧௩௪

பொழிப்புரை:—அத்தகைய நல்லுரையைக் கேட்டு, உண்மையை யுணர்ந்த அந்தணத் தன்மையை அடைந்தவராகிய கௌசிக முனிவர், தலைவணங்கி இரண்டு செந்தாமரைக் கைகளையும் கூப்பி, நினைத்துத் தவம் புரிந்த நல்ல காரியம் வந்தடைந்து விட்ட தென்றெண்ணி மனம் பூரித்துயர்ந்தார்; நெருங்கி வந்த தேவர்களும் தத்தமது இருப்பிடம் சென்றனர்.

குறிப்புரை:—வேதத்தின் உண்மையை யுணர்ந்து, அதன் முடிவுப் பயனைப் பொருந்திய தன்மையை யுடையவர்களின், கௌசிக முனிவர் தாம் நினைத்து உக்ரமாகப் பூண்ட தவச்செயலின் பயன் வந்தடைந்த தென்று மனம் பூரித்தனர் என்பதாம்; தன்னையத் தேவரிற் பெரிய மூவரும், "வேதபாரகர் நீரே எனக்கூறினமையின், உளம் பூரித்தனர் என்பது கருத்தாம். "பகவானை - பரம்பொருளை - உலகுக் கொரு பெரு நாயகனை, எல்லாவுருவனுகி எங்கும் நிறைந்தவனுகி யாவும் அறிந்த வனுகி எவையும் வல்லானுகி எல்லா ஆற்றலும் எல்லா அழகும் எல்லா ஒளியும் எல்லா அறிவும் இவை போன்று எவற்றிலும் எல்லாமும் உடையனுகி யுள்ளான்" என்பதை யுணர்ந்தவர்கள், இப்பிறப்பில், பலகேள்வி பெற்றிலராயினும், வேதத்தின் அகப்பொருள் புறப் பொருள்களை யுணர்ந் தவராகியும் கவிதாவன்மையை யுடையவராகியும் தத்வஞானம் கண்டவரா கியும் விளங்கி நிற்பாராகலின், அவரே வேதபாரகர் ஆவார் என்பது சாஸ் திர வுண்மை யாகலின், அவ்வுண்மையைக், கவி, ஈண்டு, "வேதபாரகர் நீ" என்னும் குறிப்பான் உணர்த்தினார் என்க. இக்கருத்தினையே, பின், உயுத்தகாண்டம், இரணியன் வதைப்படலத்தில், பிரஹலாதாழ்வார் வாக்கில் வைத்துப்பேசியிருத்தல் காண்க. அச்செய்யுள் பின்வரும்:— "செவிகளாற் பல கேட்டிலாயினும் தேவர்க், கவிகொள் நான்மறை யகப் பொருள் புறப்பொருள் அறிவார், கவிகளாகுவார் காண்குவார் மெய்ப் பொருள் காலால், புவிகொள் நாயகர்க் கடியவர்க் கடிமையிற் புக்கார்" - என்பது. அன்ன - அத்தகைய. வாசகம் - (வடசொல்) சொல். உணர்ந் தணன் - வினைத்தொகை; உணர் + அந்தணன் - வேதமுணர்ந்த - உண் மையுணர்ந்த அந்தணன்; அந்தணன் - அந்தம் + அண் + அன் = முடி வைப் பொருந்தினவன்; அதாவது வேதத்தை - முடிவைப் பொருந்தினர் என்பதாம்; "அந்தம்" - (வடசொல்) வேதத்தின் முடிவு; "அண்" - அண் ணுதல் = கிட்டுதல், பொருந்துதல்; "அன்" - படர்க்கை யொருமைப் பெயர் விகுதி. சென்னி = தலை. தாழ்த்தல் - இறக்கல், வணங்கல் என்பதாம். இரு + செம்மை + கமலம் = இருசெங்கமலம் = இரண்டு செந்தாமரை போன்ற கைகள் என்பது பொருள். "கமலம்" - (வட மொழி) தாமரை; இங்கு, இஃது, உவமை ஆகுபெயராகநின்று, தாமரை போன்ற இரண்டு கைகளையும் குறித்தது. குவித்தல் - கூப்பல், உன்னுதல் - நினைத்தல்; உற்றது - சேர்ந்தது. ஓங்குதல் - உயர்தல்.

பூரித்தல்; நிரம்புதலாம். துன்னுதல்—நெருங்குதல்; உன்னு நல்வினை, துன்னுதேவர் - வினைத்தொகைகள். தம்+சூழல்—தமது இருப்பிடம்.

ஈது முன்னர் நிகழ்ந்த திவன்றுணை
மாத வத்துயர் மாண்புடை யாரிலர்
நீதி வித்தகன் றன்னருள் நேர்ந்தனை
யாது நிற்கரி தென்றனன் ஈறிலான். ௧௱௭

பொழிப்புரை:—தவத்தில் முடிவில்லாத் தன்மையுடையவராகிய ஸதாநந்தர் ஸ்ரீராமபிரானைப் பார்த்து, இங்ஙனமாக விசுவாமித்திராது உண்மைச் சரித்திரத்தை மிக விளக்கமாகவும் விஸ்தாரமாகவும் எடுத்துச் சொல்லிப் பின்னும் "இவ்விதம் முன்னர் நடந்த தன்மையாகும்; இந்தக் கௌசிக முனிவர்க்கு ஒப்பாக, மஹா தவத்தில் உயர்ந்த மாட்சிமையை யுடையார் எங்குமிலர்; அத்தகைய நீதி ஞானத்திற் சிறந்த இப்பெரியோனது பொருளை நேரப் பெற்றிருக்கும் ஸ்ரீ ராமா! உனக்கு அருமையான காரியம் யாதிருக்கின்றது என்றும் சொன்னார்.

குறிப்புரை:—நிகழ்ந்தது—நிகழ்ந்த செய்தியைக் குறித்து நின்றது; வினைப்பெயர். துணை—ஒப்பு. இலை—இடைக்குறை விகாரம். வித்தகன் (வடமொழி)—அறிந்தவன் என்பதாம். ஈறுஇலான்—ஆனந்தத்துக்கு முடிவில்லாதவன் என்று பொருளாம்; சதானந்தனுகவின் என்க. கவி, "ஈறிலான்" என்று சதானந்தன் என்னும் பெயரின் பொருளைக் காட்டினர் என்க. இது கம்பர் வழக்கா மென்பர்.

என்று கோதமன் காதலன் கூறிட
வென்றி வீரர் வியப்பொடு வந்தெழா
ஒன்று மாதவன் றாடொழு தோங்கிய
பின்றை யேத்திப் பெயர்ந்தனன் றன்னிடம். ௧௱௮

பொழிப்புரை:—என்று இவ்வாறு கௌதம முனி குமாராகிய சதானந்த முனிவர் கூற, வெற்றி பொருந்திய வீரர்களாகிய இராம லக்ஷ்மணர்கள், தமது ஆசிரியனது புகழ்க்காரியங்களைக் கேட்டதனுலுண்டான அதிசயத்துடனே களிப்புடனெழுந்து, பொருந்து பெருந்தவனை

சதானந்த முனிவனுடைய அடிகளை வணங்கி யிருந்தார்கள் இராம லக்ஷ்மணர்கள். அந்த சதானந்த முனிவர் அரச குமாரர்களை வாழ்த்தித் தமதிருப்பிடம் சென்றார்.

குறிப்புரை :—கோதமன் = கௌதமன் என்பதன் திரிபு; கௌதம முனிவர் என்பதாம்; அன்றியும், "கோதமன்" என்பதை, "கோது + அமன்" என்று பிரித்துக் குற்றமுடைய அம்மையாகிய "அகலிகை" என்று பொருள் கொள்ளலு மொன்று மென்பர்; அமன் = அம்மன் என்பதன் இடைக்குறை; அம்மன் = அம்மை யென்பதாம். காதலன் = அன்பிற்குரியவன்; காதல் + அன்; வென்றி + வீரர் = இராமலக்ஷ்மணர்கள். வென்றி = வெற்றி; இங்கு வெற்றியாவது, தாயினது கல்லுருவை நீக்கி கல்லுருவைத் தந்தருளித் தனயனாகிய சதானந்தருடைய அன்பினை முற் கூட்டியே பெற்றுக் கொண்டமையாம். வியப்பு + ஒடு + உவந்து + எழா; வியப்பு = ஆச்சரியம்; உவத்தல் = களித்தல்; ஒன்றுதல் = பொருந்துதல்; அன்றியும், ஒன்று = ஒரு என்னும் பொருளைப் பெற்று, ஒப்பற்ற மாதவன் என்பதும் பொருளாமாறு காண்க. தாள் + தொழுது = தாடொழுது; பின்றை - பின் + து + ஐ = து - ஐ - சாரியைகள். பெயர்ந்தனன் = போனான்.

முனியும் தம்பியும் போய்ம்முறை யாற்றமக்
கினிய பள்ளிகள் எய்திய பின்னிருட்
கனியும் போன்றவன் கங்குலும் திங்களும்
தனியும் தானுமத் தையலும் ஆயினான். சாநாக

பொழிப்புரை :—விசுவாமித்திர முனிவரும் இலக்குமணனும் நெருங்கிய முறைமைப்படியே தத்தமக்கு இனிமையான படுக்கை யிடங்களை யடைந்த பிறகு, இருள் கனிந்தது போலும் நிறமுடைய வராகிய ஸ்ரீ ராமபிரான், இராத்திரியும் சந்திரனும் தமது தனிமைப் பாடும் தாமும் தமது உள்ளத்தில் ஊன்றிப்பதிந்த அந்த சீதாபிராட்டியு மாகத் தோன்றி நின்றார்.

குறிப்புரை :—முனி = முநி - வடமொழியாகி "மனன சீலர்" என்னும் பொருளைத் தந்தும், முனி - தென்மொழியாகி "பற்றொழிந்தவர்" என்னும் பொருளைத் தந்தும் நின்றது; முனிதல் = வெறுத்தல்; ஒழித்

தலுமாம். மொய்ம்முறை - "மொய்த்தல்"=நெருங்குதல்; பொருந்து தலாம். பள்ளி=சயனம்; படுக்கை யென்பதாம். இருள்+கனின்; கனியிருள் என்பதாம், மிக்க இருள் என்பது பொருள்; நல்ல கறு மையை யுணர்த்திற்று. இராமபிரான், இருளில் தனித்திருத்தலை விரும்பாதவராகிய - இராம பக்தியிற் சிறந்த கம்பர், இராம பிரானுக்குத் துணை நான்கு கூறுகின்றார் போலும்; கங்குல் திங்கள் தனிமை தையல் ஆக நான்காம். மிகக்கருகிய இருட்டையும் வெளியாக்கும் கரிய நிறம் வாய்ந்தவன் என்பார், "இருட்கனிபோன்றவன்" என்றா ரென்க. கங் குல் - நிறத்தையும், + திங்கள் - கருணையையும், தனிமை-இயற்கையையும் தையல் போகத்தில் இச்சையையும் குறித்து நின்று, பிரளயத்துக்கும் சிருஷ்டிக்கும் இடைக்காலத்திலுற்ற பரப்பிரம்மத்தின் நிலையை-நேயர்க் குக்கவி-நினைவுறுத்துகின்றார் போலும். "தனியும்.........ஆயினன்" - "தானும் தேரும் பாகனும் வந்தென் நலன் உண்டான்" என்பதிற் போலத் திணை விரவித் தலைமை பற்றி உயர்திணை யொருமை முடிபு ஏற்றது என்ப. "இராமபிரான், அவ்விரவில், சந்திரனொளி வீசுங் காலத்துத் தாம் தனிமையாகப் படுக்கப் புகுந்தபோது, உருவெளியிற் றோன்றிய சீதாப்பிராட்டியுடன் தோன்றியிருந்தார்" என்பது திரண்ட கருத்தாகும்.

விண்ணின் நீங்கிய மின்னுரு இம்முறை
பெண்ணின் நன்னலம் பெற்றதுண் டேகொலோ
எண்ணின் ஈதல தென்றறி யேனிரு
கண்ணின் உள்ளுநெங் கருத்துள்ளும் காண்பெனால். கசo

**பொழிப்புரை** :—மேகக் கூட்டத்தினின்றும் நீங்கி வந்ததொரு மின்னலின் வடிவம், இந்தவிதமாக, ஒரு பெண்ணினது நல்ல அழகைப் பெற்று இங்குத்தோன்றினதுண்டோ! என்மனத்தால், "இது இத்தன் மையதுதான்; அன்றி அல்லதுதான்" என்று பகுத்தறிந்து கொள்ளும் இயல்பிலேன்; அந்த வடிவம், எனது இரண்டு கண்களின் உள்ளும் என் தன் உள்ளத்தின் உள்ளும் நிறைந்திருக்கக் காணுகின்றேன்.

**குறிப்புரை** :—இராமன் தமக்குள் தோன்றிய உருவெளியை நினைக்கிறார் என்பது கருத்து. விண் = ஆகாயத்துக்குப் பொருளாகிப்

பின் அவ்வாகாயத்திற் சஞ்சரிக்கும் மேகத்தினையுணர்த்தி இடவாகு பெயராயிற்று; மின் + உரு = மின்னல்போலும் உரு என்பதாம்; மேகத்தினின்றும் நீங்கிய மின்னலாகலின்; அல்லது மின்சாரமும் ஆம்; இதனை மேல்வரும், கடிமணப்படலத்தில் கரு-வது கவியாகிய, "முன்கண் டு முடிப் பருவேட் கையினால், என்கண் இணைகொண் டிதயத் தெழுதிப், பின்கண் டுமொர்பெண் கரைகண் டிலனால், மின்கண்ட வரெங் கறிவார் விளைவே" என்பதனுடன் பொருத்திக் காண்க., நன்னலம் - நல் + நலம் "நலம்" = அழகு. உண் டேகொலோ - ஏ, கொல், ஓ என்னும் மூன்று இடைச்சொற்களில், ஒன்று வினாவும் மற்றவை அசையுமாம் என்க. எண்ணின் = எண்ணினால் = நினைத்தால் என்பது பொருள்; அன்றி, எண் = மனமுமாம் என்க. ஈதல தென்றறியேன் - ஈது அலது என்று அறியேன் = "இது வென்றும் அல்ல தென்றும்" அறியேன் என்பதாம். இரு கண்ணின் உள்ளும் கருத்துள்ளும் காண்பென் = "புறக்கண்களாலும் அகக் கண்ணாலும் பார்க்கிறேன்" என்றுமாம், ஸ்மிருதி ஞானத்தால் மனதில் தோன்றிய உரு புறத்தேயும் காணப்படுதல்; இதுவே உருவெளித் தோற்றமாதலின் என்க. காண் பென் - பகர இடைநிலை - காலங்கருதாது தன்மையை யுணர்த்தி நின்றது. ஆல் - அசை.

வள்ளல் சேக்கைக் கரியவன் வைகுறும்
வெள்ளப் பாற்கடல் போல்மிளிர் கண்ணினாள்
அள்ளல் பூமகள் ஆகுங்கொ லோவென
துள்ளத் தாமரை யுள்ளுறை கின்றதே. ௧௩௩

பொழிப்புரை :—மண்டலமிட்டுறையும் ஆதிசேஷனாகியப் படுக்கையையுடைய கரிய நெடுமால் பள்ளிகொண்டருளும், பெருக்குமுடைய திருப்பாற்கடல் போல விளங்கும் கண்களையுடைய இந்நங்கை, எனது மனமாகிய தாமரையின் கண் வந்து குடிபுகுந்திருப்பதனால், இவள் சேற்றிலேயே எப்போதும் வசித்துக் கொண்டிருக்கிற கமலாஸனமுடைய திருமகளாகத்தான் இருக்கலாமோ!

குறிப்புரை:—வள்ளல் சேக்கை = பாம்பாகிய படுக்கை; "வள்ளல்" = ஸர்ப்பராஜனாகிய ஆதிசேஷன்; வள்ளல் = சக்கரியென்பதன் மொழிபெயர்ப்பு; சக்ரமாக அதாவது மண்டலமாக வட்டமிட்டுப் படுத்தலால் என்க. வள்ளல் - "வள்" வளை யென்னும் பகுதியின் இறுதியைகாரம்

கெட்டு "வள்" என நின்றது; அல் - விகுதி. சேக்கை = படுக்கை. திருப்பாற் கடலிற் பள்ளி கொண்டிருக்கும் கரிய திருநெடுமால் - இந் நங்கையினுடைய கண்களினிடையே பொருந்திய கருநிறமுடைய கண்மணிக்கும், அந்நெடுமாலுக்குச் சுற்றிலுமுள்ள திருப்பாற் கடலின் வெள்ளம் - அக்கண்மணியைச் சூழ்ந்துள்ள வெண்ணிறப் பாப்புக்கும் உவமையாகக் கொள்ளப்பெற்றன. அள்ளல் பூ - பங்கஜம் என்பதன் மொழி பெயர்ப்பு; பங்கம்+ஜம்="பங்கம்"=சேறு; "ஜம்"=தோன் றியது; அதுபோலவே மொழி பெயர்ப்பிலும், அள்ளல்+பூ "அள்ளல்" =சேறு; "பூ"=தோன்றும்மலர்; தாமரை யென்பதாம். அள்ளற் பூமகள் - இலக்குமி யென்பதாம். தமது உள்ளமாகிய தாமரையில் வந்து தங்கியதனால், தாமரையில் தங்குமியல் புடைய இலக்குமி தானோ என்று ஐயுற்றார் என்பதாம். கொலோ - கொல்=அசை; ஓ=வினாப் பொருட்டு. "உறைகின்ற தேன்" - என்பது பாடாந்தர மென்பர்; "வள்ளற் செங்கைக் கரியவன்" என்னும் பாடமு முண்டு என்பர்.

அருளி லாளெனி னும்மனத் தாசையால்
வெருளு நோய்விடக் கண்ணின் விழுங்கலால்
தெருளி லாவுல கிற்சென்று நின்றுவாழ்
பொருளெ லாமவள் பொன்னுரு வாயவே.　　கசஉ

பொழிப்புரை:—அந்நங்கை யென்பால் அருள் பாலிக்காவிடினும், என்மனத்தே அவள் பொருட்டுத் தோன்றிய ஆசைப் பெருக்கினால், நான் அஞ்சத்தகுந்த நோய் என்னை விட்டு நீங்கும்படியாக என் இரு கண்களிலேயும் உட்கொண்டு விட்டபடியால், தெளிவில்லாத இவ்வுல கிலே சென்றும் நின்றும் வாழக்கூடிய பொருள்களெல்லாம் அவளது பொன்னுருவமாகவே எனக்குத் தோன்றுகின்றன.

குறிப்புரை:—காதல் மிகுதியினால் எங்கும் அவ்வணங்கினது வடி வமே காணப்படுதலால், இங்ஙனங் கூறியவாறாம். அருள் இலாள் - "அருள்"=தம்மையுடன் வந்து தழுவிக் கொள்ளவில்லை யென்னும் குறிப்பையுணர்த்தியது. நோய் நீங்கும் பொருட்டுக் கைக்கும் மருந்தை யும் உட்கொள்ளுதல் போலத், தமது மனத்தாசையால், தாம் அஞ்சத் தகுந்த "காம நோய் தம்மை விட்டு நீங்கும் பொருட்டுத்" தமது கண் களால் அப்பெண்ணினுருவை யுட்கொண்டதாகக் கூறுகிறார் என்னும்

படி. நோய் விட=நோய் "நீங்கும்பொருட்டு" என்பதுமாம். "வெரு ளும் நோய் விடக்கண்ணின் விழுங்கலால்" - என்பதற்கு - யாவரும் அஞ்சுதற்குக் காரணமான காம நோயைத் தருகிற விடம் போன்ற தன் கண்களால், அவ்வணங்கு, என்னை உட்கொண்டபடியால்" என்றும் பொருள் கொள்வார்; அது பொருந்தாமை யுணர்க. தெருள்=தெளிவு "தெருள் இலா உலகு"—"இருள் தருமா ஞாலம்" என்று பெரியார் பணித்தபடியாமென்க. "சென்று நின்றுவாழ் பொருள்" "எலாம்-" சென்றுவாழ் பொருள்=(சரம்) இயங்கியற் பொருள்; "நின்றுவாழ் பொருள்"=(அசரம்) நிலையியற் பொருள். "பொருள்" உயிர் என்ப தாம்; இதனை, முன், பால-அரசியற் படலத்தில், ௧௦-ம் செய்யுளாகிய "வயிரவான் பூணணி" என்று தொடங்கும் கவியின் மூன்றாமடியில் "செயிரிலா உலகினில் சென்று நின்றுவாழ் உயிர் எலாம்" என்றும் பிரயோகித் திருத்தலைக் காண்க; இப்படிப்பல இடங்களிற் காணலாகும். இக் குறிப்பினை ஸ்ரீமான் ஜெ. ஸி. போஸ் அவர்களும் தெரிவித்திருக் கிறார்கள்:—"We are all moving plants and the plants are the standing beings"–J. C. Bose. பிராட்டியின் திருமேனியின் நிறம் உருக்கிய பொன்னொளியை யொக்கு மாகலின் "பொன்னுரு" எனப் பட்டது. இங்ஙனமே, "பொன்னின் சோதி" "பொன்னிறொளி" என்று கூறுதல் இக்கவி வழக்கா மென்க. "வெருளும் நோய் கெடக் கண்ணின் விளங்கலால்" - எனவும் பாட பேத முண்டெனச் சிலர் வழக்கிடுவர். ஏகாரம் அசை.

பூணு லாவிய பொற்கல சங்களென்
ஏணி லாகத் தெழுதல வாயினும்
வாணி லாமுறு வற்கனி வாய்மதி
காணு லாவதோர் காலமுண் டாங்கொலோ. ௧௪௩

பொழிப்புரை:—ஆபரணங்கள் அசையப்பெற்ற பொன் கலசங் கள் (அழகிய கொங்கைகள்) எனது வலி நின்ற மார்பகத்துப் பதியாமற் போன போதிலும், அவ்வணங்கரசியினுடைய ஒளி பொருந்திய சந்திர காந்திக்கொப்பான புன்முறுவலையும் கொவ்வைக்கனியை யொத்த செய்யவாயையும் உடைய அவளது முகமாகிய சந்திரனை, மீண்டும் காணுதற்குக் கூடிய காலமாவது உண்டாகுமோ!

குறிப்புரை :—பூண் = ஆபரணங்கள்; பூணப்படுதலால் பூண். "அவ் வணங்கினது ஆகந்தழுவும் பாக்கியம் பெறாவிடினும், முகத்தைப் பார்க்கும் பேறாவது பெறுவனோ" என்று ஐயுறுகிறார் என்பதாம். கலசம், மதி இவை உவமையாகு பெயர்களாக நின்று "கொங்கை" "முகம்" என்னும் பொருள்களையுணர்த்தின. ஏணா நில் ஆகத்து. "ஏண்" = வலிமை; "ஏண் இல் ஆகத்து" - "ஏண் இல்" = "பெருமையில்லாத" என்னும் பொருள் சிறவாமையறிக. "எணிலாகத்து எழுதலவாயினும்" * * * * மதி, காணலாவ தோர் கால்முண் டாங்கொலோ "- என்று ஸ்ரீராமபிரான் கருதினபடியே, பிராட்டியும் கருதினளென்பதைக்கீழ் - இதே படலத்து 59-ம் கவி" பிறந்துடை நலனிறை * * * அக்குமரனை யின்னும் கண்ணிற் கண்டறிந்து பிரிழக்கவும் ஆதமே கோலாம் " என் பதில் கூறியிருக்கின்றார் கவி சக்ரவர்த்தி; இது பொருள் தொடர்பு பற்றியதாம் என்க. வாள் நிலா முறுவல் - "நிலா" = பற்களினது வெள்ளொளியைக் குறித்தது; வாள் = ஒளி; அன்றியும், "வாள் + நிலாம் + முறுவல்" - எனப்பிரித்து "ஒளி பொருந்திய பற்கள்" என்று பொருள் கொள்ளினும் அமையும்; வாள் = ஒளி; நிலாம் - நிலாவும் = பொருந்திய; முறுவல் - பல்; நிலாம் - நிலாவும் எனும் செய்யு மென்னும் வாய்பாட்டெச்சத்தின் விகாரம்.

வண்ண மேகலைத் தேரொன்று வாணெடும்
கண்ணி ரண்டு கதிமுலை தாமிரண்
டுண்ணி வந்த நகையுமென் றொன்றுண்டால்
எண்ணும் கூற்றினுக் கித்தனை வேண்டுமோ கசச

பொழிப்புரை :—அழகிய வஸ்திரமணிதலால், வீரனது போர்க்களத் தேர்த்தட்டு போல் தோன்றும் அங்கப்பிரதேச மொன்றும், வாள் போலும் நீண்ட கண்களிரண்டும், கதித்தெழுகின்ற பருத்த தனங்களிரண்டும், அதரத்தினுள்ளினின்று மேலெழுந்த புன்னகையொன்றும் என்னும் இவை கருவிகளாக அமைந்தனவாயின், உடலையும் உயிரையும் பிரிக்க எண்ணும் எமனுக்கு, என்னைக் கொல்லுதற்கு இத்தனை கருவிகளும் வேண்டுமோ? வேண்டாம்; என்றபடியாம். இக்கருவிகளில் ஒன்று தானே அத்தொழிலைச் செய்திடுமே என்பதாம்.

குறிப்புரை :—"வண்ணமேகலைத் தேரொன்று"—"மேகலை (ஒட்டியாணம்) என்னும் ஆபரணம் அணிந்த" என்றும் பொருள்கொள்வர்; மேகலை என்பதற்கு **வஸ்திரம்** என்பதும் பொருளாதலின், அது கொள்ளப்பட்டது. என்னை? கன்னிப்பருவங் கடந்த மங்கைகளின், இரண்டு குறங்கிடைப் பிரதேசம் - இருதொடைகளின் விளிம்புகளிலும் அரையின் கீழ்ப்பிரதேசத்திலும் அமைந்துகிடக்கும் - எலும்புக்கூட்டின் முக்கோணச்சேர்க்கையினால் - **வஸ்திரமணிந்துநடக்குங்காலையில்,** வீரர்களது போர்க்களத் தேர்த்தட்டைப்போல், முக்கோணவடிவில் நிமிர்ந்து தோன்றிக், காமங்கதுவிய ஆடவரது மனத்தைக்கவர்ந்து அலைக்குந் தன்மையுடையதாக இருக்கின்றது. இப்பிரதேசத்தையே, கவிகள் தமது காவிய மரபில் - "அல்குல்" - என்னும் ஒலிக்குறிப்பால் அழைக்கின்றனர்; **அல்குல்**=இழிந்த பிரதேசம்; அல்குதல் - இழிதல். போர்க்களத் தேர்த்தட்டானது - வீரன் வீற்றிருந்து, மூன்று பக்கங்களிலும் மாறி மாறித்திரிந்து திரிந்து எதிரிகள்மேல் அம்பெய்யவேண்டிய தன்மைக்கிணங்க, முக்கோண வடிவில் அமைக்கப்படுமாற்றை யுணர்க. "தண்டலை வாழையன்ன குறங்கிடை யல்குல்தட்டு" - என்று நமது கவிச்சக்ரவர்த்தி, கம்பரும், மற்றுமோரிடத்தில் - **சுந்தரகாண்டத்தில்** - குறித்திருத்தலையும், **பாலகாண்டம்** - உண்டாட்டுப்படலத்தில் - 62-வது கவியில், "**கலையுருவல்குலாள்**" எனக்குறித்திருத்தலையும் காண்க; கலை உரு அல்குல் = "வஸ்திரத்தில் உருவாகத்தோன்றும் அல்குல்" என்பதும் பொருளாமாறு உணர்க. **கலை** = "வஸ்திரம்". இந்தப் பிரதேசத்துக்குரிய - "அல்குல்" - என்னும் சொல்லைப் புலவர்களும் பெரியார்களும **ஆண்மக்கள்பாலும்** வைத்து ஓதியிருத்தலால், இந்தப் பதம் - அதாவது இந்தச்சொல்லாற் குறிக்கப்பெறும் அந்தப் பிரதேசம், **அஸஹ்யத்துக்கும் - அஹஸ்யத்துக்கும்** இடமானதொரு குறியன்றென்பதை யுணரலாம்.

நாலாயிரத்திவ்யப்ரபந்தத்தில் - பெரியாழ்வாரும் குலசேகராழ்வாரும் ப்ரயோகித்திருத்தலைக்கண்டும் தெளியலாம்.

**குலசேகராழ்வார் — க-ம் திருமொழி — ஏழாம்பாட்டு.**

"பூமருவு நறுங்குஞ்சி புன்சடையாப் புனைந்துபூந்

**துகில்சேர் அல்குல்**

காமெழில் விழவுடுத்து கலனணியா தங்கங்கள்
அழகு மாறி
ஏமருதோள் என்புதல்வன் யானின்று செலத்தக்க
வனந்தான் சேர்தல்
தூமறையீர் இது தகவோ சுமந்திரனே வசிட்டனே
சொல்லீர் நீரே"

என்றும்,

பெரியாழ்வார்–முதற்பத்து–ஏழாந்திருமொழி–எட்டாம் பாட்டு :—

"பக்கம் கருஞ்சிறும் பாறைமீதே அருவிகள் பகர்ந்தனைய
அக்கு வடமிழிந் தேறித்தாழ அணியல்குல் புடை பெயர
மக்கள் உலகினில் பெய்தறி யாமணிக் குழவி யுருவின்
தக்க மாமணி வாசுதேவன் தளர்நடை நடவானோ"

என்றும், இரு திருமொழிகளிலும் குறித்திருக்கும் உண்மையை யுணர்க.

மற்றும், ஒரு பிரயோகத்தில், பெரியாழ்வார் - தம்மைப் பெண்ணாகப் பாவித்துக் கொண்டு, ஒரு தாய் பாலனைப் பழிச்சும் துறையில் வைத்துப் பாடியிருக்கும் பாசுரத்தில் அம்மொழிக் குற்ற பொருளை நோக்குக :—

பெரியாழ்வார்–இரண்டாம்பத்து–இரண்டாந்திருமொழி–எட்டாம் பாட்டு

"இருமலைபோல் எதிர்ந்தமல்லர் இருவரங்கம் எரிசெய் தாயுன்
திருமலிந்து திகழ்மார்வு தேக்கவந்தென் அல்குல் ஏறி
ஒரு முலையை வாய்மடுத் தொருமுலையை நெருடிக் கொண்டு
இருமுலையும் முறை முறையா எங்கியேங்கி இருந்துண்ணாயே."

என்னும் பாசுரத்திலும் காண்க. இப்படிப் பல காணலாம்.

தேர் - தேர்த்தட்டு; உவமையாகு பெயராய் நின்று, அவ்வடிவம் பெற்ற தொரு அவயவத் தோற்றத்தை யுணர்த்தியது; வாள் நெடும் - வாள் போலும் என்றுமாம். கதி முலை - "கதி" = கதித்து எழுகின்ற என்பதுமாம்; கதித்தல் - விம்முதல். "கதிர் முலை" - என்னும் பாடம்

கிரகமை யுணர்க. எண்ணும் கூற்று - "எண்ணும்" = "ஜீவர்களி னுடைய வாழ்நாளை யெண்ணிக்கணக்கிடும்" என்றுமாம். கூற்று = எமன்; உயிரையும் உடலையும் கூறுபடுத்துமவன்; கூறு - பகுதி. வேண்டுமோ - "ஓகாரம்" எதிர்மறைப்பொருட்டு. "உண்ண வந்த நகையொன் றுண் டாமெனில், எண்ணுங் கூற்றெனக் கித்தனை வேண்டுமோ" என் னும் பாடபேதமுமுண்டென்பர். கவி இருதயத்தை நோக்கிப் பொருள் கொள்ளவேண்டியதே, உரையாசிரியர்க்கு உரிமையாகும் என்க.

கன்ன லின்கருப் புச்சிலை யான்விரைப்
பொன்னை முன்னிய பூங்கணை மாரியால்
என்னை யெய்து தொலைக்குமென் றால்வலி
வன்மை யென்னுமித் தாரிடை வைகுமே கசந

பொழிப்புரை :—சாறு இனித்திருக்கப் பெறும் மெல்லிய கரும்பை வில்லாகவுடைய மன்மதன், அத்திருமகளைக்குறித்து என்மீது பிரயோ கித்துக்கொண்டிருக்கிற மணம்பொருந்திய புஷ்பபாண மழையால், வலி தொலையாத என்னை எய்து வலியழிப்பானென்றால், வலிமையென்று சொல்லப்பெறும் இயற்கைக்குணமானது, யாரிடத்துத் தங்கியிருக்கின் றதோ? என்னிடத்தன்று ; அந்த மன்மதனிடத்தில் தான்போலும்.

குறிப்புரை :—கன்னலின் கரும்பு - என்றது கழைக்கரும்பு என்பது போல நின்று பொருளுணர்த்திக்கொண்டிருக்கின்றது; இன் = சாரியை. "விரை பொன்னை முன்னிய" = என்றே கொண்டு, "இயற்கையில் நறுமணமுடைய மலர்வாசம்பெற்ற இலக்குமிபோன்ற அச்சீதையின் பொருட்டு" என்றும் பொருள்கொள்ளுதல் அமையும். "இதுவரையில், வில்லாற்றலும் மல்லாற்றலும் பொருந்திய வீரரெவர்க்கும் மனவலியழியா திருந்த நான், மெல்லிய கரும்புவில்லையுடைய மன்மதனுக்கு வலிமையழி யும்படியாயிற்றே" என இராமன் இரங்கினனென்பது கருத்து. விரை - மணம்; விரை - விரைந்து என்றுமாம்; இப்பொருளில் இதனை வினை யெச்ச விகாரமாகக்கொள்க. "கன்னல் வார்சிலை கால்வளைத் தேமதன்" என்றும் பாடாந்தரமுண்டென்பர்.

கொள்ளை கொள்ளக் கொதித்தெழும் பாற்கடல்
பள்ள வெள்ளம் எனப்பட ருந்நிலா
உள்ளம் உள்ளூற் றுயிரைத் தொடருமால்
வெள்ளை வண்ண விடமுமுண் டாங்கொலோ　　௧௪௬

பொழிப்புரை:—உலகமுற்றும் கொள்ளை கொள்வதற்காகப் பொங்கியெழுகின்ற திருப்பாற் கடலினது ஆழமாகிய நீர் வெள்ளம் போலும் உலகெங்கும் பரவிவிரிகின்ற இந்த சந்திரகாந்தியானது, அந்த மங்கையை யான் நினைக்குந்தோறும், எனது மனத்தின் அகத்தேபோய் உயிரைத்தொளைப்பதனால், வெண்ணிற விடமும் உலகத்தில் உண்டோ என்று எண்ண இடமுண்டாகின்றது.

குறிப்புரை:—விடம் கருநிறமுடையதென்பது உலகப்பிரசித்தமாயிருக்க, இந்தவெண்ணிறமுடைய நிலாக்கற்றையானது, அந்தவிடம் செய்யக்கூடிய மரணதுன்பத்தை யெனக்குச் செய்துகொண்டிருத்தலால், "வெள்ளைநிற விடமு முலகில் உண்டென்று நான் ஐயுறுகிறேன்" என்கிறார் என்பதாம். தன்பால் அன்புடையவளென்று தான் மதித்துள்ள அந்த மங்கையைத் தழுவப் பெறாதிருப்பதால், தான் அடையும் வருத்தத்தைக்குறித்துக் கலங்கிக்கொண்டிருக்கிறார் என்பது திரண்ட கருத்தாமெனக்கொள்க. இங்ஙனம், தளர்ந்தார் சந்திரனைக்குறித்திகழ்வதைச் சந்திரோபாலம்பனம் என்பர் வடநூலார். கொள்ளைகொள்ளுதல் - வலிய அபஹரித்தல். "உள்ள உள்ள உயிரைத்துருவிட" - என்பது பாடாந்தரம். வெள்ளை - பண்புப் பெயர்; ஐ = விகுதி; விடம் - விஷமென்பதன் மரூஉ. (விஷம் - வடமொழி). வண்ணம் = நிறம். கொல் = வினா. ஓ = அசை.

ஏரும் நல்வழி அல்வழி யென்மனம்
ஆரு மோவதற் காகிய காரணம்
பாரு போன்மொழிப் பைந்தொடி கன்னியே
ஆகும் வேறிதற் கையுற வில்லையே　　௧௪௭

பொழிப்புரை:—என்மனம் என்றும் நல்வழியே தான் போகும்; அங்ஙனமிருக்க, பிறனொருவன் நாட்டிலுள்ள மாடத்திலுற்ற இம்மங்கை

பால் செல்லுகின்ற என் மனத்தின் செயலாகிய இது, அல்வழியாயிருக்கலாமோ என்னின்; இல்லையாகும்; அதற்குப் பொருந்திய காரணம், கருப்பஞ்சாற்றைப் போலினிய சொற்களையும் பசிய வலையல்களையுமுடைய இந்நங்கை கல்யாணமாகாத அரச கன்னிகையாகவே - ஆதல் வேண்டும்; இம்முடிவுக்கு வேறாக ஐயப்படவேண்டுவது ஒன்றுமில்லை.

**குறிப்புரை:**—தமக்கு நினைவு தெரிந்த நாள்முதல், தமது மனம் நல்ல வழியிலேயே சென்றிருந்த அநுபவமுடையவராதலால், வேற்றரசன் நாட்டினிலுள்ள கன்னிமாடத்துப் பெண்ணைக் காதலித்த தமது மனத்தில் ஒருவாறு ஐயங் கொண்ட ஸ்ரீராமபிரான், நெடுக நினைத்துத் தீர்மானித்து, "இஃது அவ்வழியாகமாட்டாது; அதற்குக் காரணம்," "அம்மங்கை, அரண்மனையிலிருத்தலால் அரசமங்கை யென்றும் கன்னிமாடத்திலிருத்தலால் கல்யாணமாகாத கன்னிதானென்றும் பசிய வளையல்களையுடைய அவள் கைகளால் தன் உருவத்தை யணையப் பார்த்ததொரு தோற்றத்தால், தன்னிடம் அன்பு கொண்டவள் தான் என்றும்" உறுதிகொண்டு சந்தேக நிவர்த்தி செய்து கொண்டார் என்பதாம். இதனால், சத் புருஷர்கட்குப் பரிசுத்தமான தங்களது சிறப்புடைய மனச்சாட்சியே முக்கிய பிரமாணமாகும் என்பது புலப்படுகின்றது. இதனை - இந்தப் பிரமாண வாக்கியத்தைக் - காளிதாஸ மகாகவி—சாகுந்தளத்தில் துஷ்யந்த மன்னன், கூற்றில் வைத்துக் குறித்திருப்பதைக் காண்க.

**காளிதாஸன் சாகுந்தலம்:**—

" அஸம்சயம் க்ஷத்ர பரிக்ரஹ க்ஷமா
யதாயம் அஸ்யாம் அபிலாஷி மே மன:—
ஸதாம்ஹி ஸந்தேஹ பதேஷு வஸ்துஷு
ப்ரமாணம் அந்த: கரண ப்ரவ்ருத்தய:—"

இதன் பொருள் பின்வரும்:—

காளிதாஸ மஹா கவி செய்துள்ள சாகுந்தல நாடகத்தில், இது காணப்படுகின்றது; "துஷ்யந்த மன்னன், நைஷ்டிக ப்ரம்ம சாரியாகிய கண்வ ரிஷியினுடைய ஆச்ரமத்தில் வளர்ந்து வரும், பக்குவமடைந்த கன்னிப் பெண்ணாகிய சகுந்தலையிடத்துத், தனக்குக் காதல் தோன்ற,

அக்காதலை யெவ்வகையினும் அடக்க முடியாதபோது, பரிசுத்தமான தனது மனத்தின் போக்கையே பிரமாணமாகக் கொண்டு, "இந்தப் பெண், மன்னர் குலத்திற்றோன்றிய என்றால் மணந்து கொள்ளக் கூடிய அரசகுலக் கன்னியாகவே இருத்தல் வேண்டும்" எனத் தீர்மானித் தான்; என்று கூறியிருக்கிறார்.

பொருள் :—"இந்தக் கன்னிகை, ஒரு க்ஷத்திரியனாலே பரிக் கிரஹித்துக் கொள்ளக்கூடிய பெண்தான்; சம்சயமில்லை; எக்காரணத் தினாலென்றால், பரிசுத்தமான எனது மனம் அப்பெண்ணைக் காதலிக் கின்றது; ஆகையினால்தான். பிரமாணமோ வென்னில், ஸாதுக்கட்குச் சந்தோஷஸ்பதமான பொருள்களில், அப்பெரியார்களது அந்தக் கரண பிரவிருத்தியே பிரமாண மாகலின் என்க"

"என்மனம் நல்வழியாகும்; அவ்வழி ஏகுமோ!" என்று இயைத்துப் பொருள் கொள்வாருமுளர். "அதற்கு ஆகிய காரணம், பாகுபோல் மொழிப்பைந்தொடி கன்னியே ஆகும் வேறிதற்கு ஐயுறவில்லையே" இதனால் "இவள் கன்னியல்லாவிடில், அதர்மத்தில் போகக் கூடாத என்மனம் இவளை நாடியேயிராது" என்னும் உறுதிப்பாடு கிடைத்த தென்பது கொள்ளக்கிடக்கின்றது.

கன்னி - "கந்யா" என்னும் வடசொல்திரிபு; மணம் ஆகப்பெறாத இளம் பெண் என்பது பொருள். ஐயுறவு - "ஐயமுறவு" என்பதன் விகாரம்; ஐ-ஐயம் + உறவு என்பதாம்; ஐயுறவு=தொழிற் பெயர். ஐயுறு-பகுதி; அ - சாரியை; உ - விகுதி. பைந்தொடி - அன்மொழித் தொகை; - பசியவளையல்களையுடைய பெண் என்பது பொருளாகும். "பைந்தொடி" - என்னும் சொற்குறிப்பால், "அம்மங்கை கன்னிமாடத் திலிருந்து கொண்டே தன்னை யணைந்துகொள்ளப் பிரயத்தனப்பட் டாள்" என்று, இராமபிரான் உணர்ந்து கொண்டார்" என்பதைக், "கவி," ஊஹித்துரை வைத்திருக்கிறார்; எங்ஙன மென்னில், கீழ், மிதிலைக் காட்சிப் படலத்து 39-ம் செய்யுளாகிய,

"அந்தமில் அழகனை அணைகி லாமையால்
பைந்தொடி ஓவியப் பாவை போன்றனள்"

* * * *

* * * *

என்னும் செய்யுளிற் காணும், பைந்தொடி யென்னும் சொல்லை, இக் கவியிற் காணும் பைந்தொடி என்னும் சொல்லொடு பொருத்தி "அணைகிலாமையால்" என்னும் குறிப்பின் குறிப்பையுணர்க. அல்வழி-நல்வழியல்லாத வழி; அதாவது பிறன் மனை நயத்தல்.

கழிந்த கங்குல் அரசன் கதிர்க்குடை
விழுந்த தென்னவும் மேற்றிசை யாள்சுடர்க்
கொழுந்து சேர்நுதல் கோதறு சுட்டிபோய்
அழிந்த தென்னவும் ஆழ்ந்தது திங்களே. ௧௪௮

பொழிப்புரை :—"காலங்கழிந்து ஒழிந்துபோன இராத்திரிக்காலமாகிய அரசனது, ஒளியையுடைய வெண் கொற்றக் குடையானது, கீழே வீழ்ந்துவிட்டது போலவும், மேற்குத் திக்காகிய பெண்மகளது இளைதாகிய ஒளி பொருந்தியுள்ள - நெற்றியிலணிந்துள்ள - குற்றம் நீங்கிய - வட்ட வடிவமான - சுட்டி யென்னும் ஆபரணமானது, அழிந்தொழிந்தது போலவும், சந்திர மண்டலம் மேற்குக் கடலில் மூழ்கி மறைந்து போயது" என்பதாம். இக்கவியும் அடுத்த கவியும் ஒரு தொடர்.

குறிப்புரை :—"கங்குல் அரசன்" - இரவாகிய ராஜன் என்பதாம். "மேற்றிசையாள்" மேல் + திசை + ஆள் = மேற்குத்திக்காகிய பெண் - என்பதாம். "கங்குலரசன்", "மேற்றிசையாள்" - என்று அஃறிணைப் பொருள்களிடத்து, உயர்திணைத் தன்மையை யேற்றிக்கூறியது ஆரியப்புலவர் மரபைப்பற்றிப்போலும். கதிர் - ஒளி; குடை - குடைவாயிருத்தலால் அப்பெயர் பெற்றது போலும்; முதனிலைத் தொழிற்பெயர், "சுடர்க்கொழுந்து சேர் சுட்டி" எனக் கூட்டுக; சுடர்க்கொழுந்து - இளஞ்சுடர் என்பதாம். கொழுந்து - இளையது. சுட்டி - பெண்மக்கள் தலையில், முன்முகத்து அணியும் ஆபரணம்; இதனை, இன்று, மகாராஷ்டிரப் பெண்மக்களிடை காணலாம். சந்திரன் மறைந்துபோனான் என்பது திரண்ட பொருள். உவமையணி.

*வீசு கின்ற நிலாச்சுடர் வீந்ததால்*
*ஈச னுமதி எகலும் சோகத்தால்*
*பூசு வெண்கல வைப்புனை சாந்தினை*
*ஆசை மாதர் அழித்தனர் என்னவே.* ௧௪௧

பொழிப்புரை :—“ தங்கட்குக் கணவனாகிய சந்திரன், தங்களைப் பிரிந்துபோயின அளவில், திக்குகளாகிய (சந்திரன்) மனைவிகள், தங்கள் உடம்பில் அக்கணவனால் பூசப்பெற்ற - அழகிய - கலவைச் சந்தணத்தை, அவனைப் பிரிந்த துயரத்தினால், அழித்துவிட்டார்கள் என்னும்படி, சந்திராஸ்தமனத்தினால், முன்பு எத்திக்கிலும் பரவியிருந்த - நிலவு ஒளிக் கூட்டம் மறைந்து ஒழிந்தது ” என்பதாம்.

குறிப்புரை :—இதுவும் முன்கவியும் தொடர்புடையது. “ ஈசனும் மதி எகலும், சோகத்தால் சாந்தினை, ஆசை மாதர்கள், அழித்தனர், என்ன வீசுகின்ற நிலாச்சுடர்வீந்தது” - எனக்கூட்டிப் பொருள்கொள்க. வீசுகின்ற - “ வீசுதல் - பரவுதல்.” நிலாச்சுடர் - நிலவாகிய ஒளியென்பதாம். வீந்தது - “ வீதல் = அழிதல் ”. ஈசன் - நாயகன் ; வடமொழி. சோகம் = பிரிவாகிய துயரம்; வடமொழி. கலவை - கலப்புப்பொருள் = சேர்க்கைப்பொருள்; கந்த களப கஸ்தூரிச் சேர்க்கைப்பொருள் என்பதாம். சாந்து - சந்தணம் = சந்து என்றும் கூறலுண்டு. ஆசை மாதர் - ஆசையுடைய பெண்கள் அல்லது ஆசையாகிய பெண்கள் என்று கொள்ளுக. ஆசை - ஆசா என்னும் வடசொல் திரிபு. ஆசா - என்பதற்குத் “ திக்கு ” என்றும், “ அவா ” என்றும்பொருள்கள் கூறப்படுகின்றன. இங்கே, ஆசை என்பது திசையென்னும் பொருளிலே வந்துளதாலும், “ ஆசையையுடைய ” - என்னும் பொருள் தொனிக்கும் நயத்தையும் நோக்குக. இதுவும் உவமையணி.

## வேறு.

*ததையுமலர்த் தாரண்ணால் இவ்வண்ணம்*
*மயலுழந்து தளரும் எல்லை*
*சிதையுமனத் திடருடைய செங்கமல*
*முகமலரச் செய்ய வெய்யோன்*

புதையிருளின் எழுகின்ற புகர்முகயா
 ளையினுரிவைப் போர்வை போர்த்த
உதையகிரி யெனுங்கடவுள் நுதல்கிழித்த
 விழியேபோல் உதயம் செய்தான். கரு௦

பொழிப்புரை :—நெருங்கிய மலர் மாலையையுடைய பெருமைய ரான ஸ்ரீராமபிரான், இங்ஙனம் காமமயக்கத்தால் உழந்து வருந்தின போது, சிவந்த உஷ்ண கிரணங்களையுடைய சூரிய தேவன், நிலைகுலைந்த மனமுடைய ஸ்ரீராமபிரானுக்குக் கன்னிமாடத்திற்கண்ட நாயகியைக் கூடப்பெறாததால் உண்டான இடர்களாகிய இருள்கள் உடைந்து போக வும், அதனால் ஸ்ரீராமபிரானது முகமாகிய தாமரை மலரும் படியாகவும், நக்ஷத்திரக் கூட்டங்களுடன் சூழ்ந்த இருளின் வடிவில் எழுந்திருக்கின்ற -புள்ளி முகமுடைய யானையினது உரிதோலைப் போர்வையாகப் போர்த் துக் கொண்டிருக்கும் உதய பர்வதமாகிய சிவபிரானது நெற்றியி னின்று உதித்த அக்கினிக் கண்ணைப்போல் (சூரியதேவன்) உதய மலையிலிருந்து உதித்து வந்தான்.

குறிப்புரை :—அன்றைய சூரியோதயத்தைச் சொல்லியதாகும் இந்தக் கவி. சூரியன் உதித்தலாகிய இயற்கைக் குறிப்பைச் சரித்திரக் குறிப்பிலேற்றி உத்பிரேக்ஷிக்கிறார் கவியென்று கொள்க. சூரியன் உதித்தவுடன், கதா நாயகனாகிய ஸ்ரீராமபிரானுடைய மனத்தைச் சூழ்ந்துள்ள காம மயக்கமாகிய இருள்கள் உடைந்து போயின; அத னால் அவரது முகமாகிய தாமரை மலர்ந்து விளங்கிற்று என்பதாம். சூரியோதயத்தில் இருள் நீங்கலும் தாமரை மலர்தலும் இயற்கையா கலின் என்க. அதனால் இயற்கைக்குறிப்பு தனது சரிதக்குறிப்புக்குக் கவியினால் புனைந்துரைக்கப் பெற்றது என்பது விளக்கமாகின்றது. இது, முன்னிரண்டடிகளின் திரண்ட பொருளாகும். பின்னிரண்டடி களும் உவமையணியில் வைத்து அமைக்கப் பெற்றிருக்கின்றன. நக்ஷத் திரப் புள்ளிக் கூட்டங்களுடன் கூடியிருக்கும் மிகக்கரிய இருளிலே மறைந்துள்ள உதயகிரிக்கு, கருநிறமுடைய -புள்ளி முகமுடைய யானை யின் தோலைப் போர்த்துக் கொண்ட பரமசிவனும்; அம்மலையின் சிகரத் திலே உதித்து விளங்குகின்ற சூரிய மண்டலத்துக்கு, பரமசிவப் பெரு மானுடைய நெற்றியின் நடுத்திறந்து உதித்து விளங்கும் நெருப்புக்

கண்ணும் உவமைகளாக உரைக்கப் பெற்றிருக்கின்றன. கரிய இருளில் மிகப் பிரகாசமாக விளங்கிக் கொண்டிருக்கும் சிவந்த நக்ஷத்திரக் கூட்டங்களைக் கரிய யானையின் முகத்தில் நிறைந்துள்ள செம்புள்ளிகளாகக் கொள்ளவேண்டும். முகத்தில் அடர்த்தியாகச் செம்புள்ளிகளையுடைத்தாதல், உத்தம யானைக்கு இலக்கணமாகும். "தளரும் எல்லை - செய்ய வெய்யோன் உதயம்செய்தான்" என்று இயைத்துப் பொருள் கொள்ளல் வேண்டும். எதுகை நோக்கி - உதயகிரி யென்பது உதையகிரியென இடைப்போலி பெற்று நின்றது. இது முதல் நான்குகவிகளும் **சூரியோதயவர்ணனை** யாம். உதயகிரி சிவனாகவும், இருள் சிவன் போர்த்த யானைத் தோலாகவும், உதயகிரியினின்று கிளம்பும் **சூரியன்** சிவனது நெற்றிக் கண்ணாகவும் வர்ணிக்கப் பெற்றிருக்கின்றன என்பது பின்னிரண்டடிகளின் திரண்ட பொருளாகும்.

ததைதல் - நெருங்குதல். தார் - மாலை. அண்ணல் - பெருமையுடையான். மயல் = காமமயக்கம். உழத்தல் - வருந்துதல். எல்லை - சமயம். சிதைதல் - குலைதல். மனத்திடர் - மனத்து இடர் = இடர் = துன்பம். உடைய - என்னும் குறிப்பினால் இடர் - இருள் என்று கொள்ளப்பெற்றது. செங்கமல முகமலர - சிவந்த தாமரைகளாகிய - சூரிய தேவனுடைய மனைவிகளின் முகங்கள் மலர என்றும் பொருள் கொள்ளலாம். செய்ய - சிவந்த; செம்மை என்னும் பண்பின் திரிபு. வெய்யோன் - சூரியன்; வெம்மையான கிரணங்களை யுடையவன் என்பது பொருள்; வெம்மை - உஷ்ணம். புதைதல் - சூழ்தல். இருளின் - இன் சாரியை. புகர் - புள்ளி. உரிவை - உரித்ததோல். போர்வை - போர்த்துக்கொள்ளும் வஸ்திரம். உதையகிரி - உதயகிரி = வடசொல்; கிரி - மலை. கடவுள் - கடந்தவன் = பௌதிகங்களைக் கடந்தவன் என்பது பொருள்; இங்குச் சிவபிரானையுணர்த்தி நின்றது. நுதல் - நெற்றி. உதயம் செய்தான் = உதித்தான் என்பதாம்.

இந்தக்கவியைக் கீழே மிதிலைக்காட்சிப்படலத்தில் சுக-ம் கவியில்,

"அன்னமென் நடையவட் கமைந்த காமத்தீ
தன்னையும் சுடுவது தரிக்கி லானென
நன்னெடுங் கரங்களை நடுக்கி ஓடிப்போய்
முன்னமே கதிரவன் கடலில் மூழ்கினான்."

**பொருள் :**—“ அன்னப்பறவைபோலும் நடையுடைய சீதாதேவி யைத் துன்புறுத்தும் **காமத்தீயானது**, தன்னையுஞ் சுட்டிடவே, அதனைத் தரிக்க முடியாதவன் போலவே, தொன்மையான உஷ்ணகிரணங்களை யுடைய சூரியன், தனது நல்ல நீண்ட கிரணங்களாகிய கைகளையசைத்து மடக்கிக்கொண்டு விரைந்து சென்று கடலில் மூழ்கி மறைந்தான்.”

என்று குறித்திருக்கும் பொருளோடு பொருத்தி, அந்தக்கவியில், “ **காமதாபத்துக்குப் பயந்து சூரியன், தாபத்தைப்போக்கும் தண்ணிய கடலில் மூழ்கி மறைந்தான்.**” என்று சொன்னதற் கிணங்கவே, இந்தக் கவியில், “ புதையிருளின்....................உதயஞ்செய்தான் ” என, **அந்தக் காமனது வாதையை யினியும் தணித்துக்கோள்வதன் போருட்டு, காமனைத் தகித்த செயலையுடைய பரமசிவப் பெருமானுடைய நெற்றிக் கண்ணைப்போல உதித்துவந்தான்**” எனக்கூறி கவிச்சக்ரவர்த்தியாகிய **கம்பர்**, சமர்த்தித்திருக்கிறார் என உணர்க.

இச்செயல், **கம்பசூத்திரத்தின், பருந்தின்வீழ்வு** என்னும் வகையின் பாற்படுவது காண்க.

விசையாடல் பசும்புரவிக் குரமிதிப்ப
உதயகிரி விரிந்த தூளி
பசையாக மறையவர்கைக் நறைமலரும்
நிறைபுனலும் பரந்து பாய
அசையாத நெடுவரையின் முகடுதொறும்
இளங்கதிர்சென் றணைந்து வெய்யோன்
திசையாளும் மதகரியைச் சிந்தூரமப்
பியபோல் சிவந்த மாதோ. கஙக

**பொழிப்புரை :**—வேகத்தையும் போர்வலிமையையுமுடைய - சூரி யனது தேரிற்பூட்டப்பெற்றுள்ள - பசுங்குதிரைகளின் குளம்புகள் மிதிப்பதனால், உதயகிரியிலே மேலெழுந்துபரவிய செந்துகள்கள், ஈரங் கொண்டு நனையும்படியாகக் காலைக்கடனைக் கழித்துக்கொண்டிருக்கிற அந்தணர்களின் கைகளால் எடுத்து விடப்படுகின்ற தேனூறும் மலர் களும் கைந்நிறைந்த நீர்களும் பாவிப்பாய்ந்திடவே, உஷ்ணகிரண முடைய சூரியன், தனக்குரிய கிழக்குத்திசையை இடமாகக்கொண்

டுள்ள மதயானைக்குச் சிந்தூரத்திலகத்தையப்பியபோல, சலித்தல் செய்யாத - அந்தப் பெரிய உதயகிரியின் சிகரங்களிலெல்லாம் இளமையான சூரியகிரணங்கள் போய்ப்படிந்து செந்நிறமாக விளங்கிக்கொண்டிருந்தன. (மாது - ஓ = ஈற்றசைகள்.)

குறிப்புரை :—கிழக்குத்திக்கிலுள்ள உயர்ந்த உதயகிரியின் பரந்த சிகரத்திற் பரவிவிளங்கிக்கொண்டிருக்கும் செந்நிறமான சூரிய கிரணங்கள், கீழ்த்திசையானையின் பரந்த முகத்தில் தீட்டப்பெற்ற சிந்தூரத் திலகத்தைப்போலும் இருந்தன என்பதாம். சூரியோதயகாலத்திலே கிழக்குத்திக்கெல்லாம் செந்நிறம்படர்ந்து இளங்கதிர் பரவிநிற்றலைப் பார்த்துக்கவி உத்பிரேக்ஷிக்கிறார் :—அதாவது, சூரியனுடைய தேர்க் குதிரைகள் மிதித்தலினால் உண்டாகி உதயகிரியில் விரிந்த தூளிகள் நனையும்படியாகக் காலைச்சந்தியில் அந்தணர்கள் விடுகின்ற நீரும் மலரும் பரந்து பாயவே, அம்மலையின் முகடுதோறும் சூரியனது இளங்கதிர்கள் சென்று அளைந்த தோற்றம், கீழ்த்திசையானையின் முகத்தில் சிந்தூரம் அப்பினபடியை யொத்திருந்தன என்பது திரண்ட கருத்தாகும்.

விசை = வேகம்; ஆடல் = போர்வெற்றி. சூரியனது தேரிற் பூட்டப்பெற்றவை பசுங்குதிரைகள் என்பது கவிமரபு. குரம் = (வடமொழி) குளம்பு. பசை = ஈரம். நறை = மணம். நெடுவரை = நீண்ட மலை. முகடு = உச்சி. மதகரி = மதங்கொண்டயானை. சிந்தூரம் = நெற்றியில் அணியப்பெறும் திலகம்.

சந்தியாவந்தன காலத்தில் மந்திரபூர்வகமாகத் துவிஜர்கள் கைகளினால் எடுத்துவிடுகிற அர்க்யஜலம், வஜ்ராயுதவடிவமாய் விரைந்துசென்று, சூரியனைச்சூழ்ந்து அவனது கதியைத் தடுத்துக்கொண்டிருக்கும் மந்தேகர் என்னும் அசுரர்களை அழிக்கின்றதென்பது பௌராணிகர் மரபாம் என்பர். அர்க்கியம் விடும்போது மலர்களையும் தூவுதல் மரபுபோலும்.

பண்டுவரும் குறிபகர்ந்து பாசறையில்
பொருள்வயினில் பிரிந்து போன
வண்டுதொடர் நறுந்தெரியல் உயிரனைய
கொழுநர்வர மணித்தேரோடும்

கண்டுமனம் களிசிறப்ப ஒளிசிறந்து
மெலிவகலும் கற்பினர் போல்
புண்டரிக முகமலர அகமலர்ந்து
பொலிந்தனபூம் பொய்கை யெல்லாம். கருஉ

பொழிப்புரை :—"பிரிந்துபோதற்கு முன்னமே, தாம் மீண்டு வரக்கூடிய காலத்தின் எல்லையைக்குறித்துச் சொல்லி, பகைவர்மேல் போர் செய்வதற்கென்று புறப்படல் காரணமாகவும் - செல்வப்பொருளை யீட்டுதல் காரணமாகவும் தலைவி (நாயகி) களைப்பிரிந்து சென்ற, வண்டுகள் மொய்த்தற்குரிய நறுமண மாலைகளைப்பெற்ற - தமது உயிர் போன்ற தலைவர் (நாயகர்) கள், அழகிய தேர்மீதேறிக்கொண்டு மீண்டு வருதல்கண்டு மனத்திலே களிப்பு மிகுந்து, அதனால் மேனியின் ஒளி சிறந்து தளர்ச்சி நீங்கியிருக்கும் கற்புநிலைமையுடைய மனைவி (நாயகி) கள்போலத் தாமரைக்கொடிகளாகிய தலைவிமார்கள், முந்தின நாள் தம்மைப்பிரிந்து சென்ற தமது கொழுநனாகிய சூரியதேவன், தேருடனே மீண்டும் வரக்கண்டு மனமகிழ்ந்து, தமது மலர்களாகிய முகங்கள் மலர்ச்சிபெறும்படியாகவே, அழகிய நீர்நிலைகளெல்லாம் செழித்து விளங்கின" என்பதாம்.

குறிப்புரை :—போர்குறித்தும் பொருள்குறித்தும் தம்மைப் பிரிந்து சென்ற கணவரது வெற்றிவரவைக்கண்ட பத்தினிப்பெண்டிர்போல, முன்னைநாட் பிரிந்துசென்ற கணவனாகிய சூரியனது நல்வரவைக்கண்டு மகிழ்ந்து முகமலர்ந்தன மனைவிகளாகிய தாமரைக்கொடிகள் எனும்படியாகப் பூம்பொய்கையெல்லாம் மலர்ந்து பொலிந்தன என்பது திரண்ட கருத்தாக்கொள்க.

பண்டு=முன்னே. வரும்குறி=திரும்பி வரும் காலத்தின் எல்லைக்கோர் அடையாளமாம். பாசறை=படைவீடு; பகைவர் மேற்சென்ற போர்வீரர் உறைவிடம் என்பதாம். உயிரனைய கொழுநர் - பிராண நாயகர் என்பதாம். மணித்தேர்=மணிகள் கட்டிய தேர் என்றுமாம்; மணியொலி, வருகையைக் குறிக்குமாகலான் என்க. மணி - ரத்நம்; அழகு; உறுதி என்றுமாம். கற்பு=பதிவிரதம் அதாவது பாதிவ்ருத்யம் என்பதாம். கொழுநர் - கொழு + நர்=கொடிவளர்தற்குரிய கொழு

கொம்புபோல், மனைவிகளாகிய கொடிகள் பாதி வ்ருத்திய தர்ம வளர்ச்சியைப் பெறுதற்குரிய கொழு கொம்பு போன்றவர் என்பதாம். நர்-பலர்பால் விகுதி. கற்பு - மங்கையர்கள் இருக்கவேண்டிய நிலைகளைத் தாய் தந்தையர் கற்பித்துக் கொடுத்தலால் அப்பெயர் பெற்றது; காரணப் பெயர்; அன்றி, கற்பு - பிரமசரியமாம் என்றும் குறிப்பர்.

எண்ணரிய மறையினொடும் கின்னரர்கள்
இசைபாட உலகம் ஏத்த
விண்ணவரும் முனிவர்களும் வேதியரும்
கரங்குவிப்ப வேலை யென்னும்
மண்ணுமணி முழவதிர வானரங்கில்
நடம்புரிவான் இரவி என்னும்
கண்ணுதல்வா னவன்கனகச் சடைவிரித்தால்
எனவிரிந்த கதிர்கள் எல்லாம். கறுங

பொழிப்புரை :—"அளவிடற்கருமையான வேதங்களும் கின்னர தேவர்களும் கானம்பாடவும், உலகத்தில் உயர்ந்தோர்கள் துதித்து ஏத்தவும், தேவர்களும் முனிவர்களும் இருடிகளும் அந்தணர்களும் கை கூப்பி வணங்கவும், கடலென்னும் மார்ச்சனம் அமைக்கப்பெற்றுள்ள மத்தளம் ஒலிக்கவும், ஆகாயமாகிய நடனஸபையிலே, நிருத்தம் செய்தருளுகிற ஒளியையுடைய சூரியனாகிய நெற்றிக்கண்ணுடைய சிவபிரானது பொன்னிறமான சடைகள் பரந்து விளங்கினாற்போல, சூரியனுடைய செந்நிறக்கிரணங்கள் ஆகாயமெங்கும் பரவின" என்பதாம்.

குறிப்புரை :—ஆகாயத்தில் தோன்றி விளங்கும் சூரியகிரணங்கள் பரந்து விரிந்த தன்மையானது, வானமளாவ ஓங்கியுயர்ந்துள்ள சிவபிரானது செஞ்சடைகள் விரிந்து பரந்தனபோன்றிருந்தது என்பதாம். ஆகாயத்தில் சூரியன் எழுந்து கதிர்கள் விரிந்தமைக்கு அரங்கிலாடும் சிவபெருமானது பொற்சடை விரிந்தமை உவமானமாக்கப்பெற்றது. இது உருவக உவமையணி.

சூரியன் உதிக்கும் காலத்தில், த்விஜர்களினுடைய வேதமுழக்கம் எங்கும் எழும்; கின்னர தேவர்கள் கானம்பாடுவர்; உலகத்துயர்ந்தோர் புகழ்வர்; தேவர் முனிவர் வேதியர் இருடியர் கைகூப்பி வணங்குவர்;

அதாவது சூரிய நமஸ்காரம் செய்வர் என்பதாம்; அங்ஙனமே, சிவபெருமான் நடனம்புரிந்தருளும்போதும், வேதம் கீதம்பாடும்; கின்னரர் ஸங்கீதம் பாடுவர்; உலகத்துயர்ந்தோர் துதிப்பர்; தேவர் முனிவர் வேதியர் இருடியர் கைகூப்பித்தொழுவர்; இச்செயல்கள் இரண்டினுக்கும் பொதுவாம்.

சிவபிரானுடைய நடனத்துக்கு மிருதங்கம் ஒலித்தல்போல் - சூரியனுடைய கிரணங்கள் ஆடுதற்குக் கடலினொலி இருந்தது.

சூரியன் உலகத்தார் யாவராலும் புகழப்படுவான் என்பதனைப் "பலர்புகழ்ஞாயிறு" என்னும் திருமுருகாற்றுப்படையின் அடியினால் உணரலாம். கடலின் ஒலி - வாத்தியத்தின் ஒலியை ஒத்திருத்தலை, "வேலைகடிமுரசம்" என்று இரத்தினச்சுருக்கத்தில், மன்மதனுக்குக் கடலைமுரஜமாகக் கூறியிருத்தலாற் பெறலாம். "உலகமென்பது உயர்ந்தோர் மாட்டே" என்பதனால், உலகம் என்னும் சொல்லுக்கு உயர்ந்தோர் என்னும் பொருள் உரைக்கப்பட்டது. சிவனுக்கு அம்பலம் போலச் சூரியனுக்கு அம்பரம் ஆடுதற்கு இடமாயது; (அம்பரம் = ஆகாயம்.) சூரியனது கிரணங்கள் பளபளத்தல் அசைவதாகத்தோன்றுமாறு காண்க. இதனை,

"மாயிரு ஞாலத் துயிர்காண வானரங்கில்
பாயிருளென்னும் படாம் வாங்கிச்—சேயினின்
றறைந்தா ரணம்பாட ஆடிப்போய் வெய்யோன்
மறைந்தான் குடபால் வரை."

என்னும் நளவெண்பாவால் அறியலாம்.

மறை = வேதம்; மறைந்தபொருளுடையது என்பது பொருள்; "எண் அரிய மறை" என்றது - "அநந்தா வை வேதா:" —(வேதப்பொருள் முடிவற்றது) என்னும் மரபுபற்றிப்போலும். கின்னரர் - இசைபாடுவோர் தேவஜாதி என்பது பௌராணிகமதம். உலகம் = விரிந்த தன்மையையுடையது; உலத்தல் — விரிதல் என்பர் நச்சினார்க்கினியர்; உலகம் = லோகம் என்னும் வட சொல்லின் சிதைவென்பர் வடநூலார்; காணப்படுவது என்பது பொருளாம். முனிவர் - மனன சீலர் அல்லது பற்றற்றவர் என்பது பொருள். வேதியர் - வேதமுணர்ந்தவர். வேலை -

வேலா என்னும் வடசொற்றிரிபு; வேலா=கரை; கரையற்ற கடலைக் கரையென்னும் பெயரிட்டழைப்பது எதிர்மறையிலக்கணக் குறிப்பாமென்பர். மண்ணும் மணி முழவு=மார்ச்சனை பூசப்பெற்ற அழகிய மத்தளம் என்பதாம். மார்ச்சனையாவது - மத்தளத்தில் அடிக்கப்படும் இடத்தைப் பதமாக்குதலாம். முழவு=மத்தளம். அரங்கு - நடனஸபை. கண்நுதல் வானவன் - நுதல்கண்வானவன்=சிவபெருமான் என்பதாம்; நெற்றிக் கண்ணுடைமையால். கனகச்சடை=பொற்சடை; கனகம்=பொன்.

கொல்லாழி நீத்தங்கோர் குனிவயிரச்
சிலைத்தடக்கை கொண்ட கொண்டல்
எல்லாழித் தேரிரவி இளங்கரத்தால்
அடிவருடி அனந்தல் தீர்ப்ப
அல்லாழிக் கரைகண்டான் ஆயிரவாய்
மணிவிளக்கம் அழலும் சேக்கைத்
தொல்லாழித் துயிலாதே துயராழி
நெடுங்கடலுள் துயில்கின் றானே. கறிச

பொழிப்புரை :—" ஆயிர முகமாகிய மாணிக்க தீபங்கள் ஜொலிக்கப்பெற்ற ஆதிசேஷ சயனத்திலே - பழமையான பாற்கடலிலே பள்ளிகொண்டருளாமல், லோக ஸம்ரக்ஷணார்த்தம் அப் பாற்கடற் பள்ளியை விடுத்து இங்கு இராமனாகத் திருவவதரித்து தமது நாயகியாகிய இலக்குமியின் அம்சமான சீதையைச் சேரப் பெறுமையாலுண்டான துன்பமாகிய பெரிய கடலினிடையே மயங்கிக் கிடப்பவரும், திருப்பாற்கடலிலிருந்தபோது கொடியவரைக் கொல்லுதற் குரியதாக இருந்த சக்ராயுதத்தை, இங்கு, மனித்தாவதாரத்துக்காக விடுத்துவிட்டு, ஒப்பற்ற உறுதியும் வளைவும் உடைய கோதண்டம் என்பதொரு வில்லைத் திருக் கையிலே கொண்டவருமாகிய - மேகம் போன்ற திருமேனியுடைய ஸ்ரீராமபிரான், ஒளிபெற்ற ஒற்றைச் சக்ரத்தேரையுடைய சூரிய தேவன் தனது இளமையாகிய கிரணங்களெனும் மெல்லிய கைகளினால் திருவடிகளைப் பிடித்துத்தடவி நித்திரையை நீக்கிவிடவே, இரவாகிய கடலின் எல்லையைக் கண்டார் " என்பதாம்.

குறிப்புரை :—“ சூரியனுதித்து, கிரணங்கள் வெளிப்பட்டுப் பிர காசித்து வரும் மாத்திரத்தில், ஸ்ரீராமபிரான், நித்திரை நீங்கிப் பள்ளி யுணர்ந்தருளினர் ” என்பதாம். “ துயில்கின்றவனுகிய கொண்டல், இரவி அடிவருடி அனந்தல் தீர்ப்ப, அல்லாழிக்கரை கண்டான் ”—என இயைத்திடுக.

ஒருவரை யொருவர் தழுவிக் கொள்ளும் பேறு பெறாத் தலைவன் தலைவியர்க்குத் தூக்கம் வாராமல், அவ்வொரு இராக்காலமே அநேக யுகம் போலத் தோன்றுமாதலால், “ அல்லாழி ” என இரவைக் கடலாகக் கூறவேண்டியதாயிற்று. உயர்ந்தவர்களைத் துயில் உணர்த்தவேண்டியவர், தமது மெல்லிய கைகளால், அவ்வுயர்ந்தார்களினுடைய திருவடிகளை வருடித் துயில் எழுப்புதல் முறைமையாதலால், “ இரவி இளங்கரத்தால் அடிவருடி அனந்தல் தீர்ப்ப” எனப்பட்டது. “திருமாலுக்குச் சயனமாக வும் ஆஸனமாகவுமுள்ள ஆதிசேஷனே தனது ஆயிரந்தலைகளிலுமுள்ள ஆயிரம்மாணிக்கங்களின் ஜோதியால் இரத்தின தீபமாகியும் விளங்கு கின்றான்” என்று கூறப்படுதலால், “ஆயிரவாய் மணிவிளக்கம் அழலும் சேக்கை ” எனப்பட்டது ; இதனை,

“ சென்றாற் குடையாம் இருந்தாற் சிங் காதனமாம்
நின்றால் மரவடியாம் நீள்கடலுள்—என்றும்
புணையாம் மணிவிளக்காம் பூம்பட்டாம் புல்கும்
அணையாம் திருமாற்கு அரவு.”

என்னும் பெரியார் அருளிச் செயலால் அறியலாம்.

கொல் ஆழி=கொல்லுகின்ற சக்ராயுதம்; ஆழி=சக்ரம். எல்லாழி-எல்+ஆழி ; எல்=ஒளி ; ஆழி=வட்டம் ; “ எல்லே இலக்கம் ” என் னும் தொல்காப்பியச் சூத்திரத்தால், “ எல் ” என்பது “ ஒளி ” யென் னும் பொருளையுணர்த்துவதோரு இடைச்சொல்தாமென்று கொள் ளலே பண்டிதமரபாம் என்க. “ எல் ” - என்பதனை பெயர்ச்சொல்லாக வேனும் உரிச்சொல்லாகவேனும் கொள்வது பொருத்தமுடைத்தாயிருப் பினும், “ துந்த்வாத் ” - என்னும் பாணிநீ இலக்கண விதிப்படியே, நிரம்பிய இலக்கண நூலாசிரியராகிய ஆசிரியர் தொல்காப்பியர் கருத்தை மறந்துப்போதல் மரபன்றாமென உணர்க. இரவி - ரவி (வடசொல்).

"இளங்காம்" - என்பது ஒன்றே உபமானமும் உபமேயமுமாகி இரு பொருளேயுணர்த்தி நிற்பதால், இதனை ச்லிஷ்ட ரூபகம் என்பர் வடநூலார். அனந்தல் - நித்திரை. கொண்டல் - மேகம்; இங்கே உவமையாகுபெயராய் நின்று ஸ்ரீராமபிரானேயுணர்த்தியது. அல் ஆழி — இருட்கடல். தோல் ஆழி = பழையபாற்கடல்; "தொல்" - தொன்மையென்னும் பண்படி. குனி - வளே; வயிரம் = உறுதி. சிலை - வில். துயர் ஆழி - துன்பக்கடல்; துன்பத்தைக் கடலென்றது - அது அளவற்றது என்னுங் கருத்தாலென்க.

ஊழிபெயர்ந் தெனக்கங்குல் ஒருவண்ணம்
புடைபெயர உறக்கம் நீத்த
சூழியா னையினெழுந்து தொன்னியமத்
துறைமுடித்துச் சுருதி யன்ன
வாழிமா தவற்பணிந்து மனக்கினிய
தம்பியொடும் வம்பின் மாலை
தாழுமா மணிமௌலிச் சனகனுறை
பெருவேள்விச் சாலை சார்ந்தான். கநூ

பொழிப்புரை:—"ஒரு கற்பகாலம் கழிந்ததென்னும்படியாக இரவானது ஒரு வகையில் மறைந்தொழிந்துபோகவே, ஸ்ரீராமபிரான், நித்திரைவிட்டெழுந்திருக்கும், நெற்றிப் பட்டமுடையதொரு பட்டத்து யானையைப்போல், மிகவும் கம்பீரத்துடன் எழுந்து, பழமையாகச் செய்துவரும் காலையனுஷ்டானக் கடமைகளேயெல்லாம் முடித்துக்கொண்டு, வேதம்போலும் உருவுடைய விசுவாமித்திரரது அடிகளேத் தமது மனதுக்கினிய தம்பியாகிய லக்ஷ்மணனுடன் வணங்கியெழுந்து, மணம் உடைய பூமாலைகள் தாழக்கூடிய ரத்நகிரீடம்பொருந்திய ஜனக மன்னன் கொலுவீற்றிருக்கும் பெருமையுடைய யாகசாலையைச் சேர்ந்தான்."

குறிப்புரை:—ஊழி - இறுதிக்காலத்தையுணர்த்துஞ் சொல்லாயினும், கால அளவையின் நீட்சியைக் குறிப்பதொரு குறிப்புச் சொல்லாகப் பிரயோகிக்கப்பெற்று வருகின்றது: ஊழ் - என்பது பலம்; பெருமை; இறுதி யென்பவற்றைக் குறிக்கும் பண்டிதமாபுச்சொல்.

கங்குல்=இரவு. "ஊழி பெயர்ந்தென" என்றதனால், ஒன்றின்மேல் ஊன்றிய உள்ளம் உடையார்க்கு இராக்காலம் ஒரு யுகம்போலிருக்கு மென்பது விளக்கப்பட்டது. "கங்குல் ஒரு வண்ணம்புடை பெயர" என்றதனால், இரவுமுழுவதும் நீங்காமல் பொழுது முடிந்ததும் முடியாததுமான பின்மாலைக்காலத்திலே என்பது உணர்த்தப்பட்டது; எனெனில், விடிய ஐந்து நாழிகையுள்ள உஷக்காலத்திலே, "வைகறை யாமந்துயிலொழிந்து" என்றபடி எழுந்து, காலைச் சந்தியநுஷ்டானங்களை நிறைவேற்றும் நற்பழக்கமுடையார் என்பது விளக்கப்பட்டது. சூழி=முகபடாம்; நெற்றிப்பட்டம் என்றவாறு; அஃது "ஓடை" எனவும் படும். சுருதி=வேதம்; காதில்கேட்டு ஓதப்படுதலால்; சுருதியன்ன மாதவன் - வேதவடிவான மஹரிஷி. வாழி=அசை. "சுருதியன்ன - மா தவன் தொழுது - வேதமுடிவுப்பொருளான "இலக்குமிபதி" யான விஷ்ணுவைத்தொழுது என்றுமாம்; மா + தவன் - "இலக்குமி + கணவன்" - என்பதாம். நியமம்=செய்கடன். துறை=கூறுபாடு. மௌலி - (வடமொழி) முடி அல்லது கிரீடம். வேள்விச்சாலை=யாகசாலை; வேள்வி="வேள்" - பகுதி. சாலை - சாலா (வடமொழி). கூடுமிடம் என்பதாம். "இராமன், இரவுநீங்கும் உஷக்காலத்தில் எழுந்து, அநுஷ்டானம் செய்து, விசுவாமித்திர முனிவரை வணங்கித் தம்பியோடும் ஜனகனது வேள்விச்சாலை சென்றார்" என்பதாம்.

முடிச்சனகர் பெருமானும் முறையாலே
மறைவேள்வி முற்றிச் சுற்றும்
இடிக்குரலின் முரசியம்ப இந்திரன்போல்
சந்திரன்தோய் கோயில் எய்தி
எடுத்தமணி மண்டபத்துள் எண்தவத்து
முனிவரொடும் இருந்தான் பைந்தார்
வடித்தகுனி வரிசிலைக்கைம் மைந்தனுந்தம்
பியுமருங்கின் இருப்ப மாதோ. ௧௫௬

**பொழிப்புரை:**—முடியுடைய ஜனக குலத்தலைவராகிய ஜனக ராஜன், முறையாக வேத மந்திரங்களுடன் கூடிய யாக காரியத்தை நிறைவேற்றிவிட்டு, எல்லாப் பக்கங்களிலும் இடி முழக்கம் போலுள்ள

பேரிகை முழக்கம் வழங்கிக்கொண்டிருக்க, தேவேந்திரன் போல், சந்திர மண்டலம் வரையில் உயர்ந்து அரண்மனையைச் சேர்ந்துள்ள உயர்ந்த நவ ரத்னமயமான மண்டபத்தில், த்யான யோகத்திற் சிறந்த முனிவர் களுடனும், பசிய மாலை பெற்று உயர்ந்ததாக மதிக்கப்பெறும் வளைந்த கட்டுடைய - கோதண்ட தீக்ஷா குருவாகிய ஸ்ரீ ராமபிரான் அவர்க்கேற்ற தம்பியாகிய - ராமாநுஜனாகிய - லக்ஷ்மணனுடன் அருகில் வீற்றிருக்கத் தானும் வீற்றிருந்தான். மாது ஓ - அசைகள்.

**குறிப்புரை** :—அக்குலத்தாருள், ஒரு அவதார மூர்த்திக்கு என்று ஒருகன்னிகையைப் பெற்று வளர்த்துக் கொடுக்கும் பாக்கியம் பெற் றுள்ள மன்னவனாகலின், ஜனக மன்னன் "முடிச்சனகர் பெருமான்"- என்று சிறப்பித்து ஓதப்பெற்றார்; "**சந்திரன் தோய்**" கோயில்-"சந்திர மண்டலம் போலும் விளங்குகின்ற" என்றுங் கொள்ளலாம். **சிலைக்கை மைந்தன்** - "கோதண்டராமன்" என்பதாம்; சிலை = வில் - கோதண்டம்; மைந்தன் - அம்சமுடையோன்; எல்லாம் சேர்ந்து, "**சாரங்கபாணி**யாகிய திருமாலின் அம்சமுடையோன்" என்பதை யுணர்த்தி நிற்பது காண்க. எண் + தவம் - "பரம் பொருளைத் தாரணை செய்து தியானிக்கும் தவம்" என்றுமாம். மருங்கு - அருகு; பக்கம்; எய்தி - என்னும் குறிப்பு, "யாக சாலையினின்று மண்டபத்துக்கு வந்து" என்பது பொருளாகக் கொள்ள வும்.

இருந்தகுலக் குமாரர்தமை இருகண்ணின்
　　முகத்தழகு பருக நோக்கி
அருந்தவனை அடிவணங்கி யாரையிவர்
　　உரைத்திடுமின் அடிகள் என்ன
விருந்தினர்கள் நின்னுடைய வேள்விகா
　　ணியவந்தார் வில்லும் காண்பார்
பெருந்தகைமைத் தயரதன்தன் புதல்வரென
　　அவர்தகைமை பேசல் உற்றான். கநிள

**பொழிப்புரை** :—ஜனகராஜன், தனது அருகில் வீற்றிருந்த உயர் குலத்துதித்தவர்களாகிய - சக்ரவர்த்தி திருக்குமாரர்களாகிய - இராம லக்ஷ்மணர்களைத் தனது இரண்டு கண்களாலும், அவர்களது இனிய

முகத்தின் அழகை முழுவதும் குடித்திடும்படியாகப் பார்த்து (தீதிளைத் தவனுகி), உடனே, அரிய தவத்தையுடைய விசுவாமித்திர முனிவரை யடிவணங்கி, அவரைநோக்கி, சுவாமிகளே! "இக்குமாரர்கள் யாவர்? (யாருடைய புத்திரர்கள்?) இத்தன்மையவரென்று இக்குமாரர்களைப் பற்றி உரைத்திடுங்கள்" என்று கேட்டலும், கௌசிக முனிவர், ஜனக மன்னனைப்பார்த்து, "இவர்கள், இங்குப்புதிதாகவந்துள்ளவர்கள்; நீ செய்யும் கல்யாணத்தைப் - (யாகத்தைப்) - பார்க்க வந்துள்ளார்கள்; விவாகபந்தத்தின்பொருட்டு நின்னிடம் சேமித்துவைக்கப்பெற்றிருக்கும் வில்லின் வலிமையையும், (பார்க்கவேண்டுமானுல்) ஒருகை பார்க்கத்தக்க வர்கள்; கம்பீர குணத்தையுடைய தசரதசக்கரவர்த்தியின் திருக்குமாரர் கள்" என்றுசொல்லி, அக்குமாரர்களின் வமிசாவளியின் பெருமையையும் சொல்லத்தொடங்கினுர். (வமிசாவளி, அடுத்தபடல முழுவதிலுமே காணப்படுதலால், இச்செய்யுள், மேற்படலத்துக்குத் தோற்றுவாய் செய்த வாருகுமென்ப.)

**குறிப்புரை** :—" சபையில், கௌசிக முனிவருடன் தனது அருகில் வீற்றிருக்கும் சக்கரவர்த்தி திருக்குமாரர்கள் இருவரையும் ஜனகமன்னன் பார்த்த அளவில், அவர்களது திருமேனிவடிவழகில் ஈடுபட்டு, மணமாக வேண்டியபக்குவமுடைய பெண்களைப் பெற்றிருப்பவனுகையால் - அந் தத்தொடர்புபற்றி, அக்குமாரர்களிடம் பேராவல்கொண்டவனுகி, அவர் களைச் சீடராக்கிக்கொள்ளுதற்குரிய பாக்கியம்படைத்துள்ள அருந்தவத் தினராகிய விசுவாமித்திர முனிவரைப் பணிந்துநோக்கி, அத்திருக் குமாரர்களின் மகிமையைச் சொல்லும்படியாக விநயத்துடன் கேட்க, வாக்கில் வல்லவராகிய கௌசிக முனிவர், "இவர்கள் இவ்வூர்க்குப் புதியவர்கள்; நீ ஆரம்பித்திருக்கும் யாகத்தையும் நீ ஏற்படுத்தியிருக்கும் விவாகபந்தத்தையும் பார்க்கவந்திருக்கிறுர்கள்; அதற்கேற்றபடியே நீ சேமித்துவைத்திருக்கும் சிவதனுசின் வலிமையைப் பங்கப்படுத்தும் வலி மையையும் உடையவர்கள்; உத்தமகுலமாகிய சூரியகுல விளக்கான தசரத சக்கரவர்த்தியின் திருக்குமாரர்கள்" என்று, "அழகு, பலம், குணம், குலம்" இவற்றில் ஒருவாறு ஜனகனுக்கு ஆசை ஜனிக்கும்படி யாகச்சிறிது சொல்லிப் பிறகு, விஸ்தாரமாக எடுத்துச் சூரியகுலப்பெரு மன்னர்களையும் ரகுமகாராஜனையும் அஜகுமாரனையும் தசரதச் சக்கரவர்

த்தியையும் ஸ்ரீராம லக்ஷ்மண பரத சத்ருக்நர்களாகிய இந்நால்வரையும் முறையே பேசத் தொடங்கினார்" என்பது திரண்டபொருளாகுமென்பது காண்க.

"இருந்த குலக்குமரர் தமை" - குலம் இருந்த குமரர் தமை" - என்ப் பிரித்துக்கூட்டியும் பொருள் கொள்ளலாம்; கந்யாப் பெண்ணைக் காத்து வைத்து மருமகனைத் தேடும் பிதாவுக்குக் "குலந்தான்" முனைப்பில் கருதல் தகும் என்பது பற்றி, மன்னனது உள்ளக் கிடக்கையை ஊஹித்து உணர்ந்து, "நற்குலத்தில் இருக்கும்" குமரர் - என்கிறார் போலும். "குமரனுக் கழகு குலத்தினைப் பேணுதல்"- இவர்கள் அவதரித்த படியால், அவ்வுயர்குல மிருந்தபடி யாகின்ற தென்பார் - "குலம் இருந்த" என்கிறார் போலும், அன்றியும், இருந்த - விநயத்துடன் வீற்றிருந்த; "குலக்குமரர் தமை" - அக்குமரர்கள் விநயத்துடன் வீற்றிருந்த தன்மையே, அவர் (குருகுல வாசிகள் தாம் - குருகுலத்தில் வசித்துக் கொண்டிருக்கும் குமாரர்தாம்; அதனால் பிரமசாரிகள்தாம் என்று, கந்யாப் பெண்களைக் காத்துவைத்திருக்கும் மன்னன் மனக் கவலை தீரும் பொருட்டு உணர்த்துகின்றார் போலும். "குலக்குமரர்" என்பது "நாம ஏகதேசே நாமக்ரஹணம்" - என்னும் நியாயம் பற்றி - "மரைமலர்" என்றது தாமரை மலரைக் குறித்து நிற்றல் போல், நற்குலக்குமரர் என்பதை யுணர்த்தி நின்றது. "குமரர் தமை" - "குமரர்"=என்னுஞ் சொல் "இளைஞர்கள்" என்னும் பொருளைப் பொதுப்படக் குறிக்குமாயினும், சிறப்பில், அழகையும் வீரத்தையுங் கூடக் காட்டி நிற்றலை யுணர்க; என்னை? குமரர் என்பது குமரன் என்பதன் பன்மையாகும்; குமரன் என்பது குமாரன் என்பதன் குறுக்கமாகும்; குமாரன் என்பது "கு + மாரன்"=என்று, "மாரன்=மன்மதனை, கு=குற்சிதமாக அதாவது அழகு கெடச் செய்தவன்" என்னும் பொருளைத் தந்து நிற்கின்றது; இச்சொல், இக்குணமும் அப்பேரழகும் பொருந்திய சுப்பிரமணியக் கடவுளுக்கு முன்னர் இடப்பெற்றுப் பின்னர்ப் பண்டித மரபில், ஏனைய அரசச்சிறார்க்கும் பொதுவாக இடப்பெற்றதெனவுங் குறிப்பர். ஸ்ரீராமபிரான், "ஸாக்ஷாத் மந்மதமந்மத:" - என இயற்கையிற் பேரழகுடைய மந்மதனைப் பெற்ற பெருமானுடைய அம்சமூர்த்தியாகலின், இச்சொல் அவர்க்கு இயற்கையிற் பொருந்து மியல்பைப் போற்றியுணர்க; குமரர் என்னும்

பன்மை இராம லக்ஷ்மணர் இருவரையும் குறித்து நிற்றலை நன்கு நோக்குக. ஏனெனில், தனது வளர்ப்புப் பெண்ணாகிய சீதாதேவிக்கும் பிறப்புப் பெண்ணாகிய ஊர்மிளைக்கும் மணமக்களைத் தேடவேண்டிய அவசியம் ஜனக மன்னற்கு இருத்தலால், அவ்விருவரையுமே, மன்னன் குறித்து நோக்கினன் என்பார் "குமரார் தமை" என்றார் போலும்.

சம்பூ ராமாயணத்தில் போஜகவி செய்துள்ள,

"குணம் அதிமிஷ சாபே கஞ்சித் ஆரோப்ய வீதாம்
குசிக தநய வாக்யாத் அக்ரஹீத் ராம பத்ர :—

தததநு த ததநுஜந்மா மைதிலேந்த்ரஸ்யசித்தே
நிஹித பஹு குணஸ்ஸந் ஊர்மிளாம் லக்ஷ்மணோபி"

பொருள் :—"வில்லில் குணத்தைக் (நாண்கயிற்றைக்) குசிக புத்ரராகிய விச்வாமித்திரர் குறித்த குறிப்பையுணர்ந்து, சிறிது, ஏற்றி, ஸ்ரீராமபத்ரன் ஸீதாதேவியைப் பாணிக்ரஹணம் செய்துக்கொண்டார்; அதன்பிறகு, அவரது அநுஜன்மனாகிய (தம்பியாகிய) லக்ஷ்மணனோ வென்றால், மிதிலேந்திரனை ஜனகமன்னனுடைய சித்தத்திலே பகு குணங்களை (அநேக - விநயம் முதலான உயர்ந்த குணங்களை) ஏற்றி, ஊர்மிளையைப் பாணிக்ரஹணம் செய்துக்கொண்டார்."

என்னும் பொருளையுடைய கவியையும் நோக்குக. இதனால், தனது சொந்த குமாரி ஊர்மிளையின்பொருட்டு, ஜனகமன்னற்கு, இலக்குவனிடத்தும் இருதயம் செல்லல் இயற்கைதான் என்பதைக் கவி, ஊஹித்துணரவைத்தற்பொருட்டுக் "குமரர்" என்று ஒருமை நீங்கிய பன்மையிற்கூறினார்போலும் என்க. அன்றி, "குமரர்" - கு+மார் - கு=பூமியில் உருவுடன்தோன்றியிருக்கும்," "மார்=மன்மதர்கள்" என்று, அந்த மன்மதன், சிவனது நெற்றிக்கண்பட்டுக் கெட்டொழிந்து மறைந்து போனான்; இவர்களோ, பூமியில் உருவுடன் விளங்கி நிற்கும் மன்மதர்கள் என்பார், குமரர் என்று குறித்துள்ளார்போலும்; அதனாலன்றோ, இவர்கள், மன்மதனைப்பங்கம்செய்த சிவனுசைப் பங்கம்செய்ய வந்திருக்கின்றார்கள்" என்பார், குமரர் என்றார்போலும். அன்றியும், "குமரர்"- "கு+மார்"=கு - உலகக்கவலைக்கு, மார்=(மாணம்) அழிவுசெய்ய வல்ல ஆற்றலுடையவர் என்பார், குமரர் என்றார் என்றுஞ் சொல்வர். தமை - "தம்+ஐ" - தம்=அசை; ஐ=இரண்டனுருபு.

" இருகண்ணின் முகத்தழகு பருக நோக்கி " - " இருகண்ணின்... ......நோக்கி "=" இரண்டுகண்களாலும் பார்த்து " - என்பது பொருள்; 'நோக்கி' என்னும் அளவிலே, "கண்களால் பார்த்து" என்னும்பொருள், சித்திப்பதாக இருக்க, " இருகண்ணின் " - என்னும் பதமும் வேண்டுமோ? இது மிகைப்படக்கூறல் அன்றோ? எனின்; - அன்று; "மன்னன், இதுவரையில் கண்பெற்றிருந்தும் கண்கொண்டு பார்க்கவேண்டியதைப் பார்க்காமல், ஏதேதோபார்த்து வீண்காலமேகழித்தான்; இன்று பார்க்க வேண்டியதொன்றையே பார்த்து " கண் பெற்ற பயனைப் பெற்றான் " என்பார், " கண்ணின் நோக்கி " என்றார் என்க; ஒருபொருளை யொரு கண்கொண்டு பார்த்தல், முற்றும்பார்த்தபடியாகாமல் அரைப்பார்வையே யாகுமாகலின், " முற்றும் பார்த்தான்; திருப்தியாகப்பார்த்தான் " என்பார், " இருகண்ணின் நோக்கி " என்றார்; " இன் "=வேற்றுமையுருபு; மூன்றன் பொருளைத்தந்தது; வேற்றுமை மயக்கமுமாமென்பர்; அன்றியும், " இரு + கண் + இன் + முகத்து + அழகு.........நோக்கி " - என்று பிரித்து, " இன் + முகத்து " - எனக்கூட்டி, " இனியமுகத்தின் " அழகையென்றும் பொருள்கொள்வர்; அன்றி; இருகண்ணின் - இரண்டு கண்=அதாவது "ஊனக்கண் - ஞானக்கண்" என்னும் இரண்டு கண்களால் நோக்கி, அதாவது, "ஊனக்கண்ணால் நரனையும், ஞானக்கண்ணால் பரனையும் நோக்கி" என்றுமாம்; ஸ்ரீராமன் பரனும் லக்ஷ்மணன் நரனும் அன்றோ! ஜனகன் ஞானியர் தலைவனன்றோ!!

" முகத்தழகு பருக நோக்கி " - முகத்தின் அழகைக் குடிப்பது போல் பார்த்து - என்பதாம்; அழகு என்பது மேனியனைத்தும் பொருந்தியிருந்தபோதிலும், சிறப்புடைமை பற்றி, " முகத்தழகு எனப்பட்டது; இதுவே எல்லா அழகையும் உணர்த்தியதாகும் என்பதாம். அன்றியும், அழகைக் கவனிப்பார் முதலில்," முகத்தையே நோக்கல் இயற்கையாகலின், " முகத்தழகு" - என்றார் போலும்; அன்றியும், " முகத்து அழகு " - என்றும், " இருகண்ணும் முகத்து " என்றும் பாடபேதங்களும் உண்டென்பர்.

" அழகு பருக நோக்கி " - "அழகைக் குடிப்பது போல் பார்த்து"- என்பதாம்; " அழகு நோக்கி " - என்ற அளவே அமையுமாயிருக்க, பருக என்றது எற்றுக்கோ? எனின் :—கூறுவோம். "அழகு" - என்பது

லாவண்ய ஸாகரம் - என்றபடி, திரவரூபமாக அதாவது ஜல மயமாகவே சொல்லப்படுவதால், ஜலத்தை யநுபவித்தல் - பருகலேயாகலான் "அழகு பருக" - என்றார் என்க.

"அருந்தவனை யடிவணங்கி" - "அரிய நவத்தையுடைய விசுவாமித்திரரை யடிவணங்கி" என்பதாம்; "அருந்தவனை" - "அரும் + தவனை" = "அருமையான தவமுடைய விசுவாமித்திரரை" என்பதாகும்; இத்தகைய குணமும் குலமும் பணமும் பலமும் அழகும் ஆற்றலும் வித்தையும் விநயமும் முதலிய எல்லாம் கருவிலேயே அமையப்பெற்று அவதரித்திருக்கிற இத்திருக்குமாரர்களைச் சிறிது நேரமேனும் தரிசனம் செய்யச் சிறியதவமாவது நான் செய்திருந்தனனே, இக்குமாரர்களை எப்போதும் தம்மருகே கொண்டு, அவரது அழகு ஆற்றல் விநயம் வித்தை முதலியவற்றையும் திருமேனியின் முன்னழகையும் பின்னழகையும் எப்போதும் பார்த்துக்கொண்டே - அநுபவித்துக் கொண்டிருக்க, இம்முனிவர், அரிய தவத்தைச் செய்து வைத்தவர் போலும் என்பார் "அருந்தவனை" யென்றார்; அன்றியும், "அருந்தவனை" - அருந்து + அவனை = "அருந்தக்கூடிய அம்முனிவனை" - என்றும்; அருந்துதல் = குடித்தல் அல்லது பருகல். சிறிதுநேரமே அக்குமாரர்களின அழகைப் பார்த்த தனக்கு, அவ்வழகைக் குடிப்பதுபோலப் பார்க்கவேண்டியிருந்த படியாலும்—"ஸதாபச்யந்தி ஸூரய:" என்கிறபடி "வைத்தகண் வாங்காமல் பார்க்கவேண்டியிருந்தபடியாலும், மன்னன் அவ்வநுபவத்தை யொட்டி, இம்முனிவர், இக்குமாரர்களின் வடிவழகையெப்போதும் பருகிக் கொண்டு - அருந்திக்கொண்டிருக்கும் பாக்கியம் படைத்தவரென்பார், "அருந்து அவனை" - (அருந்தவனை) யென்றான் என்கிறார்போலும். அடிவணங்கல் - நமஸ்கரித்தல்.

ஆரையிவர் - "யாரையிவர்" என்றுமாம்; "யாரை + இவர்" - "இவர் + யாரை" = "இவர்கள்யார்?" என்பதாம்; யார் + ஐ = இப்பொருளில் "ஐ" - சாரியையாம்; அன்றி, "யார் + ஐ + இவர்"—"யார் புதல்வர் இவர்" என்றாகி, "ஐ" - புதல்வர் என்னும் பொருளையுணர்த்திநின்றது. மணமகனைப்பெற அவாவினவன், அவனது பெற்றோரை வினவிக்கேட்டல்மரபாம் என்க; பெற்றவன் இன்னான் எனவே, குலமும் கோத்திரமும் வெளிப்படலால்.

" உரைத்திடுமின் அடிகள் என்ன " - "உரைத்திடுமின்" - "விஸ்தரித்துச் சொல்லிடுங்கள் " - என்பதாம்; "உரை" யென்னும்பதம் விவரித்துச் சொல்லும் சொற்பொழிவின்பால் பிரயோகிக்கப்படுதல் மரபாமென்பர்; " பதவுரை - பொழிப்புரை - அகலவுரை - விரிவுரை - கருத்துரை - குறிப்புரை " யென்னும் பிரயோகங்களையும் வழக்காறுகளையும் கவனிக்க. " உரைமின் " - என்ற அளவே "சொல்லுங்கள்" - என்று, பொருளும் கௌரவமும் பொருந்துமாறு இருக்க, " உரைத்திடுமின் "- என்று " இடு " என்று கூட்டினது என்னையோ வெனின், " இடு "- என்பது ஆற்றல் உணர்த்தும் விகுதியாகலின், ஜனகமன்னனது ஆர்வத்தையும் அதிகாரத்தையும் விரைவுக்குறிப்பையும் குறித்தற்காமென்க; அன்றியும், " உரைத்திடுமின் "-உரைந்து + இடுமின் " - என்றாகி, "இக்குமாரர்களது மகிமைகளையெல்லாம் விவரமாக எனக்குச் சொல்லி, அவர்களை அதாவது இராமலக்ஷ்மணர்களை எனது புத்திரிகட்கு அதாவது சீதாதேவி ஊர்மிளைகட்கு நாயகர்களாகும்படியாக வரன்களாக்கக் கொடுங்கள் என்பதும் பொருளாதல் காண்க. " மின் " - முன்னிலைப் பன்மை வினைமுற்று விகுதி; இங்கு ஒருமையில் கௌரவ வாசகமாகப் பிரயோகிக்கப்பட்டிருக்கிறது. " உரை + த் + த் + உ + இடு + மின் "-எனப்பகுதி சாரியை காலஇடைநிலை விகுதி சேர்ந்து உரைத்து என்றாகிப்பின் பகுதி விகுதிகளாகிய இடு + மின் சேர்ந்து உரைத்திடுமின் என்றாயிற்று; "உரைத்து + இடுமின்" - து + இ என்னும் குற்றியலுகரப் புணர்ச்சியால் தி எனத் திரிந்து நின்றது.

" அடிகள் என்ன " - "அடிகள்" = சுவாமிகாள் என்பது பொருள்; அண்மைவிளி. அடிகள் = பெரியவர்கள் என்னும் பொருள் குறிக்கும் மரபுச் சொல்; இது " பாதா: " என்னும் வடமொழிப் பிரயோக வழக்குப் பற்றி வந்தது. " கோவிந்த பகவத்பாத:- சங்கர பகவத்பாத:-ராமாநுஜ பகவத்பாத :-"என்னும் பிரயோகங்களைக் கவனிக்கவும். "பகவத்பாத: பகத்ராஜ:" " என்னும் பிரயோகங்கள்"-இறைவனடியார்களைக் குறித்திருக்கின்றமை காண்க; பாதம் - அடியாகலின் ஆம் என்க.

இதுவரையில், இந்த இரண்டு அடிகளிலும் ஜனக மன்னவனது வினைக் குறிப்பு வெளியாயது; இனிப் பின்னிரண்டடிகளிலும், விசுவாமித்திர முனிவருடைய விடைக் குறிப்பு வெளியாவது காண்க.

விசுவாமித்திரர் கூறுகிறார் :—

" விருந்தினர்கள் " - " விருந்தினர்கள் " = " புதியவர்கள் " என்பதாம்; விருந்து = புதுமையாகலின்; எனவே, " இக்குமாரர்கள் நீ செய்யும் யாகமஹோத்ஸவத்தில் விருந்துண்ண வந்தவர் " என்று ஒரு வியப்புத் தோன்றக் கூறினாரென்று கூறலாம்; அன்றியும், " விருந்தினர்கள் " = " புதியவர்கள் " - அதாவது " அதிதிகள் " என்பதாம்; ஏனெனில், " இவர்கள், இந்நகருக்கு முன்னும் வந்ததில்லை; பின்னும் வரப்போவதில்லை" யாகலின் என்க; அதிதி என்பார், "திதி முதலானவற்றைக் கவனியாமலும், உறைந்து விட்டுச்சென்ற இடத்தைத்திரும்பிவந்து பாராமலும் யாத்திரைமுகமாகப் போய்க்கொண்டேயிருப்பவர் " என்பதாகும்; இக்குமாரர்களும் அத்தன்மையரென்பார் "விருந்தினர்கள்" என்றார்போலும். அன்றியும், " யாத்திரையில் அதிதிபோற் செல்வானொருவனையே, அவனது வித்தையையும் ஒழுக்கத்தையும் உணர்ந்து, குலத்தைவிசாரித்துப் பெண்ணைக்கொடுத்தல் " கன்னிகாதானம் " என்னும் மணமுறையாகுமாகலால், " நீ கன்யாப்பெண்களை வைத்துக்கொண்டு வரர்களைத்தேடிக் கொண்டிருக்கும் குறிப்புக்கேற்ப, இவர்களும் அதிதிகள்தாமென்பார்" "விருந்தினர்கள் " என்றார்போலும் ; அங்ஙனமாயின், " குலத்தைப் பற்றியோ?"-என்னும் "ஐயம் நிகழப்படாதே" என்று, முற்குறிப்பாகவே, குலத்தையும் உணர்த்துவான் " விருந்தினர்கள் " என்றார் என்க. என்னை? " விருந்தினர்கள் " - விருந்து + இனர்கள் = " புதிதாக இங்கு வந்த சூரியகுலத்தினர்கள் " என்பதாம். " இனன் = சூரியன்; இனர் = சூரியகுலத்தினர்; கள் - விகுதிமேல விகுதியாகும். அன்றியும், அதிதிகளைத் தேவதைகளைப்போல் எண்ணவேண்டியதென்பது மரபாகலின், இவர்கள் " தேவர்களையொப்பார் " என்கிறார் என்றுமாம். தேவர்களில் " விஷ்ணு:பரம: " என்றபடி உயர்ந்தவர் விஷ்ணுவென்பது வேதவழக்காகலின், இவர்கள் " விஷ்ணு அம்சமுடையவர்கள் " என்பார் - " விருந்தினர்கள் " என்றார்.

" நின்னுடைய வேள்விகாணியவந்தார் " - " உனதுயாகத்தைக் காணும்பொருட்டு வந்திருக்கிறார்கள் " என்பதாம். " நின்னுடைய " - என்றது, "நீ ஆரம்பித்திருக்கும் யாகம்" - என்றே, "நீ ஏற்படுத்தியிருக்கும் விவாஹபந்த" மென்றே பொருள்படுதல் அறிக. "வேள்வி-யாகம்; மணம்; இரண்டையும் குறிக்குமாறுணர்க ; வேள் = பகுதி. பின்வரும்

" வில்லும் " - என்னும் சொற்குறிப்பால், "வேள்வி" என்பது, "யாகம்" என்னும்பொருளையே யன்றி, " கல்யாணம் " என்னும் பொருளையும் உணர்த்தி நிற்றல் அறியலாம். " காணிய " - " காணும்பொருட்டு " என்பதாம்; செய்யிய என்னும் வாய்பாட்டு எதிர்காலவினையெச்சம். " காணிய " - " விளையாட்டாகப்பார்க்க " என்றும் " ஒருகைபார்க்க " என்றும் பொருள் தந்து நிற்றலை யுணர்க; காண் - பகுதி; கைபார் - என்பது-காலிவட்டு " என்னும் பொருட் குறிப்புடையது. இப்பொருள், பின்வரும் " வில்லும் " என்னும் சொல்லின் "உம்" மைக்குறிப்பை அவாவி நின்றது. " வந்தார் " - தேடிச்செல்லாமல் " தானேவந்தபொருள் " என்கிறார்; ஏனெனில், பாக்கியமெல்லாம், தெய்வகிருபையால் - விதிவசத்தால் - ஊழ்வினையால் - " தானேவருதல் " இயற்கை. எனவே, இவர்கள் யாதிருச்சிகமாகவந்த " பாக்கியமளிக்கும் யோக்கியர்கள் " - என்பார் - " வந்தார் " - என்கிறார். வந்தார் என்னும் இறந்தகாலக்குறிப்பு, வரனை (மணமகனை) க் கண்ணுற் காணுமலே தரகர்கள்மூலம் ஏற்பாடு செய்து கோரியிருந்து, வந்தபின், தரகர்கள் சொன்ன குணம்குறியாதிகள் பொய்த்துப் போய், ஏமாறிநிற்கும், மாமனார்கள்போலாகாமல், முன்னரே நீ நேரில் கண்டு பரீக்ஷித்து, விசாரித்து நிச்சயிக்கும்படியாக "முன்னரே வந்துளார்" என்பார், "வந்தார்" என்றார்.

" வில்லும் காண்பார் " - " நீசேமித்துக் கந்யா சுல்கமாக வைத்திருக்கும் வில்லையும் பார்ப்பார்கள் " என்பதாம். " வில்லும் " - " வேள்விகாண மாத்திரம் வந்தவர்களல்லர்; ஒரு அழகும் அறிவும் உடைய பெண்ணின் மணவினையைத் தாமதித்துக் கொண்டிருக்கும் அந்த வில்லையும் ஒருகைபார்த்து, அப்பெண்ணின்பால் கருணையும் காட்ட வந்தவர்கள்; இப்பொருளில் "வில் + உம் " - " உம் "—என்பது எச்சப் பொருளைத் தந்து நிற்கின்றது: உலகிற் சிறந்த வீரரையெல்லாம், அவர் தோள் வலியைப் பரீக்ஷை பார்த்து, அவரை யவமதித்தனுப்பிய "வில்லையும் " வலியிழந்தொழியும் பொருட்டு ஒரு கைபார்ப்பார்கள் என்பதாம்; இப்பொருளில் "வில் + உம்" - " உம் "=உயர்வுசிறப்புப் பொருளில் வந்துளது; அன்றியும், பூர்வாம்சத்தில், சிவ விஷ்ணு யுத்தத்தில் ஒடிந்துபோ யொழிந்த சிவதனுவே இதுவாகலின், அந்த விஷ்ணுவின் அம்சபூதராகிய ஸ்ரீராமபிரானது ஆற்றலுக்குச் சிறிதும் ஆற்றாத "வில்லையும்

காணவந்தவர்கள்" என்றுமாம்; இப்பொருளில், "வில் + உம்"-"உம்"= இழிவு சிறப்புப் பொருளில் வந்துளது; காண்பார் =" காணுதல்" அறிதற் பொருட்டாய், " அவ்வில்லைப் பற்றிய யாவும் அறிவார்கள் இவர்கள்" என்றுமாம்.

" பெருந்தகைமைத் தயரதன் தன்புதல்வர் " - "பெருந்தகைமை"- ஸத்யந்தினால் புகழுடைய பெருமை; "பெருந்தகைமை" - இந்திரனது பகைவர்களான, பத்து ரதத்துடன் போர் நிகழ்த்திய, வெம்சினத்துச் சம்பரன் முதலிய அவுணர்களை வென்று, இந்திரனுக்கு இந்திரச் செல்வத்தை யளித்தருளிய பெருமை; " பெருந்தகைமை " - தச திக்குகளிலுமேயன்றி எத்திக்குகளிலும் உள்ள - ஓரேழுலோகத்திலுமேயன்றி ஈரேழுலோகத்திலுமுள்ள-தீயவரையழித்தற்கென்று, உலகினர் போலல்லாமல், புத்திரகாமேஷ்டியினால் பரம் பொருளையே புதல்வராகப் பெற்று வளர்க்கும் பாக்கியமுடைமையுமாம் என்க. " தயரதன் " - தசரதன் என்பதன் போலி; "தசரதன்" - இடுகுறிப் பெயராய்க் " கருடவாஹனனாகிய " விஷ்ணுவின் நாமம் பூண்ட பெருமையுடையவன்; " தச= கருடன்; ரதம்=வாஹனம்" அதையுடையவன் " தசரதன்"=" கருடவாஹன"னென்றார்; அன்றியும், "தசரதன்" காரணப் பெயராய்" பத்துத் திக்குகளிலும் தன் ஒரு ரதமே சென்று திரும்பும் சக்ராதிபத்யப் பெருமையுடையவன் " என்பதுமாம். " தன் " = "உடைய" என்னும் பொருளைத் தந்து நிற்கும், ஆறாம் வேற்றுமைச் சொல்லுருபு.

" அவர்தகைமை பேசலுற்றான் " - " அவர் " - அவர்குலத்தவர்; தகைமை = பெருமை; பேசல் உற்றான்—சொல்ல வாரம்பித்தான். பேசலுறு - பகுதி; எனவே, " அக்குமாரர்களினுடைய குலப் பெருமைகளையும் குறிப்பாகப்பேச ஆரம்பித்தார் " என்பதாம். இஃது அடுத்த படலத்துக்குத் தோற்றுவாய்.

மிதிலைக்காட்சிப் படலம் முற்றுப் பெற்றது.

மொத்தத் திருவிருத்தங்கள் — எருசு.

ஸ்ரீ

# விண்ணப்பம்.

---

மெய்யன்பர்களே!

"கம்பநாடன்"ரில், ஆரம்பம் முதற்கொண்டு நம்மால் எழுதப்பெற்று வெளிவந்து கொண்டிருக்கும், "கம்ப ராமாயணக் கவியும் - உரையும்" என்னும் பகுதியில், இந்த ஸஞ்சிகையுடன், "மிதிலைக்காட்சிப் படலம்" முடிவு பெற்றிருக்கின்றது இதுவரையில், ௬௫௪ பக்கங்கள் ஆகிவிட்டன; இன்னும் எல்லாப் படலங்கட்கும் உரையெழுதிச் சேர்த்து விட்டால், பக்கங்கள் - க௫00-க்கு மேலாகிப் புஸ்தகம் கைக்கடங்காத பெரு புத்தகமாகிவிடலாமென்பது கருதி, இத்துடன் நிறுத்தி, இதனைக் "கம்பராமாயணக் கவியும் - உரையும்; பாலகாண்டம் முதற் பகுதி" என்று வெளியிட்டு விடலாமென்று தீர்மானித்திருக்கின்றோம்.

அங்ஙனமாயின் இம்முதற் பகுதிக்கு வேண்டிய, "முகவுரையும், டைடில் பேஜும், படல அகராதியும்" - என்பவற்றை யெழுதி முற்கூட்டியும், "செய்யுள் முதற் குறிப்பு அகராதியும், பிழைதிருத்தமும், அநுபந்தமும்" என்பவற்றை யெழுதிப் பிற்கூட்டியும், புஸ்தகத்தைக் கட்டி வெளியிடும் போது, சுமார் பக்கங்கள் - ௭00 - ஆகிவிடல் கூடும்; ஆகலின், இதனைப் பாலகாண்டம் - முதற் பகுதி யாகவே வெளியிட்டிடும் தீர்மானத்தை விண்ணப்பித்துக் கொள்கிறோம்.

அடுத்த ஸஞ்சிகையில், முற்குறித்தபடி, இப் பகுதிக்கு வேண்டிய "முகவுரை யாதியவை வெளி வரும். பாலகாண்டம் - மொத்தம் - உசு - படலங்களில், இந்த முதற் பகுதியில் - கச - படலங்கள் வெளியாகி யிருக்கின்றன வென்பதையும் தெரிவித்துக் கொள் கிறோம்.

தங்கள் தாழ்மையுள்ள, அன்பன்,

மோ. வே. கோவிந்தராஜன்,

ஆசிரியன். 15—5—1936.



# கம்பராமாயண—கவியும் உரையும்.

## முதற் பகுதியின்

## அருஞ்சொல்—தொடர் அகராதி.

### அ

## ஆ

## இ

உறங்குதல்—இனிது வீற்றிருத்தலு மாம்; நாட்டுப்—6

உறுகண்-துன்பம்; திருவவதாரம்-31

உறுப்புறுபடை—அவயவமேயாயுதம்; நாட்டுப்-16

உறுபகை-தோன்றிய பகை; மிகப் பகையுமாம்; திருவவதாரப் படலம்—3

உறை — இருப்பிடம்; சிறப்புப் — 8; தங்கு × மிதிலைக்-48

உறையுள் — வசிப்பிடம்; திருவவதா ரம்-94

உன்னுதல்-நினைத்தல்; மிதிலைக்காட் சிப்-42

ஊ

ஊக்கினன்-பதியச் செய்தான்; தாட கைப்-18

ஊடலில் மனைவியரை யாடவர் வணங்கல்; மிதிலை-20

ஊதைகள்-தென்றல்கள்; நாட்டுப் படலம்-51

ஊமரின் — உமைகள்போல; மிதிலைக் காட்சிப்-42

ஊழ்—முறை; நகரப் படலம்-26

ஊழித் தீ—கடைக்காலத் தீ; தாட கைப்—19

ஊற்றம்—பழக்கம்; கையடைப்—12

ஊன்-உடல்; தாடகைப்-92

ஊனம்—குறைவு; நகரப் படலம்-34

எ

எண்கு — கரடி; திருவவதாரப் படலம்-26

எண்மர்—அஷ்டதிக் பாலகர்; மிதிலைக் காட்சி-107

எத்தானும்—எதனாலும்; திருவவதா ரப் படலம்—36

எதிர்கோள் — எதிர் கொண்டழைத் தல்; திருவவ.-59

எயில்-மதில்; அகலிகைப்-15; மிதி லைப்-131

எயிற்றிமாதர் — வேட்டுவ மகளிர்; ஆற்றுப்பட-14

எயிறு — கோரப்பல்; வேள்விப் படலம்—18

எயினர் — வேடர்; ஆற்றுப் படலம்—18

எரிகதிர்—சூரியன்; தாடகை-16

எல்—ஒளி; நகரப்படலம்-22

எல்லியாமம்—இரவின் சாமம்; மிதிலைக்— 68

எல்லை நின்றவென்றியானை—திசை யின் எல்லைகளின் நிற்கும் திக்க ஜங்கள்; நகரப் படலம்—22

எழில்-அழகு (வளர்ச்சி) வேள்வி-58

எழிலி—மேகம்; திருவவதாரப் படலம்—60

எழினி—திரைப்படம்; நாட்டுப் படலம்—4

எழு—இருப்புத்தூண்; மிதிலைக்-53

எழுதுகீர்த்தி-அகலிகைப்படலம்-42

எழுந்தோடும் உவகை— பொங்கியெ ழுகின்ற சந்தோஷம்; திருவவதா ரம்—59

எழுமிடம்—உதயம்; நகரப்படலம்-41

எள்ளுதல்—இகழ்தல்; விலக்கல்; தா டகைப்—19; வேள்வி 29.

எற்பாடு பொழுது — சூர்யாஸ்தம னம்; நகரம்—41

எறியும்காரம் × நன்றி விலக்கும் பொறி; நகரப்படலம்—14

ஒருங்கிய-ஒற்றுமைப்பட்ட; மிதிலைக் காட்சி—38

ஒரு பகிர்—ஒரு பகுதி; திருவவதாரம்—89

ஒருவெள்ளம்-பலவிடத்துப் பலபெயரடைதல்; ஆற்றுப் படலம்—19

ஒல்லுதல் — உடன்படல்; மிதிலைக் காட்சி—114

ஒல்லென—ஒலிக்குறிப்பு; வேள்விப் படலம்—46

ஒற்கம்—வறுமை; மிதிலைக்காட்சி-122

ஒற்றர்—வேவுகாரர்; திருவவதாரம்-59

ஒன்னலர்-பகைவர்; திருவவதாரம்-92

## ஓ

ஓகை—உவகை; மிதிலைக்காட்சி—83

ஓங்கினான்—பூரித்தான்; மிதிலைக்-136

ஓசையின் பரியாயம்-(அரவம், அமலை, ஓசை, ஓதை, சமரம், துழனி); நாட்டு—3

ஓடதி—மூலிகை; அகலிகை—21

ஓடை—நெற்றிப்பட்டம்; திருவவதாரம்—109

ஓதம்—கடல்; மிதிலைக் காட்சி—63

ஓதிமப்பெடை — பெண்ணன்னம்; மிதிலை—78

ஓம்பிட — காத்திட; திருவவதாரம்-93

ஓவியப்பாவை — சித்திரப் பதுமை; மிதிலைக்—39

ஓவியப்புரு-சித்திரப்புரு; நகரம்-23

ஓளி-வரிசை; நகர—25; மிதிலை—22

## க

ககனம்—ஆகாயம்; திருவவ்தாரம்—47

கங்குல் × ஊழி; மிதிலைக்—155

கங்கைத் திம்புனலுடன் — இராமன்; தாடகை—68

கங்கையந்தொங்க மௌலியான்—சிவன்; தாடகைப் படலம்—20

கங்கைச் சிறப்பு; அகலிகைப் பட—60

கசட்டுறு முனி—துர்வாஸர்; அகலிகை—6

கசடு = குற்றம்; திருவவதாரம்—77

கஞ்சமா முனிவன்—பிரமன்; அகலிகை—85

கஞ்சுகம்—கவசம்; மிதிலைக் காட்—63

கட்டுரை—உறுதிமொழி; வேள்வி-32

கடகம்—கைவளை; மிதிலைக்காட்சி-17

கடகரி—மதயானை; நகரப் படலம்—67

கடம் கலுழ்தல்—மதநீரொழுகுதல்; தாடகைப்—46

கடல் நறுந்தூபம்—நாறுதல்; நகரப் படலம்—42

கடலமிர்தம்—உப்பு; நாட்டுப்—47

கடலாடுதல்—சிறப்புப் பாயிரம்—2

கடலாடையுலகு—திருவவதாரம்—38

கடலில் தேருடன் சூரியன் தோன்றல் திருமாலின் உந்தியில் அயனுடன் தாமரை தோன்றல்; அகலிகைப் படலம்—31

கடலெலாம் ஒரு கை மொண்டிடு மாதவன்-அகத்தியன்; தாடகை-30

கடவுளர் படைகள் — தெய்வாஸ்திரங்கள்; மிதிலைக்காட்சிப் பட—102

கடற்கிறைவன்—வருணன்; மிதிலைக் காட்சி—119

கடி—விளக்கம்; தாடகை—33; காவல்; மிதிலைக் காட்சி-1; வாசனை; நகரப் படலம்—58

கடிகமழ் கழனி—நாட்டுப் படலம்—42

கடிகமழ் பொழில்-நாட்டுப்படலம்-21

கடிகை—நாழிகை; திருவவதாரம்—76

கடிதடம்—மணமுள்ள இடம்; திருவவதார—21

கடு—நஞ்சு; திருவவதாரம்—7

கடுக்கும்—ஒக்கும்; மிதிலைக் காட்சி—4

கடுக்கை—கொன்றை; ஆற்றுப் படலம்—13

கடை—ஓரம், வாசல்; தாடகை-48

கண்டம்—கண்ட சர்க்கரை; நாட்டுப் படலம்—22

கண்டில் வெண்ணெய்—ஓமாலிகை முப்பத்திரண்டினுள் ஒரு மருந்து; ஆற்றுப் படலம்—13

கண்ணறுதல்—நீங்குதல்; மிதிலைக் காட்சி—45

கண்ணிலான் பெற்றிழந்தான் என; கையடை—11

கண்ணிற் காண்பரேல் ஆடவர் பெண்மையை அவாவுந்தோளினாய்; தாடகை வதம்—41

கண்ணுக்குக் கரியோன் வைகும்பாற் கடலுவகை; மிதிலைக் காட்சிப் படலம்—141

கண்ணுதல்—சிவபிரான்; அகலிகை படலம்—49

கண்ணுதல்-வானவன் சடை விரிதல் × இரவியின் கதிர்கள் விரிதல்; மிதிலைக்—153

கண்ணொடு கண்ணினை கௌவுதல்; மிதிலை—35

கண்மலர்—சிவப்பு உள்ளங் கருப்புறு; மிதிலை—37

கண்மலர்ந் தொளிர்தல்—பத்து எழுவாய்கட்குப் பொருளளிக்கும் வினை; நாட்டுப் படலம்—7

கண்வழி நுழையுமோர் கள்வன்-இராமன்; மிதிலைக் காட்சிப் படலம்-55

கணம்—கூட்டம்; நகரம்—35; அகலிகைப்—58

கணித்தல்—ஆராய்ந்தறிதல்; மிதிலைக் காட்—67

கத்துவாரிதி—ஒலிக்குங் கடல்; அகலிகைப்—21

கதலிக்கானம் × பதாகைக்குழாம்; நகரப்—38

கதி—நடை, ஒழுக்கம், மறுமை; நாட்டுப்—44, அரசியல்—4, அகலிகை—57

கதிர்—கூர்நுனி; திருவவதாரம்-60

கதுப்பு-கூந்தல்; நாட்டுப் படலம்-11

கதுமென—விரைவுக் குறிப்பு; அகலிகைப்—22

கதுவுதல்-பரிசித்தல்; அகலிகை-85

கந்தமலரிற் கடவுள்—பிரமன்; கையடை—4

கந்துகம்—பந்து; மிதிலைக் காட்சி—16

கபிலமாமுனி—அகலிகை—35

கபிலை—பசு; மிதிலைக்காட்சி—99

கம்பநாடுடைய வள்ளல்—தனிப்பாசுரம்—6

கம்பம்—நடுக்கம்; மிதிலைக்காட்—49

கம்பலை—ஒலி; அகலிகைப்படலம்-12

கம்பன் இம்பர்க்கு அமுதமீந்தான்—தனிப்பா—6

கம்பநாடன் கவிதையிற்போற் கற்றோர்க்கு இதயங்களியாதே-தனிப்பாசுரங்கள்—8

கமந்த—நிறைந்த; மிதிலைக்காட்—132

கமலச்சரண்—தாமரைப்பாதம்; கையடை—5

கமலத்தடங்கொள் நாண்மலர்—அகலிகைப்—3

கமலம்—மேவிய சரோருகன்மகன்—வசிட்டன்; திருவவதாரப்படலம்—5

கமை—பொறுமை; நகரப் படலம்—3

கமையாள்-பொறுமையாற் கற்பினைக் காத்த சீதை; மிதிலைக்காட்சிப்—25

கயம்—குளம்; வேள்விப் படலம்—35

கலை—வித்தை; நாட்டுப்—48; சாஸ்திரங்கள்; மிதிலைக்—6; தத்துவ நூல்—திருவவ—33; உவம உருபு மாம்; மிதிலைக்காட்சிப்—6 (மூன்று மடி)

மேகலாபரணம்—மிதிலைக்காட்சிப்—44

கலைமறை முனிவன் — வஸிட்டன்; மிதிலைக்—68

கலையூர்கன்னி — காளி; நகரப்படலம்—9

கலைவாழ்மதி—நாட்டுப்படலம்—44

கவ்வை — காரியம்; திருவவ — 93; துயரம்—திருவவ—66; 123

கவண்கல்—கயிற்றின் எறிகல்; நகரப்—12

கவர்—பிளவு; வேள்விப்படலம்—47

கவன வேகம் — நடை விரைவு; வேள்வி—11

கவிதை—கவி; தனிப்பாசுரங்கள்—5

கவிநீத்தம்—குரங்கு வெள்ளம்—ஆற்றுப்—9

கவியின்பம் — சான்றோரது செஞ்சொற் கவியில் தோன்றும் இன்பம்; மிதிலைக்காட்சி—23

கவின்—அழகு; திருவவதாரம்—47

கவுசாம்பி—குசாம்பன் நகரம்; வேள்விப்—7

கழகம் — ஆராய்ச்சிசாலை; நாட்டுப் படல—48

கழல்—வீரர்காலிலணியும் ஆபரணம்; நகரப்—65

பாதம்—திருவவ—35

கழலொடு தேரொலி தாரொலி மாறுகொள்ளுதல் — நகரப் படலம்—65

கழனிப் போரொடு நிகர்வன — பொலன்வரை; நாட்டு—46

கழுதின்தேர் — பேய்த்தேர்; தாடகை—13

கழுந்தர்—படைக்கலங்களிற் கைப்பிடியாய் தேய்ந்திருக்கும் இடமாகிய கழுந்தையொத்தவர்; தனிப் பாசுரங்கள்—9

கழுந்து — உறுதி; வில்தண்டு; திருவவதா—59

கழுநீராற் செந்நெல் வளர்தல்; நாட்டுப்—25

கழை—புனர்பூச நக்ஷத்திரம்; திருவவதாரம்—110

கள்வாரிலாமை பொருள் காவலுமில்லை; நகர—73

கள்ளிபிளத்தல்—பேய் உடல் பிளந்ததையொக்கும்.

கள்ளியின் தாய்—கள்ளியின் அடிமரம்; கள்ளி வயிற்றின் அகில் பிறக்கும்; (இவை மூன்றும்) தாடகைப் படலம்—8

கள்ளுண்ட களிப்பு மறைக்கினும் வெளிப்பட்டுவிடும்; மிதிலைக்காட்சிப் படலம்—15

கள்ளுண்டமாதின் நகை போல் காமக்கள்ளுண்டார் நகையுமாம்—மிதி—15

களபம் — கலவைச்சாந்து; திருவவதாரம்—118

களம்—கழுத்து; திருவவதாரம்—8

களனமர் கருவெனக் கருகி மேகம் கரு நிறமுற்றது—திருவவதா—46

களிப்பு—மயக்கம்—திருவவதாரம்—48

களிறு கால் வெட்டும் குழியைச் சுண்ணம் தூர்த்தல் — நகரப்படலம்—44

கற்பக நாடு—தேவலோகம்; கையடைப்—1

கா

காத்தற்குக் கண்ணிணைக் காக்கின்ற இமைகள் உவமையாகக் கூறப் பெற்றன; வேள்விப்—41

காதற்சலதி — காதற்கடல்; மிதிலைக் காட்—106

காதி—குசநாபனுக்கு யாக பூமியிற் காதி பிறந்தான் என்பர் கம்பர்; குசநாபற்கு கிருதாசியிடம் பிறந்ததாக வான்மீகம் கூறும்—வேள்—11

காதி செம்மல்—காதி புத்திரர் என்பதாம்; விசுவாமித்திரர் என்று பொருள் அகலி—84

காதொடு குழைபொரு கயற்கண்—மிதிலை—46

காம்பு—மூங்கில்; நாட்டுப்படலம்—35

காமசரம் மனத்தைக் கலக்குதல் X தயிரை மத்துக் கலக்குதல்; மிதிலைக்காட்சி—3

காமநோய் எங்கும் பரத்தற்குப்பாலுறுபிரை உவமை; மிதிலைக் காட்சிப்படலம்—41

காமப்புதுநலமதுவின் தேறல்-புணர்ச்சியின்பத்தின் புதுப்புதுச் செவ்விகளாகிய கள்ளின் இனிய தெளிவு; அகலிகைப்—76

காமமும் வெகுளியும் களிப்புங்கைத் தெழுகோமுனி—ரிசியசிருங்கர்; திருவவ—43

காமக்கனலால் வருந்தும் சீதைக்கு—எரியினால் வாடும் மலரும், வேடனால் அடியுண்ட மானும் உவமைகள்—மிதிலைக்காட்சி—49

காமவெகுளி—காமக்ரோதம்; கைபடை—10

காமவேட்கை—காமவிருப்பம்; மிதிலைக்—69

காமர்—அழகு; திருவவதா—89

காமன்—மன்மதன்; காமவேட்கையையிருபார்க்கும் உண்டுபண்ணுபவன் என்பது புராண மரபு; தாடகை—2; 31

காமுகர்—பெண்ணுருவிற் பேதுறுமவர்; நாட்டுப்—5

காயம்—ஆகாயம்: (முதற்குறை) மிதிலைக்—67 (குழைத்தாகாயத்தின்—என்னும்போது ஆகாயம் என்னும் பதமே தொனிப்பது காண்க.)

கார்களென்ன வருங்கருமேதி—நாட்டுப்—25

கார்முகம்—வில்; மிதிலைக்காட்சி-101

கார்வர அலர்பயிர் X கல்விபெற்று திரும்பிவரும் தாசரதிகள் நால்வரையுங் காணுஞ் சனங்கள் கொள்ளும் களிப்புக்கு உவமையாக்கப் பெற்றது; திருவவதாரம்—132

காரணக்குறி — காரணத்தால் வந்த அடையாளப் பெயர்; தாடகை வதைப் படலம்—2

காரணக்கொடையான்—கம்பன்; வள்ளல் என்னும் காரணத்துக்குரிய கொடையான் என்றவது, கார் அன்ன அ கொடையான்,—எனப் பிரித்து, மேகத்தையொத்த கைம்மாறு கருதாதகொடையுடையான் என்றவது கொள்ளலாம்; தனிப் பாசுரங்கள்—5

கால்—வேர்; அடி; நாட்டுப்—35

,, —பெருகல் ,, முதலடி

,, —காற்று ,, இரண்டாமடி

,, —வாய்க்கால் ,, மூன்றாமடி

,, —பாதம்—அகலிகை—1 60

,, —ஆண்—நகரப்படலம்—24

கால்மடுத்தல்—காற்றினால் மோதப் படுதல்; நாட்டு—61

## கை

கைக்கரியளித்தருள் மெய்ப்பொருள்; திருநெடுமால்; ஸர்வலோக மங்கள காண்; திருவவதாரம்-120

கைத்து—செல்வம்-வேள்விப்-32

கைதவம்—வஞ்சனை; வேள்விப்-26

கை ஆர் புனலால் நனையாதன கையும் இல்லை-அரசியல்—3

கைவண்ணமங்குக் கண்டேன்—கால்வண்ணமிங்குக் கண்டேன்—"அங்கு = தாடகைவதத்தில்; இங்கு—அகலியா சாபவிமோசனத்தில்" என்பதாம்; கைவண்ணம்—சிறு செயல் (ஸாமாணிய தர்மம்) கால் வண்ணம்—கால்பாகம். அதாவது நாவில் ஒருபாகம்-எனவே, விசேஷ தர்மமாகிய சாப விமோசனத்தில், நான்கில் ஒரு பாகம் என்றுமாம்; அகலிகை—82

கைவரை-(கையையுடைய மலை அதாவது யானை) உவமையாகு பெயராகி இராமன் என்னும் பொருளைத்தந்தது; தாடகைப்படலம்-46

கைவழி நயனம் செய்ய, கண்வழி மனமுஞ் செல்லல், மிதிலைக்-9

## கொ

கொங்கு—மணம்; தாடகைப்-45

கொட்புறுகலினப்பாய்மா—சுழன்று வரும் சேணம்பூட்டித் தாவிச்செல்லும் குதிரைகள் × பந்தயக் குதிரைகள்—குலான்மகன் முடுக்கிய மட்பாத்திரம் வளையும் சக்கரம் போலவும், ஒரு லக்ஷ்யத்தையே நாடிச் செல்லும் வாளிகள்போலும், மேலோர் நட்பு இடையறாது பெருகுவதுபோலவும், ஞானிகள் உணர்வு லக்ஷ்யத்திலேயே குறிப்பா யிருப்பதுபோலவும் சென்றன; மிதிலைக் காட்சிப்படலம்—13

கொடி—துவஜம்; மின்னற் கொடியுமாம்; நகரப் படலம்—35

கொடிகளின் பெருமை மிதிலைக்-1, 2

கொடிச்சியர்—குறிஞ்சிநிலப் பெண்கள்; ஆற்றுப் படலம்—13

கொடியிடைத் தாளக்கோவை × கற்பக மாலை; நகரப்படலம்—37

கொடியில் நாட்டிய சூலம்—பகவிடு மின்னணிப்பரப்பு; நகரப்பட-36

கொடுப்பதுவிலக்கு கொடியோய்... ......... உடுப்பதுவும் உண்பதுவும் இன்றிவிடுகின்றாய் × "கொடுப்பது அழுக்கறுப்பான் சுற்றம்—உடுப்பதூஉம் உண்பதூஉம் இன்றிக்கெடும்;" திருக்குறள் வேள்விப் படலம்—33

கொண்டல்-நீருண்ட மேகம்; அக-5 மிதிலைக்காட்சிபடலம்-154

கொத்து—கூட்டம்; அகலிகைப்—21

கொதுகின் இனத்தையும், இதமல நினைவார் மனத்தையும் எறியும் பொறியுள—நகரப்படலம்—12

கொந்து அளகபாரம்-பூ மணம்பெற்ற கூந்தற்சுமை; நான்முகம்—3

கொம்பு—தந்தம்; மிதிலைக்காட்சி-11

கொல்லுதல்—துவைப்பித்தல்; நாட்டுப்படலம்—20

கொழுந்து—கொடிகள்; திருவவதாரம்—74

கொழுந்தோடிப் படர்கீர்த்தி—தசரதன்; திருவவதாரப் படலம்—59

கொள்கை — தன்மை; நகரப் படலம்—34

கொள்வாரிலாமை கொடுப்பார்களுமில்லை; நகரப்படலம்—73

கொள்ளுதல் தீது கொடுப்பதுநன்று-"நல்லாறெனினும் கொளல் தீது மேலுலகம் இல்லெனினும் ஈதலே

*சதமகன்*—இந்திரன்; அகலிகை—15
*சதானந்தன்* — அகலிகை மகன்; மிதி—84
*சதி* — தாளத்துக்கேற்ற அடிவைத்தாடல்; அகலிகைக்—12
*சதியைச் சதங்கையும் புரவித்தாரும் வருத்திக்காட்டல்*; நகரப்—52
*சதுக்கம்*—நாற்சந்தி; திருவவ—114
*சதுமுகன்*—பிரமன்; திருவவதா—33
*சந்தக்கா*—மணமுள்ள பூங்கா; நாட்-2
*சந்திரகாந்தத்தின் தலத்த*—நகரப்-30
*சந்திரவதனம்*—மிதிலைக்காட்சிப்—56
*சந்திரன்*—அமுதம் நிறைந்த பொற்கலசம்; மிதிலைக் — 70; அகலிகை—21
*சந்திரன்* × கடலிற்பூத்த வெண்டாமரை; மிதிலைக்காட்சிப்—71
*சந்திரன் நிலவை யெங்கும் பொழுதல்* × கொத்தன் சுதையால் வானத்தைப் புதுப்பித்தல்; மிதிலைக்காட்சி—74
*சந்திரன் கொடிபடலால் தேய்ந்து போதல்*; நகரப்படலம்—38
*சந்திரன் தோய் கோயில்*—மிதிலை-156
*சந்திரனிடத்து நிலாக்கற்றை விரிதல்* × வேண்டும் பத்துக்கமுகம் பாளை விரிதல்; மிதிலைக்காட்சி—72
*சந்திரோதயவர்ணனை*; மிதிலை—70
*சந்திரோபாலம்பனம்*; மிதிலை—76,77
*சம்பரன்*—கையடைப் படலம்—8
*சம்பு*—உமை செவிசாற்று நாமம்—இராமன்; தனிப்பாசுரங்கள்—4
*சமித்தது*—அழிந்தது; திருவவதா-90
*சமீரணன்*—வாயு; வேள்விப்—10
*சமைத்தல்* — அமைத்தல்; திருவவதா—144
*சமைவு*—நிகழ்ந்தது; திருவவதார-52
*சயில கோபன்*—இந்திரன்; மலைகளை கோபித்தபடியால்; திருவவதா—106
*சரண்*—பாயிரம் (கடவுள் வாழ்த்து)-1
*சரணம்*—ரக்ஷகம்; மிதிலைக்—116
*சரம்*—அம்பு; அகலிகைப்—77
*சரந்தருசாபம்* பாணம் தொடுக்கும் வில்; அகலிகைப்—77
*சரம்பெய்தூணி* × கணைக்கால்; அகலிகை—10
*சரயு*—அயோத்தியைச் சூழ்ந்து வளமாக்கும் நதி; வேள்வி-5
*சரயு நதி* × தாய்முலை யன்னது; ஆற்றுப்—12
*சரயுவின் பெருக்குப்போன்றது*—சூரியகுல மன்னரின் ஒழுக்கம்; ஆற்று—12
*சரயு பலகாலிளேடுதல்*—தானே பல பிரிவாகி அயோத்தியை வலம் வரல்; நாட்டுப்படலம்-50
*சரயுவெள்ளம் பலவிடத்தும் பாய்தல்*—ஆன்மா பல உடம்புகளில் நுழைதல்; ஆற்றுப் படலம்—20
*சரவணம்*—நாணற்காடு; சுப்பிரமணியன் அவதார ஸ்தலம்; அகலி—30
*சரன்*—இயக்கர் குலத்தான்; சுகேதுவின் தந்தை; சுகேது தாடகையைப் பெற்றவன்; தாடகை—22
*சலஞ்சலம்*—சங்கில் ஒரு விசேஷம்; (இப்பியாயிரமே சூழ்ந்த சலஞ்சலம்); நாட்டுப் படலம்—18
*சலதி*—கடல்; தாடகை—27
*சலம்*—பழைய கோபம்; தாடகை—38
*சவரர்*-வேடர்; மிதிலைக்காட்சிப்-127
*சவுளம்* — சூடாகர்மம்; மயிர்வினை; திருவவதாரப் படலம்—127
*சழக்கி*—குற்றமுடையாள்; தாட—41
*சளசள*—ஒலிக்குறிப்பு; திருவவதா—46
*சன்று*—ஒரு முனிவர்; அகலிகை—57

சீதையைத் தருதல்லால்; மிதிலை—23......30

தெய்வத் தாமரைபோலும்; மிதிலைக்—5

சீதை — படைப்புக்ககப்படவில்லை; மிதி—27

சீரை—மரவுரி; திருவவதாரம்—72

சீற்றம்—கோபம்; கையடைப்—18

சு

சுக்கிரீவன் — வாலிக்கு இளையவன்; இரவியின்கூறு; திருவவதாரம்—27

சுகேது — தாடகையின் தந்தை; தாட—22

சுட்டி—பெண்மக்கள் சிரசில் முன் முகத்து அணியும் ஆபரணம்— மிதிலை—148

சுடர்க்கடவுள்-அக்கினிதேவன்; தாடகைப் படலம்-5 (பரிதிவானம்)

சுடரோன்—சூரியன்; திருவவதா-58

சுடுசரமனையசொல்—அகலிகை-78

சுடுசுரம்—எரிகின்ற பாலைவனம்—தாடகை—4

சுண்ணம்—வாசனைப்பொடி; நகரப் படலம்—44

சுதை—சுண்ணும்பு; பால்; அமுதம், முறையே நகரப்-27; நாட்டுப்—45; திருவவதாரம்—87

சுந்தரவில்லி—ஸ்ரீராமன்; வேள்—55

சுந்தன்—தாடகையின் கணவன்; சுந்தோபசுந்தர்களில் மூத்தவன் என்றும் குறிப்பார்கள்; தாடகை-26

சுபாகு—தாடகையின் இரண்டாவது மகன்; யாகரக்ஷண காலத்தில் ஸ்ரீராமபாணத்தால் இறந்தவன்; வேள்விப்படலம்—52

சும்புளித்தல்—கூசுதல்; மிதிலை-132

சும்மை—ஒலி; நகரப்—61

சுமதி—விசாலா நகரத்து மன்னன்; அகலிகை-62

சுமதி—சகர மன்னனுடைய இளைய மனைவி; இவளிடந்தான் அறுபதினாயிரம் சகரர்களும் பிறந்தார்கள்; சகரனுடைய மூத்த மனைவியின் பெயர் விதர்ப்பை; இவள் வயிற்றிற் பிறந்தவன்; அஸமஞ்சனென்று பெயருடைய—நன்மையற்ற காரியம் செய்யும் மூர்க்கன்; இவன் மகன்தான் அம்சுமான்; தன் பாட்டனுக்கு யாகத்தைப் பூர்த்திசெய்து தந்தவன்; அகலிகைப்படலம்-34

சுமந்திரன்— தசரதமன்னனுக்கு மந்திரியும் சாரதியுமாவான்; திருவ-57 அகலிகைப்படலம்—47

சுமித்திரை—தசரத சக்கரவர்த்தியின் இளைய மனைவி; இலக்குவ சத்துருக்கர்கட்குத்தாய்; திருவவதா-91

சுரம்-பாலைவனம்; இதன் வர்ணனை; தாடகைப்—19

சுரபி—காமதேனு; தெய்வப்பசு; இதன் காரணமாகவெழுந்ததொரு வசிஷ்ட—விசுவாமித்திரர்களின் கடும்போர்தான், விசுவாமித்திரரை அருந்தவத்தோன் ஆக்கியது; அகலிகை—18, மிதிலைக்காட்சி 93

சுரிவளை—முகஞ்சுரிந்த சங்கு; நாட்டுப்படலம்—35

சுருதி—வேதம்; திருவவதாரம்—78

சுருதி நூல் — வேத சாஸ்திரங்கள்; மிதிலைக்—100

சுருதியன்னமாதவன்-விசுவாமித்திர முனிவன்; மிதிலைக்காட்சி—155

சுழலிடுகூந்தல் — சுற்றி முடிந்திடும் கூந்தல்; பணிச்சையென்றுரைப்பாருமுளர்; மிதிலைக்—43

சுறுக்குண்டேறுதல் — கூர்மையாக உடம்பில் தைத்தல்; மிதிலைக்—50

## சூ

சூட்டுவாரணம்—கோழி; நாட்டுப்—27
சூடகம்—கங்கணம்; தாடகைப்—41
சூர்—துர்க்கை; பாலைவனத்தெய்வம்; தாடகை—9
சூரியாத்தமனவர்ணனே; அகலிகை-2 மிதிலைக்காட்சி—61
சூரியோதயத்தில் தாமரை மலர்தல் இயல்பு; இதன் வர்ணனே; மிதிலைக்காட்சிப்படலம்—150
சூழ்ச்சி—உபாயம்; நகரப்—11; திருவவதாரப்படலம்—48
சூழல்—இடம்; சுற்றுப்பக்கம்; மிதிலை—122
சூழி—முகபடாம்; கையடை—23; மிதிலைக்காட்சி—155
சூல்—கருக்கொண்டது; கர்ப்பம்; நாட்—31
சூளி—பிரமதத்தன் தந்தை; இந்தப் பிரமதத்தன், குசநாபன் பெண்கள் நூற்றுவருடைய கூன் நோய் தீர்த்து, அவர்களை மணந்துகொண்டான்; வேள்வி—10
சூளிகை—சிகரம்; நகரப் படலம்—64

## செ

செக்கர்—செவ்வானம்;
செஞ்சவே-செம்மையாக; தாடகைப் படலம்—7
செண்டு-பந்து; வையாளி யென்றலும் உண்டு; நகரப்படலம்—68
செந்துவர்—செந்நிறம்; ஒரு பொருட்பன்மொழி; நகரப்படலம்—69
செந்நெல்நாறு—செந்நெல் நாற்று; நாட்டு—26
செந்நெறி—நன்மார்க்கம்; தாடகை-4
செம்மல் — செவ்விய குணமுடைய இராமபிரான்; வேள்வி – 15 அகலிகை—83
செய்—உவமவுருபு; அகலிகை—13
செய்ஞ்ஞர்—செய்பவர்; வேள்வி—31
செய்யவள்—இலக்குமி ; மிதிலைக்கா—1
செயிர்—குற்றம்; வருத்தம்; முறையே அரசியல் — 10; ஆற்றுப்படலம்—14
செரு—போர்; கையடை—10
செல்லுறு கதியிற் செல்லும் வினை × சரயு நதி சென்றமை; ஆற்றுப் படலம்—17
செவ்வழி — உதயராகம்; நெய்தல் நிலப்பண்ணுமாம்; நாட்டுப்—14; 34
செவ்விய—செம்மையான; நகரப்—1
செவ்வி—அழகு; திருவவதாரம்—63 சிறப்பு — அகலிகை — 17; நற்குணம்; அகலிகை—74
செவிலி—வளர்க்குந்தாய்; மிதிலை—51
செற்றுபுகுயிற்றி — நெருங்கப்பதித்து; கையடைப்—5
செறிதல்—நெருங்குதல்; தாடகை—54
சென்றுவாழ் உயிர் — சரம்; அரசியல்—10.

## சே

சே — விருஷபம்; மிதிலைக்காட்சிப்—129
சேக்கை — படுக்கை; மிதிலைக்காட்சி—79
சேடர் — இளையபுருஷர்கள்; நாகலோகவாசிகள்; நகரப்படலம்—31
சேடியர்—தோழியர்; மிதிலைக்கா—81
சேண்—விசும்பு; மிதிலைக்காட்சி—117

தஞ்சம் — அடைக்கலம்; அகலிகைப்—20
தட்டம் — பொற்றட்டு; திருவவதாரம்—87
தடந்தரு தாமரைத்தாள்—பொய்கையில் தோன்றிய தாமரைபோன்ற பாதம்; மிதிலை—57
தடாது — தடுக்கப்படாமல்; மிதிலைக்—130
தடி—மின்னல் (தடித்—வடமொழி) தாடகை—33; தசையென்றுமாம்; தாடகை—73
தண்டலை—சோலை; நாட்டுப்படலம்-4
தண்டு—பிரமதண்டம் (யோகதண்டம்) மிதிலைக்காட்சிப்படலம்-101
தண்டுதல்-நீங்கல்; மிதிலைக் காட்சி-8
தண்ணுமை—முழவு (மத்தளவகை) நகரப்—52; மிதிலைக்காட்சிப்—9
தண் எனுங்கானம்—குளிர்ந்த சோலை வேள்விப் படலம்—1
தத்துதல் — தாவிப்பாய்தல்; நாட்டுப்ப—2
தத்துறல் — துன்பமுறுதல்; திருவவ—103 மிதிலைக்காட்சிப்—125
தந்திரம்—சேனை; தாடகைப்பட—57
தபோதனன்—தவத்தையே செல்வமாக உடையவன்; மிதிலைக் காட்சி—89
தம்பிரான்—தமது தலைவன்; தனிப்பாசுரம்—6
தம்மனமெனமருள்தையலார் — விலைமகளிர்—திருவவதாரப் படலம்—45
தமம்—இருள்; மிதிலைக்காட்சிப் படலம்—132
தமர்—தம்மவர்; நாட்டுப்படலம்—22
தமரமதுடன் வளர் சதுமறை — உதாத்த அநுதாத்தஸ்வரிதம் முதலிய சப்தபேதங்களுடன் வளர் நான்கு வேதங்கள்; திருவவ—126
தமனியம் — பொன்; நகரப்—24; திருவவதாரப் படலம்—111
தமிழ் எனும் அளப்பரும் சலதி— தாட—34
தயையினொடு தண் அளி — அன்பும் அருளுமென்பதாம்; "அருளெனும் அன்பீன் குழவி; திருவவதாரப் படலம்—36
தரங்கம்—அலை; நாட்டு-11; நகர-27
தரணி—பூமி; திருவவதாரம்—2
தரம்—உயர்ச்சி; மிதிலைக்காட்சி—2
தரளம்—முத்து; நாட்டுப்படலம்—47
தரிக்கல்-ஆறியிருத்தல்; வேள்வி-14
தரு—கற்பகத்தரு; திருவவதாரம்—27
தருவனம் — சித்தாசிரமம்; கையடை—10
தருக்கு—வல்லமை; தாடகை—36
தலைமயங்குதல் — தலைமாறிக் கிடத்தல்; நாட்—54
தவ்வையர்—தமக்கைமார்; மிதிலைக். காட்—51
தவத்திறோர் தங்குதாட் கற்பகம்— நகரப்—23
தவத்திறலான் — விசுவாமித்திரன்; தாடகைப்—58
தவண்மதி— (தவள்மதி) (தவழ்மதி)— தவழ்கின்ற சந்திரனையுடைய (சிவபிரான்) திருவவதாரப்படலம்—127
தவர்—தவசிகள்; வேள்வி—11
தவளம்—வெண்மை; நகரப்பட—27
தவளமேனி-வெண்மையான தேகம்; நான்முகம் (துதி)—3
தவன்—தவம் (போலி) தாடகைப்-37
தவிசு—ஆயனம்; திருவவதாரம்—78 கையடைப்—5
தழலிடுவல்லி—காமநோய் கொண்ட சீதை; மிதிலைக்காட்சிப் படலம்-43

*தழலையேயனையவன்* — *சிவபிரான் (தழல் நிறக்கடவுள் என்றபடி)* அகலி—50

*தழை—மூங்கில்*; தாடகைப் படலம்-8

*தழைப்ப—ஒலிக்க*; அகலிகைப் படலம்—10

*தளம்-அழுத்தம்*; நாட்டுப் படலம்-12

*தளிர்க்கும் — செழித்துள்ள*; கையடைப்—8

*தளையவிழ்தருவுடைச்சபிலகோபன்—கட்டவிழும் தருக்கள் நிறைந்த மலைகளைச் சிறகறுத்த இந்திரன்*; திருவவதா—106

*தன்மவனம் — ஆதூர்த்தன் நகரம்*; வேள்—7

*தனயர்-புதல்வர்*; மிதிலைக்காட்சிப்-99

*தனயை—புதல்வி*; திருவவதாரப்—90

*தனித்தாய் — ஒப்பற்றதாய்*; கையடை—17

*தனுவொடுந்துறக்க மெய்தல்* — மிதிலை—108

## தா

*தா—துன்பம்*; தாடகை—15; 25

*தாங்கு-குறுந்தடி*; நாட்டுப்படலம்-57

*தாங்கல்—ஆதாரம்; பூமி*; மிதிலைக் காட்சி—116

*தாடகை கோபத்துடன் வந்த வகை*; தாடகை—33

*தாடகை ஐ இருநூறு மையல் மாவலியினள் — தாடகை ஆயிரம் யானை பலமுடையவள்*; தாடகைப் படலம்—21

*தாண்டுமா—குதிரை*: மிதிலைக்காட்சிப்—122

*தாணு — நிலையியற் பொருள்*; மிதிலைக்—117

*தாதியர் — சேடியர்*; மிதிலைக் காட்சி—57

*தாதுகுவீ — மகரந்தங்களைச் சொரியும் பூ*; மிதிலைக்காட்சி — 81; (*பூ அரும்பு, போது, மலர், அலர், வீ—யென்பன மலர்கள் தோன்றி வளர்ந்து வீயும் பருவங்களின் முறைப் பெயர்களாம் என்பது தமிழ்ப் புலவர்கள்மரபாம் என்ப*).

*தாதை — தந்தை*; மிதிலைக்காட்சிப் படலம்—122

*தாதை தன்தாதை—பிதாமகன்*; அகலிகை—36

*தாபத—இருடியே*; மிதிலைக் காட்சிப் படலம்—116

*தாமம்—மாலை*; நகரப்படலம்—35

*தாமரைச் சேயவள் என—இலக்குமி போல*; தாடகைப்படலம்—26

*தாமரை மலர் இலக்குமியும் வண்டும் அப்பாற் செல்லும்படியாகச் சந்திரோதயத்திற் குவிவந்திடுமென்பது*; மிதிலைக்—75

*தாமரை முதலியன முகம் முதலியவற்றிற்கு உவமானங்களாம்*; மிதிலைக்காட்சி—18

*தாமரை வைகிய முதல்வன்—பிரமன்*; தாடகைப்படலம்—23

*தாயரிற்பரிசேடியர்—தாயைக் காட்டிலும் அன்புடைய தோழிகள்*; மிதிலைக்—81

*தாயினும் பழகினோர்க்கும் மாயம் தேர்வொணார்*; தாடகைப்படலம்—29

*தாய் ஒக்கும் அன்பின்*—அரசியற்—4

*தார்கள் — கிண்கிணிமாலைகள்*; நகரப்—52

*தாரணி — பூமி*; திருவவதாரப் படலம்—20

தாரகணம் — நக்ஷத்திரக் கூட்டம்; மிதிலை—118

தாரை—ஒழுக்கு; (பெருக்கு) நாட்டுப்படலம்—25

தாரைகள்—மழைத்தாரைகள்; ஆற்றுப்—4

தாவா — அழியாத; திருவவதாரப் படலம்—119

தாழ்—தாழ்ப்பாள்; திருவவதாரப்படலம்—13

தாழை — தென்னை; திருவவதாரப் படலம்—43

தாறு — தாற்றுக்கோல்; மிதிலைக் காட்சி—7

தானம்—கொடை; திருவவதாரம்-37

தி

திகிரி — ஆஞ்ஞா சக்கரம்; அரசியல்—11

திகைப்பு — மயக்கம்; மிதிலைக் காட்சி—111

திங்கள் மேவுஞ் சடைத்தேவன்—பரமசிவன்; தாடகைப்படலம்—1

திங்கள் மறைந்தது கங்குல்வரசன் குடை வீழ்ந்ததும், மேற்றிசையான் சுட்டி அழிந்ததுமாம்; மிதிலைக்காட்சிப்படலம்—148

திங்களுங்கரிதென சங்கவெண்சுதை; நகரப் படலம்—27

திசாமுகம் — திக்கின் முன்புறம்; அகலி—14

திசைகள் தெருவினும் சிறியன — நகரப்—63

திண்பொறியடக்கிய செயல்—நகரப் பட—9

திண்மை—வலி; நாட்டுப்—53

திணைமயக்கம்-நாட்டுப்படலம்-30; 36

திதி—காசிபன் மனைவி; அகலிகை—27

திமிர்—இருள்; வேள்வி படலம்—10

திமிரம் — இருள்; திருவவதாரப்படலம்—126

திரிவ—ஜங்கமம்; மிதிலைக்காட்சி—133

திருக்கு — அறியாமை; திருவவதாரப்—123

திருகல்—மாறுபாடு; நூன்முகம்—1 (திருக்கையென்னும் மீன் என்றுமாம்)

திருமங்கை தன் வீற்றிருந்தவன்—திருமால்; ஆற்றுப்—2

திருமறுமார்பன் — திருமால்; அகலிகைப்—19

திருமால் கருடனினின்று இழிதல் × புயல் பொன்மலையினின்று இறங்குதல்; திருவ—15

திருமால் தவஞ் செய்தல் அவரது மாயையை அறியமுடியாது; வேள்விப்—17

திருமாலின் தாளிணை திருமகள் கரம் படச் சிவத்தல்; வேள்விப்—38

திருவிலி—இராவணன்; திருவவதாரம்—10

திருவில் தொடர் போகம்—அரசியற் பட—5

திருவின் கேள்வன் — கையடைப் பட—16

திருவின் நாயக—விஷ்ணுவே; திருவவ—17

திருவெண்ணெய் நல்லூர் — சடையப்பவள்ளலார்பதி; தனிப்பாசுரங்கள்—2

திலோத்தமை—தேவமாது; அகலிகை—10

திளைப்பன—இடைவிடாது பொருந்துவன; நகரப்படலம்—53

திறல் — வலிமை; திருவவதாரப்படலம்—57

தின்மை—தீமை; நூன்முகம்—5

தினவுறுந்தோள்—(தசரதன் தோள்) அரசி—12

## தே



## தை



## தொ

## தோ

தோகை-கலாபம்; நாட்டுப்படலம்-52

தோகைக்கொம்பின் அன்னவர்—தோகையையுடைய கொம்புபோன்ற பெண்கள்; அன்றியும் "தோகை போன்ற பெண்கள்"—என்றுமாம் தோகை சாயலுக்கும், கொம்பு—ஒசிந்த மேனிக்கும் உவமிக்கப்படுதல் மரபாகும்; மிதிலைக்காட்சி—21

தோகைபாகன்-சிவபிரான்; திருவவதாரப் படலம்-9; அகலிகைப்-49

தோடு—இதழ்; திருவவதாரம்-62

தோண்மை-தோளாற்றல்; தாடகைப் பட—56

தோம்-குற்றம்; சிறப்புப்பாயிரம்—11

தோய்தல்-அநுபவித்தல்; அரசியல்-5 படிதல்; அகலிகைப் படலம்—48

தோரணத்தெரு — தோரணம் கட்டப் பெற்ற தெரு; நகரப் படலம்—63

தோல்—யானை; நகரப்படலம்—71

(வன்றோல் புணர்ந்த மணிவாயில்—பாடாந்தரம்)

தோள்சிவத்தல்—ஊடல் தீருங்கால், பெண்டிரால் உதைபடும் ஆடவர் தோள்கள்; நகரப்படலம்—49

தோற்றம் — காட்சி; திருவவதாரப் பட—72

## ந

ந—எதிர்மறை குறிக்குஞ் சொல்; திருவவ—91

நகம்—மலை; ந + கம் = சலிக்காதது; கையடை—7

நகரத்தவரை இராமபிரான், அதிபா வியமுதலே சேமம் விசாரிப்பார்; திருவவதாரம்—136

நகர மாந்தர் பொழுதுபோக்கும் வகை; நகரப்—66............69

நகல்—விளங்குதல்; நாட்டுப்—41

நகில் — நகிலம் = கொங்கை; நாட்டுப்—45; மிதிலைக்காட்சிப்—45

நகை—சிரிப்பு; கையடை—13 (சினக் குறிப்பு)

நஞ்செனக் கனலுதல் — மிதிலைக் காட்சி—106

நடுக்குறுசாந்தம் —துணிக்கப்பெற்ற சந்தணக்கட்டை; ஆற்றுப்—13

நடுவண்—மத்தியில்; திருவவதாரப்—6

நந்தனவனம் — உத்ஸாகமூட்டும் பூஞ்சோலை; நகரப்படலம்—69

நந்து—சங்கு (வாத்தியம்) நாட்டுப் படலம்—57

நம்பன்—சிவபிரான்; ஆற்றுப்ப—3

நம்பன் மாதுலன்—சிவபிரானது மாமனாகிய மலையரசன்; ஆற்றுப் படலம்—3

நம்பி—பூர்ணன்; கைய்யடை—17

நமித்திரர் — பகைவர்; திருவவதாரம்—91

நயத்தல்—விரும்புதல்; வேள்விப் படலம்—20

நயம் — பொருள்; மிதிலைக். காட்சிப்—106

நயனகோசரம்—கண்ணுக்கு தோன்றல்; மிதிலைக்காட்சிப்படலம்—40

நயனம்—கண்; தாடகை—50 அகலி—2

நரந்தம் — நாரத்தை; ஆற்றுப் படலம்—13

நரம்புவார்ந்தகன்-வீணை நரம்பினின்றும் கேட்கப்பெறும் இன்னிசை; மிதிலை—12

நற்குரவு—தரித்திரம்; அகலிகை—22

நலம்—அழகு; மிதிலைக்காட்சிப்—39

நவ்வி—மான்; நகரப்படலம்—69

நவ்விபோல் விழியினாள்—அகலிகை; பயத்தினால் வெருண்ட பார்வையைப் பெற்றிருந்தாள் போலும்; அன்றியும், இயற்கையில் பெண்கள், மான் விழி போலும் வெருண்ட பார்வையுடையார் என்பது கவிமரபுமாமென்க; அகலிகை—74

நவநிதி—ஒன்பது வகை நிதி என்றுமாம்; அவையாவன:- மகாபதுமம்; பதுமம், சங்கம், மகரம், கச்சபம், முகுந்தம், குந்தம், நீலம், வரம் என்பனவாம்;

(நவநிதி—(நவம்=புது) புதியனவாகும், சங்கநிதி பதுமநிதி யென்னும் இரண்டுமேயாம் என்ப) அகலி—18

நவை—குற்றம்; திருவவதாரம்—44; கையடை—18; அகலிகை—46

நளி-பெருமை; நகரம்-70; குளிர்ச்சி; நாட்டுப்படலம்—45

(நளிர்—குளிர்ச்சியுமாம்)

நளினம்—தாமரை; நகரப்படலம்-54

நற்பொருள்—சிறந்த விஷயம்;

நற்றந்தை—நல்ல கல்வியருளும்பிதா; கையடைப் படலம்—17

நறவம்—தேன்; நாட்டுப்—51

நறை—தேன்; தாடகை—45; மணம்; மிதிலைக்காட்சிப் படலம்—118

நறைவிரிபுறவம்—மணம் விரிந்த முல்லைத் தோட்டம்; நாட்டுப்—18

நன்னெறி விலக்கும் பொறி × எறியும்கராம்; நகரப்பட—14

நனை—தேன், அரும்பு, நாட்டுப்—29; கையடைப்—1; மிதி—161

## நா

நாஞ்சில்—மதிலுறுப்பு; நகரப்—17

நாட்டம்—கண்கள்; கையடை—2

நாண்மதி-ஒற்றைக் கலைச் சந்திரன்; வேள்வி—50

நாண்மை — நாணம்; ஆயுஷ்காலம் என்றுமாம்; தாடகை—56

நாப்பண்—நடுவே; திருவவதா—86

நாரணன் — நாராயணன் என்பதன் குறுக்கம்; ஜீவர்கட்கு புகலிடமானவன்.

நாரம்—ஜீவபகுளம்; அயனன் இருப்பிடமானவன்; ஜலத்தை வாசஸ்தானமாக வுடையவனென்பதுமொன்று; தனிப்பாசுரங்கள்—5

நாரதன் — ஒரு முனிவன்; நாரத்தைக் கொடுப்பவன் என்பது பொருள்; நாரம்—ஆன்மஞானம் அதை யருளுபவன் என்பதாம்; தனிப்—5

நால்வகைச் சதுரம்—நாற் சதுரமென்றும் குறிப்பர்; நால்வகையான சதுர மென்றே கொள்வதுதான் கவியின் குறிப்பாகும்; சதுரமென்பது அகலமும் நீளமும் ஒத்த நாற்கோணத்தை — திருகோணத்தை முச்சதுரம் என்று சொல்லும் வழக்குண்மையின் — அதனின் வேறுபாடு தோன்றற்கு இதனை நாற்சதுரம் என்றலே அமையுமாறு இருக்க — நால் வகைச் சதுரம் என்றது என்னையோவெனில், சதுரம்—என்றால் ஒழுங்கு; அவ்வொழுங்கு நான்கு வகையிலும் ஏற்பட்டிருக்கின்றது; நீளம், அகலம், உயரம் இவையொழுங்காக அமைந்தது மாத்திரமன்றி, இவையும் பரஸ்பரம் ஒழுங்கு பெற்று,

## நூ

நூபுரத்தை மாலேயார்த்தல்—கீழே வீழ்ந்து கிடக்கும் புழைய மாலைகள், நடப்பவர் பாத சதங்கைகளிற் . பின்னிக் கட்டுகின்றன; நகரப் படலம்—56

நூலுறு மருங்குல்—நூலைப்போலும் இடை; மிதிலைக்காட்சிப்படலம்-41

## நெ

நெடியவன் குறியகை—நெடியமால் தமது வாமனவுருவின் கையை; வேள்வி—34

நெய்குழல்உறும்இழை— அயோத்தி நகரில் எங்கும் தோன்றும் இராமலக்ஷ்மியின் காட்சியானது, நெய்யும் தறியில் தோன்றும் குழலும் இழையும் போலவாமென்பர்; திருவவதா—130

நெய்தவழ் வேள்வி — ஆஜ்யாகுதி பெறும் யாகம் (ஆஜ்யம் = நெய்) வேள்வி—19

நெய்திரள் நரம்பு—துருவு யோராமல் இறுத்தல் பொருட்டு நெய் பூசப்பெற்றுத்திரண்டுள்ள வீணைத் தந்திகள்; மிதிலேக்காட்சிப்பட—9

நெளித்தகுழி — தாடகை மிதித்ததனால் பூமி நெளிந்து அதனால் தோன்றிய குழி; தாட—47

நெற்றி—மேலிடம்; கையடை—23 முகப்பு; மிதிலைக் காட்சிப் படலம்—14

## நே

நேமியான் — சக்கரக்கையன்; தாடகை—59

நேமியினோர்-சக்ரவர்த்திகள்; அரசி-2

நேமிவான்சுடர்-ஆகாயத்தில் தோன்றும் வட்ட வடிவான சூரியன்; நகரப்பட—41

நேர்செறுநர்—ஒத்தபகைவர்; நாட்டுப்—53

நேர்தல் — எதிர்தல்; வருதல்; மிதிலைக்கா—112

## நை

நையல்-வருந்தாதே; அகலிகைப்-46

## நொ

நொடி — கணப்போது; திருவவதாரம்—19

நொய்தின் நொய்ய சொல்—அற்பத்தினும் அற்பமான சொல்; சிறப்புப்பாயிரம்—5

## நோ

நோக்கு—குறிப்புறிகை; அழகு; தாடகை—18

## ப

பஃறலைப்பாந்தள் — பலதலைகளையுடைய பாம்பு; திருவவதாரப் படலம்—107

பகடு—யானை; அகலிகை—13

பகலிடுமின் X கொடியிலுள்ள சூலம்: நகரப்படலம்—36

பகழி—அம்பு; வேள்விப்படலம்-46

பகற்கதிர்-சூரியன்; மிதிலைக்காட்சி-4

பகீரதன்—கங்கை கொணர்ந்தவன்; அகலிகைப்படலம்—43

பகீரதி—பகீரதன் கொணர்ந்திடுத லால்; அகலிகைப் படலம்—61

பகைப் புலன்களைந்து—ஆன்மாவினுக் குப் பகை செய்யும் இந்திரியக் குறும்புகளை யொழித்து; நகரப் படலம்—6.

பங்கயம்—தாமரை; நகரப்படலம்-19

பங்கயவாண் முகத்து உருவ உண் கணை—தாமரை மலர் போன்ற ஒளி பொருந்திய முகத்தில் நன் னிறமுடைய மையுண்ட கண்கள்; (கணை—கண்ணை) நாட்டுப்பட-23

பங்கி—(தீயெரிப்பங்கி) சிவந்த தலை மயிர்; திருவவதாரப்படலம்—87

பச்சைத் தேரை — பசுநிறத் தவளை; நாட்டுப்படலம்—13

பச்சைமா ஏழு—பசு நிறமுள்ள—சூரி யன்து தேரிற் கட்டப்பெற்ற ஏழு குதிரை யென்றுமாம், ஒரே குதி ரைதான் ஏழு என்றும் பெயருடை யது என்றும் குறிப்பர் (ஸப்த— என்பது வடமொழி (ஏகோ அச் வோ வஹதி ஸப்த நாமா-என்பது பிரமாண மென்ப). கையடைப் படலம்—23 மற்றும், "ஒற்றைச் சக் கரமுடைய சூரியனுடைய தேருக் குக் குதிரைகள் ஏழென்றும், காயத்ரீ, உஷ்ணிக், அநுஷ்டுப், ப்ருஹதீ, பங்க்தி, திரிஷ்டுப், ஜகதீ என்னும் சந்தஸ்—கள் ஏழுமே அக் குதிரைகளாக அமைந்துள்ளன என்றும், அக்குதிரைகளின் நிறம் பசுமை யென்றும் புராணம் கூறும்

பசுந்தேறல் பாம்பு நான்றெனப் பாய்தல்—நாட்டுப்படலம்—35

பசும்பொன் பள்ளி—பசும் பொன்னு லாக்கிய படுக்கை; நாட்டுப்பட—8

பசை—ஆசை—இரக்கம், ஈரம்; தாட கைப் படலம்—5

பஞ்சி—செம்பஞ்சுக் குழம்பு; நகரப் படலம்—10

பட்டம்—நன்செய் நில வகுப்பு; நாட் டுப் படலம்—26

பட்டி மண்டபம் (பன் அரும் கலை தெரி) என்றதால் சர்வ கலாசாலை யைக் குறித்ததாகின்றது; நகரப் படலம்—62 "ஓலக்க மண்டபம்" என்பர் அடியார்க்கு நல்லார் (ஓலக் கம்—விளம்பரம்) பன் அரும் கலை தெரி என்னும் குறிப்பினால் சப்த சாஸ்திரம், அர்த்த சாஸ்திரம், யுத்த சாஸ்திரம், கணித சாஸ்திரம், மநு நூல், இதிஹாசம் முதலிய னவும் கொள்ளப்படுகின்றன என்ப. மற்றும் 64-கலைகளென்பாருமுளர் இச்சொற்றொடர் வழக்கு, "ஒட் டிய சமயத்துறு பொருள் வாதி கள், பட்டி மண்டபத்துப் பாங் கறிந்தேறுமின்" என்று மணி மேகலையினும், "பகைப்புறத்துக் கொடுத்த பட்டி மண்டபமும்" என்று சிலப்பதிகாரத்திலும் பட்டி மண்டபம் ஏற்றினை" எனத் திரு வாசகத்திலும் வந்திருத்தலைக் காண்கிறோம்.

படப்பை—சோலை; தோப்பு; நாட்டுப் படலம்—26

படர்—துன்பம்; அகலிகைப்படலம்-83

படி—பூமி; தாடகைப்படலம்—6

படிக மாலை—படிகக் கற்களாலாகிய மாலை; (கண்ணாடிக் கற்கள்) நான் முகம்-3

படி வளர் குழி—பூமியில் வளர்கின்ற குழி; நாட்டுப்படலம்—21 (குழியி லிருந்து பூமியில் படர்ந்து வளர் கிற பூசனி முதலியன)

படிகி—மூழ்கி; திருவவதாரப்பட—84

படுத்தல்-தாக்குதல்; நாட்டுப்படலம்-5

படுதல்—தங்குதல்; தோன்றுதல்; நாட் டுப்படலம்—5

படை-போர்; ஆயுதம்; திருவவதா-114
படைக்கலம் அருளிஞன் X வறுமை நோய்க்கு மருந்தாம் சடையவள்ளலார் சொல்லைப்போல்; வேள்விப் படலம்-1
பண்—இசைப்பாட்டு; நகரப்பட-52
பண்ணவன்—கடவுள்; கீர்த்தி பெற்றவனென்றுமாம்; திருவவதாரப்படலம்-11
பணை—வயல்; நாட்டுப்படலம்-13; விளையாட்டு; நகரப்படலம்—44 மகளிர் கூட்டம்; திருவவதா-118
பணத்தரா (பணம்+அரா) படமுடைய பாம்பு; தாடகைப்படலம்-16
பணி—வேலை; நகரப் படலம்—33 கட்டளை; தாடகைப் படலம்-75; சொல்வாய்; வேள்விப்படலம்-58
பணித்த—சொன்ன; வேள்விப் படலம்—47
பணிலம்—சங்கு; நாட்டுப்பட—27
பணைத்த — பருத்த; திருவவதாரப் படலம்-39
பதகி—பாதகி; தாடகைப்படலம்-37
பதம்—இடம், கால்; அகலிகைப்-5
பதயுகத் தொழில்—இரண்டு பாதங்களின் தொழில் (யுகம்-இரட்டை) நகரப்படலம்-49
பதாகைக்குழாம் — கொடிக்கூட்டம்; நகரப்படலம்-38
பதாகையற்று வீழ்தல் (இராவணனுடைய) கொடியற்று வீழ்தலாம்; தாடகை கொலையுண்டு வீழ்ந்தது; தாடகைப்பட-73
பதுமபீடத்தன்—தாமரை யாதனத்தையுடைய பிரமன்; கையடைப் படலம்—7
பதும மலர்ப்பாவையர் — தாமரை மலரைப் போலும் பாதங்களையுடைய பெண்கள்; திருவவதாரப் படலம்—62
பதுமை—இலக்குமி, பிரதிமையுமாம்; தாடகைப்படலம்—28
பந்தாடுங் காட்சி—மிதிலைக்காட்சி—16
பந்தி — வரிசை, குதிரைச்சாலை; நகரப்பட—30
பம்புதல் — ஒலித்தல்; நாட்டுப் படலம்—8
எழுதல்—ஆற்றுப் படலம்—3 மிகுதல்; மிதிலைக்காட்சிப் படலம்-22
பயந்தவர்-பெற்றவர்; வேள்விப்-35
பயம்-பயன்; மிதிலைக்காட்சிப் பட-20
பயில்—செறிவு; மிதிலைக்காட்சிப்-131
பயோததி — கடல்; பாற்கடலுமாமென்ப; (பய+உததி = (பய = நீக்; பயம் = பால்) உததி—நிறைவு) திருவவதா—11; அகலிகைப் படலம்—23
பரகதி — உயர்கதி; மோக்ஷம்; பரமபதம்; திருவவதாரப் படலம்—11
பரசு — கோடாலி (கோடரி) மிதிலை—92
பரசுதல்—(பரவுதல்) துதித்தல்; மிதிலை—92
பாரம்—சுமை; நாட்டுப் படலம்—19
பரம்பு—பரப்பு; நாட்டுப் படலம்—2
பரம்பொருளொன்றே பல் பெருஞ்சமயங்களில் பல்படி பரந்திருத்தல்போல், நதியும் பரந்து விரிந்தது; ஆற்றுப் படலம்—19
பரமபதம்—உயர்பதம்; பயன்—10
பரல் — பருக்கைக் கற்கள்; தாடகைப் படலம்—16
பரி—குதிரை (பரிந்து செல்லலால்) அகலிகைப் படலம்—35
பரிணதன்—ஞானி; பக்குவி; மிதிலைக்காட்சிப் படலம்—106
பரிதல் — அற்றுவீழல்; மிதிலைக்காட்சி—8

## பா

பாக்கியம் — பேறு; வேள்விப் படலம்—57

பாகசாதனன் — இந்திரன்; திருவவதாரப் படலம்—9

பாகியல்கிளவி-பாகுபோன்ற சொல்; நாட்டுப் படலம்—49

பாகொக்குஞ் சொல் — மிதிலைக் காட்சி—21

பாங்கு—பக்கம்

பாசம் — கயிறு; மிதிலைக் காட்சிப் பட—37

பாசறையிற் பிரிந்த கொழுநர்—படைவீட்டிலிருந்து போர் காரணமாகப் பிரிந்த கணவர்; மிதிலைக்காட்சிப் படலம்—152

பாடகச் செம்பதும மலர் — பாடகத்தை யணிந்த தாமரை மலர் போன்ற செவ்விய பாதங்கள்; திருவவதாரப் படலம்—62

பாண்டில்—தாளம்; அகலிகைப் படலம்—12

பாணர் பாடல்—மகளிரையெழுப்புதல்—நாட்டுப் படலம்—8

பாணி—தாளம்; நகரப் படலம்–52; பாட்டு; மிதிலைக் காட்சிப் படலம்—12

பாதக இருள்; மிதிலைக்காட்சிப் படலம்—63

பாதலம்—பாதாளம்; அகலிகைப் படலம்—37

பாதவம் — விருக்ஷம் (பாதபம் என்னும் வட சொல்லின் திரிபு; பாத+ப=பாதத்தின் மூலம் நீர் குடித்தல்) தாடகைப் பட—30

பாதாளத்து அரவின் மணியொளியானது — பாலைவனக்கமர் வழியாக வெளிப்படுகின்றது; தாடகைப் படலம்—

பாதிமாமதி சூடியோன்—பரமசிவன்; மிதிலைக்காட்சிப் படலம்—135

பாதைகள் — வழிகள்; நாட்டுப் படலம்—51

பாந்தள்-பாம்பு; திருவவதாரப்பட-34

பாம்பு நான்றெனப்பாய் பசுந்தோல்—நாட்டுப் படலம்—35

பாமம்—பரப்பு; அரசியற் படலம்—7

பார்த்திபன்—அரசன் (பிரிதிவியைப் பாலிப்பவன் என்பதாம்) மிதிலைக்காட்சி—97

பார்ப்பு — பார்வை; அகலிகைப் படலம்—65

பாரின்பாலும் விசும்பின்பாலும் திருமால் பெயரே படிக்கப் பெறுகின்றது; வேள்விப் படலம்—17

பாரகர் — கரைகண்டவர்கள் மிதிலைக்—135

பாலால் செந்நெல் வளர்தல்—நாட்டுப்—25

பாலின் நுரை வெண் பட்டுக்கு உவமை; நாட்டுப் படலம்—45

பாலுறுபிரையெனக் காமநோய் எங்கும் பரவியது; மிதிலைக் காட்சிப் படலம்—41

பாலூட்டுவார் செங்கை குவிதல் × நிலாவுறப்பங்கயம் குவிதல்போலுமென்ப; நாட்டுப் படலம்—58

பாலைநில வர்ணனை—தாடகைப் பட-5

பாவற்றிலை — பரவவில்லை; வேள்விப்—36

பாவையர்—மகளிர்; திருவவதாரம்—62

பாழி — பெருமை; கையடைப் படலம்—23

## போ



## பௌ



## ம

மங்கையர்க்கு மருந்து—சீதை; மிதிலைக்காட்சிப்படலம்—33

மங்கையர் கண்ணை, வண்டுபெடையெனமயங்கும்; நாட்டுப்படலம்-23

மசரதம்—பேய்த்தேர்; திருவவதாரப்படலம்—22

மஞ்சு—மேகம்; நாட்டுப்படலம்–17

மஞ்ஞை—மயில்; நாட்டுப்—14; மிதிலைக்காட்சி—11

மடங்கல்—சிங்கம்; சிங்காசி; கையடைப்—3; திருவவதாரம்—107

மடங்கலாதனம்—சிங்காஸனம்; திருவவதாரப்படலம்—54

மடல்—பூவிதழ்; மிதிலைக் காட்சி-65

மடு—கடல்; மிதிலைக்காட்சி—77

மடை—மதகு; நாட்டுப்படலம்—2

மண்டபம் மன்றுகள் முதலியனமாறிமாறியிருத்தல்; நகரப்படலம்–39

மண்டபம் காத்திடும் வலி ஒரு வலியன்று, ஆன்ம ஞானமே உயர்வு; மிதிலைக்காட்சி–104

மண்ணும் முழவு—மார்ஜனம் தடவிய மத்தளம்; மிதிலைக்காட்சி-153

மண்ணுருத் தெடுப்பினும்—தாடகை செய்கிற்பாள்; தாடகை வதைப்-39

மண் படைத்த முனி—பிரமன்; விசுவாமித்திரனுமாம்; கையடைப்-13

மணத்திர்-விவாஹஞ் செய்து கொள்ளுநர்கள்; வேள்விப்படலம்—9

மணிக்கடல்—பொற்கலன் கிடக்கும் தெரு; மிதிலைக்காட்சிப்படலம்-6

மணித்தாம்பு—அழகிய தாம்புக்கயிறு; மிதிலைக்காட்சிப் படலம்—70

மணியாழி—ரத்நாகரமென்று பெயருடைய கடல்; மிதிலைக்காட்சி–28

மணியொளி குருதி போலும்; தாடகைப்படலம்—10

மணி வயிறு—அழகிய திரு உதரம் வேள்விப்படலம்—57

மணி விளக்கம்—ரத்ந தீபங்கள்; மிதிலைக்காட்சிப்பட—154

மணி விளக்கால் இருளைப்போக்கல்; மிதிலைக்காட்சிப் படலம்–69

மத்தம்—ஊமத்தம்; அகலிகைப்–51

மத்த யானை—மதங்கொண்ட யானை; மிதிலைக்காட்சிப்படலம்–40

மத்திகை சம்மட்டி; மிதிலைக்–78

மத்து—தயிர் கடைதற் கருவி; அகலிகைப் படலம்—21

மதங்கியர்—ஆடல் பாடல் யுவதிகள்; நகரப்படலம்--52

மதக்களுழியால் தெருவேறுபட்டுத் தோன்றல்; மிதிலைக்காட்சிப்—7

மதமலை-யானை; தாடகைப்படலம்-25

மதர்க்கும்—மதங்கொள்ளும்; நாட்டுப் படலம்—24

மதலையர்—புத்திரர்கள்; அகலிகை–37

மதவாறு—மதப்பெருக்கு; ஆற்றுப்-8

மதனற்கும் எழுதவொண்ணுச்சீதை; மிதிலைக்காட்சிப்படலம்–5

மதி—புத்தி; இது முதலியன தசரதற்குப்பூர்ணமாக வுள்ளன; அரசியற்படலம்–2

மதில் × குன்றம்; நகரப்படலம்–15

மதில் தலைவர்க்கு உவமை; நகரப்-11

மதில்—வேதம் முதலிய ஒத்தல்; நகரப்படலம்–9

மதிலைச்சூழ்ந்த அகழி × ஆழிமால் வரையைச் சூழ்ந்த அலைகடலாம்; நகரப் படலம்–14

மதிற் கிடக்கை—மதிலின் நிலை; அகலிகைப் படலம்–86

மதிற் புறத்தகம்—அகழி; நகரப்–16

## மி



## மு

முகநலாள்—(நல்ல முகமுடையாள்) சாந்தை; திருவவதாரப்படலம்-55

முகிலால்-பவளமும் முத்தும் கடலில் உண்டாதல். நாட்டுப்படலம்-5

முட்டு—குறைபாடு; நாட்டுப்—26

முடித்தல்—அழித்தல், நிறைவேற்றுதல், நீக்குதல்; மிதிலைக்—88

முடிய—முழுவதும்; அகலிகைப்-45

முடுக்கிவிட்ட—விசையாகச் சுழற்றி விட்ட; மிதிலைக்காட்சிப்—13

முடுகுதல்—விரைதல்; தாடகைப்-11

முத்தமாமுடி—முத்து முதலான நவமணிகள் இழைத்துள மௌலி; திருவவதாரப்படலம்—5

முத்தமிழ்-இயல் இசை நாடகம் என்பன; சிறப்புப்பாயிரம்-9; (தாழிசை, துறை, விருத்தம் என்றுமாம்)

முத்தலை அயில் —சூலம்; தாடகைப் படலம்—50

முத்தாரங்களால் இடைவருந்துதல்; நகரப்படலம்-53

முத்தின் நிறத்து அரிசி; நாட்டுப்-37

முத்துக்கள் குப்பையாகத் திரட்டுவார்; நகரப் படலம்-45

முதலைகிடந்து பொங்குவது X யானை அழுந்தியெழுவது; நகரப்-17

முதிர்வு—மிகுதி; நகரப் படலம்—60

முதிரை—பயறு; நாட்டுப்படலம்—22

முந்நீர்—கடல் (ஆற்றுநீர் ஊற்றுநீர் சேற்றுநீர் சேர்ந்தபடியால்) (முன்னீர்—எனக்கொண்டு முதலிற் சிருட்டிக்கப்பெற்றது என்பர்).

முந்நூல்—முப்புரிநூல்; மிதிலைக்காட்சிப் படலம்—111

முப்பருவத்து மங்கையர் — குதலை மழலை இன்சொல் என்னும் சொல்லின் பகுப்புக்குரிய பருவமுற்ற மங்கையர் என்பதாம். குதலை—எழுத்தின் ஒலிகள் கூடப் பெறாத சொல்; மழலை—ஒலிகள் கூடியும் பொருள் விளங்காத சொல்; இன்சொல் — சொற்கள் பண்பட்டுப் பொருளும் இயைந்திருக்கும் சொல்; இச்சொற்களின் பழக்கத்துக்குரிய பருவங்களையே குறித்து முப்பருவ மங்கையர் எனக் குறிக்கலாம்; அன்றியும், பருவம் நிரம்பாதவர், பருவம் பெற்றவர், பருவம் முதிர்ந்தவர் என்றும் பிரித்தலுண்டு; நகரப்-43

மும்மதம்—கன்னம், கபோலம், பீஜம் என்னும் மூன்றிடங்களில் தோன்றும் களிற்றுக்கு மதமென்பர்; சைத்திய மதம் ஸௌரப்பிய மதம் மாந்திய மதம் என்றும் குறிப்பர்- நகரப்படலம்—55

மும்மையழல் — மூன்று அக்கினி யென்பதாம்; ஆகவனீயம், காருகபத்யம், தக்ஷிணாக்கினி யென்பன அவை; இடவேறுபாடும், மந்திர பேதமும் செயல் வேற்றுமையும் உடையன அவை; திருவவதாரப் படலம்—85; மற்றும், சதுஷ்டோமம், உக்த்யம், அதிராத்ரம் என்னும் உபாங்கங்களையும் குறிப்பர்; ஏனெனில், இம்மூன்றும் அச்வமேதத்துக்கு உபாங்கங்களாகக் குறிக்கப்பெற்றிருக்கின்றன. இவை மூன்றும், தினமொன்றாக மூன்று தினங்களிலும் முக்காலங்களிலும் தவறாமற் செய்யவேண்டுமென்ப. ஏனெனில், புத்திரகாமேஷ்டியை அசுவமேதத்தை முன்னிட்டுக் கொண்டு செய்ய வேண்டியதாயிருப்பதால், தசரதனது, செயலாக இது குறித்திருப்பதால், மும்மையழல் என்பது, தற்போதைக்கு, அந்தமூன்றுஉபாங்கங்களையேகொள்ளவேண்டியது கடமையாகும்.

ஸ்ரீ

# கம்பராமாயணம்—பாலகாண்டம்.

## முதற்பகுதியின்

## செய்யுள் முதற்குறிப்பு அகராதி.

# செய்யுள் முதற்குறிப்பு அகராதி.

# செய்யுள் முதற்குறிப்பு அகராதி.

## செய்யுள் முதற்குறிப்பு அகராதி.

# செய்யுள் முதற்குறிப்பு அகராதி.

# செய்யுள் முதற்குறிப்பு அகராதி.

# செய்யுள் முதற்குறிப்பு அகராதி.

## செய்யுள் முதற்குறிப்பு அகராதி.

## செய்யுள் முதற்குறிப்பு அகராதி.

## செய்யுள் முதற்குறிப்பு அகராதி.